

**டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்**

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

திராவிடர்கள் இந்த நாட்டின் தொன்முது மக்களல்ல; ஆயினும் அவர்கள் இந்த நாட்டில் பன்னெடுங் காலத்துக்கு முன்னர் குடியேறியவர்கள்; அவர்கள் மேற்காசிய மக்களுடன் கொண் டிருந்த தொடர்பு பற்றி இங்கு குறிப்பிடுவது பொருத்தமற்ற தாகாது. இது சம்பந்தமாக திரு.குஸ்தாவ் ஆப்பர்ட் கூறுவ தாவது: 'துரேனியப் பேரரசுகள் உயர்ந்த கலாசார நிலையை எய்திருந்தன என்பது ஆப்புவடிவ எழுத்துக்களில் அமைந்த கல்வெட்டுப் பொறிப்புகளின் பொருள் கண்டறிந்ததன் மூலம் எத்தகைய ஐயப்பாட்டுக்கும் இடமின்றி தற்போது நிலைநாட்டப்பட்டுள்ளது. ஒரு வகையான உலோகாய தத்தை இந்த நாகரிகம் தழுவி நின்றபோதிலும் கலைகள் மற்றும் விஞ்ஞானத்தின் சில கிளைகளை அதால் மிகப் பெரும் வளர்ச்சியுறச் செய்ய முடிந்தது. மொழி மரபில் ஒருவருடன் ஒருவர் வேறுபட்ட துரானியர்களைப் போன்ற வர்களே இந்தியாவில் இன்றைய திராவிடர்களும்; அக் காலத்தில் அவர்கள் ஏரியானாவிலும் பெர்சியாவிலும் வாழ்ந்து வந்தனர். ஐரோப்பாவில், இந்தத் துரானியர்களை எஸ்தோனியர்கள் பிரதிநிதித்துவப்படுத்தியதாகத் தோன்று கிறது; மேற்கு ஆசியா மற்றும் மத்திய ஆசியாவின் பல இடங்களில் அவர்கள் மக்கட் தொகையின் ஆதார அடிப்படை யாக அமைந்திருந்தனர்; சீனாவில் சீனப் பேரரசின் நாகரிகத் துக்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்திருந்தனர்.'' இந்தத் துரேனியர்கள் உலகெங்கிலும் பேரரசுகளை நிறுவினர். ஏரல் ஏரியைச் சுற்றியுள்ள நாடுதான் துரேனியர்களின் தாயகம் என்று கருதப்படுகிறது. அங்கிருந்து அவர்கள் ஆசியாவின் மிகப்பெரும் பகுதிக்குப் பரவினர்; குறைந்தபட்சம் 1500 ஆண்டுக் காலம் அங்கு அவர்கள் தன்னிகரற்று முதன்மை பெற்றுக் கோலாச்சினர்.''

- டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர்
''பண்டைக்கால இந்திய வாணிகம்'' என்னும்
கட்டுரையிலிருந்து

This Volume XXIII in Tamil forms the First part of the English Edition Volume 12 Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - published by the Education Department, Government of Maharashtra, 1991.

முதற் பதிப்பு : ஜூன், 2001
விசு ஆண்டு, ஆனி



விலை : ரூ. 25/-
நூலகப் பதிப்பு: ரூ. 85

வெளியீட்டாளர் :

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

விற்பனை நிலையம்:

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41 B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973.

# ஆலோசனைக்குழு

**திருமதி மேனகா காந்தி**
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சக -*
*இணை அமைச்சர் (தனிப் பொறுப்பு)*
*இந்திய அரசு.*

***டாக்டர் பிந்தேஸ்வர் பாதக், பிஎச்.டி., டி.லிட்.,***
*செயல் துணைத் தலைவர்,*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,*
*புதுடில்லி.*

**திரு. கிரிஷன்லால்**
*இயக்குநர்,*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,*
*புது டில்லி.*

***நிர்வாகப் பதிப்பாளர் (தமிழ்) :***
***டாக்டர் எஸ். பெருமாள்,*** *எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,*
*வேலூர், தமிழ்நாடு.*

ஆங்கில நூல் தொகுப்பாளர் :

திரு. வஸந்த் மூன்

*மும்பை*

தமிழ் நூல் பதிப்பாளர் :

*டாக்டர் எஸ். பெருமாள்*

மொழிபெயர்ப்பாளர் :

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

ஒப்புநோக்கியோர் :

*டாக்டர் எஸ். பெருமாள்*

பிழைதிருத்த உதவி:

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

# அணிந்துரை

மனிதர்கள் தமது ஆதிக்க பலத்தை நிலைநாட்டுவதற்கு வன்முறையை மேற்கொள்ள நேரிடுகின்றது. தமது 'பலத்தால் தங்களை எதிர்ப்பவர்களை வெற்றி கொண்டு ஆதிக்கத்தை நிலைநாட்டுகின்றனர். இதன் விளைவாகச் சமூகத்தில் அமைதி யின்மை ஏற்படுகின்றது. இதனாலேயே மக்கள் பலவகைப் பிரிவினராகப் பிரிந்து எண்ணற்ற சாதியினராயினர். மனிதர் கள் சிலபோது தமது அறிவுபலத்தாலும், செல்வ வளத் தாலும், அதிகார பலத்தாலும் தமது செல்வாக்கை நிலைநாட்ட முயல்கின்றனர். இதனால் சமூகத்தில் ஏழை, பணக்காரர், வசதிமிக்கவர், வசதியற்றவர், தூய்மையானவர், தூய்மை யற்றவர், அழகானவர்கள், விகாரமானவர்கள், பண்பட்ட வர்கள், பண்படாதவர்கள், உயர் சாதியினர், தாழ்ந்த சாதி யினர் என்னும் ஏற்றத்தாழ்வுகள் மலிந்தன. மக்களிடையே இத்தகைய வேறுபாடுகளால் இடைவெளி உள்ளவரையில் சமூக அமைதி என்பது ஏற்பட முடியாது.

இன்றளவும் இந்திய மக்கள் நால்வகை சாதியினராக பிரிந்துள்ளனர். இந்திய அரசியலமைப்புச் சட்டப்படி வருண முறையின் கட்டுக்கோப்பு நெகிழ்ந்துள்ள போதிலும், வேறுபாடுகள் முழுமையாக உடைத்தெறியப்படவில்லை. ஜனநாயக நெறிகளில் நம்பிக்கையுள்ளோர் இந்த சாதி முறையை நீக்கப் பெரிதும் பாடுபட வேண்டும்.

டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம், படிப்போரைச் சிந்திக்க வைத்து இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் புதியதொரு சமுதாயம் அமைவதற்கு உதவக் கூடியதாகும்.

நல்வாழ்த்துகள்!

(ஒப்பம்) **மேனகா காந்தி**
(திருமதி மேனகா காந்தி)
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு
அமைச்சக இணை அமைச்சர்
(தனிப் பொறுப்பு), இந்திய அரசு

புதுடில்லி

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்க ளிடையே வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்ப தாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசை யில் 23-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் பதிப்பாசிரியர்கள், மொழிபெயர்ப் பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக் கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியை யும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

புதுடில்லி

இயக்குநர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் பதிப்பாசிரியர் உரை

மகாராஷ்டிர மாநில அரசு வெளியிட்டுள்ள டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை பன்னிரண்டாவது தொகுதி 23, 24, 25, 26 ஆவது தொகுதிகளாக வெளிவருகின்றன. பண்டைக்கால இந்தியா ஏனைய நாடுகளுடன் எவ்வாறு வாணிகம் செய்து வந்தது என்பதை விவரிக்கும் அரிய தகவல்களும், பிரிட்டிஷ் பேரரசு தீண்டப்படாதோரை எவ்வளவு மோசமாக நடத்தி வந்தது என்பதும், இங்கிலாந்தின் அரசியல் சாசனம் குறித்த விரிவுரைகளும், சட்டங்கள் சம்பந்தப்பட்ட தெள்ளத் தெளிவான, மிக நுணுக்கமான விவரங்களும், பிரிட்டிஷ் இந்தியாவின் அரசியல் சாசனம் குறித்த முக்கிய குறிப்புகளும், ஒரு விசாவுக்காகக் காத்திருத்தல் என்னும் சிந்தனையைக் கிளறும் சீரிய கட்டுரையும் இந்தத் தொகுதிகளில் இடம்பெற்றுள்ளன.

டாக்டர் அம்பேத்கரின் சீரிய சிந்தனைகளும், தீர்க்கதரிசனமான திட்டங்களும் மக்களைச் சென்றடைவதற்கு அவற்றைத் தமிழ் உட்பட இந்திய மொழிகளில் மொழி பெயர்த்தளிக்கும் மகத்தான பணியை மேற்கொண்டுள்ள இந்திய அரசும், நூல் வெளியீட்டுத் திட்டத்தை நிறைவேற்றி வரும் சமூகநீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சகத்தின் டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனும் நன்றிக்குரியவர்கள்.

முன் தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதிகளையும் மிகுந்த பொறுப்புணர்வுடன் மொழி பெயர்த்துள்ள மொழிபெயர்ப்பாளர்கள் மற்றும் ஒப்புநோக்குவோர், சரிபார்ப்போர் ஆகியோர் பாராட்டுக்குரியவர்களாவர்.

**எஸ். பெருமாள்**
தமிழ் நூல் பதிப்பாசிரியர்.

## பொருளடக்கம்

### பகுதி I



### பகுதி II



### பகுதி III

# இயல் I

# பண்டைக்கால இந்திய வாணிகம்

+உலகெங்கும் தங்கள் ஆட்சியை, அதிகாரத்தை பேரரசை நிறுவ வேண்டும் என்ற அடங்கா வேட்கையும் துடிதுடிப்பும் கொண்ட ரோமானியர்கள் கிழக்கிலும் மேற்கிலும் கண்ணை மின்வெட்ட தங்கள் வாட்களைச் சுழற்றினர்; அதன் விளைவுகள் வெவ்வேறு விதமாக அமைந்துவிட்டன. ''கிழக்கிலே எத்தனை எத்தனையோ நாடுகளை, பிரதேசங்களைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தனர்; எனினும் அவை காலப்போக்கில் அவர்களிட மிருந்து''[1] *(....) கைநழுவி விட்டன. ஆனால் மேற்கிலோ ''ஆரம் பத்தில் தங்களுடைய குடிமக்களாக*(....) எசமானர்களாக இருந்த இனமக்களை ஒன்று, அவர்கள் ரோமானியமயமாக்கினர் அல்லது ரோமானியமயமாக்கத்தை விரும்பி ஏற்கச் செய்தனர்.''[2] இந்த ரோமானியமயமாக்கத்தின் பயனாக ரோமானியரிடமிருந்து பெற்ற தனது மரபுரிமை குறித்து மேற்கு பெருமையும் பெருமிதமும் கொள்கிறது. ஆயின் இந்த வளமிக்க, செழுமை வாய்ந்த மரபுரிமை எவ்விதம் பெறப்பட்டது, ஈட்டப்பட்டது என்பது பற்றி ஆழ்ந்து ஆய்வு செய்ய எவரும் தீவிர முயற்சி எடுத்துக் கொண்டதாகத் தெரிய வில்லை.

ரோமானியர்கள் பல வகைகளிலும் வல்லவர்கள்; படை திரட்டுவதில் தேர்ந்தவர்கள்; சட்டங்களை வகுப்பதில் சாமர்த்திய சாலிகள்; போருக்கு முன்னர் படை திரட்டுவதிலும், வெற்றிவாகை சூடிய பின்னர் படைக்கலைப்பிலும் வியத்தகு ஒழுங்கையும் கட்டுப் பாட்டையும் நிலைநாட்டுவதில் அசகாயசூரர்கள். அனைத்துத் திசை களிலும் அவர்கள் சுற்றி வளைத்துக் கொள்ளப்பட்டிருந்தனர். வடக்கி லிருந்து எத்ருஸ்கான்கள் நெருக்கினர்; மேற்கிலிருந்து லீகூரியர்கள்

---

+ கையெழுத்துப்பிரதியின் முதல் பக்கம் காணவில்லை. கையெழுதுப்பிரதி இரண்டாம் பக்கத்திலிருந்து தொடங்குகிறது - ஆசிரியர்.

★ அந்துப்பூச்சிகளால் அல்லது கறையான்களால் அரித்துத்தின்னப்பட்டபகுதி நட்சத்திரச் சின்னமிட்ட அடைப்புக்குறியில் காட்டப்பட்டுள்ளது - ஆசிரியர்.

1 குரோமர், பிரபு மேற்கோள் காட்டிய 'பண்டைக்கால மற்றும் தற்கால ஏகாதிபத்தியம்'' என்னும் நூல் பக்கம் 72.

2 மேற்படி நூல், பக்கம் 73.

முன்னேறி வந்தனர்; கிழக்கிலிருந்து சபியர்கள் அச்சுறுத்தினர்; தெற்கிலிருந்து கிரேக்கர்கள் திரண்டு வந்தனர். இத்தகைய இக்கட்டான, நெருக்கடியான நிலைமையிலும் ரோமானியர்கள் மனம் தளரவில்லை; உறுதி குன்றவில்லை. தங்கள் சக்தி முழுவதையும் ஒன்று திரட்டி மலைபோல் எதிர்த்து நின்றனர். இருபாலாரையும் சேர்ந்த இளம் தளிர்களைத் தவிர அனைத்து மக்களுமே எக்காள ஒலி கேட்டதும் செங்கொடியைச் சுற்றிலும் அணி திரளத் தயாராக இருக்கும் ஒரு பிரமாண்டமான சைனியமாகத் திகழ்ந்தனர். ஆனால் ஒருவிஷயம்: ரோமாபுரியின் விரிந்து பரந்த வலிமைக்கு அதன் இடப்பரப்புப் போதவில்லை; மிகச் சிறியதாக இருந்தது; அளவு மீறிய செறிவு திடீர்வெடிப்புக்கு வழிவகுக்கும் என்ற கோட்பாட்டை இது புலப்படுத்துவதாக இருந்தது. நாடு பிடிக்கும் நப்பாசையில் உந்தப்பட்டோ அல்லது அந்நியரின் அடக்குமுறை அட்டூழியங்களால் நிர்ப்பந்திக்கப்பட்டோ அது முதலில் இத்தாலியத் தீபகற்பம் முழுவதையும் விழுங்கிக் கபளீகரம் செய்யத் தொடங்கிற்று. பிறகு சொல்ல வேண்டுமா? ஏகாதிபத்தியம் தெரிந்தோ, தெரியமாலோ அத்துமீறுவது, அடாவடித்தனத்தில் ஈடுபடுவது, தன் ஆக்கிரமிப்புப் பாதையைத் தொடர்ந்து பின்பற்றுவது முற்றிலும் இயல்பு. இதுதான் ரோமாபுரி விஷயத்திலும் நடைபெற்றது. அது தனது அபார படை வலிமை கொண்டு, ஒன்றன்பின் ஒன்றாக பல நாடுகளைப் பிடிக்கும் வேட்டையில் இறங்கிற்று; இதனால் போரை அது தனது விழுமிய தொழிலாகவே வரித்துக் கொண்டது. ஆனால் போட்டியைப் போன்றே போரும் தன்னைத் தானே அழித்துக்கொள்ளும் என்ற கண்கண்ட உண்மை அதற்குத் தெரியாது போயிற்று. ஒரு மாபெரும் பாய்ச்சலில், வீச்சில் அது எல்லையற்ற நிலப் பகுதியைத் தனது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்தது. ஆனால் அதன் உள்ளார்ந்த தூண்டி ஊக்குவிக்கும் ஆற்றல் வடிந்து கரைந்து தேய்வுற்றபோது, ரோமாபுரி தனது பரந்தகன்ற பேரரசு வட்டம், மையத்தை நோக்கி சிறுத்துக் குறுகிச் சுருங்க விட்டுவிட்டது; இதில் வியப்பேதும் இல்லை.

ரோமானியர்களின் வீரதீர போர் சாகசங்கள், பண்டைய ரோமாபுரி காட்சியரங்குகளில் நடைபெற்ற காட்டுமிராண்டித் தனமான வாட்போர் போன்ற காட்சிகள் ஒருபுறமிருக்க, சிறந்த சாலைகளை நிர்மாணிக்கும் கலையையும், தேர்ந்த திறமைமிக்க ஆட்சித்துறைக் கலையையும் உருவாக்கிய பெருமை ரோமானியர்களைச் (சேரும்)* (இது தவிர)* நாகரிக வளர்ச்சிக்கு ரோமானியப்

★ கறையான்களால் அரிக்கப்பட்ட பகுதிகள் அடைப்புக்குறிகளில் காட்டப்பட்டுள்ளன. இவற்றில் தகுந்த சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன - ஆசிரியர்.

பங்களிப்பு மிகக் குறைவாகவே (இருந்தது); இதை பாக்ஸ் ரோமனா அதாவது பண்டை ரோமாபுரிப் பேரரசாட்சிக்குட்பட்ட என்னும் சொற்றொடரில் தொகுத்துச் சுருக்கிக் கூறுவது சாத்தியமல்ல.

ரோமானிய ஏகாதிபத்தியத்தின் மேற்கவிகையின்கீழ் கிழக் கின்)* 'அமைதியான ஊடுருவல்'' இடைவிடாது இருந்து வந்தது. தத்துவவியல், வானூல், கணக்கியல், மருத்துவ இயல் முதலியவை ரோமாபுரிக்குக் கிழக்கு வழங்கிய நன்கொடைகளாகும். ரோமானி யர்களின் நடைமுறை அனுபவத் திறனுக்கு மாறுபட்ட முறையில் அமைந்த கீழ்த்திசையாளர்களின் ஆழ்புலமை அவர்களது வாணிகச் சரக்காக மிளிர்ந்தது. இதனால் ரோமாபுரியின் அரசவையை கீழை நாடுகளைச் சேர்ந்த புகழ் ஒளி சான்ற அறிஞர் பெருமக்கள் அணி செய்யும் அரும்காட்சியைச் சர்வசாதாரணமாகக் காணமுடிந்தது. தாலமியும் புளோட்டினசும் எகிப்து தந்த மாணிக்கங்கள்; பொர்புரியும் லேம்பிலிச்சும் சிரியாவின் தவப்புதல்வர்கள்; தியோஸ்கோரிடஸூம் கலெனும் ஆசியா ஈந்த மேதைகள். ரோமானிய நாகரிகத்தின் பெரும் பகுதி கிழக்கித்திய அடிமைகளின் இடைவிடா முயற்சியால் கனிந்த கனியாகும். ரோமப் பேரரசின் பொதுப் பள்ளிக்கூடங்களில் ரோமானியக் குழந்தைகளுக்குக் கல்வி போதித்தவர்கள்கூட இந்த ரோமானியர்கள் வனப்பில், அழகில்விட வலிமையில் ஆற்றலில் மோகம் கொண்டவர்கள். ''கலை ரசனையில்லாத ரோமாபுரி கலையையும் கலைஞர்களையும் தனது சொந்த சுயநல நோக்கங் களுக்காகப் பயன்படுத்திக் கொண்டது. கண்ணைப் பறிக்கும் முனைப் பான வண்ணப்பகட்டில் அது கொச்சைத்தனமான முறையில் உவகை கண்டது. மாபெரும் ட்ரோஜன் தூபியின் பொன்னொளி வீசும் ஒண்சிவப்பு ஒப்பனையை இதற்கு உதாரணமாகக் கூறலாம். கீழை நாடுகளுடனான வாணிகமே இதற்கெல்லாம் தூண்டுகோல் எனலாம்.''[1] ரோமானியக் கட்டிடக் கலையே கூட கிழக்கிந்திய அடிமைகளிடமிருந்து உதித்ததே ஆகும். ரோமாபுரியின் ஆற்றல் முழுவதுமே, பலம் முழுவதுமே நாடு பிடிப்பதில் அல்லது இன்னும் சொல்லப்போனால் உயிர் வாழும் போராட்டத்தில் செலவிடப் பட்டது என்று கூறுவதே பொருந்தும். எனினும் போதிய போராட் டத்திற்குப் பிறகு கிடைத்த ஓய்வை தனது அதிகாரத்துக்கு உட்பட்ட மக்களின் பல்வேறு திறமைகளை உரியமுறையில் வளர்த்து வளப் படுத்திக் கொள்வதற்கு அது நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்க

---

★ அடைப்புக் குறியில் உள்ள பகுதிகள் கறையான்களால் அரிக்கப்பட்டு விட்டன. அவற்றிக்குப் பதிலாக தகுந்த சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன - ஆசிரியர்.

1. டபிள்யூ.ஆர்.பேட்டர்சன், 'தேசங்களின் தீவினைப்பயன்'', பக்கம் 307.

முடியும். சமாதானத்தின் மூலம் கிட்டும் வெற்றிகள் போரின்மூலம் கிட்டும் வெற்றிகளை விட எவ்வகையிலும் புகழ் குன்றியவை அல்ல என்பதையும், (தனது)* அப்பட்டமான போர் வெறியைக் கைவிடுவது எத்தகைய பெரும் நிம்மதியைக் கொண்டு வரும் என்பதையும் ரோமாபுரி துரதிருஷ்டவசமாக உணரத் தவறிவிட்டது அல்லது (அது)* அவ்வாறு உணர்வதற்குள் காலம் கடந்து விட்டது என்றுதான் சொல்லவேண்டும். இதனால்தான் சமாதான தேவதைக்கு ரோமாபுரி சிலை எழுப்பிய போதிலும், அது தானே தன்னைச் சுற்றி உருவாக்கிக் கொண்ட சுவர்களிலிருந்து வெளிவர முடிய வில்லை. (....)* என்ற உண்மையைக் காண்கிறோம். ரோம் சில தொழில்களைப் பெற்றிருந்த போதிலும், அதன் உற்பத்தித்திறன் பரிதாபகரமான முறையில் மிகவும் கீழ்நிலையில் இருந்தது; அதன் பயனீடு அதன் உற்பத்தியை வெகுவாக விஞ்சிச் சென்றது; இதன் காரணமாக அதன் நாணயத்தின் மதிப்பு பெரிதும் வலுவிழந்து, தொடர்ந்து சரியும் நிலைமை ஏற்பட்டது. லேட்பண்டியா அதன் வேளாண்மையைச் சிதைத்துச் சீரழித்து, விவசாயிகளைப் பிச்சை யெடுக்கும் நிலைமைக்கு (உள்ளாக்கிற்று)*'' தனக்கு வேண்டிய உணவுக்கு சிலியையும் எகிப்தையும் முற்றிலும் சார்ந்திருக்க வேண்டிய நிர்ப்பந்த நிலைக்கு, அவலநிலைக்கு அதனை ஆளாக்கிற்று. நிலம் மிகச் சிலரது கையில் குவிந்திருந்ததன் காரணமாக அதன் உற்பத்தித் திறன் வெகுவாக வீழ்ச்சியடைந்தது; இதனால் இத்தாலிய அறுவடைப் பருவம் என்பதே அநேகமாக இல்லாமல் போயிற்று. இதன் விளைவாக ரோம் தனக்கு வேண்டிய அனைத்தையும் கிழக்கிலிருந்தே பெற்று வந்தது; இதற்குப் பிரதியாகத் தருவதற்கு அதனிடம் எதுவும் இல்லை.

''ரோமை கான்ஸ்டன்டைன் அரசியல் அதிகாரத்தின் கேந்திர மாக, மையமாக ஆக்குவதற்கு முன்பேகூட தொழில் வளர்ச்சிக்கும், செல்வ வளத்துக்கும், தொழில்நுட்பத் திறத்திற்கும் தரத்துக்கும், கலைப் படைப்புகளுக்கும் அதேபோல் அறிவுத் தாகத்துக்கும், விஞ்ஞான மேம்பாட்டுக்கும் கிழக்கையே அதிலும் குறிப்பாக

---

★ கறையான்களால் அரிக்கப்பட்ட பகுதிகள் நட்சத்திரச் சின்னமிட்டு அடைப்புக் குறிகளில் காட்டப்பட்டிருக்கின்றன. இவ்வாறு விடப்பட்ட பகுதிகளில் தகுந்த சொற்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன - ஆசிரியர்.

1. டபிள்யூ.ஆர்.பேட்டர்சன், 'தேசங்களின் தீவினைப் பயன்'', பக்கம் 334.

2. பிரான்ஜ் கூமாண்ட், ரோமானிய புறசமயக்கோட்பாட்டில் கிழக்கத்திய சமயங்கள், பக்கம் 2.

தொன்மை வாய்ந்த நாகரிகத்தின் நிலைக்களமாகத் திகழும் இந்த நாடுகளையே நாம் சார்ந்திருக்க வேண்டியிருந்தது, நம்பியிருக்க வேண்டியிருந்தது.''[2] இன்னும் சொல்லப்போனால் அறிவுத்துறையின் அனைத்துக் கிளைகளிலும் கீழை உலகின் தாக்கம் கோலோச்சிற்று என்றே கூறவேண்டும்.''[3] 'அந்த அளவுக்குத் தொழில்நுட்ப அறிவாற்றலிலும், புதியவற்றைக் கண்டுபிடிக்கும் மேதகைமையிலும், தொழில்வினைஞர்களது ஆற்றலிலும் அதுபெரிதும் மேம்பட்டு நின்றது.''[4] கலைத்திறன் கொண்ட, வேலைப்பாடுகள் மிகுந்த பொருட்களின் தயாரிப்புகள் தொடங்கி தொழில்துறை வரையிலும் கூட வளர்ந்து வரும் கீழைய செல்வாக்கின் தடத்தை, பதிவைக் காணமுடியும்; மாபெரும் கிழக்கித்தியத் தொழில் கேந்திரங்களின் செயற்பாடு ஐரோப்பாவின் பொருளாயத நாகரிகத்தை எவ்வாறு படிப்படியாக மாற்றிற்று என்பதை உய்த்துணர முடியும்; கௌலில் அயல்பாணிகளையும், செயல்முறைகளையும் புகுத்தியதானது எவ்வாறு சுதேசித் தொழில் துறையை மாற்றி, (அதன்)* உற்பத்திப் பொருள்களுக்கு இதுவரை அறிந்திராத முழு நிறைவையும், மதிப்பையும் அளித்தது என்பதை எவரும் சுட்டிக்காட்ட முடியும்.''[5] நினைவுக் கெட்டாத காலம் தொட்டு தொழிற் புரட்சிக் காலம் வரை கீழ்த்திசை நாடுகள் உலகின் தொழிற்கூடம் என்ற ஒப்புயர்வற்ற, தன்னிகரற்ற பெருமையை, சிறப்பை பெற்று வந்திருக்கின்றன; அதுமட்டுமல்ல, மேற்கில் புதிய கற்காலம் உதித்து, கல்லைக் கொத்திச் செதுக்கி ஒரு கைக்கோடரியை உருவாக்குவதே மனித சக்திக்கு அப்பாற்றபட்ட ஒரு சாதனையாகக் கருதப்பட்டு வந்த சமயத்தில், கீழைஉலகம் தனது அபூர்வ இயந்திர வேலைப்பாட்டையும் தொழில்நுட்பத்தையும் பறைசாற்றும் பிரம்மாண்டமான அதியற்புத இரும்புத் தூபிகளை வடிவமைப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தது என்பது (குறிப்பிடத்தக்கதாகும்).*

---

★ கறையான்களால் அரிக்கப்பட்ட பகுதிகள் நட்சத்திரச் சின்னமிட்ட அடைப்புக் குறிகளில் காட்டப்பட்டிருக்கின்றன. இவ்வாறு விடப்பட்ட பகுதிகளில் தகுந்த சொற்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன - ஆசிரியர்.

3. மேற்படிநூல், பக்கம் 6.

4. மேற்படிநூல், பக்கம் 8.

5. மேற்படிநூல், பக்கம் 9.

+ அடைப்புக் குறியில் உள்ள பகுதிகள் கறையான்களால் அரிக்கப்பட்டு விட்டன. அவற்றிக்குப் பதிலாக தகுந்த சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன - ஆசிரியர்.

# புரூக்ஸ் ஆதம்ஸ், நாகரிகத்தின் சட்டமுறைமையும் சிதைவும், பக்கம்

இவ்வாறு கிழக்கு, மேற்கிற்கு (உத்)* வேகம் அளித்தது).''[1] நைல், யூப்ரட்டஸ், யாங்சிகாங், சிந்து ஆகிய நதிகளின் படுகைகளில் தான் நாகரிகத்தின் மங்கிய புலர்காலைப் பொழுதை, விடியலை, அறிவாற்றலின், முன்னேற்றத்தின் தொடக்கத்தை முதன்முதலில் காண்கிறோம். கிழக்கில் தோன்றிய இந்த வெளிச்சத்தைப் பெற்று, அதனை பன்மடங்கு பிறங்கொளியோடு, பளபளப்போடு மேற்கில் பிரதிபலித்ததே கிரீசும், ரோமும் ஆற்றிய ஒரே பணியாகும்.''[+]

இந்தக் கோணத்திலிருந்து நோக்கும்போது ''இருண்ட காலம்'' என்னும் வேதாளம் வரலாற்றாசிரியனின் மூளையிலிருந்து உதித்த கற்பனைப் படைப்பு என்றே தோன்றுகிறது. ஐரோப்பாவிலிருந்து இத்தகைய இருண்டகாலம் ஏதேனும் இருந்ததா? அப்படியிருந்தது என்றால், அங்கு எப்போது வெளிச்சம் படர்ந்தது? வரலாறு இதனை வெளிப்படுத்தவில்லை. அப்படியே ஏதேனும் வெளிச்சம் அல்லது நாகரிகம் இருந்தது என்றால், அது மத்தியதரைக்கடலின் கிழக் கத்திய வடிநிலத்தோடு நின்றுவிட்டது; இப்பகுதியில் கிழக்கின் தாக்கம் இடையறாது இருந்துவந்ததே இதற்குக் காரணம். இதைத் தவிர்த்து ஐரோப்பாக் கண்டம் முழுவதுமே வெகு அண்மைக் காலம் வரை காட்டுமிராண்டித்தனத்தில் மூழ்கிப் போயிருந்தது. ஐரோப் பிய நாகரிகத்தின் வளைகோடு (அது எந்த அடிப்படையில் தீட்டப் பட்டது என்பதை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால்) இடையறாது உயர்ந்து வந்திருக்கிறது என்பதும், இருண்டகாலம் என்று வரலாற்றாசி ரியன் கூறுவது இதற்கு முந்தைய நூற்றாண்டுகள் கண்டதை விட மேம்பட்டதொரு நாகரிகத்தைக் குறிக்கிறதே தவிர வேறல்ல என்பதும் புலனாகும். 'இருண்ட காலம்' என்ற கற்பனை ஐரோப்பா முழுவதையும் ரோமாபுரியை மனத்திற் கொண்டு சிந்திக்கும் தவற்றி லிருந்தே எழுந்தது; ஒரு பகுதியைக் கொண்டு அதன் முழு மொத்தத் தையும் எடைபோடுவது போன்ற மோசமான தவறு வேறு எதுவும் இல்லை எனலாம்.

உண்மையைக் கூறுவதானால், 'இருண்ட காலம்' என்னும் பிரச்சினை கீழை நாட்டு வரலாற்றாசிரியனால்தான் எழுப்பப்பட வேண்டும். ஏனென்றால் உச்சிக்குச் சென்ற பிறகு இந்தப் பெரும்

---

+ ஆர்.சி. தத்.

வீழ்ச்சி ஏன், விடியலுக்குப் பிறகு இந்தத் திடீர் இருட்டு ஏன் என்ற கேள்விக்குப் பதிலளிக்க வேண்டியவன் அவன்தான்.

மிகவும் முற்பட்ட, மிகச் சிறந்த எதிர்காலமுடைய நாகரிகங்கள் அவற்றின் முன்னேற்றம் பெரிதும் எதிர்பார்க்கப்பட்டவேளையில், அவை முட்டுச்சந்தில் சிக்கிக் கொண்டுத் திடீரென்று தடைப் பட்டுப்போனது பெரிதும் வருந்தத்தக்கதாகும். இந்த ஆரம்பகால நாகரிகங்களில் சில தம்மைப் பற்றிய விவரங்களை செங்கற்களிலும் பட்டயத் தகடுகளிலும் பதித்து விட்டு மடிந்து விட்டன. இதர நாகரிகங்கள் தமது பாதையில் தயங்கி, சுணங்கி நடைபோட்டுக் கொண்டிருக்கின்றன; மீண்டும் புத்திளமை பெறப் பாடுபட்டு வருகின்றன. இந்திய நாகரிகம் மிகத் தொன்மையானது; ஆனால் மற்றெல்லா நாகரிகங்களையும் போலவே அதுவும் தடைப்பட்டது: எனினும் உயிர்ப் பிழைத்து மீண்டெழுந்து புத்தூக்கம் பெற்றது; இனி அது ஒருபோதும் மடியாது என்று நாம் நம்பலாம். மேலைய நாடுகளுடனான தொடர்பு அதன் 'ஸ்தம்பித நிலையை'' ஆட்டிக் குலுக்கி, தனது பழைய இயக்காற்றலை, உத்வேகத்தை மீண்டும் பெறச் செய்து விட்டது.

நாகரிகம் வேறோர் இடத்தில் அல்லாமல் ஏன் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தொடங்குகிறது என்று வரலாற்று ஆசிரியர்கள் அடிக்கடி குழம்புகின்றனர், வியப்படைகின்றனர். அந்தக் குறிப்பிட்ட பகுதியில் வதியும் மக்களின் திறமையும் ஆற்றலும் இதற்குக் காரணமா? அல்லது ஆண்டவன் அல்லது இயற்கையின் அருள் நலத்தால், கருணாகடாட்சத்தால் இது நிகழ்கிறதா? இந்த விஷயத்தை மேலெழுந்தவாரியாகப் பரிசீலித்துப் பார்த்தால்கூட இந்த இரண்டு அம்சங்களும் இரண்டாம்பட்சமான பங்கே வகிக்கின்றன என்ற முடிவுக்கு நாம் வரமுடியும். முதல் தலையாய பங்கை ஆற்றும் சிறப்பு சுற்றுச்சூழலையே சாரும். வளமிக்கச் சுற்றுச்சூழல், தனது பாதுகாப்பைப் பேணும் ஆற்றல், ஒதுக்கநிலை, அந்நியப் படையெடுப்பிலிருந்து பந்தோபஸ்து போன்ற நல்வாய்ப்புகள் இருக்குமானால் அங்கு நாகரிகம் விதைத்து, முளையிட்டு, தளிர்த்து, கிளைத்து வளர்ந்தோங்கவே செய்யும்.

இந்தியாவின் நில இயல், நில அமைப்பு முறை நாகரிகத்தின் ஆரம்பகாலத் தொட்டிலாக அது திகழ்வதற்கு முற்றிலும்

உகந்ததாக, பொருத்தமானதாக இருந்தது. ஏராளமான பழங்குடி மக்கள் தங்கள் ஆற்றலை வளர்த்துக் கொள்வதற்கும், இயற்கை தந்துள்ள அருங்கொடைகளைப் பயன்படுத்திக் கொள்வதற்கும் ஏற்ற பாதுகாப்பான வாழ்விடத்தை நாடித்தேடி அலைந்து கொண் டிருந்தபோது, அந்த மக்களே பொறாமைப்படும் அளவுக்கு ஓர் ஒதுக்க நிலையை இந்தியாவுக்கு இயற்கை வழங்கி அருளிற்று. வடக்கே இமாலய மலைகளால் சீனாவிடமிருந்தும், திபேத்திட மிருந்தும், கிழக்கே டெனாசரிம் மலைகளால் பர்மாவிடமிருந்தும் அசாமிடமிருந்தும், மேற்கே (காரகோரம்)* (ஹிந்துக்குஷ்)* மலைத் தொடர்களால் ஆப்கானிஸ்தானத்திலிருந்தும் பிரிக்கப்பட்டு இந்தியத் தீபகற்பம் தன்னந் தனியான ஒரு சிறு உலகமாகவே காட்சியளிக் கிறது - வலுமிக்க இயற்கை அரண்கள் அதற்குப் பாதுகாப்பாக (அமைந்துள்ளன)* - வடமேற்கே 'மலைகள்''[1] ஓர் அரணாகவும், இதர பக்கங்களில் கடல் ஓர் அகழியாகவும் பாதுகாத்து நிற்கின்றன''.

'தலைகீழாக உள்ள இந்த முக்கோணம்'' மிகப் பலதரப்பட்ட இயற்கை வளங்களை தன்னகத்தே மிக அபரிதமாகப் பெற்றுள் ளது. ''பிரிட்டிஷ் இந்தியாவில் விலங்கினங்கள் ஏராளமாக இருப்பது மட்டுமன்றி, மிகவும் பல்வகைப்பட்டவையாகவும் உள்ளன. இந்தியாவில் வாழும் விலங்கு வகைகளின் எண்ணிக்கை மிக அதிகம்; உதாரணமாக இந்த எண்ணிக்கை ஐரோப்பா முழுவதிலும் காணப்படும் விலங்கினங்களின் எண்ணிக்கையை வெகுவாக விஞ்சி செல்லுகிறது; இத்தனைக்கும் இந்தியப் பேரரசின் பரப்பை விட ஐரோப்பாவின் நிலப்பரப்பு அரைமடங்கு அதிகம்''.[2] மேலும், பலதரப் பட்ட தாவர இனங்களையும் விலங்கினங்களையும் கொண்டது இந்தியா; அதன் தட்பவெப்பநிலை இவ்விதம் வெவ்வேறு வகைப் பட்ட விலங்கினங்கள் உயிர் வாழ்வதைச் சாத்தியமாக்கி உள்ளது. இதே போன்று இந்நாட்டின் தாவர இனச்செல்வம் வரையறை யற்றது. தொன்னெடுங்காலம் முதலே இந்த அம்சங்கள் அனைத்தும் ஒன்றிணைந்து, பொருளாதாரச் சுயசார்பு எனும் வரத்தை இந்நாட் டுக்கு அருளியுள்ளன; இன்று இந்தப் புவிக்கோளில் மிகச் சில நாடுகளே இந்தத் தனிச் சிறப்பைப் பெற்றுள்ளன என்று கூற வேண்டும்.

---

★ நட்சத்திர சின்னமிட்ட அடைப்புக் குறிகளில் காட்டப்பட்டுள்ள பகுதிகள் கறையான்கள் அரிக்கப்பட்டுள்ளன. இவற்றில் தகுந்த சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன - ஆசிரியர்.

1. தாம்ப்ஸன் இ.டபிள்யூ "இந்தியாவின் வரலாறு", பக்கம் 2.

2. இந்தியாவின் பேரரசு விவரத் தொகுப்புக் களஞ்சியம், தொகுதி I, பக்கம் 215.

இந்த விவரங்களை எல்லாம் கொண்டு பார்க்கும்போது, மனிதன் செயலற்று வாளாயிருப்பான் என்று எதிர்பார்க்க முடியாது; ஏனென்றால் பொருளாதார நோக்கம்தான் செயல்படத் தூண்டும் அனைத்து உணர்வுகளிலும் மிகவும் இயக்காற்றல் வாய்ந்தது. அவன் உடனே சற்றும் தாமதியாமல் தனது நல்வாழ்வுக்காக சுற்றுச் சூழலைப் பயன்படுத்திக் கொள்ள முனைகிறான்; இந்தியாவின் ஆதிகாலவாசிகள் இந்த நியதிக்கு எவ்வகையிலும் விதிவிலக்கான வர்கள் அல்ல. ஆனால் தற்கால சராசரி இந்தியனை மலைகுலைந் தாலும் நிலைகுலையாத மன உரம் வாய்ந்த அவனது மூதாதையின் ஒரு மறுவடிவமாக நாம் கருதுவோமானால் அது தவறாகும். இக்கால சராசரி இந்தியன் உருவஅமைப்புகளில் வேண்டுமானால் தனது மூதாதையுடன் ஒத்திருக்கலாம்; ஆனால் இந்த ஒற்றுமை இத்தோடு சரி. இந்தப் புறத்தோற்ற ஒற்றுமை இங்கு முடிவடைந்து விடுகிறது. அன்றைய இந்தியன் பண்டைக்கால இந்தியாவை ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் எத்தகைய வாதத்துக்கும் இடமற்றமுறையில் தன் வசம் வைத்திருந்தான்; ஒரு பூர்விகவாசியிடம் எதிர்பார்க்கக் கூடியதை விடவும் அவன் அதிகமாக சாதனை புரிந்தான். அவனது அருஞ்செயல்களைப் பற்றிய விவரங்கள் போதிய அளவு கிடைக்க வில்லை; அவ்வாறு கிடைத்துள்ள ஒரு சில விவரங்களே கூட அவனது பெருமையைப் பறைசாற்றுவதாக உள்ளன. பின்கண்ட வற்றிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ளலாம்.

பண்டைக்கால இந்தியர்களின் சாதனைகள் பலதரப்பட் டவை; மிக முக்கியமானவை; என்றாலும் அவற்றைப் பற்றியெல் லாம் இங்கு விவரித்துக் கொண்டிருக்கப் போவதில்லை. அவர் களது பொருளாதார நடவடிக்கைகளில் மட்டுமே இங்கு கவனம் செலுத்தப் போகிறோம்.

முதலில் நமது ஆய்வுக்கு உதவக் கூடிய ஆதாரங்களைப் பார்ப்போம். இயற்கையைப் பொறுத்தவரையில் இத்தகைய ஆதா ரங்கள் வருந்தத்தக்க முறையில் மிகவும் குறைவு. இந்துக்களோ தங்களது வாழ்க்கையின் பொருளாதார நடவடிக்கைகள் தவிர மற்ற எல்லாவற்றிலும் வம்பளப்பவர்கள், வெட்டிப் பேச்சுப் பேசுபவர் கள்; இதற்கான காரணங்கள் தெரிந்ததே. கல்வி ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த மக்களின் ஏகபோகமாக இருந்தது; இவர்கள் 'தேன்கூட்டில் உள்ள சோம்பேறி ஆண் தேனீக்களைப் போல ஏறத்தாழ இருந்தனர்; ஒரு துரும்பைக்கூட எடுத்துப் போடாமல் பிறர் உழைப்பின் பலனை சுகித்து மகிழும் ரகத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள்!'' இந்தியாவின் அறிவுத்துறை வர்க்கத்தினரான பிராம

ணர்கள் சமயக் குருக்களாக, மற்றவர்களுக்குப் பதிலாட்களாக இருந்து சகல சுகபோகங்களையும் அனுபவிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தனர். இதனால் பண்டைக்கால இந்துக்களின் பொருளாதார நடவடிக்கைகளை விரித்துரைப்பவர்கள் எவரு மில்லை; எந்த நூல்களிலும் அவை இடம்பெறவும் இல்லை; அந்த நூல்கள் எல்லாம் புரோகிதத்துக்கு முற்றிலும் வெண்சாமரம் வீசுவ தாகவே இருந்தன. பொருளாதார விஞ்ஞானம் குறித்து எந்த நூலை யும் இந்தியா படைக்காததற்கு இதுவும் ஒரு காரணமாகும். எனவே, இது விஷயத்தில் அயல்நாட்டு எழுத்தாளர்களையும், இந்தியா வின் வாணிகம் குறித்து அவர்கள் தரும் அற்பசொற்ப விவரங்களை யும் சார்ந்திருக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளானோம்.

வாணிகம் குறித்த பொருளில் இறங்குவதற்கு முன்னர் பண்டைக்கால இந்தியாவில் பொருளாதார வளர்ச்சி பற்றி மேலெழுந்தவாரியான, பருந்துப் பார்வை அளவிலான ஓர் ஆய் வினை மேற்கொள்வது நலம். இது விஷயத்தில் புத்தருக்கு முற்பட்ட காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்லக்கூடிய நூல் எதுவும் இல்லை. இவ்வகையில் புத்த ஜாதகக் கதைகளில் புத்தரின் முற்பிறப்புப் பற்றிக் கூறும் கதைகளை இப்பொருள் குறித்து மிகத் தொன்மையான ஆதா ரங்களாகக் கொள்ளலாம்; இந்த ஜாதகக் கதைகள் தோன்றியதற்கு வெகு காலத்திற்கு முன்னர் இருந்ததாகக் கருதப்படும் இந்திய சமுதா யத்தில் நிலவிய பொருளாதார ஒழுங்கமைப்பைப் பற்றிய சில குறிப்புகள் இவற்றில் இடம்பெற்றுள்ளன.

## 1. வேளாண் அமைப்பு முறை

மிக ஆரம்ப காலத்தில் பண்டைய இந்துக்கள் கிராமிய வாழ்க்கை வாழ்வதைப் பார்க்கிறோம். ஒவ்வொரு கிராமமும் 30 முதல் 1000 குடும்பங்களைக் கொண்டதாக இருக்கிறது. தனித்தனி வீடுகள் எவற்றையும் காணமுடியவில்லை; அவை ஒன்றுடன் ஒன்று ஒட்டியவாறு கூட்டமாக அமைந்திருக்கின்றன. வேளாண்மையே மிகஉயர்ந்த தொழிலாகப் போற்றப்படுகிறது. இந்திய மூதுரையின் படி சமூகப் படித்தர வரிசையில் வணிகன் விவசாயிக்கு அடுத்த இடத்தை வகிக்கிறான்; படைவீரன் கடைசி இடத்தைப் பெற்றிருக் கிறான்.

நிலம் உழவனாலும் அவனுடைய குடும்பத்தினராலும் சில சமயங்களில் கூலிக்கு அமர்த்தப்படும் தொழிலாளியாலும் உழுது பண்படுத்திப் பயிரிடப்படுகிறது. ''நிலம் கைமாறுவதற்கு எதிரான

உணர்வு தொன்று தொட்டு இருந்து வருகிறது.'' எனினும் சாகுபடிக்கு நிலம் குத்தகைக்கு விடப்படுவதைப் பார்க்கிறோம். சுதந்திரமான நிலச்சுவான்தார் பெரிதும் மதிக்கப்பட்டான்; ஆனால் ஒரு முதலாளி யின் பண்ணையில் வேலை செய்வது பெரிதும் எதிர்க்கப்பட்டது. கிராம சமுதாயத்தில் நிலப்பிரபுத்துவம் நிலவியதா, இல்லையா என்பதைத் திட்டவட்டமாகக் கூறுவதற்கான சான்று ஏதும் இல்லை.

சாலைகள் அமைப்பதிலும், குளங்கள் வெட்டுவதிலும், பொது உபயோகக் கட்டிடங்களைக் கட்டுவதிலும், அவற்றைப் பழுது பார்ப்பதிலும் கிர,,மவாசிகளிடையே மிகப் பெருமளவுக்கு ஒத் துழைப்பு உணர்வு நிலவிற்று:

> ''விளைபொருள்களுக்கு வருடாந்தர திதா தரவேண்டுமென அரசன் உரிமை கொண்டாடினான். இது வரியாக விதிக்கப் பட்டது. இந்த வரியை விளைபொருளாகச் செலுத்துவது என்றால் ஆறில் ஒரு பங்கு, எட்டில் ஒரு பங்கு, பன்னிரண்டில் ஒரு பங்கு என்றவாறு நிர்ணயிக்கப்பட்டது.'' 'தானியங்கள், பயிறுவகைகள், கரும்பு ஆகியவை பிரதான விளைபொருள் களாகக் கருதப்பட்டன. அரிசி உணவின் மிக முக்கிய பொருளாக மதிப்பிடப்பட்டது.''

வேளாண்மை அனைவருக்கும் பொதுவான தொழிலாக இருந்தது. பிராமணனே கூட தனது சாதிமுத்திரையை இழக்காமல் வெள்ளாடுகளை வளர்ப்பவனாகவும், சிறிய மற்றும் பெரிய நிலச் சுவன்தாரனாகவும் இருந்ததைப் பார்க்கிறோம். பண்டைய இந்துவும் சரி, இன்றைய இந்துவும் சரி இது விஷயத்தில் கொண்டுள்ள பற்றார்வம் பண்டைக்கால கிரேக்கன் கொண்டிருந்த பற்றுதலை யும் விஞ்சிச் செய்கிறது; இந்துக்களின் பசு வழிபாட்டில் இது வெளிப்படக் காணலாம்.

பசுவின் மீது இந்து வைத்துள்ள பக்தி பெரும்பாலான அயல்நாட்டினருக்குப் புரியாத புதிராக இருக்கிறது. அதிலும் பிர தானமாக, இந்துவை அச்சுறுத்தித் தங்கள் பக்கம் ஈர்த்துக் கொள்ளும் பொருட்டு சமயப் பிரச்சாரம் செய்வதற்காக இந்தியாவுக்குச் செல்வோர் தங்களது அறைகுறையான சித்தாந்த முயற்சியில் அடையும் தோல்விகளுக்கு இது ஒரு முக்கிய காரணமாக அமைந்திருக் கிறது.

ரோமானியர்கள் உலராத கொடி முந்திரிப் பழங்களிலிருந்து ஒயின் தயாரித்துக் கடவுளர்களுக்குக் காணிக்கையாகப் படைக் காததில் எவ்வாறு பொருளாதார அம்சம் பொதிந்துள்ளதோ அவ்வாறே பசுவழிபாட்டின் தோற்றத்துக்கும் பொருளாதாரம் அடிப் படையாக அமைந்துள்ளது எனலாம். பசுவும் அதேபோல் பாரம் இழுக்கும் எல்லா விலங்குகளும் விவசாயிகளின் ஆன்மாவாக உள்ளன. பசு எருதுகளை ஈனுகிறது. நிலத்தை உழுது பண்படுத்து வதற்கு அந்த எருதுகள் முற்றிலும் இன்றியமையாதவை. இறைச் சிக்காக நாம் பசுவைக் கொன்றால் வேளாண்வளத்துக்கே ஊறு செய்பவர்களாகிறோம். எனவே, பண்டைய இந்துக்கள் மிகவும் முன்யோசனையோடு, முன்னறிவோடு பசு இறைச்சியை விலக்கி வைத்தனர்; இதன் மூலம், பசுக்கள் கொள்ளப்படுவதைத் தடுத்து நிறுத்தினர். ஆனால் சாரமற்ற விதிமுறைகளை மனிதன் லட்சியம் செய்வதில்லை. அவற்றிற்கு சமய இசைவாணை இருக்க வேண்டும்; எனவேதான் பழைய இந்து சமய நூல்களில் பசுவைப் பற்றி பல விசித்திரமான கதைகள் கூறப்பட்டிருக்கின்றன.

## II. தொழிலாளர், தொழில்துறை மற்றும் வாணிக ஒழுங்கமைப்பு

இந்துக்களின் பொருளாதார வாழ்க்கையில் அடிமைமுறை மிகக்குறைந்த பங்கே ஆற்றிற்று என்று கூறலாம். சிறைப்பிடிக்கப் படுதல், நீதிமன்றத் தண்டனை பெறுதல், தன்னைத்தானே தரங் குறைத்துக் கொள்ளுதல், கடனாளியாகுதல் ஆகியவை தனிநபர் கள் அடிமைகளாவதற்கு நான்கு பிரதான காரணங்களாகும். எனினும் அவர்கள் பொதுவாக அன்போடு நடத்தப்பட்டார்கள் என்பதற் கும், அவர்கள் விடுதலை செய்யப்படும் சாத்தியக்கூறு எப்போதும் இருந்து வந்தது என்பதற்கும் போதிய சான்றுகள் உள்ளன. ஒருபுறம் ஒருசில அடிமைகள் இருந்த போதிலும், பணம் அல்லது உணவு பெற்றுக் கொண்டு வேலை செய்யும் சுதந்திரத் தொழிலாளர்களும் கணிசமான எண்ணிக்கையில் இருந்தனர்.

தொழிலாளர் வர்க்கங்களை எடுத்துக் கொண்டால் பின் வருபவர்களை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்:

(அ) வாதாகி என்பது ஒரு பொதுப்பெயர்; தச்சன், கப்பல் கட்டுபவன், பாரவண்டி தயாரிப்பவன், கட்டிடக் கலைஞன் போன்றவர்களை அது குறிக்கிறது.

(ஆ) **கம்மாரா** என்பது ஓர் உலோகக் கைவினைஞனைக் குறிக்கும் தொழிலாகு பெயர். 'உழுமுனை, கோடரி, இரும்புக் கூண்டு முதல் கூர்மென் கத்தி, தண்ணீரில் மிதக்கக் கூடிய மிக நேர்த்தியான ஊசிகள் வரை பல்வேறு இரும்புக் கருவிகளை இவன் தயாரிக்கிறான். இதுவன்றி, தங்கம், வெள்ளியாலான அபூர்வ வேலைப்பாடுகள் மிக்க உருவச் சிலைகளும் இவனது கைவண்ணத்தில் உருவாகின்றன.''

(இ) **பசனகோட்டகா** என்பது கல் தச்சனைக் குறிக்கும் தொழிலாகு பெயர். இவன் கற்களை வெட்டி வடிவமைப்பதுடன், படிகக்கல்லில் துளையிட்டு அவற்றை வியக்கத்தக்க கலைப்படைப்புக்களாக மாற்றும் வல்லமைப் படைத்தவன்; மிகவும் நுட்பமான, உயர்தரமான கருவிகள் தேவைப்படும் தொழில் இது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.''

''வாணிகப் பொருள்களைத் தயாரிக்கும் அனைத்துத் தொழில்களும் கணிசமான அளவுக்கு நன்கு ஒழுங்கமைக்கப் பட்டிருந்தன. சில குறிப்பிட்ட தொழில்களுக்கென்று தனிக் கிராமங்கள் இருந்தன; அவை பெரிய நகரங்களின் புறநகர்ப் பகுதிகளாகவும், துணை மையங்களாகவும் திகழ்ந்தன அல்லது அவையே தச்சுத்தொழில், உலோகத்தொழில், மட்பாண்டத் தொழில் போன்ற தொழில்களுக்கு இருப்பிடமான சுற்றுப் புறக் கிராமங்களுக்குப் பிரதான போக்குவரத்துக்கேந்திரங் களாக விளங்கின. நகரங்களுக்குள்ளேயே சில தொழில் களுக்கென்று தனித் தனித் தெருக்கள் இருந்தன. சாயப் பட்டறைத் தெரு, தந்தப் பட்டறைத் தெரு போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.''

தொழில்கள் சிறந்த முறையில் ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தன; அவை ஒன்று அல்லது இரண்டு கண்காணிப்பாளர்களால் மேற் பார்க்கப்பட்டன. இவர்கள் நகரங்களிலிருந்த தொழில் மற்றும் வாணிக அமைப்புகளின் தலைவர்கள் ஆவர்.

ஒரு தலைவரின் (**பிரமுகர்**) அல்லது அனுபவமிக்க ஒரு முதியவரின் (ஜெதகா) வழிகாட்டுதலில் எண்ணற்ற கில்டுகள் செயல் பட்டு வந்தன; தொழில் இனக்குழுக்கள் என இவற்றைக் கூறலாம். தச்சர்கள், கம்மியர்கள், தோல்பதனிடுவோர், சாயமிடு பவர்கள் மற்றும் பல்வேறு கலைத்துறை வல்லுநர்கள் தத்தமது சொந்த கில்டுகளை நடத்தி வந்தனர். மாலுமிகள், மாலை தொடுப் பவர்கள், காரவான் வணிகர்கள் போன்றோரும் இதிலடங்குவர்.

மரபுவழித் தொழிலில் ஈடுபாடு கொள்ளும் மனோபாவம் ஓரளவு நிலவியது. ஆனால் சாதி அமைப்பின் உள்ளார்ந்த கொடுமையை, அருவருப்பைக் காண முடியவில்லை. பிராமணர்கள் கூட பல சந்தர்ப்பங்களில் கீழ்ப்பட்ட தொழில்களைச் செய்து வந்தனர்.

நதிவழிப் போக்குவரத்து மிகவும் குறைவாகவே இருந்தது; பெரும்பாலும் காரவான்கள் மூலமே போக்குவரத்து நடைபெற்றது. தொழில் கேந்திரங்கள் சிறந்த சாலைகளால் இணைக்கப்பட்டிருந்தன; போக்குவரத்துக்கு இது பெரிதும் துணைபுரிந்தது. தசரத மன்னனின் தலைநகரம் அயோத்தி; இப்போது இது ஒளத் என அழைக்கப்படுகிறது. இங்கிருந்து கேகயர்களின் தலைநகரமான ராஜகிருகத்திற்கு ஒரு சாலை செல்லுவதாக இராமாயணத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த ராஜகிருகம் இமாலய அடிவாரத்தில் பயஸ் நதிக்கரையில் அமைந்திருந்தது. ராஜகிருகத்திலிருந்து அந்த சாலை ஹிபாசிஸ் எனக் கிரேக்கர்களால் அறியப்பட்ட பண்டைய விபசாவுக்கு குரு வமிசத்தினரின் தலைநகரமான அஸ்தினாபுரம் (டில்லி) வழியாகச் சென்றது. பண்டைக்கால இந்தியாவின் சாலைகளைப் பற்றி அலெக்சாந்தர் தரும் தகவல்கள் பெரிதும் துல்லியமானவை எனக் கூறலாம்; இந்திய சாலைகளைப் பற்றி மதிப் பிடுவதற்கு நில அளவாய்வாளர்களுக்கு இவை முக்கிய ஆதாரமாக அமைந்துள்ளன. இவற்றிலிருந்து பின்கண்ட விவரத்தைத் தெரிந்து கொள்கிறோம்: இன்றைய அட்டோக்கு அருகிலுள்ள பெங்கலவதிசிலிருந்து (புஷ்கலவதி) ஒரு சாலை பயஸ் நதியைக் கடந்து தட்சசீலத்தின் வழியாக பாடலிபுத்திரத்துக்குச் சென்றது. மற்றொரு நதி உஜ்ஜயினி வழியாக புஷ்கலவதியையும் இந்திரப்பிரஸ்தத்தையும் (டில்லி) இணைத்தபடி விந்திய மலைத் தொடரிலிருந்து கீழிறங்கி, நருமதை, தபஸ்தி நதிகளைக் கடந்து, பிரதிஸ்தானத்தின் வழியாகத் தக்காணத்தை அடைந்தது. நாட்டின் உட்பகுதியில் ஆங்காங்கு பல நெடுஞ்சாலைகள் இருந்தன; உதய் தலைமையில் பல வணிகர் குழுக்கள் (காரவான்கள்) இவற்றைப் பயன்படுத்தி வந்தன. இந்தியாவில் பண்டைக்காலத்தில் உள்நாட்டு வாணிகமும் வெளிநாட்டு வாணிகமும் மிகுந்த முக்கியத்துவம் பெற்றிருந்தன; புத்த ஜாகக் கதைகளில் வணிகர் குழுக்களின் தலைவர்களது கூட்டிணைவுக் கழகம் பற்றிக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். காரவான் தலைவன் பாலி மொழியில் சத்தரவாகன் என அழைக்கப்படுகிறான். வணிகக் குழுவின் பயணத்துக்கு இவன்தான் வழிகாட்டுகிறான்; எங்கு தங்க வேண்டும், எந்த இடங்களில் தண்ணீர் கிடைக்கும், எந்த வழியாகச் செல்லவேண்டும், ஆறுகளை எப்படிக் கடந்துசெல்லவேண்டும் என்பன போன்ற விஷயங்களை முடிவு செய்கிறான்.

பண்டைக்கால இந்தியாவில் வாணிகம் முற்றிலும் தனி மனித முயற்சியாக இருக்கவில்லை. கூட்டுரிமை அடிப்படையில் வாணிகம் நடைபெற்றதை உறுதி செய்யும் போதிய சான்றுகள் கிடைத்துள்ளன. பங்குதாரர்கள் சேர்ந்து கூட்டு வாணிகம் செய்யும் முறை பரவலாக அல்லாவிட்டாலும் ஆங்காங்கு சில இடங் களில் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. வாணிக நடவடிக்கைகளின் மீது அரசாங்கத்தின் கட்டுப்பாடு மிக மிகக் குறைவு. அதுவும் இந்தக் கட்டுப்பாடும் கூட அரண்மனைக் கொள்முதல்கள் விஷ யத்தில்தான் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. ''அரண்மனைக்குத் தேவையான பொருள்களின் விலைகள் அரண்மனை மதிப்பீட் டாளனால் நிர்ணயிக்கப்பட்டன. இதுவன்றி, அவன் உள்நாட்டுச் சரக்குகளுக்கு அவற்றின் விலை மதிப்பீட்டில் இருபதில் ஒருபங்கும், அயல்நாட்டிலிருந்து இறக்குமதியாகும் சரக்குகளுக்கு அவற்றின் விலை மதிப்பீட்டில் பத்தில் ஒரு பங்கும் தீர்வை விதிப்பான். முடிவாக, வணிகர்கள் அளிக்க வேண்டிய, 'ராஜக்ஷயா''வையும் அவன் நிர்ணயிப்பான். ஒவ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட பொருளை மன்னனுக்குத் தள்ளுபடி விலையில் விற்பதே 'ராஜக்ஷயா'' எனப்படுகிறது.''

எனினும் பின்னாளில் விலைகள் நிர்ணயிக்கப்பட்டன. ஒவ்வொரு 5 அல்லது 9 ஆவது நாளில் பண்டங்களின் கொள்முதல் விலையையும் விற்பனை விலையையும் மன்னன் நிர்ணயித்து வந்தான் என்று மனு கூறுகிறார்.

இந்தியாவில் நாணயச் செலாவணி முறை எவ்வாறு நடை முறைக்கு வந்தது? இது அயல்நாடுகளிலிருந்து பெறப்பட்டதா? அல்லது இந்த நாட்டிலேயே கண்டுபிடிக்கப்பட்டதா? இதுகுறித்து மிகுந்த சர்ச்சை நிலவுகிறது. இதுபற்றி என்ன கூறப்பட்ட போதி லும், நாணயச் செலாவணி முறையை நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே இந்தியா கைக்கொண்டு வந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. ''அனைத்து பௌத்த நூல்களும் அசைக்க மறுக்க முடியாதபடி இந்த உண்மையை நிலைநாட்டுகின்றன. எளிய பண்ட மாற்றுமுறை மூலமும், பசுக்களின் மதிப்பீட்டையும் நெல் அளக் கும் படிகளையும் அடிப்படையாகக் கொண்டு ஆரம்ப காலத்தில் வாணிகம் நடைபெற்று வந்தது. பின்னர் இவற்றிற்குப் பதிலாக உலோக நாணயம் பயன்படுத்தப்படலாயிற்று; இது மக்களால் நன்கு புரிந்துகொள்ளப்பட்டதோடு, பொதுவாக பரிமாற்ற மதிப் பாகவும் ஏற்றுக்கொள்ளப்பட்டது''. உலோக நாணயங்களைக் கொண்டு செலாவணி கணக்கிடப்பட்டது; ஆனால் இது மன்னனால் ஒழுங்குபடுத்தப்படவில்லை. பெரும்பாலும் தங்க நாணயமே

புழக்கத்தில் இருந்தது. விற்பனைக்கு வரும் எல்லாப் பண்டங்கள் மற்றும் ஊழியத்தின் மதிப்பு ரொக்கப்பணத்தைக் கொண்டே நிர்ண யிக்கப்பட்டது. லேவாதேவித் தொழில் பெருமளவுக்கு வளர்ந்திருக்க வில்லை. கடன் கொடுத்தல் தடை செய்யப்படவில்லை. கடனுக் கான வட்டி ஆறு வெவ்வேறு வகைகளில் பெறப்பட்டது என்று கௌதமர் கூறுகிறார்.[1]

இவ்வகையான உயர்ந்த பொருளாதார வளர்ச்சி நிலைமை யில், பண்டைக்கால இந்துக்கள் வாணிகத்தைப் பெருக்கும் பொருட்டு குடியேற்றங்களை விஸ்தரிப்பில் ஈடுபடுவது முற்றி லும் இயல்பே. ஆனால் இந்த உண்மையை ஏற்றுக் கொள்ளப் பெரிதும் தயங்குகிறார்கள்; இந்துக்கள் எதற்கும் லாயக்கற்றவர்கள் என்று இன்று நிலவும் ஒரு கருத்தோட்டத்தைக் கொண்டு அவர்கள் பண்டைக்காலத்தைக் கணிக்க முற்படுகிறார்கள் அல்லது முன் கூட்டியே தாங்கள் உருவாக்கிக் கொண்ட தவறான எண்ணத்தை மறுதலிக்கும் எத்தகைய சான்றையும் தங்களது அறிவுத் திறத்தைக் கொண்டு நிராகரிக்கிறார்கள். இந்தியா தனிமைப்பட்டிருந்ததானது அவர்களுக்கு ஒரு துருப்புச் சீட்டாக இருந்து வந்திருக்கிறது; அதனை அவர்கள் தங்களால் முடிந்தளவு அடிக்கடிப் பயன்படுத்து கிறார்கள். சுற்றுச்சூழல் நிலைமைகள் அவற்றிற்குட்பட்ட மக்களின் செயல்பாடுகளை வரையறுத்துக் கட்டுப்படுத்துகின்றன என்பது உண்மையே. ஆனால் ''வரலாறு என்பது இயங்கச் செய்யப்பட் டுள்ள ஒரு நில இயலே'' என்று ஹிர்தருடன் சேர்ந்துகொண்டு வாதிப்பது மடமையாகும். நில இயல் நிலைமைகள் இந்தியாவுக்கு மிகுந்த பாதகத்தை விளைவித்து விட்டன என்ற கூற்றிலுள்ள உண்மையை நாம் ஏற்றுக்கொள்ளலாம்; ஆனால் அதிலுள்ள உயர்வு நவிற்சி கண்டனத்துக்குரியதாகும்.

கீழை உலக நடைவுடைபாணிகளும் பழக்க வழக்கங்களும் சமயமும் அதன் வெதுவெதுப்பான பருவ நிலையாலேயே ''நிர்ண யிக்கப்படுகின்றன'' என்று மாண்டேஸ்க்யு கூறுவதை நாம் விரும் பினால் ஏற்றுக் கொள்ளலாம். அதேபோன்று, இந்தியாவில் வியக்க வைக்கும் கம்பீரத்துடனும் பெருமிதத்துடனும் விண்ணெட்ட உயர்ந்து நிற்கும் மலைத்தொடர்களும் இயற்கையின் தன்னேரற்ற ஆற்றலைப் பறைசாற்றும் கானகங்களும்தான் அங்கு கற்பனைத்

1. இந்தியாவின் பண்டைய பொருளாதார ஒழுங்கமைப்புப் பற்றி கரோலின் ஃபோலே ரிஸ் டேவிட்ஸ் எம்.ஏ. ஆசிய ஆராய்ச்சி சஞ்சிகையின் 1901 ஆம் வருட இதழில் எழுதிய கட்டுரையிலிருந்து இந்தத் தகவல் பெறப்பபட்டது. பக்கம். 859.

திறனும் தெய்விக அருள் நிகழ்வுகளில் கொண்டுள்ள நம்பிக்கையும் சிறகடித்து அசாதாரணமாக செயல்படுவதற்குக் காரணம் என்று பக்கில் கூறுவதை நாம் விரும்பினால் நம்பலாம்; இன்னும் சொல்லப்போனால், நிலவியல் ரீதியிலான இட அமைவு காரண மாகவே இந்தியா தனித்தொதுக்கப்பட்டிருக்கிறது என்று நிலவிய லாளர் வலியுறுத்திக் கூறுவதையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும். அவர் கூறுவது போன்றே இமாலய மலைகளினால் சீனா விடமிருந்தும், ஹிந்துக்குஷ் மலைகளினால் பெர்சியா மற்றும் ஆப்கானிஸ்தானிலிருந்தும் இந்தியா தனிமைப்படுத்தப்பட்டிருக் கிறது. இந்தியா நீண்ட கடற்கரையைப் பெற்றிருக்கிறது; ஆனால் கடற்கரையை ஒட்டி அமைந்துள்ள கிழக்குத் தொடர்ச்சி மலை களும் மேற்குத் தொடர்ச்சி மலைகளும் கடற்பயண நடவடிக்கை களில் ஈடுபடும்படி சர்வசதாவும் கடல்விடுக்கும் சமிக்கையைத் துண்டித்து விடுகின்றன.

இந்தச் சாற்றுரைகளில் எல்லாம் ஓரளவு உண்மை இல்லாம லில்லை; ஆனால் இவற்றை ஆதாரமாகக்கொண்டு வலுவான வாதப் பிரதிவாதங்களில் இறங்குவது தவறு. தட்டுத்தடைகள் எவ்வளவு வலிமை வாய்ந்தவையாக, வல்லமை மிக்கவையாக இருந்தாலும், அவை மனிதனுக்கு கடக்க முடியாதவையாக, வென்று சமாளிக்க முடியாதவையாக ஒருபோதும், இருந்ததில்லை. எப் போதும், எங்கெங்கும் அவற்றைக் கட்டுப்படுத்த, அடக்கி ஆள அவன் முயன்று வந்திருக்கிறான்; அந்த முயற்சியில் மகத்தான வெற்றியும் பெற்று வந்திருக்கிறான்.

எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்து வளைத்து நெருக்கிய போதிலும், பண்டைக்கால இந்தியர்கள் இயற்கையாலோ வேறு காரணங்களினாலோ எழுந்த அனைத்து இக்கட்டுகளையும், இடர்ப் பாடுகளையும் உடைத்துத் தகர்த்துத் தூள் தூளாக்கி, இந்துமா கடலில் வாணிகப் பயணங்களை மேற்கொண்டனர். இந்துமா கட லுக்கும் மத்தியதரைக்கடலுக்கும் நிறைய ஒற்றுமை இருக்கிறது. திரு.ஜிம்நூர்ன் பின்வருமாறு கூறுகிறார்: ''எல்லாப் பக்கங்களிலும் நிலத்தால் சூழப்பட்டு மத்தியதரைக்கடல் கோடைக் காலத்தில் உள்நிலப்பகுதியில் அமைந்த ஓர் அமைதியான ஏரிபோல் காட்சி யளிக்கிறது... உண்மையில் அது இருவிதமான இயல்புகளைக் கொண்டது... தெய்வங்கள் அன்பைப் பொழியும்போது அது ஓர் ஏரியாக இருக்கிறது. அவர்கள் வெறுப்பை உமிழும்போது மலை போல் அலைமோதும் ஒரு மாகடலாக விசுவரூபம் எடுக்கிறது.''[1] இந்துமாகடல் ஒரு விரிவடைந்த மத்தியதரைக்கடலேயாகும்; அதன்

1. மாபெரும் காமன்வெல்த், பக்கம் 20

தெற்குச்கரை அகற்றப்பட்டு அது ஒரு மாகடலாகவும் இல்லாமல், ஏரியாகவும் இல்லாமல் ரத்ஸல் வருணிப்பது போல் ஒரு பாதி மாகடலாகத் தோற்றுகிறது. அதன் வடபகுதியின் மூடப்பட்ட தன்மை ஓர் உண்மையான மாகடலுக்குரிய நீர்ப்பரப்பு இயல்பு களையும், வளி மண்டல இயல்புகளையும் இழக்கச் செய்து விடுகிறது; நிலத்தால் மிக நெருக்கமாகச் சூழப்பட்டிருப்பதால் அதன் மீது காற்றுகள் ஒழுங்கற்ற முறையில் வீசிவந்தன. இதுவரை கடற்கரையோடு கட்டுண்டு கிடந்த வணிகர்கள் மாகடலின் நடுப் பகுதியை அடைவதற்கு வடகிழக்குப் பருவக் காற்றும், தென்கிழக்குப் பருவக்காற்றும் விரைவிலேயே துணைபுரிந்தன.

> ''வரலாற்றின் தொடக்கக் காலம் முதலே வடக்கு இந்துமா கடல் ஒரு பொதுச் செல்வழியாக இருந்து வந்தது. கிழக்குக் கான பழைய கடல் மார்க்கத்தை மகா அலெக்சாந்தர் மீண்டும் கண்டுபிடித்தானது தொல்பழங்காலத்தோடு ஒப் பிடும்போது ஒரு தற்கால நிகழ்ச்சி போல் தொனிக்கிறது. இந்தக் கடல் மார்க்கத்தின்மூலம்தான் இந்தியக் குடியேற்ற நாட்டவர்களும், வணிகர்களும், சமயகுருக்களும் இந்திய நாகரிகத்தின் அடிப்படைக் கூறுகளை, மூலக் கோட்பாடு களைக் கிழக்குக் கோடியில் உள்ள சுந்தாத் தீவுகளுக்குக் கொண்டு சென்றனர்; கீழைநாட்டு விற்பனைப் பொருள்கள், செய்கலங்கள், மட்கல வகைகள், விஞ்ஞானங்கள், சமயங் கள் முதலியவை ஐரோப்பா, மற்றும் ஆப்பிரிக்காவின் எல்லைக்கோடி யடுத்தப் பகுதிகள் வரை மேற்குநோக்கி எடுத்துச் செல்லப்பட்டன. இந்துமா கடல் தனக்கே உரித் தான ஒரு நாகரிகத்தை உருவாக்கிற்று; ஒரு பரந்த அரை வட்டவடிவப் பிரதேசத்தில் அது வியாபித்திருந்தது; ஜாவா விலிருந்து அபிசீனியா வரை அது பரவியிருந்தது. பரந்த இன வேறுபாடு காரணமாக அபிசீனியாவிலிருந்து மொசாம் பிக்குக்கு அது ஓரளவே பரவ முடிந்தது.''[1] அராபியா ஒரு மாபெரும் கடலாதிக்க நாடாக வளருவதற்கு நீண்டகாலத்திற்கு முன்பே இந்துக்கள் இந்துமா கடலின் மிகவும் மேம்பட்ட வாணிக தேசமாகப் பரிணமித்து விட்டனர்; பின்னர் கிழக்கு ஆப்பிரிக்கக் கடற்கரை வாணிகத்தை ஓமன் மற்றும் ஏமன் வணிகர்களோடு பகிர்ந்து கொண்டனர். இன்று அவர்கள் மஸ்கட், ஏடன், ஜான்ஜிபார், பெம்பா, நேட்டால் முதலிய துறைமுகங்களில் ஓரளவு முக்கியத்துவம் வாய்ந்த வாணிக வர்க்கமாகத் திகழ்கின்றனர்.''[2]

---

1. எல்லன் சர்ச்சில் செம்பெல் - 'நிலவியல் சுற்றுச்சூழலின் செல்வாக்கு'' பக்கம் 309
2. அதே நூல், பக்கம் 268.

இந்தியாவின் இயற்கை வளங்களையும் பொருளாதார வளர்ச்சியையும் பற்றிய இந்தப் பூர்வாங்க ஆய்வாராய்வுடன், பண்டைய நாகரிகத்தைச் சேர்ந்த ஏனைய நாடுகளுடன் மிகவும் ஆதிகாலம் தொட்டே இந்தியாவுக்கு இருந்த வாணிபத் தொடர்புகளைப் பற்றி விவரிப்போம்.

முதலில் எகிப்தை எடுத்துக் கொள்வோம். முதலாவதாக எடுத்தஎடுப்பில் ஒரு விஷயத்தைக் கவனத்திற் கொள்ள வேண்டும். அதாவது வரலாற்றின் விடிந்தும் விடியாத புலர்காலைப் பொழுதில் இந்தியாவுக்கும் ஏனைய நாடுகளுக்கும் இடையே நிலவிய வாணிப உறவு குறித்து சான்று மிகவும் குறைந்த அளவே நமக்குக் கிடைத்துள்ளது. அதுவும் வழிவழிச் செய்திகளிலோ அல்லது இடிபாடுகளிலிருந்து அகழ்ந்தெடுத்த தடைய புதைபொருள்களிலோதான் இந்தச்சான்று பொதிந்துள்ளது; எனினும் காலப்போக்கில் இச்சான்று உறுதியான மெய்ம்மையாக முதிர்வுறுகிறது.

எகிப்து நாடு உலகிலேயே மிகவும் அரிதானதொரு இடத்தில் அமைந்துள்ளது; எகிப்தியர்கள் பொருளாதார ரீதியில் பிற மக்களை எவ்வகையிலும் சார்ந்திராதவர்களாக, சுதந்திரமானவர்களாகத் திகழ்ந்து வந்தனர். அந்நியத் தொடர்பைப் புறக்கணிக்கும் அளவுக்கு தாங்கள் பொருளாதார ரீதியில் தன்னிறைவு அடைந்திருப்பது குறித்து அவர்கள் மிகுந்த பெருமையும் பெருமிதமும் கொண்டிருந்ததாகக்கூடக் கூறப்படுகிறது. இதனை மறுதலிப்பதற்கு நம்மிடம் திட்டவட்டமான சான்று ஏதும் இல்லை என்றபோதிலும் இது மட்டுமீறிய ஒரு கூற்று என்பதில் ஐயமில்லை; ஏனென்றால் இங்கு நடத்தப்பட்ட அகழ்வாய்வுகளின்போது கிடைத்துள்ள அயல் நாட்டுப் பொருள்கள் இது தவறு என்பதை வலுவாக மெய்ப்பிக்கின்றன.

எகிப்தியர்கள் இந்தியாவுடன் நேரடி வணிகத் தொடர்புகள் கொண்டிருந்தனரா, இல்லையா என்பது மிகுந்த சர்ச்சைக்குரிய விஷயமாகும். இதுவிஷயத்தில் இரு தரப்புகளுமே குற்றச்சாட்டுகளுக்கு அப்பாற்பட்டவை அல்ல. செசோஸ்ட்ரிஸ் ஒரு பெரிய கப்பற் படையுடன் ஜலசந்தியைக் கடந்து இந்துமா கடலில் பிரவேசித்ததாகவும், அப்போது எல்லாக் கடற்கரையோர நாடுகளையும் வென்று கைப்பற்றியதாகவும், அதேசமயம் அவனது தரைப்படைகள் கங்கை வரை முன்னேறியதாகவும் ஹிரோடோட்டஸ் கூறுகிறார். இங்கு குறிப்பிடப்படும் செசோஸ்ட்ரிஸை இரண்டாம் ராம்செஸ்ஸாக கார்டினர் வில்கின்சன் இனம் காண்கிறார்.[1]

1. வில்லியம் ராபர்ட்சன், 'இந்தியாவைப் பற்றிய ஆய்வாராய்வுகள்'', (1812) பக்கம் 6

இஸ்ரேலியர்கள் எகிப்திலிருந்து வெளியேறுவதற்கு நீண்ட நெடுங்காலத்துக்கு முன்பே அந்நாட்டுடன் இந்தியா வாணிகத் தொடர்புகளைக் கொண்டிருந்தது; பிளோட்டரெஸ் துறைமுகம் அந்த ஆரம்பகால வாணிகத்தின் மையமாக இருந்தது.

''இந்த ஆரம்பகால கட்டத்தில் அவர்கள் (எகிப்தியர்கள்) இந்தியாவுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டிருந்தார்களா அல்லது அராபியா மூலம் தங்கள் வாணிகச் சரக்குகளை அனுப்பி வைத்தார்களா என்பதை தற்போது நிர்ணயிப்பது சாத்தியமல்ல; ஆனால் நேரடியல்லாத வாணிகம் கூட அளப் பரும் செல்வத்தை அவர்களுக்கு அள்ளித்தரும் ஓர் ஆதார மூலமாக அமைந்திருந்தது; இந்தியாவின் உற்பத்திப் பொருள் கள் உண்மையில் எகிப்தைச் சென்றடைந்தன என்பதற்கு தீப்ஸ் கல்லறைகளிலிருந்து[1] நமக்கு ஆணித்தரமான சான்று கள் கிடைத்துள்ளன; மேலும் 'எகிப்துக்கு ஜோசப் வருகை புரிந்த ஆரம்ப காலத்திலேயே இந்தியாவின் உற்பத்திப் பொருள்கள் அந்த நாட்டை அடைந்தன என்பது இஷ்மா யிலின் மரபினர் நறுமணப் பொருள்களை விற்பதற்கு அங்கு கொண்டுசென்றதிலிருந்து நன்கு புலனாகிறது; மூன்றாம் தோத்மஸ் காலத்திலும் அவனுக்குப் பிறகு அதிகாரத்திற்கு வந்த பரோவாக்கள் காலத்திலும் தீப்ஸில் கண்டெடுக்கப் பட்ட செவ்வந்திக்கற்கள், மணிக்கற்கள் மற்றும் இதர பல பொருள்கள் இந்தத் தொடர்பு இடையறாது பராமரிக்கப்பட்டு வந்திருப்பதை உறுதி செய்கின்றன.''[2]

எல்லாக் காலங்களிலும் கலாசாரம் வாணிகத்தைப் பின் தொடர்கிறது: இது இக்காலத்தை விடப் பண்டைக் காலத்துக்குப் பெரிதும் பொருந்தும். பண்டைக்கால வணிகர் கூட்டத்தினர் விற்பனைப் பொருள்களை மட்டுமன்றி நாகரிகத்தையும் தங்களுடன் கொண்டு சென்றனர்; அதனை அவர்கள் எங்கெங்கும் பரப்பியதோடு உல களாவவும் செய்தனர். இந்தியாவுடனான இந்த வாணிகத் தொடர்பு எகிப்தின் கட்டிடக் கலையில் மிகப் பெரும் தாக்கத்தைத் தோற்று வித்தது; இதுபற்றி ஜேம்ஸ் பெர்கூசன் (கட்டிடக்கலை வரலாறு I, 142-43) கூறும்போது ''ஆக்ஸமிலுள்ள ஒற்றைக் கல்லாலான பிரம் மாண்டமான சிற்பக்கலைப் படைப்புக்கு இந்தியாதான் ஆதர்ச நாயகன், 'கருத்துருவம் எகிப்தினுடையது, அரிய கலை நுணுக்க

1. கார்டினர் வில்கின்சன், ''பண்டைக்கால எகிப்தியர்கள்'', 'தொகுதி I, பக்கம் 161
2. கார்டினர் வில்கின்சன், ''பண்டைக்கால எகிப்தியர்கள்'', 'தொகுதி I, பக்கம் 250.

வேலைப்பாடுகள் இந்தியாவினுடையவை. கிறித்துவ சகாப்தத்தின் முதல் நூற்றாண்டில் இந்தியபாணியில் அமைந்த ஒன்பதுமாடி கோபுரம் ஒன்று எகிப்தில் கட்டப்பட்டது'' என்று குறிப்பிடுகிறார். புத்தகயா போன்ற இந்தியக் கோயில்களை அது ஒத்திருப்பதை சுட்டிக்காட்டி அவர் கூறுகையில், 'இந்தியக் கலை எகிப்தியக் கலையுடன் செய்து கொண்ட புதுமையான திருமணத்தை இது பிரதிபலிக்கிறது; ஓரிடத்தில் இருவர் சந்தித்து, தங்களது வாணிகத் தொடர்பை உருவகப்படுத்தக் கட்டிடக்கலையை வரித்துக் கொள்ளும்போது இவ்வாறு நிகழ்வது எதிர்பார்க்கக் கூடியதே'' என்று விளக்குகிறார்.

திராவிடர்கள் இந்த நாட்டின் தொன்முதுமக்களல்ல; ஆயினும் அவர்கள் இந்த நாட்டில் பன்னெடுங் காலத்துக்கு முன்னர் குடியேறியவர்கள்; அவர்கள் மேற்காசிய மக்களுடன் கொண்டிருந்த தொடர்பு பற்றி இங்கு குறிப்பிடுவது பொருத்தமற்றதாகாது. இது சம்பந்தமாக திரு.குஸ்தாவ் ஆப்பர்ட் கூறுவதாவது: 'துரேனியப் பேரரசுகள் உயர்ந்த கலாசார நிலையை எய்திருந்தன என்பது ஆப்புவடிவ எழுத்துக்களில் அமைந்த கல்வெட்டுப் பொறிப்புகளின் பொருள் கண்டறிந்ததன் மூலம் எத்தகைய ஐயப்பாட்டுக்கும் இடமின்றி தற்போது நிலைநாட்டப்பட்டுள்ளது. ஒரு வகையான உலோகாயதத்தை இந்த நாகரிகம் தழுவி நின்றபோதிலும் கலைகள் மற்றும் விஞ்ஞானத்தின் சில கிளைகளை அதால் மிகப்பெரும் வளர்ச்சியுறச் செய்ய முடிந்தது. மொழி மரபில் ஒருவருடன் ஒருவர் வேறுபட்ட துரேனியர்களைப் போன்றவர்களே இந்தியாவின் இன்றைய திராவிடர்களும்; அக்காலத்தில் அவர்கள் ஏரியானாவிலும் பெர்சியாவிலும் வாழ்ந்து வந்தனர். ஐரோப்பாவில், இந்தத் துரேனியர்களை எஸ்தோனியர்கள் பிரதிநிதித்துவப்படுத்தியதாகத் தோன்றுகிறது; மேற்கு ஆசியா மற்றும் மத்திய ஆசியாவின் பல இடங்களில் அவர்கள் மக்கட் தொகையின் ஆதார அடிப்படையாக அமைந்திருந்தனர்; சீனாவில் சீனப் பேரரசின் நாகரிகத்துக்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்திருந்தனர்.'' இந்தத் துரேனியர்கள் உல கெங்கிலும் பேரரசுகளை நிறுவினர். ஏரல் ஏரியைச் சுற்றியுள்ள நாடுதான் துரேனியர்களின் தாயகம் என்று கருதப்படுகிறது. அங்கிருந்து அவர்கள் ஆசியாவின் மிகப்பெரும் பகுதிக்குப் பரவினர்; குறைந்தபட்சம் 1500 ஆண்டுக் காலம் அங்கு அவர்கள் தன்னிகரற்று முதன்மை பெற்றுக் கோலாச்சினர்.'' எகிப்தியர்கள், அசீரியர்கள், அக்காடியர்கள், சுமேரியர்கள், பினீசியர்கள் முதலானோர் இதே துரேனிய இனத்தைச் சேர்ந்த பிரிவினரே ஆவர். 'கி.மு.2500ல் எகிப்தியப் பேரரசு நிறுவப்பட்ட

1. எரித்திரிய கடலுக்கான பெரிப்ளுஸ், டபிள்யூ.எச். ஸ்கோஃப், பக்கங்கள் 66-67.

தற்கு சுமார் 250 ஆண்டுகளுக்குப் பின்னர், பாபிலோனில் அக்காடிய வமிசத்தினர் நீண்ட நெடுங்காலம் ஆட்சி செய்த பிறகு ஆரியர்கள் கால்டியா மீது படையெடுத்தனர்; அதேசமயம் பெர்சிய வளைகுடா வில் கன்னனிட்டுகளையும், பெர்சியாவில் திராவிடர்களையும் நெருக்கித் தள்ளினர்; முன்னவர்களை வடமேற்குத் திசையிலும் பின்னவர்களை தென்கிழக்குத் திசையில் இந்தியா நோக்கியும் விரட்டியடித்தனர்.'' ஆரியர்கள் இந்தியாவின் மீது படையெடுத்த போது இந்தத் திராவிடர்களின் கடும் எதிர்ப்பைச் சந்திக்க வேண்டி யிருந்தது. ''ஏனென்றால் கிறித்துப் பிறப்பதற்குப் பதினைந்தாம் நூற்றாண்டு வரை அவர்கள் பஞ்சாப் எல்லைகளுக்கு அப்பால் செல்லவில்லை.''[1] முக்கியத்துவத்திலும் காலக்கணிப்பிலும் அடுத்து வருவது இந்தியாவின் ஆட்சிப் பகுதிகளுக்கிடையே நிலவிய வாணிபப் போக்குவரத்துத் தொடர்பாகும். இது சம்பந்தமாக பைபிளில் பல சான்றுகள் காணப்பட்டபோதிலும், வரலாற்று நோக்கங்களுக்காக நூலாசிரியர்கள் இவற்றிற்கு மிகக் குறைந்த மதிப்பே அளிக்கின்றனர். இத்தனைக்கும் புறக்கணிக்க முடியாத அளவுக்கு வலுமிக்க சான்றுகள் இருந்5 போதிலும் இவ்வாறு செய்கின்றனர்.''[2] தலைநிலப்பரப்பில் அமைந்து இருந்ததால் ஜுடேயா இந்தியாவுடன் நேரடி வாணிகத்தை வளர்த்துக் கொள்ளும் நிலையில் இருக்கவில்லை. அதற்குக் கடற் பரப்பு அறவே இல்லை; இதனால் துறைமுகமும் இல்லை. இந்தியா வுக்குச் செல்லும் கடல் மார்க்கங்களையும் வாணிக மார்க்கங்களை யும் தம் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்த எகிப்தியர்களையும், சிரியா நாட்டவர்களையும் அது முற்றிலும் சார்ந்திருக்க வேண்டியிருந்தது. இந்தியக் கப்பல்கள் தமது சரக்குகளை ஏமனிலோ அல்லது அராபியத் துறைமுகங்களிலோ கொண்டுவந்து இறக்கின. ஏமன் இந்தியப் பண்டங்களுக்கு ஒரு மாபெரும் சந்தையாக விளங்கிற்று; அது விநியோக மையமாகத் திகழ்ந்தது; அங்கிருந்து இந்தியப் பண்டங் கள் வணிகர் குழுக்கள் மூலம் சிரியாவுக்கோ அல்லது எகிப்திய காரவான்கள் மூலம் எகிப்துக்கோ கொண்டு செல்லப்பட்டனர். ''மிகத் தொன்மைக்காலம் முதலே எகிப்தும் சிரியாவும் மிகுந்த மேம்பட்ட நாகரிகங்களைக் கொண்டிருந்தன; இதனால் பல்வேறு நறுமணப் பொருள்கள், வாசனை திரவியங்கள், உலோகங்கள், அரிய சந்தன மரக்கட்டைகள், மணிக்கற்கள், தந்தம் முதலியவை பெருமளவில் இந்நாடுகளுக்குத் தேவைப்பட்டன; மதிப்புமிக்க இந்த வாணிகச்

1. குஸ்தாவ் ஆப்பர்ட், "இந்தியாவின் பண்டைக்கால வாணிகம்", "சென்னை இலக்கிய, விஞ்ஞான சஞ்சிகை", 1878, பக்கங்கள் 189-191; இ.ஜே. சிம்சன் பண்டைய நாகரிகங்கள், தொகுதி I, பக்கங்கள் 183, 550, 554, 569, 570, 574; தொகுதி II, பக்கம் 473.
2. டபிள்யூ. ராபர்ட்சன், "ஆராய்ச்சிக் கட்டுரைகள்", பக்கங்கள் 9-10.
3. ஐ. லெனோர்மென்ட் மற்றும் இ. கேவலியர், "கீழை நாடுகளின் பண்டைய வரலாறு", தொகுதி I. பக்கம் 144.

சரக்குகள் இந்திய மண்ணிலிருந்து ஏராளமாக அனுப்பப்பட்டன.''[3] ஆனால் மன்னன் சாலமன் அரியணை ஏறியதும் இந்திய வாணி கத்தைத் தனது கட்டுப்பாட்டின்கீழ் கொண்டு வருவதில் மும்முர மாக ஈடுபட்டார். எகிப்திய ஆட்சி சிதைந்து தேய்வுற்று வருவதைக் கண்டார்; செங்கடலில் உள்ள இடுமி துறைமுகத்தை நன்கு பயன் படுத்திக் கொள்வதன் முக்கியத்துவத்தை உணர்ந்தார்; இந்தியா வுடன் நேரடி வாணிக உறவுகளை வளர்த்துக் கொள்ள இது பெரிதும் துணைபுரியும் என்பதைத் தெரிந்துகொண்டார்; அவருடைய தந்தை பெற்ற வெற்றியின் பயனாக அவருக்குக் கிடைத்ததே இந்தத் துறைமுகம் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ஆனால் இங்கு அவருக்கு ஒரு பிரச்சினை எழுந்தது. அதாவது கடற்பயணம் செய்யும் கலையில் யூதர்கள் அனுபமிக்கவர்கள் அல்ல; இதனால் இது விஷ யத்தில் பினீசியர்களின் மன்னனான ஹிரைனின் ஒத்துழைப்பை அவர் நாட வேண்டியதேற்பட்டது. பினீசியர்கள் கடற்பயணத்தில் முன்னோடிகளாகத் திகழ்ந்தவர்கள். அவர்கள் இந்தியாவுடன் நேரடித் தொடர்பு கொண்டிருந்தார்களா என்பது மிகுந்த சர்ச்சைக்குரிய விஷயமாகும். ஆனால் அவர்கள் இவ்வாறு தொடர்பு கொண் டிருப்பது சாத்தியமே என்பதை திரு. ராபர்ட்சன் வலியுறுத்திக் கூறு கிறார். கொத்தியெடுக்கும் கோரவறுமையில் வாடி வதங்கி வந்த பினீசியர்கள் உயிர் வாழ்வதற்கும், பிழைப்பதற்கும் எவ்வாறு வாணிகத்தைச் சார்ந்திருக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளானார் கள் என்பதை எடுத்துரைத்துவிட்டு அவர் பின்வருமாறு கூறுகிறார்: ''பல்வேறு நாடுகளுடனான வாணிகங்களில் இந்தியாவுடனான வாணிகம்தான் மிகவும் கணிசமானதும் பெரிதும் லாபம் தரக் கூடியதும் எனக் கருதப்பட்டது. ஆனால் மத்தியத்தரைக்கடலின் நிலைமை காரணமாகவும், அதில் கடற்பயணத்தை மேற்கொள்வதி லுள்ள சிரமம் காரணமாகவும் இந்தியாவுடன் கடல் மார்க்கமாக நேரடியாகத் தொடர்பு கொள்வது அவர்களுக்குக் கடினமாக இருந்தது; எனினும் அவர்கள் மனம் தளர்ந்து விடவில்லை; முன்வைத்த காலை பின்வாங்கவில்லை; வாணிகத்தின் மீது அவர்களுக்கிருந்த எல்லை யற்ற ஆர்வம் இதுமகான்சிலிருந்து அராபிய வளைகுடாவின் கீழ்ப் பகுதியிலுள்ள சில வசதியான துறைமுகங்களை இலக்காகக் கொண்டு மேற்குநோக்கி செல்ல அவர்களைத் தூண்டி ஊக்குவித்தது. இங்கிருந்து அவர்கள் ஒருபுறம் இந்தியாவுடனும் மற்றொருபுறம் ஆப்பிரிக்காவின் கிழக்கு மற்றும் தெற்குக் கடற்கரைப் பகுதிகளுடனும் முறையாகத் தொடர்பு கொண்டனர். ஆனால் அராபிய வளைகுடாவுக்கும் ஜைரே வுக்கும் இடையேயான தூரம் அதிகம்; அந்த இடத்துக்குத் தரை மார்க்கமாகச் சரக்குகளைக் கொண்டு செல்லுவது மிகவும் சிரமம்; எனவே, மத்தியதரைக்கடலில் அராபிய வளைகுடாவுக்கு மிக அருகி லுள்ள பினோ கொலுராவைக் கைப்பற்றுவது அவர்களுக்கு அவசிய மாயிற்று; இந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட எல்லாச் சரக்கு

களும் அங்கிருந்து நிலவழியாக அனுப்பப்பட்டன; பிற்காலத்தில் கிழக்கிந்திய சரக்குகள் அராபிய வளைகுடாவில் எதிர் கரையிலிருந்து நைல் நதிக்கு அனுப்பப்பட்ட மார்க்கத்தை விடவும் இந்த மார்க்கம் மிகவும் குறுகியதும், காரியசாத்தியமானதுமாகும். பினோ கொலுரா வில் இந்தச் சரக்குகள் மீண்டும் கப்பலில் ஏற்றப்பட்டன; அங்கிருந்து டைரேக்கு அனுப்பப்பட்டு, உலகெங்கும் விநியோகிக்கப்பட்டன. இதுதான் இந்தியாவுடனான மிக ஆரம்ப கால கடல் மார்க்கமாகும்; கிழக்குக்குப் புதிய கடல் மார்க்கம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முந்தைய வேறு எந்த மார்க்கத்தையும் விட இந்த மார்க்கம்தான் அதிக அனுகூலங்களைக் கொண்டிருந்தது. இதனால் பழங்காலத்தைச் சேர்ந்த வேறு எந்த மக்களையும் விடப் பினீசியர்கள் இந்தியப் பண்டங்களைப் பிற தேசங்களுக்கு ஏராளமான எண்ணிக்கையிலும் குறைந்த விலையிலும் வழங்க முடிந்தது.''[1] திரு.ராபர்ட்சனின் கருத்தை உறுதி செய்யும் மற்றொரு சான்றும் உள்ளது; பெனீசியர்கள் இந்தியாவில் தங்கள் எழுத்துக்களை அறிமுகம் செய்திருப்பதிலிருந்து இந்நாட்டுடன் அவர்கள் நேரடித் தொடர்பு கொண்டிருந்தது ஊர்ஜித மாகிறது. அண்டை பெனீசியர்களால் மன்னன் சாலமன் உத்வேகம் பெற்று, டைரேயின் மன்னனான ஹிரமுடன் சேர்ந்து எலாத்திலும் எஸியோங்கரிலும் ஒரு கப்பற் படையைக் கட்டினார். பினீசிய மாலுமி களால் கட்டப்பட்ட இந்தக் கப்பற்படை ஓப்பீருக்குப் பயணம் செய்தது; எல்லையற்ற பெருஞ் செல்வக் குவியலுடன் அது திரும் பிற்று; மலைமலையான இந்தச் செல்வத்தை இரு மன்னர்களும் தங்களுக்குள் பங்குபோட்டுக் கொண்டனர். மேலே குறிப்பிடப்பட்ட ஓப்பீர் எங்கிருக்கிறது என்று இன்னமும் தீர்மானிக்கப்படாத ஒரு விஷயமாகும். எனினும் ஓப்பீர் என்பது இந்தியாவில் குஜராத் மாகாணத்திலுள்ள அபிராவையே குறிக்கிறது என்று பேராசிரியர் லாஸ்ஸன் இனம் காட்டி இந்தச் சர்ச்சைக்கு அநேகமாக முடிவு கட்டிவிட்டார் என்றே கூறவேண்டும். மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை இந்தப் பயணம் நடைபெற்றது; நாட்டைச் செழிக்கச் செய்ய, வளமுறச் செய்ய எத்தனை எத்தனையோ மதிப்புமிக்க பொருள் களைக் கப்பல்கள் ஏற்றிக் கொண்டு வந்தன. இது எத்தகைய விந்தை களைச் செய்தன தெரியுமா? 'எருசலேமில் மன்னன் வெள்ளியை வெறும் கற்கள் போலவும் கேதுரு மரங்களைப் பள்ளத்தாக்குகளில் இருக்கும் காட்டத்தி மரங்களைப் போலவும் ஆக்கினான்''.[2] இவ்வாறு, வாணிகத்தின் அனைத்து அனு கூலங்களும் அவற்றில் பொதிந்து

1. டபிள்யூ. ராபர்ட்சன் 'ஆராய்ச்சிக் கட்டுரைகள்'', பக்கம் 7-8

2 I ராஜாக்கள், X. 27

கிடக்கும் ஆபத்துக்களையும் பொருட்படுத்தாமல் மக்களுக்குப் பெற்றுத் தரப்பட்டன. எனவே, டீன் ஸ்டான்லியின் சொற்களில் கூறுவதானால் (செனாயும் பாலஸ் தீனமும் பக்கம் 261) "துடுப்புகளால் வலிக்கிறபடகு அங்கே ஓடுவதும் இல்லை, பெரிய கப்பல் கடந்து வருவதும் இல்லை" (ஏசாயா XXXIII 21) என்று தலைநகரை வருணித்திருப்பது மேற்கத்தியக் கண்ணோட்டங்களின்படி பலவீனத்தையும் ஆபத்தையும் குறிக்கவில்லை; மாறாக, வளமையையும் பாதுகாப்பையுமே குறிக்கிறது."

இந்தியாவுக்கும் யூதநாட்டுக்கும் இடையேயான வாணிகம் சாலமன் காலத்தில் தொடங்கவில்லை; அது மிகமிகத் தொன்மை வாய்ந்தது; சாலமன் காலத்துக்கு முன்பே I நாளாகமம் XXIX, 41 ராஜாக்கள் XXII-48, ஏசாயா XIII-12 போன்ற விவிலிய நூலின் அத்தியாயங்களில் ஒப்பீர் குறிப்பிடப்பட்டிருப்பதிலிருந்தே இதனைத் தெரிந்துகொள்ளலாம். இந்த விவிலிய நூல் சான்றுகளை மொழி நூல் சான்றுகளும் உறுதிப்படுத்துகின்றன. இதற்குப் பல உதாரணங்களைக் கூறலாம். எபிரேய மொழியில் வரும் **துகி** என்பது தோகை என்ற சொல்லின் உருத்திரிபேயாகும்; தமிழ் மொழியிலும் மலையாள மொழியிலும் இதற்கு மயில்என்று பொருள். இதேபோன்று **அகலிம்** அல்லது **அகோலத்** என்னும் சொல் **அகில்** என்ற தமிழ் மற்றும் மலையாளச் சொல்லின் திரிபேயாகும்.[1]

பாபிலோனியாவின் எழுச்சி இந்தியாவின் பண்டைக்கால வாணிக நடவடிக்கைகளில் ஒரு முக்கிய மைல்கல்லாகத் திகழ்ந்தது. யூப்ரட்டஸ், டைக்ரிஸ் ஆகிய நதிகளின் சங்கமத்தில் அமைந்திருந்த அது பாரசீக வளைகுடாவை மத்திய தரைக்கடலுடன் இணைத்தது; ஆசியாவின் மேல்பகுதியும் கீழ்ப்பகுதியும் சந்திக்கும் இடமாக விளங்கிய பாபிலோன் கிழக்கத்திய மற்றும் மேற்கத்திய வாணிகத்தின் ஒரு முக்கிய கேந்திரமாக மிளிர்ந்தது. பண்டைய உலகின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் புறப்படும் பெருஞ்சாலைகள் சந்திக்கும் இடமாக அது திகழ்ந்தது. இது சம்பந்தமாக திரு. கென்னடி பின்வருமாறு கூறுகிறார்: "கி.மு. ஏழாம் நூற்றாண்டிலும் ஆறாம் நூற்றாண்டிலும் இந்தியாவுக்கும் பாபிலோனுக்கும் இடையே கடல்வழி வாணிகம் பெரிதும் செழித்து வளர்ந்தது என்று கருதுவதற்கு நிறைய ஆதாரம் இருக்கிறது. இந்த வாணிகம் பிரதானமாக திராவிடர்கள் கையில் இருந்தது; அதேசமயம் ஆரியர்களுக்கும் இதில் ஓரளவு பங்கு இருந்தது; பின்னர் இந்திய வணிகர்கள் அராபியாவிலும் ஆப்பிரிக்காவின் கிழக்குக் கரையிலும் குடியேறினர்.

1. இ.ஜே. சிம்கோக்ஸ் - 'பூர்விக நாகரிகம்'' தொகுதி, பக், 545.

அதேசமயம் அவர்கள் சீனாவின் கிழக்குக் கரையில் குடியேறியதை யும் பார்க்கிறோம். பாபிலோனிலும் அவர்கள் குடியேறியிருப்பார் கள் என்பதில் எந்த ஐயமுமில்லை. ஆனால் ஆறாம் ஏழாம் நூற் றாண்டுகள்தான் பாபிலோனிய மாட்சியின், பெருமையின், சிறப் பின் உச்சக்கட்டமாகும். செங்காசெரிபால் நிர்மூலமாக்கப்பட்ட பாபிலோன் எசாரத்தானால் புனரமைக்கப்பட்டது. தனது அதியற்புத வழிபாட்டு இடங்களின் புனிதத்தால், திருக்கோயில்களின் அருட் டுய்மையால் பேரும்புகழும் பெற்றிருந்த பாபிலோன் இப்போது உலகின் மாபெரும் வாணிகமையமாக மாறிவிட்டதைப் பார்க் கிறோம். அது எல்லையற்ற வலிமை கொண்டதாக சிறந்து விளங் கிற்று. அதுமட்டுமல்ல, வீறுகொண்டெழுந்து பன்னெடுங் கால மாகத் தனக்குப்போட்டியாக இருந்து, தன்னை ஈவு இரக்கமின்றி அடக்கி ஒடுக்கிவந்த நினீவேயை வென்று வீழ்த்திற்று. நெபுசத் னெஸ்ஸரின் தலைமையில் அது உலகின் அற்புதமாக சீரும் சிறப்பும் பெற்றது. ஆனால் அதன் மகத்துவத்தின் இரகசியம் கீழை நாட்டுச் செல்வங்கள் மீது அது ஏகபோக உரிமை பெற்றிருந்ததிலும், அதன் கப்பல்களில் எதிரொலிக்கும் கால்டியர்களின் மகிழ்ச்சி ஆர வாரங்களிலும், சுறுசுறுப்புமிக்க கீழைநாட்டவர்கள் அதன் கப்பல் களுக்கு அடிக்கடி வருவதிலும்தான் பொதிருந்தது. பாபிலோனின் கீர்த்தி, சீர்த்தி பல தேசங்களிடையே பொறாமையைக் கிளர்த்தி விட்டது. முதலாம் சேதி நைல் நதியிலிருந்து செங்கடலுக்கு ஒரு கால்வாயை வெட்டியிருந்தான். காலப்போக்கில் இது தூர்ந்து போய் விட்டது. இக்கால்வாயை மீண்டும் நீர்வழிப் போக்குவரத்துக்குத் திறந்துவிட பரோவா நெச்சோ (கி.மு.612-596) முயன்றான்; இந்த முயற்சியில் அவனுடைய பிரஜைகள் ஏராளமானோர் பலியாயினர்; பின்னர் அவன் வாணிகத்துக்கு ஒரு புதிய உலகைக் கண்டுபிடிக்க தனது பினீசியக் கப்பற்படையை ஆப்பிரிக்காவைச் சுற்றிக் கொண்டு செல்ல அனுப்பினான். பிற்காலத்தில் இந்தியாவின் எல்லையற்ற செல்வங்களைக் கவர்வதற்காக போர்ச்சுகீசியர்களுக்கும் ஸ்பானிஷ் காரர்களுக்கும் இடையே நடைபெற்றது போன்ற ஒரு கடுமையான போட்டி பாபிலோனியர்களுக்கும் எகிப்தியர்களுக்கும் இடையே பண்டைய நாட்களில் நடைபெற்றது...''[1] இந்த வாணிகத் தொடர்பு பற்றிய செய்திகள் இந்தியப் பண்டைய நூல்களில் மிகவும் தெள்ளத் தெளிவாக இடம்பெற்றிருந்தன. இந்த வாணிகத்தொடர்பில் கடல் தலையாய முக்கியத்துவம் பெற்றிருந்தது. ராட்சத மீனான மோகர் அடிக்கடி குறிப்பிடப்படுவதைக் காணலாம். வேதகாலத் தெய்வங் கள் பின்னுக்குத் தள்ளப்பட்டன; இந்து மனங்கள் சிறகுக் கட்டிக் கொண்டு மேலேமேலே பறந்து, உலகம் தோன்றியது சம்பந்தமாக மனம்போனப்போக்கில் விசித்திரமான கற்பனைகளை எல்லாம்

1. ஜே. கென்னடி ஜே.ஆர்.ஏ.எஸ். 1898, பக்கங்கள் 270-1.

கட்டவிழ்த்துவிட்டன. இதுபோன்ற கற்பனைகளை விஷ்ணுபுரா ணத்தில் காணலாம். 'கடவுள் பூமியை சமுத்திரத்தின் உச்சி மீது வைத்தார்; அங்கு ஒரு பிராம்மாண்டமான நாவாய் போல் மிதக்கிறது; அதன் விரிந்துபரந்த மேற்பரப்பு காரணமாக அது நீருக்கடியில் மூழ்குவதில்லை; இவ்வாறு விஷ்ணுபுராணத்தில் கூறப்பட்டிருக் கிறது. இலக்கியம் முழுவதிலும் வாணிக மனோபாவத்தின் சாயைப் படிந்திருக்கிறது; அதன் தன்மை ஆரம்பகால வேத நூல்களிலிருந்து அடிப்படையிலேயே வேறுபட்டுக் காணப்படுகிறது. இந்த மாற்றம் எந்த அளவுக்கு ஏற்பட்டிருக்கிறது என்பது குறித்து பேராசிரியர் மாக்ஸ் முல்லர் ''**பண்டைய சமஸ்கிருத இலக்கியத்தின் வரலாறு**'' என்ற தமது நூலில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்: ''பிராமணங் களை ஆய்ந்து பார்க்கும்போது வேதபாசுரங்களின் மூலநோக்கம், அடிப்படைக் குறிக்கோள் முற்றிலும் தவறாகப் புரிந்து கொள்ளப் பட்டிருப்பதைக் காண்கிறோம்; மரபு முறைமைச் சங்கிலித் தொடரில் எப்போதேனும் எதிர்பாராத, ஒரு திடீர் முறிவு ஏற்பட்டிருந் தாலொழிய இத்தகைய மாற்றம் எப்படி ஏற்பட்டிருக்க முடியும் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை.'' ''வாணிகத் தைத் தொடர்ந்து ஏற்பட்டிருக்கக்கூடிய அந்நிய செல்வாக்கே இந்த மாற்றத்துக்குக் காரணமாக இருக்கக்கூடும்.'' எனவே இந்த அந்நிய செல்வாக்கு ஆறாம், ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில் இந்தியா வின் மீது படர்ந்திருக்க முடியுமே தவிர, நிச்சயமாகப் புத்தர் காலத் துக்குப் பிந்தியதாக இருக்க முடியாது; ஏனென்றால் கூடுவிட்டுக் கூடுபாயும் சித்தாந்தத்தில் அகில இந்தியாவும் நம்பிக்கை வைத் திருப்பதை இந்த மாபெரும் போதனாசிரியர் காண்கிறார்; இந்த சித்தாந்தம் வேதகாலச் சித்தாந்தம் இல்லையாதலால் அது அந்நிய சித்தாந்தமாகவே இருக்க முடியும்.[1] எனினும் இதைக் கொண்டு இந்துக்களின் கடல்வாணிக நடவடிக்கைகள் இந்தக் காலப் பகுதி யில்தான் தொடங்கியிருக்கக்கூடும் என்று கருதலாகாது; இன்னும் சொல்லப்போனால் கடலோடி வாழ்க்கை அவர்களோடு உடன் பிறந்தது என்றுகூடக் கூறலாம். புத்தர் திகாவின் கேவத்து சுத்தத்தில் (கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு) உவமை வடிவில் பின்கண்டவாறு கூறுகிறார்: '''நீண்ட காலத்துக்கு முன்னர் கடல் வணிகர்கள் கப்பலில் கடற்பயணம் மேற்கொள்ளும்போது தங்களுடன் ஒரு பறவையை யும் கொண்டுசெல்வார்கள்; கரை இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்கும் அபூர்வத்திறன் படைத்தது அந்தப் பறவை. நடுக்கடலில் செல்லும்போது எங்கும் கரை காணப்படவில்லை என்றால் உடனே

1. அருட்டிரு ஜோசப் எட்கின்ஸ், ஜே.ஆர். ஏ.எஸ். 1886, பக். 6.

இந்தப் பறவையைப் பறக்க விடுவார்கள். அது கிழக்கே செல்லும், மேற்கே செல்லும், தெற்கே செல்லும், வடக்கே செல்லும்; இவற்றுக்கு இடைப்பட்ட இடங்களுக்கும் செல்லும்; பிறகு மேலே மேலே உயர பறந்து செல்லும்; அப்போது அடிவானில் எங்கேயேனும் நிலம் தென்பட்டால், அது திரும்பக் கப்பலுக்குப் பறந்து வந்து சேரும். அதுபோன்று சகோதரனே...'' இங்கு குறிப்பிடப்படும்[1] ''வழக்கம் பொதுவாக அனைவரும் அறிந்ததாயும், பரவலானதாகவும் இல்லாதிருந்தால் சாதாரணமாப் பேச்சு வழக்கில் யாரும் இந்த உவமையைப் பயன்படுத்த மாட்டார்கள்'' என்று திரு. ரிஷ் டேவிட் கருத்துத் தெரிவிக்கிறார்.

இது ஒருபுறமிருக்க, பாபிலோனின் எழுச்சியைப் போன்றே அதன் வீழ்ச்சி திடுமென அமைந்தது; டரியஸ் (கி.மு.579-484) மன்னன் காலத்தில் இந்தச் சரிவு தொடங்கியது. ஆரம்பக் காலத்தில் காணப்பட்ட எண்ணற்ற வாணிகப்பட்டயத் தகடுகளை ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு நம்மால் காணமுடியவில்லை. பெர்சியப் படையெடுப்பு பாபிலோனை நிர்மூலமாக்கியதோடு எகிப்துக்கும் அது பரவிற்று. ஆற்றோரப் போக்குவரத்துக்காக வெட்டப் பட்ட கால்வாய்கள் சிதைந்து அழிந்தன; நதிகளின் நீரோட்டம் அலைகளால் தடைபட்டது; இதன் விளைவாக அராபியர்கள் மீன் வாணிகத்தில் நாட்டம் காட்டினர்; பாபிலோன் மற்றும் பாமிரின் சிறப்பும், சீர்மையும் ஏமனை ஈர்த்தன. டரியஸின் அலை அலையான படையெடுப்புகளுக்கிடையேயும் கால்டியர்களும் கெர்ராவிலும் ஏனைய இடங்களிலும் தங்கள் காலனிகளை நிறுவி தங்களது வாணிகத்தைத் தொடர்ந்தனர்.

டரியஸின் படையெடுப்புகள் அவனது ஆட்சியின் கீழ் ஒரு பரந்த சாம்ராஜ்யத்தைக் கொண்டு வந்தன; இதேசமயம் அலெக்சாந்தரின் சாம்ராஜ்யமும் கருவாகி உருவாகி, வளர்ந்து வலுப் பெற்றிருந்தது. மண்ணாசையும் நாடு பிடிக்கும் வெறியும் கொண்ட இரண்டு பேரரசர்கள் நேசமும் நட்பும்கொண்ட சிறந்த அயலவர்களாக இருப்பது முற்றிலும் சாத்தியமல்ல என்பது கண்கூடு; அவர்களிடையே மோதலும், முரண்பாடும், பிணக்கும் எழுவது இயல்பு; தகுந்த தருணத்திற்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்த அலெக்சாந்தர் நாடு பிடிக்கும் வேட்டையில் மும்முரமாக இறங்கினார். ஒரே வீச்சில், வேகத்தில், பாய்ச்சலில் டரியஸின் சாம்ராஜ்யத்தை அழித்தொழித்தார்; தனது ஆட்சி எல்லையை, அதிகாரத்தை எகிப்து, மத்திய ஆசியா, வட இந்தியா வரை விஸ்தரித்தார்.

---

1. ஜே.ஆர்.எ.எஸ். 1899, தொகுதி 31, பக். 432.

அலெக்சாந்தரின் இந்தப் பிரம்மாண்டமான படையெடுப்புக் கான நோக்கங்கள் பற்றிப் பல்வேறு ஊகங்கள் கூறப்படுகின்றன. டரியஸ் தனக்கு இழைத்த அவமானத்துக்குப் பழிக்குப் பழிவாங்க வேண்டுமென அலெக்சாந்தருக்கு இருந்த துடிதுடிப்பு, வேகம் இந்த நோக்கங்களில் ஒன்று எனக் கூறப்படுகிறது. ஆனால் பேரா சிரியர் லாஸ்ஸன் இதற்கு வேறோர் அடிப்படையான நோக்கத்தைக் குறிப்பிடுகிறார்; பொன்னாசையே அலெக்சாந்தரின் இந்தப் படை யெடுப்புக்கு மூலகாரணம் என்று துணிந்துகூறுகிறார்; கிரீஸில் அவர் கண்ட இந்தியப் பண்டங்கள் அவரது அவாவைத் தூண்டி விட்டன; அவரது நாடு பிடிக்கும் பசியைக் கிளர்த்தி விட்டன என்கிறார் அவர். யூதேவியாவுடன் போன்றே கிரேக்க நாட்டுடன் இருந்த வாணிகத் தொடர்பும் வாணிகத்தில் ஈடுபட்டிருந்த இரண்டு மக்களின் மொழியில் தனது முத்திரையைப் பதித்துள்ளது.'' உதா ரணமக, அரிசி (**அரிஸா**), இஞ்சி (**ஜிஞ்சிபெர்**), இலவங்கப்பட்டை (கர்ப்பியன்) ஆகியவற்றைக் குறிக்கும் கிரேக்கப்பெயர்கள் இதே பொருள்களைக் குறிக்கும் **அரிசி**, **இஞ்சிவேர்**, **கரவப்பட்டை** ஆகிய தமிழ்ப்பெயர்களுடன் முறையே பெரிதும் ஒத்திருப்பதைப் பார்க்கலாம். கிரேக்கச் சொற்கள் தமிழ்ச்சொற்களுடன் ஒத்திருப்பது எதைக்காட்டுகின்றன? இந்தப் பொருள்களையும் அவற்றின் பெயர் களையும் தமிழகத்திலிருந்து ஐரோப்பாவுக்குக் கொண்டு சென்ற வர்கள் கிரேக்க வணிகர்களே என்பதையே இது புலப்படுத்து கிறது. மேலும், மேலைய வணிகர்களைக் குறிப்பதற்கே **யவனர்** என்னும் சொல் பயன்படுத்தப்பட்டது; பழைய சமஸ்கிருதக் கவிதை களில் முக்கியமாக கிரேக்கர்களைக் குறிப்பதற்கு இச்சொல் பயன் படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்; **ஐவோனிஸ்** என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து இது பெறப்பட்டிருக்கிறது; கிரேக்கர்கள் அவர் களது சொந்த மொழியில் இவ்வாறுதான் அழைக்கப்படுகின்றனர்.''[1] பொதுமூலம் கொண்ட இந்தச் சொற்கள் தொகுதியில் மற்றொரு சொல்லை இங்கு குறிப்பிடுவது உசிதமாக இருக்கும்; அதுதான் தந்தம் அல்லது யானையைக் குறிக்கும் சொல்லாகும். இது கிரேக்க மொழியில் ''**எலிபாஸ்**'' என்றும், எகிப்திய மொழியில் ''**எபு**'' என்றும், சமஸ்கிருதத்தில் ''**எபா**'' என்றும் குறிப்பிடப்படுகிறது. இந்தச்சொற்கள் எல்லாம் ஒரு பொதுவான சமஸ்கிருத மூலத்தைக் கொண்டவை என்று பேராசிரியர் லாஸ்ஸன் கருதுகிறார்.

அலெக்சாந்தரின் நோக்கங்கள் எவையாக இருந்தாலும், இந்தியாவைப் பற்றி நன்கு அறிந்திருந்த, தெரிந்திருந்த அவர் இரு நாடுகளுக்கும் இடையே மிக நெருக்கமான வாணிகத் தொடர்பு ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தைக் கொண்டிருந்தார்

1. ஆர்.கே. முகர்ஜி, இந்தியக் கப்பல்கள், பக்கங்கள் 16-17.

என்பதில் ஐயமில்லை. இந்தியாவுடனான இந்த வளமிக்க வாணி கத்தை ஜைரேயின் பினீசியர்கள் ஏகபோகமாக்கிக் கொண்டிருப்பதை யும், உலகின் ஏனைய பகுதிகளுக்கு இந்தியப் பண்டங்களை வழங்கி வருவதையும் அவர் கண்டார். இந்தியாவின் வற்றாத, வரையாத வளமையை, செல்வச் செழிப்பை அவர் நேரில் கண்டபோது, பினீசி யர்கள்மீது அவருக்கு இருந்த பொறாமை பன்மடங்கு அதிகரித்தது. ''இதுவரை அவர் ராணுவத்தை வழிநடத்திச் சென்ற இந்தியப் பகுதி மக்கள் தொகை நெருக்கம் கொண்டதாகவும் பண்பட்டதாக வும், எத்தனை எத்தனையோ அரிய இயற்கைச் செல்வங்களையும் கலைச் செல்வங்களையும் தன்னகத்தே கொண்டதாகவும் காணப் பட்டது. எனினும் கங்கைக்கு உட்புறத்தே உள்ள பகுதி இதை விட மிகச்சிறப்பானது என்றும், மாபெரும் கங்கை நதிபாயும் பிராந்தி யங்கள் இதுவரை அவர் கண்டவற்றை எல்லாம் விஞ்சக்கூடியவை என்றும் - இது அநேகமாக சற்று மிகைப்படுத்தப்பட்ட வருணை யாக இருந்தாலும் - ஒவ்வோரிடத்திலும் அவரிடம் தெரிவிக்கப்பட்ட போது, இத்தகைய பிராந்தியங்களை நேரில் காணவும், அவற்றைக் கைப்பற்றிக் கொள்ளவும் எல்லையற்ற ஆர்வம் கொண்டார்; தமது படைவீரர்களை ஓரிடத்தில் ஒன்றுகூட்டி, செல்வமும் வளமும் புகழும் குவிந்திருக்கும் அந்தப் பிராந்தியத்தை நோக்கி முன்னேற அவர்கள் தயாராக இருக்க வேண்டும் என்று யோசனை கூறினார்.''[1] அலெக்சாந்தர் வென்று கைப்பற்றிய இந்தியாவின் வடபகுதியை அவர் புருஷோத்தம மன்னனுக்கு வழங்கினார்; ''இப்பகுதியில் நாலா யிரத்துக்கும் குறையாமல் நகரங்கள் இருந்ததாகக் கூறப்படுகிறது.'' இது சம்பந்தமாக திரு.ராபர்ட்சன் பின்வருமாறு கருத்துத் தெரிவிக்கிறார்: ''தேசங்களுக்கும் நகரங்களுக்கும் தரப்பட்டுள்ள தெளிவற்ற இடுகுறிப் பெயர்களுக்கு மிகவும் வரையறைக்குட்பட்ட பொருள் கொண்டால் கூட ஒரு மாபெரும் மக்கட்தொகையை அவை குறிப்பதைக் காண லாம். (சிந்து) நதி வழியே (அலெக்சாந்தரின்) கப்பற்படை பயணம் சென்ற போது, நதிக்கு இருபுறங்களிலும் இருந்த பிரதேசங்கள் மன்னன் புருஷோத்தமனின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்களை விட எவ்வகையிலும் கீழ்ப்பட்ட நிலையில் இல்லை என்பது தெரிய வந்தது.''[2]

அலெக்சாந்தரின் தளபதிகளான தாலமி, அரிஸ்டோபுலுஸ், நியர்சுஸ் ஆகியோரின் நினைவுக் குறிப்புகளும் நாட்குறிப்புகளும்

1. டபிள்யூ. ராபர்ட்சன், 'ஆய்வாராய்வு' பக்கம் 16-17.
2. மேற்படி, பக்கம் 22.

இந்தியாவைப் பற்றிய பல சுவையான தகவல்களை கிரேக்க நாட்டுக்கும் ஐரோப்பாவுக்கும் வழங்கின; இந்தியாவைக் குறித்த ஒரு படப்பிடிப்பினை இவற்றில் காண்கிறோம். எகிப்தைக் கைப்பற்றிய பிறகு கிரேக்க நாட்டுக்கும் இந்தியாவுக்கும் இடையே நேரடி வாணிகத் தொடர்பை ஏற்படுத்துவது பற்றி அலெக்சாந்தர் சிந்தித்தார். இந்தக் குறிக்கோளைக் கருத்திற் கொண்டுதான் தமது சொந்தப் பெயரில் அலெக்சாந்திரியா என்னும் நகரைத் தோற்றுவித்தார்; இந்நகரம் பண்டைக்காலத்தில் மிகப் பெரிய வாணிக மையமாகத் திகழ்ந்தது; மிகப் பல சோதனைகளுக்கு இடையிலும் அது இந்த உன்னத, உயரிய இடத்தைத் தொடர்ந்து வகித்தது; இந்தியாவை தமது பேரரசுடன் நிரந்தரமாக, நிலையாகச் சேர்த்துவிட வேண்டும் என்று அவர் எத்தனை எத்தனையோ இன்பக் கனவுகளைக் கண்டார்; அவர் இன்னும் நீண்டகாலம் வாழ்ந்திருந்தால், உயிரோடிருந் திருந்தால் இந்தக் கனவுகள் அனைத்தும் நிறைவேறாவிட்டாலும் அவற்றில் ஒரு சில கனவுகளாவது நனவாகியிருக்கும். ஆனால் அவர் தமது பேரரசைக் கட்டி வளர்த்து உருவாக்கிய சிறிது காலத் திலேயே துரதிருஷ்டவசமாக மரணமடைந்தார்; இதனைத் தொடர்ந்து வெகுவிரைவிலேயே அவரது பேரரசு சடசடவென்று சரிந்து விழுந்து உடைந்து நொறுங்கிற்று. அந்தப் பேரரசின் பல்வேறு மாகாணங் களது ஆளுநர்கள் அதனைத் தங்களுக்குள் துண்டுதுண்டாகப் பங்கு போட்டுக் கொண்டனர். உயரவாவாலும், புகழார்வத்தாலும், ஆதாய ஆசையாலும், தனிப்பட்ட விரோத குரோதத்தாலும் தூண்டப் பட்டு, மேலாதிக்கம் பெறுவதற்காக அவர்கள் தங்களுக்குள் சண்டு பிடித்து சண்டை போட்டுக் கொண்டிருந்தனர்; கச்சை வாரிக் கட்டிக் கொண்டு ஒருவருக்கு எதிராக ஒருவர் களத்தில் இறங்கினர். எனினும் அலெக்சாந்தரின் பேரரசு வீழ்ச்சியடைந்து இவ்வாறு சின்னாபின்ன மாகி இருந்ததன் காரணமாக இந்தியாவுக்கும் கிரேக்க நாட்டுக் கும் இடையே வர்த்தக உறவு துண்டிக்கப்பட்டு விட்டது என்று நினைப்பது தவறு; இதற்கு மாறாக இந்த உறவுகள் முன்னிலும் வலுவடையவே செய்தன. அலெக்சாந்தரின் தளபதிகளிலேயே மிகவும் துணிவாண்மையும், ஊக்கமும் உத்வேகமும், வினைத்திட்பமும் மிக்க தளபதியான செல்யூகஸ் முதலில் பெர்சியப் பேரரசைக் கைப்பற்றிக் கொண்டான்; பின்னர் இந்தியாவின் மீது அவனது பார்வை திரும்பிற்று; அலெக்சாந்தர் வென்று கைப்பற்றிய இந்திய மாகாணங்களைத் தனது ஆட்சியின் கீழ்கொண்டுவர அவன் பெரிதும் முயன்றான். இத்தகைய ஒரு வெற்றியால் கிட்டக்கூடிய வாணிக ஆதாயங்களை செல்யூகஸ் நன்கு அறிந்திருந்தான்; தனது மாபெரும் சைனியங்களைக் கொண்டு இந்தத் திட்டத்தை நிறைவேற்றவும்

உறுதிபூண்டான். ஆனால் அவனது எதிரியோ இவனிலும் நிகரற்ற வனாக, ஈடுபாடில்லாதவனாக இருந்தான். அவன்தான் சந்திரகுப்தன். சந்தரகோட்டஸ் என்று கிரேக்கர்கள் அவனை அழைத்தனர். அச் சமயம் அவன் இந்தியாவின் பெரும்பகுதியை பரந்த உள்ளம் கொண்ட வல்லாட்சியாளனாக ஆண்டு வந்தான். மத்தியகால அம்சங் களுக்கிடையேயும் அவன் புதுமைப் பாங்குடையவனாக, புதிய பாணிகளைப் பின்பற்றுபவனாக, அறிவாற்றலிலும் வலிமையிலும் நேர் நிகரற்றவனாகத் திகழ்ந்தான். அவனது மகாவலிமையை, உயர் திறத்தைப் புரிந்து கொண்ட செல்யூகஸ் விவேகத்தோடு அவனுடன் சமாதானம் செய்துகொண்டான்; இருவரிடையே நேச உறவுகளை வளர்த்து வலுப்படுத்திக் கொள்ளும் பொருட்டு சந்திரகுப்தனின் அரசவைக்கு மெகஸ்தெனிசைத் தூதுவனாக அனுப்பி வைத்தான். மெகஸ்தெனிசுக்குப் பிறகு இந்த நட்புறவுகளைத் தொடர்ந்து பேணிக் காக்கும் பணியை தைமசுஸ் மேற்கொண்டான். கிரேக்கர்கள் இந்தியா வுடனான தங்கள் தொடர்பை, உறவை கிரேக்க-பாக்டீரிய அரசு மூலம் நீண்டகாலம் பேணி வளர்ந்து வந்தனர்; ஆனால் இந்த உறவின் பரிமாணத்தையும், தன்மையையும் மதிப்பிடுவதற்கு மிகக் குறைந்த சான்றுகளே நமக்குக் கிடைத்துள்ளன. சீன வரலாற் றாசிரியர்கள் நமக்குப் பின்வருமாறு கூறுகின்றனர்: ''கிறிஸ்துவ சகாப்தத்துக்கு சுமார் நூற்று இருபத்தாறு ஆண்டுகளுக்கு முன்னர், எண்ணிக் கையில் பெருத்த ஓர் இனம் சக்தி வாய்ந்த தார்த்தார் நாடோடிக் கும்பலைத் துரத்திக் கொண்டு வந்தது; இந்த நெருக்கு தலைச் சமாளிக்க முடியாமல் தார்த்தார்கள் சீனாவின் உட்பகுதி களில் தங்கள் இருப்பிடங்களிலிருந்து உந்தித் தள்ளப்பட்டு மேற்கு நோக்கிச் செல்ல நிர்ப்பந்திக்கப்பட்டனர்; தாக்ரசைக் கடந்து அங் கிருந்து அவர்கள் மடை திறந்து கரைபுரண்டோடும் காட்டாற்று வெள்ளம்போல் பாக்டீரியாவுக்குள் 'திபுதிபு'வென்று புகுந்தனர்; பாக்டீரிய அரசைக் கவிழ்த்தனர்; அங்கு நூற்று முப்பது ஆண்டு களுக்கு முன்னர் நிறுவப்பட்ட கிரேக்கர்களின் ஆட்சிக்கு முடிவு கட்டினர்''.[1] இவ்வாறு தரைவழிப் போக்குவரத்துத் தடைபட்ட போதிலும் அலெக்சாந்திரியா கிரீசுக்கும் இந்தியாவுக்கும் இடையே கடல்வழி வாணிகத்தின் ஒரு மாபெரும் மையமாகத் தொடர்ந்து நீடித்து வந்தது. லாகுசின் புதல்வரான தாலமி ஆளுநராக இருந்த போது இந்திய வாணிகத்தைப் பெரிதும் ஊக்குவித்தான். அவனுடைய புதல்வனான தாலமி பிலடெல்பஸ் இந்தியப் பண்டங்களை நேரடி யாக அலெக்சாந்திரியாவுக்குக் கொண்டு வரும் பொருட்டு செங்

1. டபிள்யூ. ராபர்ட்சன் "ஆய்வாராய்வு" , பக்கம் 37.

கடலையும் நைல் நதியையும் இணைப்பதற்கு ஒரு கால்வாயை வெட்டத் தொடங்கினான்; ஆனால் இது ஒரு மாபெரும் திட்டமாக இருந்ததால் விரைவிலேயே கைவிடப்பட்டது. எனினும் செங் கடலின் மேற்குக் கரையில் அவன் ஒரு நகரை நிர்மாணித்து, அதற்கு பெரனிஸ் எனப் பெயரிட்டான்; இந்திய வாணிகத்திற்கு ஒரு கேந்திர நகரமாக அது திகழ்ந்து வந்தது:

> ''ஆனால் எகிப்திய மற்றும் சிரிய முடியாட்சிகள் இந்திய வாணிகத்தின் அனைத்து அனுகூலங்களும் நன்மைகளும் மேன்மைகளும் தம்முடைய பிரஜைகளுக்குக் கிடைக்கச் செய்ய முனைப்போடு, செயலூக்கத்தோடு அரும்பாடுபட்டுக் கொண்டிருந்த வேளையில் மேற்கில் தோன்றிய ஒரு வல்லரசு இவ்விரு முடியாட்சிகளுக்குமே விநாசகரமானதாக அமைந்தது. ரோமாபுரியினர் தங்களுடைய வீரியமிக்க படை வலிமையினாலும், அரசியல் விவேகத்தாலும் இத்தாலி முழுவதையும் தங்கள் ஆட்சியின்கீழ் கொண்டு வந்தனர்; விரைவிலேயே போட்டிக்குடியரசான கார்த்தேஜைத் தங்கள் வசமாக்கினர்; ஏ.சி.55ல் மாசிடோனியாவையும் கிரீஸை யும் அடிபணிய வைத்தனர்; தங்கள் ஆட்சியை சிரியாவுக்கு விஸ்தரித்தனர்; இறுதியாக, மகா அலெக்சாந்தரின் வழிவந் தோர் நிறுவியவற்றில் எஞ்சியிருந்த ஒரே அரசான எகிப்தின் மீதும் தங்கள் வெற்றிக்கரங்களை நீட்டினர்."

எகிப்து வீழ்ச்சியடைந்ததைத் தொடர்ந்து, மிகுந்த ஆதாயமும் வருவாயும் மிக்க இந்திய வாணிகத்தின் அருட்கடாட்சம் ரோமாபுரிப் பக்கம் திரும்பிற்று; ஆனால் இது ஒன்றுதான் இந்திய வாணிக மார்க்கமல்ல. இந்தியச் சரக்குகள் மேற்கே செல்லுவதற்கு மற்றொரு மார்க்கமும் இருந்தது. அது ஒரு தரைவழி மார்க்கம்; யூதேவியாவில் இந்திய வாணிகம் செழித்துக் கொழிப்பதற்கு சாலமன் மன்னன் தோற்றுவித்த மார்க்கம். யூப்ரட்டசுக்கும் மத்தியத்தரைக்கடலுக்கும் பாதிவழியில் அமைந்துள்ள தத்மோர் அல்லது தல்மைரா நகரத்தின் வழியாக இது சென்றது. ரோமாபுரியினர் சிரியாவைவென்று தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்த பிறகு பால்மிரா சுதந்திரமடைந்து, மக்கட்தொகை மிகுந்த வளம் கொழிக்கும் ஒரு நகரமாக வளர்ச்சி யடைந்தது. அது விநியோக மையமாகவும் திகழ்ந்தது. பிறர் பொருளைக் கவர்வதில் ரோமாபுரியினருக்கு உள்ள பேராசைக்கு எல்லையே இல்லை; பால்மிராவின் ராணி ஜெனோபியா சற்று வெறுப் புணர்வைக் காட்டியதைச் சாக்காகக் கொண்டு ரோமாபுரியினர் அந்த நகரைக் கைப்பற்றித் தங்களது பேரரசில் சேர்த்துக் கொண்டு விட்டனர்.

ஆனால் இந்திய வாணிகத்தில் ரோமாபுரியினர் ஏகபோகம் செலுத்துவதற்கு பால்மிராசைக் கைப்பற்றிக் கொண்டது மட்டுமே போதுமானதாக இருக்கவில்லை; ஏனென்றால் அவர்களது போன்ற ஒரு வலிமைமிக்க பேரரசு கிழக்கில் உதயமாகிக் கொண்டிருந்தது. அதுதான் பார்த்தியப் பேரரசு. பார்த்தியர்கள் மத்திய ஆசியாவில் தங்கள் மேலாதிக்கத்தை நிலைநாட்டியிருந்தனர்; அவர்களது பேரரசின் எல்லைகள் ரோமானியப் பேரரசின் எல்லைகளை அடுத்திருந்தன. பார்த்தியாவுக்கும் ரோமாபுரிக்கும் இடையேயான போராட்டம் கி.மு.55லிருந்து கி.மு.20 வரை நீடித்தது; ஆனால் மேலாதிக்கத்திற்கான இந்தப் போராட்டம் திட்டவட்டமான ஒரு முடிவுக்கு வர முடியததாகவே இருந்தது.'கி.மு 55க்கும் 20க்கும் இடையே நடைபெற்ற இந்தப் போர் நடவடிக்கை இவ்விரு பேரரசுகளும் பரஸ்பரம் ஒன்றையொன்று நேரிய முறையில் மதிக்கும் நிலைக்கு இட்டுச் சென்றது. இதனால், யூப்ரட்டஸ் நதியின் மேற்குக் கரைதான் ரோமானியப் பேரரசின் முறையான எல்லை என்பதையும், இதற்கு அப்பால் ரோமானியப் பேரரசின் அதிகாரம் விஸ்தரிக்கப்பட மாட்டாது என்பதையும் அகஸ்டஸ் ஒரு கோட்பாடாக ஏற்றுக் கொண்டான்.''[1] 'பார்த்தியா மூலம் செல்லும் எல்லாத் தரை வழி மார்க்கங்களையும் விலக்கி, ரோமாபுரியின் நிரந்தர பகை நாடான அதனை நாட்டின் வருவாய்க்குச் சார்ந்திருக்கும் தொல்லையைத் தவிர்க்கும் பொருட்டு இந்தியாவுடன் நேரடிக் கடல்வழி வாணிகத்தை ஊக்குவிப்பதே''.[2] கிறித்துவ சகாப்தத்துக்குப் பிந்தைய இரண்டு நூற்றாண்டுகளில் ரோமானியப் பேரரசின் கொள்கையாக இருந்துவந்தது. அமைதி நிலவிய பண்டைய ரோமாபுரி ஆட்சியில் இந்தியாவுடனான வாணிகம் பெரிதும் போற்றி வளர்க்கப்பட்டது; வணிகர்களின் வசதிக்காக இந்தியாவின் துறைமுகங்களைப் பற்றி விவரிக்கும் வழிகாட்டு நூல்களும், உள்நாட்டுப் பயணங்கள் குறித்த தகவல்கள் அடங்கிய நூல்களும் எழுதப்பட ஆரம்பிக்கும் அளவுக்கு இந்த வாணிகம் மிகுந்த முக்கியத்துவத்தைப் பெற்றது. கி.பி. முதலாவது நூற்றாண்டின் மத்தியில்தான் ஹிப்போலஸ் என்ற கிரேக்க எகிப்தியர் இந்தியப் பருவகாற்றின் முறைமையைக் கண்டு பிடித்துக் கூறினார்; இதன் மூலம் வணிகர்களின் கடற்பயணத்தைப் பெரிதும் எளிதாக்கினர். ஏறத்தாழ இதே காலப் பகுதியில் 'எரித்திரியக் கடலின் பெரிப்ளுஸ்'' அல்லது இந்துமா கடலுக்கு வழிகாட்டி நூலை ஒரு கிரேக்கப் பெருவணிகர் எழுதினார். சாரக்ஸைச் சேர்ந்த இசிதோர்

1. சாரக்ஸின் இதோர், 'பார்த்தியத் தங்கிடங்கள்'', பதிப்பாசிரியர் டபிள்யூ.எச். ஸ்கோஃப், பக்கம் 21.
2. மேற்படி நூல், பக்கம் 19.

என்ற மற்றொரு கிரேக்க வணிகர் பார்த்திய அரசில் விரிவாகச் சுற்றுப் பயணம் செய்து, தரைவழியாக நடைபெறும் காரவான் வாணிகம் பற்றிய முழு விவரங்களை வழங்கினார். இதற்கு முன்னர் அது மற்றவர்களிடமிருந்து கிழக்கத்தியப் பண்டங்களைப் பெற வேண்டியிருந்தது. வாணிகத்தில் தங்கள் ஏகபோகத்தை நிரந்தரமாக்கும் பொருட்டு அராபியர்கள் இந்தியாவைப் பற்றிய எல்லாத் தகவல் களையும் மூடிமறைத்தனர். இதேசமயம் பார்த்தியர்கள் இந்தியப் பண்டங்களுக்கு ஏராளமான சுங்கவரி விதித்தனர். இதனால் இந்தியப் பண்டங்களின் விலை உயர்ந்தன. ஒருபுறம் அரபு நாடுகளும் இன்னொருபுறம் பார்த்தியாவும் விதிக்கும் சுங்க வரிகளைச் செலுத்தி ரோமாபுரி இந்தியப் பண்டங்களை வாங்க வேண்டியிருந்தது. இந் நிலையில் இந்தியாவுடன் கடல்வழி வாணிகத்தை வளர்த்து, அதனை தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதைத் தவிர ரோமா புரிக்கு வேறு வழியில்லை.''[1] இப்பகைப்புலனில், நவீனகால கொலம்பஸ் எனப் போற்றப்பட்ட ஹிப்போலஸ் பருவக்காற்றின் முறைமையைக் கண்டுபிடித்ததானது ரோமானியர்களின் தேவை யைப் பெரிதும் பூர்த்தி செய்தது. இதனைத் தொடர்ந்து ரோமானியக் கப்பல்கள் இந்து மாகடலில் வெகுவாக நடமாடத் தொடங்கின. இதன் விளைவாக நாடுகளின் தேசிய வலிமையில், ஆற்றலில் மாபெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. வழக்கமான வாணிகம் திசைதிரும்பியதால் பெதியா, ஜெர்ரா, பால்மிரா, பார்த்தியா ஆகியவற்றின் வருவாய்கள் வெகுவாக வற்றி, அவை ஒன்றன்பின் ஒன்றாக ரோமானியர்களின் வசமாயின. தெற்கு அராபிய ஹோமரைட் அரசுக்கு மிகுந்த சோதனைக் காலம் ஏற்பட்டது; அதன் தலைநகரம் அழிந்து சிதைந்து சீர்குலைந்தது; அதன் தலைசிறந்த புதல்வர்களில் பலர் வடதிசையில் சென்றனர்; காசானைடுகள் ரோமாபுரிக்குச் சிரம் தாழ்த்தினர்; அதேசமயம் தனது பழைய பகைவன் வீழ்ச்சியுற்றதால் அபிசீனியா தலை உயர்த்தி, நெஞ்சு நிமிர்த்தி வளம் கொழித்தது. இத்தகைய நிலைதொடர்ந்து நீடித்திருந்தால், பின்னாளைய நிகழ்ச்சிப் போக்கு கள் அனைத்தும், அவற்றின் திசைவழி முழுதும் மாறிப் போயிருக்கும். இஸ்லாம் ஒருபோதும் தோன்றியிருக்காது, தலைதூக்கியிருக்காது. ரோமானிய சாம்ராஜ்யம் மேலும் வளர்ந்து வலுப்பெற்று, தனது சட்டமுறையையும், ஆட்சிமுறையையும் தேம்ஸிலிருந்து கங்கை வரை பரப்பியிருக்கும். ஆனால் வரலாற்றின் தருக்கவியல் இவை யெல்லாவற்றையும் விட வல்லமை மிக்கது. ரோமானியர்களின்

---

1. எரித்திரியக் கடலின் பெரிப்ளஸ், டபிள்யூ.எச். ஸ்கோஃப், பக்கம் 5.

கைவசமிருந்த செல்வம் படிப்படியாகக் குறைந்தது; தான் கைப்பற்றிய மாகாணங்களில் அவ்வப்போது எழுந்த கிளர்ச்சிகளை அடக்கி ஒடுக்கு வதற்கும், உள்நாட்டுக் கலகங்களைச் சமாளிப்பதற்கும் இந்தச் செல்வம் தண்ணீர்பட்ட பாடாக வாரி இறைக்கப்பட்டது. தவிரவும், ஏற்றுமதி இறக்குமதிக்கு அடிக்கடி பணம் பட்டுவாடா செய்யப்பட வேண்டி யிருந்தது. மேன்மேலும் செல்வத்தைத் தோற்றுவிக்கக்கூடிய உற்பத்தித் துறையிலோ அல்லது தொழில் துறையிலோ குறிப் பிடத்தக்க முன்னேற்றத்தை எய்தியிராத ஒரு தேசத்துக்கு இவ்விதம் செல்வம் கரைவது உண்மையிலேயே அபாயகரமனது என்பதில் ஐயமில்லை.''[1]

இது ஒருபுறமிருக்க, இந்தியாவுடனான ரோமானிய வாணி கத்தைப் பொறுத்த வரையில் நமக்கு ஏராளமான தகவல்கள் உள்ளன; இவை எவ்வகையிலும் ஐயுறவிற்கு இடம் தராதவை.

இந்தியாவிலிருந்தும் இலங்கையிலிருந்தும் ரோமாபுரிக்குப் பல தூதுக்குழுக்கள் அனுப்பப்பட்டது முதல் வகையைச் சேர்ந்த சான்றாகும்.

முதல் தூதுக்குழு இலங்கையிலிருந்து வந்தது; இதனை பிளினி பதிவுசெய்துள்ளார். இதன் காலத்தைத் துல்லியமாக நிர்ண யிப்பது சாத்தியமல்ல; எனினும் சில சந்தர்ப்ப சூழ்நிலைச் சான்று களிலிருந்து இந்தக்காலம் கி.பி.41க்கும் 54க்கும் இடைப்பட்டதாக இருக்கக்கூடும் என்று நாம் அனுமானிக்கலாம். இந்தக் குழு கிளாடி சின் அவைக்கு அனுப்பப்பட்டது. அப்போது மிக நெருக்கடியான காலம். அக்ரிப்பினா, மெஸ்ஸிலினா ஆகியோரின் வன்முறையான, கொடிய மரணங்கள் போன்ற சதிநடவடிக்கைகளும், சூழ்ச்சிகளும் ரோமானிய வரலாற்றாசிரியரின் மனங்களைப் பெரிதும் ஆக்கிர மித்துக் கொண்டிருந்ததால் இந்தத் தூதுக்குழுவின் வருகை பற்றிப் போதிய அளவு குறிப்பிட முடியவில்லை. இலங்கை மன்னன் சுந்தர முக சிவாவால் இந்தத் தூதுக்குழு அனுப்பப்பட்டது. இவன் கி.பி.44 முதல் 52 வரை இலங்கையில் ஆட்சி புரிந்து வந்தான்.

மேலும் பல தூதுக் குழுக்களும் இதனைத் தொடர்ந்தன. இரண்டாவது தூதுக் குழு கி.பி.107ல் ட்ரோஜன் அவைக்கும், மூன்றாவது தூதுக்குழு கி.பி. 138ல் அன்டோனியஸ் பையஸ்

---

1. துடைத்தழிக்கப்பட்டுள்ளது.

அவைக்கும், நான்காவது தூதுக்குழு கி.பி.361ல் ஜூலியன் அவைக் கும், ஐந்தாவது தூதுக்குழு கி.பி.530ல் ஜஸ்டீனியன் அவைக்கும் அனுப்பப்பட்டன. இந்தியத் தரப்பில் இந்தத் தூதுக் குழுக்கள் பற்றி எத்தகைய தகவலும் இல்லை. ரோமானிய வரலாற்றாசிரியர்தான் இவற்றைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்; ஆனால் அந்தக் குறிப்பும் அத்தனைத் தெளிவாக இல்லை; இதனால் இந்தத் தூதுக்குழுக்கள் அனுப்பப்பட்டதன் நோக்கம் என்ன என்பதை அனுமானிப்பது மிகக் கடினமாக இருக்கிறது. எனினும் ''செர்வியஸ் மற்றும் அவனது மகன் கம்மோடஸ் ஆட்சிக்காலத்தில் இந்தியாவுக்கும் ரோமாபுரிக் கும் இடையே உறுதியான, உயிர்த்துடிப்பான உறவுகள் நிலவின என்பதையும், அலெக்சாந்திரியாவும் பால்மிராவும் தீவிரமாக வாணி கத்தில் ஈடுபட்டு வளம் கொழித்துத் திகழ்ந்தன என்பதையும் இதிலிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம். இந்தியாவுடன் ரோமா புரிக்கு இருந்த தொடர்பு மிக மேம்பட்ட நிலையை எட்டியிருந்தது. அச்சமயம் ரோமாபுரி நூல்கள் இந்திய விஷயங்களின்பால் மிகுந்த கவனம் செலுத்தின. முன்போல் அலெக்சாந்தர் காலத்து வரலாற்று ஆசிரியர்களை [1]மேற்கோள் காட்டுவதுடனோ அல்லது செல்யூகஸ் தூதுவர்கள் தரும் விவரங்களை வெளியிடுவதுடனோ அவை நின்று விடவில்லை; மாறாக சுதந்திரமான இதர ஆதாரங்களிலிருந்தும் தகவல்களைச் சேகரித்து அவை வெளியிட்டன.[2]

பெரும்பாலும் நூல் வடிவில் அமைந்த இதர சான்றுகளும் இதே முடிவையே உறுதி செய்கின்றன. உதாரணமாக டாக்டர் ஹிர்த் எழுதியுள்ள 'சீனாவும் ரோமாபுரியும்'' என்ற நூலை எடுத்துக் கொள்வோம். சுங்-ஷு என்ற சீன வரலாற்றாசிரியர் கி.பி.420-478 காலப்பகுதியைப் பற்றிப் பின்வருமாறு எழுதியிருப்பதை அவர் மேற்கோள் காட்டியிருக்கிறார் : ''தொலைதூரத்தில் மேலை மாகடலில் அமைந்துள்ள த-த்ஸினையும் (சிரியா) ஐஇயன் சுவையும்(இந்தியா) பொறுத்தவரை இரண்டு ஹான் அரசகுலங்களைச் சேர்ந்த தூதுவர் கள் இந்த மார்க்கத்தில் குறிப்பிட்ட சில இடர்ப்பாடுகளை எதிர் கொள்ள வேண்டியிருந்தது என்றுதான் கூற வேண்டும். எனினும் வாணிகச் சரக்குப் போக்குவரத்துத் தட்டுத் தடங்கலின்றி நடை பெறுகிறது; இந்தப் பண்டங்கள் அயல் இனத்தவர்களுக்கு அனுப்பப்

1. ஜே.ஆர்.ஏ.எஸ். 1860, தொகுதி XVIII, பக்கங்கள் 349-350.
2. ஜே.ஆர்.ஏ.எஸ்., தொகுதி XIX, பக்கம் 276.

படுகின்றன; காற்றின் வேகம் மலைபோல் மோதும் கடல் அலைகளி னூடே அவர்களை வெகுதூரம் கொண்டு செல்லுகிறது. நாம் அறிந்த வற்றிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஓங்கி உயர்ந்த கம்பீரமான மலைத் தொடர்கள் அங்கு காணப்படுகின்றன. பல்வேறு வகைப்பட்ட இனமக்கள் வெவ்வேறு பெயர்களுடன், அசாதாரணமான பணிகளில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்கள் நம் இனத்தவரிலிருந்து அறவே வேறுபட்ட இனத்தவர்கள். நீருடனும் நிலத்துடனும் சம்பந்தப்பட்ட அனைத்து அருமந்தப் பொருள்களும் அவர்களிடமிருந்து கிடைக் கின்றன; காண்டாமிருகத்தின் கொம்புகளிலிருந்து தயாரிக்கப்படும் இரத்தினங்கள், பச்சை மணிக் கற்கள், நாகமுத்துக்கள், கல் நாரி லிருந்து தயாரிக்கப்படும் துகில், மற்றும் இவை போன்ற இன்னும் எத்தனை எத்தனையோ அரிய பொருள்கள் அவர்களது கைவண்ணத் திலிருந்து உருவாகின்றன; உலகப் பெருந்தகையிடம் (புத்தர்) பக்தி செலுத்துவதிலும் அவர்கள் சிறப்புற்று விளங்குகின்றனர். இவை யாவும் கடற்பயணமும் வாணிகமும் இப்பகுதிகளுக்கு விரிவடைய வகை செய்துள்ளன.''

மா- தௌவான்லின் என்னும் மற்றொரு சீன வரலாற் றாசிரியர் பண்டைக்காலம் குறித்த தமது ஆராய்ச்சியில் ''இந்தியா (கி.பி.500-16) கடல் மார்க்கமாக த-த்ஸின், ரோமானியப் பேரரசு, மற்றும் அன்சி அல்லது ஏஎஸ்சியுடன் பெருமளவுக்கு வாணிகம் செய்துவருகிறது''[1] என்று கூறுகிறார்.

பால்மிரா அழிவுண்ட பிறகு இந்தியாவுக்கும் ரோமாபுரிக் கும் இடையே நேரடி வாணிகம் ஒருபோதும் நடைபெறவில்லை என்று மிகுந்த நுழைபுலம் வாய்ந்த ஒரு வரலாற்று ஆசிரியர் துணிந்து கூறுகிறார். ரோமானியர்கள் தங்களுடைய வாணிக மையத்தை எதியோப்பியாவின் பிரதான துறைமுகமான அடூலில் அமைத்தனர்; ''கான்ஸ்டன்டைன் ஆட்சியில் பொருளாதார வளம் கொழித்தபோதிலும் ரோமானிய வாணிக நடவடிக்கைகள் ஒருபோதும் அடூலுக்கு அப்பால் விரிவடைந்ததில்லை'' என்று அவர் மேலும் குறிப்பிடுகிறார்.

ஆனால் தொல்பொருள் ஆராய்ச்சிக் கண்டுபிடிப்புகளும் வரலாற்றுக் குறிப்புகளும் இதற்கு முற்றிலும் நேர்மாறான முடிவைப்

1. ஜே.ஆர்.ஏ.எஸ். தொகுதி XIX ல் எடுத்தாளப்பட்டுள்ள மேற்கோள், பக்கம் 307

புலப்படுத்துகின்றன. திரு.வின்சென்ட் ஸ்மித் பின்வருமாறு கூறு கிறார்: 'வாணிபத்தில் ஈடுபட்டிருந்த ரோமானிய குடிமக்களில் பலர் நமது சகாப்தத்தின் முதல் இரண்டு நூற்றாண்டுகளின்போது தென் னிந்தியாவில் அநேக குடியேற்றங்களை அமைத்து அங்கு வசித்து வந்தனர் என்று கருதுவதற்குப் போதிய சான்றுகள் உள்ளன. அது மட்டுமல்ல, ஆற்றல் மிக்க யவனர்கள் என்று வருணிக்கப்பட்ட ஐரோப்பியப் படைவீரர்களும், சொல்வது எதையும் வாய் பேசாது செய்து முடிக்கும் மிலேச்சர்களும் உடல் முழுவதும் கவசம் பூண்டு தமிழ் மன்னர்களுக்கு மெய்க்காவலர்களாகச் செயல்பட்டனர்; ரோமானிய தங்கத்தைத் தந்து மிளகு ஏற்றிச் செல்லும் யவனர் களின் கப்பல்கள் முஸிரிசில்(கிரேங்கனூர்) நங்கூரமிட்டு நிற் கின்றன.''[1] ரோமானிய வாணிகக் குடியேற்றங்கள் தென்தமிழ் நாட்டில் ஆங்காங்கு தோன்றியதோடு, ''பாண்டிய மன்னர்கள் மற்றும் ஏனைய தமிழ் மன்னர்களின் படைகளிலும் ரோமானியப் படைவீரர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.''[2] பாண்டியன் ஆரியப் படை - கதரேத்த- நெடுஞ்செழியன் ஆட்சிக் காலத்தில் மதுரைக் கோட்டையக் காவல் காக்கும் பணியில் ரோமானியப் படை வீரர்கள் ஈடுபடுத்தப்பட்டனர்''.[3] இந்தியாவுக்கும் ரோமாபுரிக்கும் இடையே மிக நெருங்கிய வாணிக உறவுகள் இருந்து வந்ததை நாணயங்கள் சம்பந்தப்பட்ட சான்றுகளும் உறுதி செய்கின்றன.

(கையெழுத்துப் பிரதியில் அரைப் பக்கம் வெறுமையாக விடப்பட்டிருக்கிறது - ஆசிரியர்)

ரோமாபுரிக்கும் இந்தியாவுக்கும் இடையே இந்த மிக நெருங் கிய வாணிக உறவு வளர்வதற்கு ஒரு முக்கிய பின்னணி, பின்புலம் இருந்தது. மார்க் ஆன்டனி காலத்திலிருந்து ஜஸ்டினியானி காலம் வரை அதாவது கி.மு.30 முதல் கி.பி.550 வரை பார்த்தியர்களுக்கும் சசேனியர்களுக்கும் எதிரான நேசநாடுகள் என்றமுறையில் ரோமா புரியும் இந்தியாவும் பெற்றிருந்த அரசியல் முக்கியத்துவமும், அதேபோன்று, கிழக்குக்கும் மேற்குக்கும் இடையேயான பிரதான வாணிக மார்க்கங்களில் ஒன்றை தங்கள் கட்டுப்பாட்டில் வைத்

1. இந்தியாவின் ஆரம்ப கால வரலாறு, பக்கங்கள் 400-1
2. முகர்ஜியின் ''இந்தியக் கப்பல்கள்'' என்னும் நூலில் காணப்படும் மேற்கோள், பக்கம் 128
3. மேற்படி நூலில் மேற்கோள், பக்கம் 128.

திருந்த வகையில் இவை பெற்றிருந்த வாணிக முக்கியத்துவமும் அச்சமயம் சிந்துநதி தீரத்திலும் பாக்டீரியாவிலும் ஆட்சி புரிந்த குஷானர்கள் அல்லது சாகர்களின் நட்பை ரோமாபுரிக்கு மிகத் தலையாய முக்கியத்துவம் வாய்ந்ததாகப் பரிணமிக்கச் செய்து விட்டன.''[1]

அயல்நாடுகளுடன் இந்தியாவுக்குள்ள வாணிக உறவுகளைப் பற்றிய ஒரு சுருக்கமான படப்பிடிப்பினை இதுவரை தந்தோம். அடுத்து, வாணிகப் பொருள்களையும், வாணிக மார்க்கங்களை யும், இந்தியாவின் துறைமுகங்களையும் பற்றிப் பார்ப்போம்.

பெரிப்ளுஸ், தாலமியின் நில இயல், கிறிஸ்டைனின் இட விளக்கவியல் ஆகிய நூல்களே இந்திய வாணிபப் பண்டங்களை யும், இந்தியத் துறைமுகங்களையும் பற்றிய தகவல்களைப் பிரதான மாக நமக்குத் தருகின்றன.

இந்தியாவிலிருந்து பின்கண்ட பொருள்கள் ஏற்றுமதி செய்யப் பட்டதாக பெரிப்ளுஸ் கூறுகிறது:

1. டாமாஞ்சிப்பூண்டு, 2. குருந்தம், 3. எல்லா வகையான பருத்தித் துணி 4. மரப்பிசின் 5. தந்தம், 6. குகேட் 7. லைசிராம் 8. பட்டுத்துணி 9. மெல்லிழைத்துகில் 10. நூல் 11. மிளகு 12. வைரங்கள் 13. நீலமணி, 14. ஆமை ஓடு 15. படிகக்கற்கள் 16. முத்து 17. மாலபாத்ரம் 18. சாம்பிராணி 19. நீலச்சாயம். இறக்குமதி செய்யப்படும் பொருள்களில் பின்வருபவற்றை முக்கியமாகக் குறிப்பிடுகிறது:

1. மது 2. தாமிரம் 3. வெள்ளீயம் 4. ஈயம் 5. பவழம் 6. மெல்லியத் துணியும், பலவகையான முரட்டுத் துணி களும் 7. மணப்புல் 8. கண்ணாடி வகைகள் 9. அஞ்சனக்கல் 10. ஏற்றுமதி இறக்குமதியிடையே சாதகமான வேறுபாட்டு மிகையின் மூலம் கிட்டும் வெள்ளி மற்றும் தங்க நாண யங்கள்.

1. முகர்ஜியின் ''இந்தியக் கப்பல்கள்'' என்னும் நூலில் காணப்படும் மேற்கோள், பக்கம் 139.

பெரிப்ளுஸ் அல்லது இந்துமா கடல் வழிகாட்டு நூல் இந்தியாவின் பின்கண்ட வாணிகத் துறைமுகங்களைக் குறிப்பிடுகிறது:

1. மேற்கு இந்தியாவின் பிரதான வாணிகக் கேந்திரமான பேரிகாஸா அல்லது இன்றைய புரோச். புரோச்சுடன் தொடர்புடைய பைத்தான், தகரா ஆகிய இரண்டு உள் நாட்டு நகரங்களையும் அது குறிப்பிடுகிறது.
2. சௌபாரா - பாசெய்னுக்கு அருகிலுள்ள இன்றைய சுபாரா.
3. கல்லியன் - தற்போதைய கல்யாண்.
4. செமுல்லா - அநேகமாக இது இப்போதைய செம்பூராக இருக்கக்கூடும்.
5. மந்தகோரா
6. பலாய்பதமி
7. மெலிஸெய்கரா.
8. திண்டிஸ் (தொண்டி)
9. முஸிரீஸ்(முசிறி)
10. நெல்கிண்டா

'தாலமியின் நில இயல் நூல்'' சிந்துநதி முகத்துவாரத்திலிருந்து கங்கைநதி முகத்துவாரம் வரையில் உள்ள கடற்கரை முழுவதையும் வருணிக்கிறது; வாணிக முக்கியத்துவம் வாய்ந்த பல நகரங்களையும் துறைமுகங்களையும் குறிப்பிடுகிறது. இவற்றில் மற்றவற்றுடன் குஜராத்திலுள்ள சிரஸ்ட்ரா(சூரத்), மனோகுளோஸ்ஸன் (மாங்க்ரோல்), அரியகே (மகாராஷ்டிரா), சௌபாரா, முஸிரீஸ் (முசிறி), பாகரெய், மைசோலி (மசூலிப்பட்டணம்), கௌனகாரா (கோனார்க்) மற்றும் இதர இடங்களும் அடங்கும்.''[1]

தமிழ்ப்புலவர்கள் அநேகம்பேர் தென்னிந்தியாவின் சில வாணிகத் துறைமுகங்களையும் நகரங்களையும் மிக அழகாக வருணித்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் பின்வருமாறு கூறுகிறார்: ''யவனர்களின் எழில்மிகு மாபெரும் நாவாய்கள் தங்கத்தை ஏற்றிக் கொண்டு, கேரளக் கடற்பரப்பில் பொங்கும் வெண்நுரை நாலாப் பக்கங்களிலும் தெறிக்க, வளம்கொழிக்கும் முசிறிக்கு வருகின்றன;

1. ஆர்.கே.முகர்ஜி, 'இந்தியக் கப்பல்கள்'', பக்கம் 134.

பிறகு, மிளகை ஏற்றிக் கொண்டு அங்கிருந்து திரும்புகின்றன.'' [1]மீன்கள் நெல்லுக்குப் பண்டமாற்று செய்யப்படுகின்றன; அவை கூடைகளில் வீடுகளுக்குக் கொண்டுவரப்படுகின்றன'' என்கிறார் மற்றொரு புலவர். 'பொங்கும் கடல் அலைகள் ஓயாது ஒழியாது கீதம் இசைக்கும் நகரம் முசிறி; அரிய கடற்செல்வங்களையும் மலைச் செல்வங்களையும் விருந்தினர்களுக்குக் குட்டுவன் (சேர மன்னன்) வாரிவாரி பரிசில் அளிக்கும் நகரம் முசிறி; அந்நகரில் மிளகு மூட்டை மூட்டையாக வீடுகளிலிருந்து சந்தைக்குக் கொண்டுவரப்படுகிறது; இவற்றை விற்று கிடைக்கும் தங்கம் கப்பல்களிலிருந்து படகுகள் மூலம் கரைக்குக் கொண்டுவரப்படுகிறது.''[1] காவிரிப்பட்டினம் (பெரிப்ளுஸ் நூலில் இது கமரா என்றும், தாலமியால் காபரிஸ் என்றும்இது குறிப்பிடப்பட்டிருக்கிறது) அல்லது புகார் பற்றிய வருணனையும் சிறப்பானதாகவும், மிகவும் சுவையானதாகவும் அமைந்துள்ளது. இந்த நகரம் காவிரி ஆற்றின் வடக்குக் கரையில் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. அச்சமயம் காவிரி ஆறு மிகவும் அகன்றும் ஆழமாகவும் இருந்தது. இதனால் ஏராளமாக சரக்குகளை ஏற்றிக் கொண்டு வரும் கப்பல்கள் பாய்களை இறக்காமலேயே கடலிலிருந்து ஆற்றுக்குள் பிரவேசிக்க முடிந்தது. நகரம் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது; இவற்றில் ஒன்று மருவூர்ப்பாக்கம் என்பது; இது கடற்கரையை ஒட்டி அமைந்திருந்தது. மருவூர்ப்பாக்கத்தில் உயரமான மேடைகளும், கிடங்குகளும், பண்டகசாலைகளும் காணப்பட்டன; கப்பல்களிலிருந்து இறக்கப்படும் உணவுப் பொருள்கள் இவற்றில் சேமித்து வைக்கப்பட்டன. இங்கு சுங்கவரி செலுத்தப்பட்ட பிறகு சரக்குகள் மீது புலிச்சின்னம் (சோழ மன்னர்களின் இலச்சினை) கொண்ட முத்திரை பதிக்கப்பட்டு, வணிகர்களின் பண்டக சாலைகளுக்கு அவை அனுப்பப்பட்டன. இவற்றுக்குப் பக்கத்தில் யவன(அந்நிய) வணிகர்களின் குடியேற்றங்கள் அமைந்திருந்தன; இங்கு விற்பனைக்கான பல பொருள்கள் எப்போதும் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. கடல் கடந்து வந்துள்ளவர்களுக்கும் பல்வேறு மொழிகளைப் பேசுபவர்களுமான வேற்றுநாட்டு வணிகர்களின் தலைமை அலுவலகமும் இங்குதான் அமைந்திருந்தது. நறுமணப் பசை, பொடி, மலர்கள், சாம்பிராணி விற்பனையாளர்கள், பட்டு, கம்பளி, பருத்தி முதலியவற்றைக்கொண்டு ஆடை அணிகள் தயாரிக்கும் தையற்காரர்கள், சந்தனக்கட்டை, அகில், பவழம், முத்து,

---

1. மேற்கண்ட நூலிலிருந்து மேற்கோள், பக்கம் 135

தங்கம், மணிக்கற்கள் முதலிய பொருள்களில் வாணிகம் செய்பவர்கள், தானிய வணிகர்கள், சலவையாளர்கள், மீன்தூண்டில் இரை தயாரிப்பவர்கள், கசாப்புக் கடைக்காரர்கள், கொல்லர்கள், கன்னார்கள், தச்சர்கள், ஓவியர்கள், சிற்பிகள், பொற்கொல்லர்கள், செம்மான்கள், பொம்மைகள் செய்பவர்கள் போன்ற இவர்கள் அனைவரும் மருவூர்ப்பாக்கத்தையே உறைவிடமாகக் கொண்டிருந்தனர்."[1]

இந்தியாவிலிருந்து மேலைநாடுகளுக்கான வாணிக மார்க்கங்களை இரண்டு தலைப்புகளில் பிரிக்கலாம். 1. தரைவழி மார்க்கங்கள் 2. கடல்வழி மார்க்கம்.

நாடு விட்டு நாடு புலம் பெயர்வது நாகரிக மனிதனின் வழக்கம் என்று கூறப்படுவதில் உண்மை இருக்கவே செய்கிறது. பண்டைக்கால மக்கள் கூடிவாழும் உள்ளுணர்வு காரணமாகவோ அல்லது தங்களுக்கு உரிய பாதுகாப்பு வேண்டும் என்பதற்காகவோ எப்போதுமே கூட்டம் கூட்டமாகவே இடம்பெயர்ந்து சென்றனர். அவர்களது இந்த வழக்கம் அவர்களது வாணிக முறைகளில் நன்கு பிரதிபலிப்பதைக் காணலாம். ஊர்உலகமெல்லாம் சுற்றித் திரிந்து பண்டங்களை விற்பனை செய்ய வேண்டிய நிர்ப்பந்தமும், கடும் போட்டி பற்றிய அச்சமும் இருந்த போதிலும் இவையெல்லாம் வாணிக வளர்ச்சிக்கு ஒரு தடையாக இருந்ததில்லை. பிராணிகளின் முதுகுகளில் சரக்குகளை ஏற்றிக்கொண்டு, காடுகளையும் மேடு பள்ளங்களையும் அதிலும் முக்கியமாக அனல் தகிக்கும் பாலை வனங்களையும் கடந்து செல்லும் வணிகர் கூட்டத்தையே காரவான் என்கிறோம். இந்தக் காரவான் சொல்ல நாக்கூசும் மிகவும் மோசமான நிலைமைகளில் இடம்விட்டு இடம்பெயர்ந்து செல்லும் போது அது அனுபவிக்கும் துன்பதுயரங்கள், எதிர்ப்படும் இன்னல் இடுக்கண்கள், அனுபவிக்க வேண்டியிருக்கும் சோதனைகள் வேதனைகள் கொஞ்சநஞ்சமல்ல, வாணிபத்தில் ஆழ்ந்த ஆர்வமும் பற்றுதலும் கொண்ட, ஆனால் சொகுசு வாழ்க்கைக்குப் பழகிப்போன இன்றைய மனிதன் ஆதாயத்தைவிட இடையூறுகளும் இடர்ப்பாடுகளுமே மிகுந்துள்ள இந்தக் காரவான் பயணத்தை மேற்கொள்வதைவிட காசு தெய்வத்துக்கு ஒரு கும்பிடு போட்டு விட்டு விடை பெற்றுக் கொண்டு விடுவான். இத்தகைய துயரமிக்க இந்தக் காரவான் பயணம் பற்றி திரு.ஹார்பர் பின்வருமாறு கூறுகிறார்: 'காரவான்

1. முகர்ஜி, ஆர்.கே. 'இந்தியக் கப்பல்கள்'' பக்கம் 135-136.

பாதையை யாரும் தம் விருப்பம்போல் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது; காலம் காலமாக வழக்கிலுள்ள பாதையைத்தான் அவர்கள் பின்பற்ற வேண்டும். கண்ணுக்கெட்டிய தூரம் வரை எங்கெங்கும் விரிந்துபரந்த மணற்பரப்பாகக் காட்சியளிக்கும் பாலைவனங்களைக் கடந்து செல்ல வேண்டிய அவர்கள் சற்றுத் தங்கி இளைப்பாறுவதற்கு அங்குமிங்குமாக சில ஓய்விடங்களை இயற்கை கருணை கூர்ந்து அருளியுள்ளது. இங்கு பனைமரங்களின் நிழலில் வணிகர்கள் தங்களுடைய சுமை தூக்கும் பிராணிகளுடன் சேர்ந்து இளைப்பாறுவார்கள்; அவர்களுடைய காலடியில் தண்ணீர் நீரூற்றுகள் சல சலக்க, உணவுண்டு புதுத்தெம்பும் புத்தூக்கமும் பெறுவார்கள்; இது வரை தாங்கள் பட்ட கஷ்டங்களை எல்லாம் கணநேரம் மறந்து களித்திருப்பார்கள். இத்தகைய ஓய்விடங்கள் நாளடைவில் வணிக மையங்களாகவும் மாறின; இதனையடுத்து அங்கு கோவில் குளங்களும் புனிதத்தலங்களும் உருவாயின; யாத்ரிகர்கள் இங்கு அடிக்கடி வரத்தொடங்கினர். இத்தகைய பின்னணியில் வணிகர்கள் தங்கள் தொழிலைத் தொடர்ந்தனர்.''[1] இப்படிப்பட்ட சூழலில் காரவான் மார்க்கம் ஒருபோதும் நேராக இருந்ததில்லை; அது எப்போதும் வளைந்து வளைந்து செல்வதாகவே அமைந்திருந்தது. பண்டைக் கால வாணிக மார்க்கங்களைச் சித்திரிக்கும் நிலப்படத்தைப் பார்த்தோமானால் ஏராளமான சிறுசிறு சாலைகள் பல்வேறு இடங்களில் ஒன்றையொன்று சந்திப்பதையும், கடந்து செல்லுவதையும் காணலாம். எனினும் இவற்றினூடே, இந்தியாவிலிருந்து மத்திய தரைக்கடல் பகுதிக்குச் செல்லும் இரண்டு பிரதான வாணிக மார்க்கங்களை நாம் அடையாளம் காணமுடியும். இவற்றில் வடகோடி மார்க்கம் ஆக்ஸஸ் நதியை ஒட்டிச்சென்று காஸ்பியன் கடலின் வடக்கு வடிநிலத்தைச் சுற்றிக் கொண்டு கருங்கடலை அடைந்து, அங்கிருந்து கான்ஸ்டான்டிநோபிளுக்குச் சென்றது; மத்திய மார்க்கம் இன்னும் சரியாகச் சொல்லப்போனால், நேர் பாதையில் சென்று, பல பிரிவுகளாகப் பிரிந்து வாணிகக் களத்தில் ஒன்று சேருகிறது. அது காஸ்பியன் கடலின் வடக்குவடிநிலத்தில் தொடங்கி தெப்ரிஸ், எர்ஸேவிம் திரபிஜோண்ட், கருங்கடல் வழியாக கான்ஸ்டான்டினோபிளைச் சென்றடைகிறது. இவைதாம் இந்தியாவுக்கும் மேலைய நாடுகளுக்கும் இடையே இருந்த இரண்டு பிரதான தரைமார்க்கங்களாகும்.

1. கல்கத்தா ரெவ்யூவில் மேற்கோள், தொகுதி 19, பக்கம் 345.

இவை தவிர இரண்டு கடல் மார்க்கங்களும் இருந்தன; இவற்றில் ஒன்று பாதிவரைதான் கடல்மார்க்கம். இந்த இரண்டு மார்க்கங்களில் ஒன்று செங்கடல் மார்க்கம். இந்தியத் துறைமுகங்களிலிருந்து புறப்படும் கப்பல்கள் இந்துமாகடலைக் கடந்து தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றன அல்லது மேலும் பயணித்து தெற்கு அராபியாவிலுள்ள துறைமுகங்களையும் ஏடனையும் சென்றடைந்தன; பின்னர் **செயின்ட் ஆப் பாபல் - மண்டேப்** (கண்ணீர் வாயில்) வழியாக செங்கடல் நீரைக் கிழித்துக் கொண்டு அராபியக் கடற்கரையில் ஜெட்டாவையும், எகிப்தியக் கடற்கரையில் பெர்னிஸையும் சென்றடைந்தன. பெர்னிசிலிருந்து சரக்குகள் காரவான் மூலம் தீப்சுக்கும் கோசுக்கும் அனுப்பப்பட்டன; அங்கிருந்து அவை நைல் நதிவழியாக அலெக்சாந்திரியாவுக்கும் பின்னர் ஐரோப்பாவுக்கும் கொண்டு செல்லப்பட்டன. மற்றொரு கடல்மார்க்கம் பெர்சிய வளைகுடா வழியாக அமைந்திருந்தது. கப்பல்கள் புரோச்சிலிருந்து புறப்பட்டு கரையை ஒட்டியே சென்று மஸ்கட்டையும் ஓர்முஸையும் அடைந்தன; பின்னர் அங்கிருந்து ஓமன் வளைகுடா வழியாக பஸோராவைச் சென்றடைந்தன. பெர்சிய வளைகுடாவிலுள்ள பஸோராவிலிருந்து சரக்குகள் காரவான் மூலம் யூப்ரட்டஸ், டைக்ரஸ் கரைகளை ஒட்டி பாபிலோனியா வழியாக மத்தியதரைக்கடலில் உள்ள அன்டியோச்சுக்குக் கொண்டு செல்லப்பட்டன.

இந்த இரு கடல்வழி வாணிக மார்க்கங்களும் தற்காலம் வரை தொடர்ந்தன; ஆனால் தரைவழி வாணிக மார்க்கங்களின் கதை முற்றிலும் வேறுவிதமாக அமைந்து விட்டது. அவை மூடப்பட்டு விட்டன. அதுவும் என்றென்றைக்குமாக மூடப்பட்டு விட்டன. இவ்வாறு இந்த மார்க்கங்கள் மூடப்பட்ட வரலாறுதான் ஐரோப்பிய வரலாற்றைப் பெரிதும் பாதிக்கும் அளவுக்கு ஆசியக் கண்டத்தில் நடைபெற்ற ஒரே நிகழ்ச்சி எனக்கூடக் கூறலாம்.

## இயல் II

# வரலாற்றின் இடைநிலைக் காலத்தில் இந்தியாவின் வாணிக உறவுகள்

## அல்லது

# இஸ்லாமின் தோற்றமும் மேற்கு ஐரோப்பாவின் விரிவாக்கமும்

இஸ்லாம் உதயமான அதேசமயம் ரோமாபுரியில் மகா கிரகரீயின் தலைமையில் போப்பாண்டவரின் அதிகாரம் பெரிதும் வலுவடைந்ததைப் பார்க்கிறோம். அது இறைமையியல் தத்துவங்களின் சகாப்தமாக விளங்கிற்று; அப்போது கிழக்கு மீண்டும் ஒரு சமய அலையை எங்கெங்கும் பரப்பிக் கொண்டிருந்தது; ஏறத்தாழ ஐரோப்பா முழுவதையுமே முகமதியமயமாக்குவதில் அநேகமாக வெற்றி பெற்று விட்டது என்றே கூறலாம்.

முகமது பிறப்பதற்கு நீண்ட காலத்துக்கு முன்னர் அராபியாவில் பல்வேறு இனமக்கள் வாழ்ந்து வந்தனர்; கிழக்குக்கும் மேற்குக்குமான வாணிகத்தில் இடைத்தரகர்கள் என்றமுறையில் அவர்கள் மிகுந்த செல்வச்செழிப்புப் பெற்றிருந்தனர். அராபியர்களின் இந்த ஆரம்பகால வளமைக்கு பெத்ராவிலிருந்து டமாஸ்கஸ் வரையிலுள்ள பல எழில்மிகு நகரங்களின் அழிபாடுகள், இடிபாடுகள் சான்றுபகர்கின்றன; ஆனால் ரோமானியர்கள் இந்தியாவுடன் நேரடியாக வாணிகம் செய்யத் தொடங்கியதும் அராபியர்களுக்கு வற்றாது வரையாது செல்வத்தை அள்ளி வாரிக் கொடுத்த இந்தத் தலையூற்று வற்றி வரண்டு போயிற்று என்று ஸ்டிராபோ கூறுகிறார். இந்திய மற்றும் அராபியப் பண்டங்கள் செங்கடலின் மேற்குக் கரையிலுள்ள மியோஸ் ஹார்மோசுக்குக் கொண்டு செல்லப்பட்டன; அங்கிருந்து ஒட்டகங்கள் மூலம் தீப்சுக்கும் பின்னர் நைல் நதி வழியாக அலெக்சாந்திரியாவுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. இதன் விளைவாக ''பாலைவனத்தின் மெய்யான மைந்தர்கள்'' என்ற பெருமையை அராபியர்கள் இழந்தனர்.

பொருளாதார ரீதியில் பார்த்தால் அராபியா போன்ற மிகவும் ஏழை நாடு வேறு எதுவும் இல்லை எனலாம். ஆனால் வாணிகம்

அவர்களுக்குப் பெரிதும் கைகொடுத்து உதவிற்று. கிப்பன் இதை உறுதிப்படுத்துகிறார். உழுது பயிரிடத்தக்க நிலமோ அதற்குத் தேவை யான தண்ணீரோ அராபியாவில் இல்லை. இதனால் அராபியர்கள் ஓரிடத்தில் குடியமர்ந்த மக்களாக இருக்க முடியவில்லை. எனவே ஆரம்ப காலத்தில் அவர்கள் நாடோடி இனமக்களாகவே இருந்து வந்தனர்; சமயத்திலும் சரி, அரசியலிலும் சரி அவர்களிடம் ஒற்றுமை இல்லை. இவ்விதம் அவர்களிடம் ஒற்றுமை இல்லாத காரணத்தால் பல சந்தர்ப்பங்களில் அந்நியப் படையெடுப்பாளர்களின் அடக்கு முறைக்கும் ஒடுக்குமுறைக்கும் ஆளாயினர். அபிசீனியர்கள், பெர்சி யர்கள், எகிப்திய மற்றும் துருக்கி சுல்தான்கள் போன்றோர் ஒருவர் பின் ஒருவராக ஏமன் அரசை வென்று தங்களுக்கு அடிபணிய வைத்தனர்; பல சிறிய கொடுங்கோலர்கள் வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்ற அகம்பாவத்தோடு நடந்துகொண்டனர்; மெக்கா, மதீனா போன்ற புண்ணிய தலங்கள், திருத்தலங்கள் தங்கள் ஆதிக் கத்தில் இருக்க வேண்டுமென்று அடாவடித்தனம் செய்தனர். ஒரு சந்தர்ப்பத்தில் அராபியாவின் ஒருபகுதி ரோமானிய பேரரசின் ஒரு மாகாணமாகக் கூட இருந்தது. எனினும் எவராலும் அராபியர்களை நிரந்தரமாக அடிமைப்படுத்த முடியவில்லை. மாறாக, செசோஸ் டிரிஸ், சைரஸ், பாம்பி, ட்ரோஜன் முதலான மகாவல்லமை மிக்க முடியாட்சிகளின் மேலாதிக்க நுகத்தடியையே அவர்கள் துச்சமாகத் தூக்கியெறிந்ததாக வரலாறு கூறுகிறது. அவர்களிடம் இவ்விதம் ஆழ வேரோடியிருந்த சுதந்திர உணர்வுக்கு அவர்களது உறைவிடத்தின் நில இயலை ஒரு முக்கிய காரணமாகக் கூறலாம்.

அராபியர்களின் புறச்சமயச்சார்பு கலைநயமற்ற, செப்பமற்ற, பகட்டாரவாரமான சடங்குமுறைகளைக் கொண்டது; விரிவான இலக்கியத்துக்கோ அல்லது உயர்ந்த தத்துவார்த்த சிந்தனைக்கோ அதில் இடமில்லை. ''அராபியர்களின் சமயமும் சரி, இந்தியர்களின் சமயமும் சரி சூரியன், சந்திரன் மற்றும் நிலைபெயரா விண்மீண் களை வழிபடுதலில்தான் அடங்கியிருந்தது.''[1] ''ஒவ்வொரு இன மரபுக்குழுவாலும், ஒவ்வொரு குடும்பத்தாலும், ஒவ்வொரு சுதந்திரப் படைவீரனாலும் சமயவினைமுறைகளும், அவர்கள் மனம் போன போக்கில் வழிபடும் பொருளும் அவ்வப்போது தோற்றுவிக்கப் படுவதும் மாற்றப்படுவதுமாக இருந்தன; ஆனால் தேசம் ஒவ்வொரு தலைமுறையிலும், ஒவ்வொரு காலகட்டத்திலும் சமயநெறிக்கு, மெக்காவின் போதனைக்கு தலைவணங்கியே வந்திருக்கிறது.''[2] புற

---

1. கிப்பன், ரோமப் பேரரசின் நலிவும் வீழ்ச்சியும், தொகுதி V, பக்கம் 327.
2. மேற்படி நூல், தொகுதி V, பக்கம் 327-28.

சமயியை புதிய சமயத்துக்கு மாற்றுவது ஒருபோதும் கடினமான பணியாக இருந்ததில்லை; ஏனெனில் புறச் சமயிகள் விசித்திரமான வர்களாக இருந்தபோதிலும் மிகுந்த சகிப்புத்தன்மை கொண்டவர் களாக இருந்தனர். வடக்கிலும் தெற்கே நஜ்ரனிலும் வாழ்ந்துவந்த கிறித்தவ சமூகத்தினருடனும், வடகிழக்கில் குடியேறியிருந்த யூத இனத்தவருடனும், அதேபோன்று பெர்சிய வளைகுடாவை ஒட்டி குடியமர்ந்திருந்த பார்சி சமூகத்தினருடனும் அவர்கள் நேச உறவு களை வளர்த்து அன்னியோன்னியமாக வாழ்ந்துவந்தனர். இந்த அணிமையின், நட்புறவின் விளைவாக பரஸ்பரம் கருத்துகளும் எண்ணங்களும் பரிமாறிக் கொள்ளப்பட்டன; முகமது பிறப்பதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே அராபியர்களிடையே ஓர் ஆன்மிக மாற்றம் ஏற்படுவதற்கு இது வழிவகுத்தது; ஹனீபுகளது போன்ற ஒரே கடவுள் என்ற கோட்பாடு அவர்கள் மனத்தில் தளிர்த்துக் கிளைத்தது.

ஹனீப் இயக்கம் ஒருபுறம் நடைபெற்றுக் கொண்டிருந்த வேளையில் முகமது என்ற அராபிய ஒட்டக ஓட்டுநர் அராபியா வில் தோன்றினார்; அச்சமயம் அராபியர்கள் தம்மிடையே ஓயாது ஒழியாது சண்டையிட்டுக் கொண்டு தங்களைத் தாங்களே இழிவு படுத்திக் கொண்டிருந்தனர்; காபாவில் உள்ள எண்ணற்ற விக்கிர கங்களுக்கு நரபலியிட்டுக் கொண்டிருந்தனர். உள்ளம் கொதிக்கும் இந்த அவலநிலை கண்டு முகமது மனம் குமுறினார்; அதலபாதா ளத்திலிருந்து இம்மக்களைக் கைதூக்கி விட அவர் எண்ணம் கொண்டார். மிகக் குறைந்த முன்னேற்பாடுகளுடன் இதுவரை எவருமே தீர்க்கதரிசி என்று உரிமை கொண்டாடியதில்லை. ஆனால் முகமது இதில் அசாத்திய துணிச்சல் காட்டினார்; இஸ்லாம் என்ற ஒரு புதிய சமயத்தை அவர் தமது மக்களுக்கும் தேசத்துக்கும் போதித்தார்; நிலைபேறுடைய உண்மையும் ஓரளவு கற்பனையும் கலந்ததாக அது இருந்தது. **''ஒரே ஒரு கடவுள்தான் இருக்கிறார், முகமதுதான் அந்தக்கடவுளின் திருத்தூதர்''**[1] முகமது பிறந்த சந்தர்ப்ப சூழ்நிலை கள் அவர் தம்மை தேவதூதராகப் பிரகடனம் செய்து கொள்வதற்கு சாதகமானவையாக இருந்தன. அராபியாவில் பல்வேறு இனமக்கள் வாழ்ந்துவந்தார்கள் என்பதும், அவர்கள் அனைவரும் சமத்துவ அடிப் படையில் சுதந்திரமானவர்களாக இருந்தார்கள் என்பதும் இங்கு நினைவுகூரத்தக்கது. இந்தப் பல்வேறு இனத்தவர்களும் சரியாகவோ, தப்பாகவோ கொரேஷ் இனத்தாரை மதித்துப் போற்றுவதில் ஒன்று பட்டிருந்தனர்; காபாகோவிலை அவர்கள் பொறுப்பில் விட்டனர்; இதனால் இந்தக் கோவில் சம்பந்தப்பட்ட சமயத் திருப்பணிகளைச்

1. மேற்படி நூல், தொகுதி V, பக்கம் 337.

செய்யும் கடமை ஹாசமைட்டுகளுக்கு அதிலும் குறிப்பாக முகமதின் பாட்டனாருக்கு ஏற்பட்டது. அரபுக்களிடையே தமக்கு ஏற்பட்டிருந்த மேம்பட்ட நிலையை நன்கு பயன்படுத்திக்கொண்டு முகமது ஒரு கடவுட் கோட்பாட்டைப் போதிக்கத் தொடங்கினார். முகமதின் போதனையில் புதுமையானது எதுவும் இல்லை. அவரது குரான் யூதர் வினைமுறைக் கோட்பாடுகளுக்கும் கிறித்தவ சமயத்துக்கும் இடைப்பட்ட ஒன்றாக இருந்தது. அவரது போதனைகளின் தகைமை எத்தகையதாக இருப்பினும் அராபியர்கள் அவற்றை மிகக் கடுமையாக எதிர்த்தனர்; அவற்றின்பால் மிகுந்த பகைமை உணர்வைக் காட்டினர். இதனால் மக்களின் மதிப்பில் ஹாசமைட்டுகள் பெரிதும் தாழ்ந்த நிலைக்குத் தள்ளப்பட்டனர். இன்று இந்துக்கள் சமயப் பரப்புப்பணியில் எவ்விதம் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்களோ, அதேபோன்று முகமதுவின் சமயப் பிரசாரம் மிகவும் விறுவிறுப்பும் வேகமுமடைந்து, பெரிதும் சூடுபிடித்தபோது அதற்கேற்ப அராபியர்களின் எதிர்ப்பும், பிடிவாதமும், முரட்டுத்தனமும் வெகுவாக அதிகரித்தன. அராபியர்கள் பொறுமை இழந்து, முகமதுவை வெளியேற்றும்படி ஹாசமைட்டுகளை நிர்ப்பந்தித்தனர்; அவரை கொலை செய்துவிடுவதாகவும் கூட மிரட்டினர். இந்நிலைமையில் மெதினாவின் பக்கம் முகமதுவின் கவனம் திரும்பிற்று; ஆனால் அங்கு அவருக்குப் புகலிடம் கிடைக்குமா என்பது நிச்சயமில்லாது இருந்தது. இதனால் மெக்காவில் தமக்குக் கிடைத்த ஒரு சில சீடர்கள் மூலம் மெதினாவாசிகளுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினார். அவர்களது அன்பும் ஆதரவும், பரிவும் பாசமும் கிட்டுமென்று உறுதி செய்து கொண்ட பிறகு மெதினாவில் போய்த்தங்கினார்; இதன்மூலம், தாம் போற்றிப்பேணும் இளம் சமயத்தை பேரழிவிலிருந்து காப்பாற்றினார்; மெக்காவிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட இந்தத் தூயவரை மெதினா மட்டும் அன்பாதரவோடு அரவணைத்திருக்க வில்லை என்றால் ''அவரது சமயம் தொட்டிலிலேயே மாண்டு மடிந்திருக்கும்.''[1] முகமது மெதினாவில் தங்கியிருந்ததானது அவருக்கு அளப்பரும் அனுகூலத்தைத் தந்தது. அங்கு அவரது சமயப் பணியுடன் அரசு, நீதி, நிர்வாகப் பணிகளும் பின்னிப் பிணைந்திந்தன. இன்னும் சொல்லப் போனால் அவர் சமயப் பரப்பு முடிமன்னராகவே திகழ்ந்தார் எனலாம்; பீரங்கியைப் பக்கபலமாகக் கொண்டு மத போதனை செய்யும் அளவுக்கு அவர் வலிமை பெற்றார். ''சுதந்திர ஆர்வம் கொண்ட மக்களுடன் ஏற்பட்ட பந்தம், பிணைப்பு மெக்காவிலிருந்து தப்பிவந்து அடைக்கலம் புகுந்த அவரை முடிமன்னர் அந்தஸ்துக்கு உயர்த்திற்று; அதுமட்டுமல்ல, கூட்டணிகளை

1. கிப்பன், "ரோம் பேரரசின் நலிவும் வீழ்ச்சியும்", தொகுதி , பக்கம் 356.

அமைத்துக் கொள்வதற்கும், வலிந்துதாக்கும் போர்களையும் தற்காப்புப் போர்களையும் நடத்துவதற்கும் அவருக்கு மேதகவுரிமை வழங்கப்பட்டது. மனித உரிமைகள் சம்பந்தப்பட்ட குறைபாடுகள் நிவர்த்திக்கப்பட்டன. தெய்வீக ஆற்றல் கொண்டு அந்த உரிமைகள் முழுநிறைவடையச் செய்யப்பட்டன. மெதினாவின் தீர்க்கதரிசி தமது புதிய அருள்வெளிப்பாடுகளை மிக உக்கிரமான தொனியில், பெரிதும் தன்னம்பிக்கையூட்டும் தொனியில் போதித்தார்; அவரது முந்தைய நிதானப்போக்கு பலவீனத்தின் விளைவு என்பதை இது மெய்ப்பிப்பதாக இருந்தது. உண்மையை பவ்வியமாக எடுத்துக் கூறி இணங்க வைக்கும் உபாயங்கள் ஆரம்பத்தில் கைக்கொள்ளப் பட்டன. ஆனால் அவற்றால் உரிய பலன் கிட்டவில்லை. பொறுமை காட்டும் காலம் மலையேறிப் போயிற்று. எனவே, தமது சம யத்தை வாள்முனையில் பரப்பவும், உருவவழிபாட்டுச் சின்னங் களை உடைத்து நொறுக்கியெறியவும், தெய்வ அருள் வெளிப்பாட் டில் நம்பிக்கையில்லாத தேசங்களை நாள் நட்சத்திரம் பாவ புண்ணியம் பார்க்காமல் வேட்டையாடவும் இப்போது அவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.[1] இவ்வாறு மெதினாவில் தம்மை நிலை நிறுத்திக் கொண்ட முகமது தமது சமயக் கோட்பாட்டையும், ஆட்சிப் பகுதியையும் விஸ்தரிக்கத் தொடங்கினார்; முதலில் மெக்கா வின் கொரேய்சுகளை அடிபணியவைத்தார். அராபியர்கள் வணிகர் களாவும் கொள்ளைக்காரர்களாகவும் இருந்தனர்; அதாவது ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களாக இருந்தனர். மெதினாவில் இருந்த முகமதின் சீடர் மெதினா வழியாக நடைபெற்றுவந்த கொரேய்சு களின் வாணிகத்துக்குப் பல வழிகளிலும் தொல்லை கொடுத்தார்; இடையூறுகள் செய்தார். இதனால் சினங்கொண்ட கொரேய்சுகள் மெதினாவுக்கு எதிராகப் போட்டிபூசல்களிலும் சச்சரவுகளிலும் ஈடு படலாயினர். முகமது சிறிதுகாலம் பொறுமை காத்தார்; தற்காப்பு நிலையையே மேற்கொண்டார். ஆனால் விரைவிலேயே அவர்கள் மீது கடும் தாக்குதல் தொடுத்து, தாம் பிறந்த நகரை அடிப்படுத்தி னார். இவ்வாறு அவர் தமது படைபலத்தையும் வள ஆதாரங்களையும் பெருக்கினார்.[1] 'நட்புறவு, அல்லது சரணாகதி அல்லது போர் ஆகிய இவற்றில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் வாய்ப்பு முகமதின் பகைவர்களுக்கு அளிக்கப்பட்டது. அவர்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவியதால், அவருடைய ஆரம்பகால சீடர்கள் பெற்ற எல்லா உலகியல் மற்றும் ஆன்மீக அனுகூலங்கள் இவர்களுக்கும் வழங்கப்பட்டன.''[2] தாம் வரித்துக் கொண்ட சமயத்தை எங்கெங் கும் பரப்புவதற்கு அவர்கள் அதே பதாகையின்கீழ் அணிவகுத்துச்

1. மேற்படி நூல், தொகுதி V, பக்கம் 359.
2. மேற்படி நூல், தொகுதி V, பக்கம் 493.

சென்றனர். இவ்விதம், தம்மைப் பின்பற்றுவோர் நாடு பிடிக்கும் பணியில் ஈடுபடுவதற்கான எல்லா வாய்ப்பு வசதிகளையும் செய்து தந்த பிறகு முகமது தமது சமயப் பரப்புப் பணியைத் தமக்குப் பின் வந்தவர்களிடம் அதாவது காலிப்புகளிடம் ஒப்படைத்துவிட்டார். ''அலியின் நேர்நிகரற்ற வீரமும் துணிவும், மோவியாவின் முழு நிறைவான செயல் திறமும், மக்களுக்கு முன்மாதிரியாக இருந்து அவர்களைத் தூண்டி ஊக்குவித்தன; உள்நாட்டுப் பூசல்கள், பிணக்கு கள் சம்பந்தமாகப் பயன்படுத்தப்பட்ட தனித் திறமை இப்போது இஸ்லாம் கோட்பாடுகளைப் பரப்புவதிலும், நபிகள் நாயகத்தின் ஆட்சிப்பரப்பை விஸ்தரிப்பதிலும் பெரிதும் ஈடுபடுத்தப்பட்டது. ஆனால் பிற்காலத்தில் டமாஸ்கஸ் அரண்மனையில் மடிமையும் படாடோபமும் வெற்றாரவாரமும்தான் கோலோச்சின; இத்தகைய சூழ்நிலைமையில் ஒம்மியா வம்ச வழியில் வந்த மன்னர்கள் அனைவருமே சிறந்த ராஜதந்திரிகளாக இருப்பதற்கோ, அருட்தொண்டர்களாக இருப்பதற்கோ அருகதையற்றவர்களாக இருந்தனர். எனினும் எத்தனை எத்தனயோ நாடுகளின் செல்வங்கள் அவர்களது பாதார விந்தங்களில் கொண்டு வந்து குவிக்கப்பட்டன. அராபியாவின் நிலையான பெருமைக்கு, மேன்மைக்கு அதன் தலைவர்களது திறமையைவிட தேசத்தின் ஒட்டுமொத்த வீரியமே, ஆர்வ எழுச்சியே, மன உரமே காரணம் என்று கூறவேண்டும். அவர்களது பகைவர்களுடைய பலவீனத்துக்கும் இதில் ஒரு முக்கிய பங்குண்டு. பெர்சியர்களும், ரோமானியர்களும், ஐரோப்பாவின் காட்டுமிராண்டிகளும் பெரிதும் சீர்குலைந்திருந்த, குழப்பத்தில் ஆழ்ந்திருந்த சூழ்நிலையில் முகமது பிறந்தார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ட்ரோஜன் பேரரசோ அல்லது கான்ஸ்டான்டின் அல்லது சார்ல்மாக்னே பேரரசோ நினைத் திருந்தால் சாரசன்களின் தாக்குதலை முறியடித் திருக்க முடியும், சாரசன்களின் வெறியாட்டம் அராபிய மணலில் அடையாளம் தெரியாதபடி புதைந்து போயிருக்கும்'' ஆனால் அந்தப் பேரரசுகள் இதைச் செய்யவில்லை. இதனால் புது உத்வேகம் பெற்ற சாரசன்கள் அகஸ்டஸ், ஆர்டசெரக்டஸ் ஆகிய பேரரசர்களின் வழித் தோன்றல்களுக்கு எதிராகவும் ஏனைய போட்டி மன்னர்களுக்கு எதிராகவும் வெற்றிகரமாகப் படை யெடுப்புகள் நடத்தினர். ஒரு பகைவனது வெற்றிகள் வெறுக்கப்படுவது இயல்பு. ஓமாரின் பத்தாண்டு ஆட்சிக்காலத்தில் சாரசன்கள் முப்பத்தாராயிரம் நகரங்களை அல்லது கோட்டைகொத்தளங்களை அவரது ஆதிக்கத்தின்கீழ் கொண்டு வந்தனர்; புறசமயத்தினரின் பதினான்காயிரம் கிறித்தவக் கோவில்களையும், இந்துக்களின் கோவில்களையும் தகர்த்துத் தரைமட்டமாக்கினர்; அதேசமயம் முகமதியர்களின் வழிபாட்டுக்காக பதினான்

காயிரம் மசூதிகளைக் கட்டியெழுப்பினர் அல்லது புதுப்பித்தனர். நபிகள் நாயகம் மெக்காவிலிருந்து தப்பிச் சென்ற நூறு ஆண்டு களுக்குப் பிறகு அவருடைய கால்வழியினரின் ஆட்சியும் அதிகாரமும் இந்தியாவிலிருந்து அட்லாண்டிக் மாகடல் வரை வியாபித்தன; 1. பெர்சியா, 2. சிரியா, 3. எகிப்து 4. ஆப்பிரிக்கா 5. ஸ்பெயின் முதலியவற்றின் பல்வேறு மாகாணங்களும் இதிலடங்கும்''.[1] அகஸ்டஸ் மற்றும் அந்தோனினஸ் போன்றோரின் ஆட்சியில் நிலவிய உடைக்க முடியாத ஒற்றுமை உணர்வையோ, சட்ட திட்டங் களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் மனோபாவத்தையோ இந்த மாபெரும் முகமதிய சாம்ராஜ்யத்தில் நாம் எதிர்பார்ப்பது வீண்; ஆனால் இந்த எல்லையற்ற பகுதியில் விரிந்து பரந்திருந்த முகமதிய சமயத்தின் முன்னேற்றம் மக்களின் பழக்கவழக்கங்களிலும் கண் ணோட்டங்களிலும் ஒரு பொதுவான சாயையைத் தோற்றுவித் திருந்தது. சாமர்கண்டிலும் சரி, செவில்லேயிலும் சரி குரான் மிகுந்த பக்தி விசுவாசத்துடன், முழு ஈடுபாட்டுடன் படிக்கப்பட்டது. மெக்கா யாத்திரையில் இந்தியனும் மூரும் உடனொத்த நாட்டவர்போல், உடன்பிறந்த சகோதரர்கள் போல் கட்டித் தழுவிக் கொண்டனர்; டைக்ரஸ் நதிக்கு மேற்கேயுள்ள அனைத்து மாகாணங்களிலும் அரபு மொழி மக்கள் மரபு மொழியாக வரித்துக் கொள்ளப்பட்டது.''[2]

சாரசென்களின் ஆட்சி விஸ்தரிப்புக்கு சமயமே முழு முதல் ஆதார அடிப்படையாகும்; ஆனால் இந்த நிகழ்வுப் போக்குக்குப் பொருளாதார ரீதியான வியாக்கியானம் தருவதும் ஓரளவு பொருந்தக் கூடியதே. பிரபல எழுத்தாளர் ஒருவர் பின்வருமாறு கூறுகிறார்: ''அராபியர்கள் திடீரென எழுச்சியுற்று முன்னேறினர் என்று கூறுவது தவறு; வெளித்தோற்றத்துக்குத்தான் இவ்வாறு தெரியும். பல நூற் றாண்டுக்காலமாகவே அரபு புலம் பெயர்வுக்கு தயாரிப்புகள் நடை பெற்று வந்திருக்கின்றன. கடைசியாக நடைபெற்ற மாபெரும் செமிட்டிக் புலம்பெயர்வு அராபியாவின் பொருளாதாரச் சீர்குலை வுடன் சம்பந்தப்பட்டதாகும். சுருங்கக் கூறினால், நபிகள் நாயகம் பிறப்பதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே அராபியாவில் அமைதி யின்மை நிலவிற்று; குழப்பம் மேலோங்கியிருந்தது; எனவே அராபி யர்கள் பெர்சியாவிலும், ரோமானியப் பிரதேசத்திலும் நாகரிக மடைந்த பகுதிகளில் மெள்ள மெள்ள ஊடுருவிச் சென்று குடி யேறினர்; அங்கு இதற்கு முன்பே சென்று குடியேறியிருந்த செமிட் டிக்குகளின் வழித்தோன்றல்களான ஆர்மீனியர்களைச் சந்தித் தனர்; இவர்கள் ஏற்கனவே அப்பகுதிகளுக்குப் பெரிதும் பழக்கப் பட்டுப் போயிருந்தனர்.

1. கிப்பன், "ரோமப் பேரரசின் நலிவும் வீழ்ச்சியும்", தொகுதி V, பக்கம் 359.
2. மேற்படி நூல், தொகுதி V, பக்கம் 400-01.

பசியும் பேராசையும்தான் உந்துவிக்கும், தூண்டி இயக்கும் சக்திகளே தவிர மதமல்ல; ஆனால் மதம் அவசியமான ஒற்றுமை உணர்வையும், பிரதான ஆற்றலையும் வழங்குகிறது. சாரசன்களது சமய விஸ்தரிப்பை காலக் கணிப்பிலும் சரி, அதன் அளவிலும் சரி ஓரளவு முக்கியத்துவம் வாய்ந்ததாகவே கருத முடியும்; இன்னும் சொல்லப்போனால் ஓர் அரசியல் தேவையாக அதனைக் கருதலாம். இஸ்லாம் இந்தப் புடைப் பெயர்வுக்கு ஒரு கோஷத்தையும் அமைப்பையும் அளிப்பதற்கு நீண்டகாலத்திற்கு முன்பே அது தொடங்கப் பட்டு விட்டது.''[1]

முகமதிய சமயத்துக்குப் புதிதாக மாறியவர்கள், முகமது நபி மெக்காவிலிருந்து தப்பிவந்த நாற்பத்தாறு ஆண்டுகளுக்குள்ளாகவே, தங்களது புதிய மதத்தை எங்கெங்கும் பரப்ப வேண்டும் என்ற ஆர்வத் துடிப்பால் உந்தப்பட்டும், அக்காலப்பொருளாதார சக்திகளால் தூண்டப்பட்டும் ஏராளமான ஆயுதங்களுடன், படைபலத்துடன் கான்ஸ்டான்டினோபிளின் கோட்டைச்சுவர்முன் வந்து நின்றனர்; அதனை முற்றுகையிட்டனர் (கி.பி.658-675). இந்த முற்றுகை ஏழாண்டுக்காலம் நீடித்தது. ஆனால் தீர்மானமான முடிவு ஏதும் ஏற்படவில்லை. முற்றுகையிட்டவர்கள் கான்ஸ்டான்டிநோபிளின் வலிமையையும் வள ஆதாரங்களையும் குறைவாக மதிப்பிட்டு விட்டதே இதற்குக் காரணம். ரோமானியர்கள் தங்கள் சமயத்துக் கும் சாம்ராஜ்யத்துக்கும் ஏற்பட்டுள்ள அபாயத்தை நன்கு உணர்ந்து ஏறுகள் போல் வீறிட்டெழுந்தனர்; படைவீரர்கள் எண்ணிக்கை யிலும் சாரசன்களுக்கு சரிக்குச்சமமாக ஈடுகொடுத்தனர்; அவர்கள் காட்டிய நேர் நிகரற்ற வீரம் கிழக்கிலும் மேற்கிலும் இருந்த அவர் களுடைய மக்களை புத்தெழுச்சி கொள்ளச் செய்தது. அந்தக் கணத் தில், சாரசன்கள் பெற்ற பழையவெற்றிகள் எல்லாம் ஒளிமங்கி விட்டன. அவர்கள் மட்டும் கான்ஸ்டான்டிநோபிளைக் கைப்பற்றி யிருந்தால் கிறித்தவ சமயத்தின் வருங்காலத்துக்கே அது பேராபத்தாக முடிந்திருக்கும்.

சாரசன்கள் இரண்டாம் முறையும் கான்ஸ்டான்டிநோபிள் மீது படையெடுத்து அதனை முற்றுகையிட்டனர் (கி.பி. 716-718); ஆனால் இந்தத் தடவையும் அதே முடிவுதான்.

இந்த வெற்றிகளுக்குக்கெல்லாம் இடையே அராபியர்கள் செல்ஜுக்களால் படிப்படியாகச் செல்வாக்கு இழந்து வந்தனர். அவர்கள் செல்வாக்கு பெற்றுவந்த காலத்தில் பாக்தாத் அப்பாசிட் காலிப்பின் அதிகாரம் முதலில் புயித்துகளின் ஷியட் அரசகுலத்தாலும் அதன் பின்னர் மிகவும் வலிமை வாய்ந்த 'பதிமைட் எதிராளிகளா

1. கேம்பிரிட்ஜ் மத்திய கால வரலாறு, தொகுதி II, பக்கங்கள் 331-32.

லும் முற்றிலும் பின்னுக்குத் தள்ளப்பட்டது. இத்தகைய சூழ் நிலைமைகளில் வைக்கப்பட்ட அப்பாசிட் காலிப் செல்ஜுக் துருக்கியர்களின் செல்வாக்கு வளர்ந்தோங்கி வருவதை வரவேற்றார்; மரபுவழி இஸ்லாமை உறுதியாகப் பின்பற்றுபவர்களான அவர்கள் தமது முந்திய அதிகாரத்தையும் மாட்சிமையையும் மீண்டும் தமக்கு வழங்குவார்கள் என்பதில் அவர் உறுதியாக இருந்தார். 'முகமதியர்களின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது மரபுவழி இஸ்லாமின் அதிகாரத்தை மீண்டும் நிலைநிறுத்தி, இஸ்லாம் நீடித் திருப்பதற்கே பேராபத்தாக இருந்துவந்த ஷியைட் கோட்பாடுகளின் சீர்குலைவுச் செல்வாக்கிலிருந்து முஸ்லீம் உலகை மீட்டபெருமை செல்ஜுக் துருக்கியர்களையே சேரும் எனலாம். நாகரிகம் அவர்களிடமிருந்து அஞ்சுவதற்கு எதுவும் இல்லை; ஏனென்றால் அவர்கள் வலுமிக்க நடுநிலை சக்தியாக விளங்கினர்; பெர்சியர்களும் அராபியர்களும் நெருக்கமாவதைச் சாத்தியமாக்கினர்; செல்ஜுக்களின் ஆட்சிக்காலத்தில் தேசிய துருக்கி இலக்கியங்கள் அந்த மொழியில் வெளிவருவது மிக அரிதாகவே இருந்த போதிலும் இந்த ஒற்றுமையை வளர்க்க அவர்கள் அரும்பாடுபட்டனர்."[1] செல்ஜுக்களிடையே எண்ணற்ற குலமரபுக் குழுக்களும் குடும்பங்களும் இருந்தன. இவற்றில் ஒரு குடும்பம் குஸ் எனப்படுவது. இந்தக் குடும்பங்கள் தங்களுக்குள் இடையறாது சச்சரவிட்டுக் கொண்டிருந்தன. அதிலும் குஸ் குடும்பம் ஏனைய குடும்பங்களின் நல்லிணக்கத்தைப் பெறத் தவறி விட்டது; அது அண்டைய முகமதிய மாகாணங்களுக்கு பேரச்சுறுத்தலாக இருந்து வந்தது. பிகு ஆர்ஸ்டன் இஸ்ரேல் தலைமையில் அவர்கள் ஆக்சஸ் நதியைக் கடந்தனர்; பெர்சியாவின் கிழக்கு மாகாணங்கள் முழுவதிலும் பரவினர்; கஸனாவைட் மன்னனான மகமுதை 1040ல் மெரோ போரில் தோற்கடித்து, தங்கள் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்தனர். மிகக்குறுகிய காலத்திற்குள்ளேயே செல்ஜுக்கள் ஹெல்லஸ்பான்ட் வரை மத்திய ஆசியா முழுவதும் மேம்பட்ட நிலையை எய்தினர். ''ஆல்ப் அர்ஸ்லாவில் அவர்கள் பெற்ற வெற்றி மகத்தானதாகும், இப்போரில் கிரேக்கப் பேரரசரே (1071) சிறைப்பிடிக்கப்பட்டார்; இந்த மாபெரும் வெற்றிக்குப் பிறகு ஆசியாமைனரில் துருக்கியர்கள் பிரவேசிப்பதற்குக் கதவு திறந்து விடப்பட்டது. இதனால் ஆர்ஸ்டன் பிகுவின் (இஸ்ரேல்) புதல்வரான குதுல்மிஷின் மைந்தர் சுலைமான் ஹெல்லஸ்பான்ட் வரை ஊடுருவது மிகவும் எளிதாக இருந்தது; மேலும் அரியணையைக் கைப்பற்ற ஆசியாவில் நைசபோரஸ் பிரியென்னசும், ஐரோப்பாவில் நைசபோரஸ் பொட்டான்சியேட்டசும் பரஸ்பரம் சச்சரவிட்டுக்

1. பிரிட்டிஷ் கலைக்களஞ்சியம், 11ஆவது பதிப்பு, கலை - "செல்ஜுக்கள்".

கொண்டிருந்ததும், அவர்கள் இருவரும் சிறைபிடிக்கப்பட்டதும் இன்னும் அதிக சாதகமான சூழ்நிலைமையை ஏற்படுத்திற்று. இவர்களில் முதலில் குறிப்பிடப்பட்டவர், சுலைமானின் உதவியை நாடினார்; அவரதுஉதவியோடு கான்ஸ்டான்டிநோபிளுக்குக் கொண்டு வரப்பட்டு அரசுகட்டிலில் அமர்த்தப்பட்டார்.''[1] தங்களுடைய சிரிய முடியாட்சியை நிரந்தரமாக்கும் பொருட்டு அவர்கள் மிகக் குறுகிய காலத்தில் அன்டியோச்சைக் கைப்பற்றினர்; 1234 ஆம் ஆண்டு வாக்கில் ஏறத்தாழ ஆசியாமைனர் முழுவதையுமே செல்ஜுக்கியப் பேரரசில் இணைத்துக் கொள்ளும் அளவுக்கு அவர்கள் மிகத் திறமையாக, சிறப்பாக தங்கள் படைகளை வழிநடத்திச் சென்றனர்.

எனினும் செல்ஜுக்கியப் பேரரசுக்கு அற்பாயுளே காத்திருந்தது; உட்பூசல்களும் உட்பிளவுகளும் அந்நிய ஆக்கிரமிப்புகளுமே இதற்குக் காரணம். செல்ஜுக்கியப் பேரரசுக்கு எதிராக நடைபெற்ற அந்நிய ஆக்கிரமிப்புக்கு மங்கோலியர்கள் தலைமை தாங்கினர். மங்கோலியர்களின் ஆரம்பகால வரலாறு தெளிவின்மையாலும் புராணக்கதைகளாலும் சூழப்பட்டிருக்கிறது. மங்கோலிய மாவீரரான செங்கிஸ்கான் 1227ல் கிலியின் பள்ளத்தாக்கில் மரணமடைந்த போது, 'சீனக் கடலிலிருந்து நீப்பர் நதிக் கரைகள் வரை வியாபித்திருந்த ஒரு சாம்ராஜ்யத்தை தமது புதல்வர்களுக்கு விட்டுச்சென்றார்.''[2] ஒக்தாயை காகனாக அல்லது தமக்குப் பின்னர் பதவி வகிப்பவராக நியமித்தார்; தமது பரந்து விரிந்த பேரரசின் இதர பகுதிகளை உரிமை கோரிய ஏனையோருக்கு வழங்கினார்; ஒக்தாய் தம்முடைய ஆட்சிப்பகுதியை விஸ்தரிக்க முயன்றார். ''ஒரு மாபெரும் படைக்குத் தலைமைதாங்கி சீனாவின் தென்திசையில் முன்னேறிச் சென்றார்; ஏற்கெனவே பெரிதும் நிலைகுலைந்து போயிருந்த கியு அரச குலத்தை படுவீழ்ச்சியுறச் செய்வதே அவரது குறிக்கோள். இதே சமயம் தூலி ஷென்சி பக்கத்திலிருந்து ஹோனான் மாகாணத்திற்குள் முன்னேறிச் சென்றார். இந்த ஒன்றுபட்ட தாக்குதலை கியு துருப்புகள் உறுதியோடு எதிர்த்துநின்றன. எனினும் மங்கோலியர்களின் தனித் திறமையும் ஆற்றலும் வீரமும் எல்லாவிதமான எதிர்ப்பையும் சமாளித்து முறியடித்தன; ஈவுஇரக்கமின்றிக் கொன்றுகுவிக்கப்பட்ட பகைவர்களின் நூற்றுக்கணக்கான சடலங்கள் மீது நடந்து சென்று, எதிரிகளின் தலைநகரமான கை-ஃபெங்-ஃபுவைக் கைப்பற்றினர். கை-ஃபெங்-ஃபுவிலிருந்து பேரரசர் ஜீனிங்புவுக்குத் தப்பி ஓடினார்; ஆனால் மங்கோலியர்கள் விடவில்லை; அங்கும் அவரைத் துரத்திச் சென்றனர்;

1. பிரிட்டிஷ் கலைக் களஞ்சியம், 11 ஆவது பதிப்பு, கலை ''செல்ஜுக்கள்''.
2. மேற்படி நூல், தொகுதி XVIII, பக்கம் 712, ''மங்கோலியர்கள்''.

அந்த நகரை முற்றுகையிட்டனர். கியுவின் துருப்புகள் அம்முற்றுகையை சில வார காலம் தாக்குப் பிடித்து நின்றன; பசிபட்டினியின் கோரப் பிடியில் சிக்கி வாடிவதங்கின. ஆனால் எவ்வளவு காலம் இந்த துன்ப துயரங்களை சமாளிக்க முடியும்? இறுதியில் வேறு வழியின்றி மங்கோலியர்களிடம் சரணடைந்தனர்; அதேசமயம் பேரரசர் தூக்கிட்டுத் தற்கொலை செய்துகொண்டார்''[1]. ஒகாடி இத்துடன் திருப்தியடையவில்லை; யாங்-சி-கியாங்குக்குத் தெற்கிலும் கொரியாவிலும் ஆட்சி புரிந்துவந்த சீன சுங் அரச குலத்துக்கு எதிராக ஒரு படையை 1235ல் அனுப்பினார்.

இவ்வாறு கிழக்கு ஆசியாவில் பற்பல வெற்றிகளைக் குவித்த அகாடி மேற்கு ஆசியா பக்கம் தமது கவனத்தைத் திருப்பினார். கி.பி.1236ல் ஜார்ஜியா மீதும் அர்மீனியா மீதும் படையெடுத்தார்; டிஃபிளிஸையும் கார்சையும் கைப்பற்றினார்; தன்னுடைய உடன் பிறந்தார் மகனான பதுவின் தலைமையில் ஒரு மாபெரும் சைனியத்தை கிழக்கு ஐரோப்பாவுக்கு அனுப்பினார். பல்காரின் தலைநகரான பொல்காரியைப் பது கைப்பற்றினார்; வோல்கா நதியைக் கடந்து சென்று ரியஸான் மீது படையெடுத்தார்; 1237 டிசம்பர் 21 ஆம் தேதி அது வீழ்ச்சியடைந்தது; ''மாண்டு மடிந்தவர்களுக்காக கண்ணீர் வடிப் பதற்கு எந்தக் கண்ணும் திறந்திருக்கவில்லை'' என்று கூறுமளவுக்கு அங்கு சொல்ல நாக்கூசும் அட்டூழியங்கள், அக்கிரமங்கள், கொடுமைகள் நடைபெற்றன. மாஸ்கோவை பது கைப்பற்றினார். இதனைத் தொடர்ந்து விளாதீமிரும் கோஸல்ஸ்க்கும் சரணடைந்தன. போலந்துக்கும் ஹங்கேரிக்கும் இதே கதி ஏற்பட்டது.

மங்கோலியர்கள் இவ்வாறு எங்கும் கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்த அதேசமயம் ஆட்டமன்கள் எனப்படும் துருக்கியர்கள் பெரிதும் வலுவடைந்து வந்தனர்; தங்கள் ஆட்சிப் பரப்பை நாளுக்கு நாள் விரிவுபடுத்திவந்தனர். ஹங்கேரிய சமவெளிக்கும் கோபி பாலைவனத்துக்கும் இடையே வாழ்ந்துவந்த நாடோடி இன மக்களில் ஒரு பிரிவினர் இவர்கள். 'காரா கானின் புதல்வரான ஆகுஸ் தான் ஆட்டமன் துருக்கியர்களின் பிதாமகர் என்ற பெருமையை மரபுவழிக்கதைகள் அவருக்கு வழங்குகின்றன. வரலாற்றில் அவர்கள் முதன்முதலாக கி.பி.1227ல் இடம்பெறுகின்றனர். அந்த ஆண்டு இரண்டாயிரம் முதல் நாலாயிரம் எனப் பல்வேறாக மதிப்பிடப் படும் ஒரு நாடோடி இனக் கும்பல் தங்களுடைய ஆடுமாடு மந்தை

1. பிரிட்டிஷ் கலைக்களஞ்சியம், 11 ஆவது பதிப்பு தொகுதி XVIII, பக்கம் 712, 'மங்கோலியர்கள்''.

களுடனும், அடிமைகளுடனும் தங்களுடைய ஆதி தாயகத்துக்குத் தங்களது தலைவர் சுலைமான் ஷா தலைமையில் திரும்பி வந்து கொண்டிருந்தனர். இவர்கள் மங்கோலியர்களின் படையெடுப்பால் விரட்டியடிக்கப்பட்டவர்கள்; கோனியாவின் செல்ஜுக்கிய சுல்தான் அலா-வுத்-தீன் கைக்கோபாத்தால் புகலிடம் தர மறுக்கப்பட்டவர்கள். இத்தகைய துரதிருஷ்டசாலிகளான இந்த மக்கள் ஜாபர் கோட்டைக்கு அருகில் யூப்ரட்டஸ் நதியைக் கடந்து கொண்டிருந்தார்கள். அப்போது எதிர்பாராதவிதமாக அவர்களுடைய தலைவர் நீரில் மூழ்கிவிட்டார். இதனால் அவர்களுடைய அணிகளில் பெரும் குழப்பம் ஏற்பட்டது. ஆற்றை இன்னமும் கடக்காமல் இருந்தவர்கள் இதனைத் தீய சகுனம் என்று கருதி, தங்கள் சோதரர்களைப் பின்பற்ற மறுத்துவிட்டனர். ஆனால் சுமார் 400 படைவீரர்கள் நீரில் மூழ்கிய தங்களுடைய தலைவரின் புதல்வரான எர்ட்டோ குருலின் தலைமையை ஏற்பதெனத் தீர்மானித்தனர். எர்ட்ரோகுருல் எர்ஸரமுக்குக் கிழக்கே ஜெஸ்ஸினில் முதலில் முகாமிட்டார். புகலிடம் வேண்டி அவர் அலா-வுத்-தீனுக்கு இரண்டாம்முறை வேண்டுகோள் விடுத்தார்; இந்த வேண்டுகோள் ஏற்கப்பட்டது. குடியேறுபவர்களின் எண்ணிக்கை மிகக்குறைவாக இருப்பதால் அவர்களால் அபாயம் ஏதும் ஏற்படுவதற்கு வாய்ப்பில்லை எனக் கருதப்பட்டது. அங்கோராவுக்கு அருகே கரஜா பாக் நிலங்கள் இந்தப் புதிய குடியேற்றக்காரர்களுக்கு ஒதுக்கப்பட்டன. அவை நல்ல மேய்ச்சல் நிலங்களாக இருப்பதையும், குளிர்காலத்தில் தங்குவதற்கு வசதியான இடங்களாக இருப்பதையும் அவர்கள் கண்டனர். மிக நெருக்கடியான சமயத்தில் எர்ட்ரோகுருல் செல்ஜுக்கிய மன்னனுக்கு செய்த உதவிக்கு சன்மானமாக சுகித்திலும் அவருக்கு நில மானிய உரிமை வழங்கப்பட்டது. இங்கு எர்ட்ரோகுருல் 1288ல் தொன்னூறாவது வயதில் காலமானார். இதன்பிறகு அவருடைய புதல்வர் ஓஸ்மான் அந்த நாடோடிக் குழுவினரின் தலைமைப் பொறுப்பை ஏற்றார். தாப்ரிஸின் மன்னரும் செங்கிஸ்கானின் துணைப்படைத் தலைவர்களில் ஒருவராக இருந்தவருமான காஜன் மகமுத் கானின் இடையறாத் தாக்குதல்களால் செல்ஜுக்கியப் பேரரசு சிதைவுறும் நிலையில் இருந்தது. அதன் பெரும்பாலான குறுநில மன்னர்கள் இந்த வீழ்ச்சியைத் தடுப்பதற்குப் பதிலாக அதன் வீழ்ச்சியைத் துரிதப்படுத்த உதவவே செய்தனர். இதன் மூலம் தங்கள் ஆட்சிப் பகுதிகளை சுதந்திரமானவையாகப் பிரகடனம் செய்துவிடலாம் என்று கனவுகண்டனர். ஆனால் இத்தனைக்கு இடையிலும் ஓஸ்மான் மட்டும் செல்ஜுக்கியப் பேரரசிடம் விசுவாசமாக இருந்தார்; தமது கடமையில் உறுதியோடிருந்தார். கிரேக்கர்களுக்கு எதிராக அவர் பன்முறை வெற்றிவாகை சூடினார். அவரது ஆட்சிப் பகுதியின் சரிந்து வந்த கீர்த்தி, சீர்த்தி இதன்மூலம் புத்துயிரும் புத்தாக்கமும்

பெற்றது. கரோஜா ஹிஸ்ஸார்தான்(1295) அவரது மிக ஆரம்பகால வெற்றியாகும். அங்கு ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி நடைபெற்றது. அங்கு வாராந்திரப் பிரார்த்தனையில் சுல்தானின் பெயருக்குப் பதிலாக ஆஸ்மானின் பெயர் இடம்பெற்றது. அவர் வாள்முனையில் வெற்றி கொண்ட பிரதேசங்கள் அனைத்தின் உரிமையையும் அந்த ஆண்டு இரண்டாம் அலா-வுத்-தீன் கைகோபாத் அவருக்கு வழங்கினார்; அது மட்டுமல்ல, அவர் சுதந்திரப் படைத் தளபதி என்பதைக் குறிப்பிடும் வகையில் அவருக்குத் துருக்கியக் கொடியையும், பதாகையையும், முரசத்தையும் அளித்துக் கௌரவித்தார். கிரேக்கர்களுக்கு எதிரான ஆஸ்மானின் வெற்றிகள் தொடர்ந்தன. அவரது வீரதீரமும், ஹார்மன் கயாவின் அதிபதி கென்சீ மிகாலுடன் அவருக்கிருந்த நெருங்கிய பிணைப்பும் அவருக்கு வெற்றிப் படிகளாக அமைந்தன. அய்னகுவல், பிலஜிக், யார் ஹிஸ்ஸார் போன்ற பகுதிகள் அவரது கட்டுப்பாட்டின் கீழ்வந்தன... "1300ல் செல்ஜுக் பேரரசு உடைந்து நொறுங்கிற்று; அதன் இடிபாடுகளிலிருந்து பல சிறுசிறு அரசுகள் தோன்றின. தமது பாதுகாவலரும் புரவலருமான இரண்டாம் சுல்தான் அலா-வுத்=தீன் மறைவுக்குப் பிறகே ஆஸ்மான் தமது சுதந்திரத்தைப் பிரகடனம் செய்தார். எனவே ஆட்டமன் பேரரசு நிறுவப்பட்டதை இந்த நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டே துருக்கி வரலாற்று ஆசிரியர்கள் கணித்துக் கூறுகின்றனர்.'' துருக்கியர்களின் பேரரசு மிகவும் விரிந்து பரந்ததாக இருந்தது. 'துருக்கியர்கள் ஆசியா மைனரை ஆண்டனர்; துருக்கியர்கள் எகிப்தில் ஆட்சி புரிந்தனர்; துருக்கியர்கள் சிரியாவிலும் மெசபொட்டாமியாவிலும் மங்கோலியர்களின் கீழ் சிறுஅளவில் அதிகாரம் செலுத்தினர். அதேசமயம் செங்கிஸ்கானின் வழித்தோன்றல்களோ காலிப்புகளின் அரசுகளைக் கைப்பற்றினர்; பெர்சியாவில் வோல்கா, யூரல் மலைப் பிராந்தியங்களிலும், ஆக்சஸ் நதி தீரங்களிலும், தார்த்தாரிப் பாலைவனப் பகுதிகளிலும் மேலாதிக்கம் பெற்றிருந்தனர்; சீனாவில் ஒரு சாம்ராஜ்யத்தை நிறுவினர்; இந்துஸ் தானில் நீண்ட காலம் மங்கோலிய ஆட்சி நடைபெறுவதற்கும் திட்டமிட்டனர்; இவர்கள் மொகலாய சக்கரவர்த்திகள் என்று நம் நாட்டில் அறியப்படுகின்றனர்''[1] ஆனால் துருக்கியர்கள் ஆட்சிக்கு ஒரு கட்டத்தில திடீரென பலத்த அடிவிழுந்தது; இது அந்த ஆட்சியை அறவே அஸ்தமிக்கச் செய்துவிடுமோ என்று கூடத் தோன்றிற்று. ''அப்போது சுல்தான் புகழின் கொடுமுடியில் இருந்தார்; ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பைஜான்டைன் பேரரசின் மிகப் பெரும்பகுதியிலும் அவர் பேச்சுக்கு மறுபேச்சு இல்லை; அவர் கையசைத்தால் போதும் எல்லோரும் பணிந்து விடுவர். கிறித்தவ

1. ஸ்டேன்லி லேன் பூலே, ''துருக்கி'' (நியூயார்க் 1899), பக்கம் 7.

நாடுகள் அனைத்தும் உலகை அழிக்க வந்த ஒரு கொள்ளை நோயாக அவரை பேரச்சத்தோடு, கிலியோடு பார்த்தன. ஆனால் அவரையே ஒழித்துக் கட்டுவதற்கு இதைவிடப் பயங்கரமான ஒரு கொள்ளைநோய் புறப்பாட்டது; பயேஸித் மிக வெற்றிப்பெருமிதத் தோடு, ஆடம்பர ஆர்ப்பாட்டத்தோடு எழுப்பியிருந்த பிரம்மாண்ட மான சாம்ராஜ்யக் கோட்டை ஒரே அடியில், ஒரே வீச்சில் தூள் தூளாகத் தகர்ந்து நொறுங்கி தரைமட்டமாயிற்று. நடுநடுங்க வைக் கும் அந்தப் பயங்கரமான வெற்றியாளர் வேறுயாருமல்ல, தார்த்தாரி இனத்தைச்சேர்ந்த தைமூர்தான்; அவரை நாம் 'தாமர்லேன்'' என அழைக்கிறோம். செங்கிஸ்கானின் விரிந்தகன்ற சாம்ராஜ்யத்தின் அழிபாடுகளிலிருந்து தோன்றிய குட்டித் தலைவர்கள் மீது அவர் தமது மேலாதிக்கத்தைச் செலுத்தினார். தாமர்லேன் எதையும் வாள்முனை கொண்டே சாதித்தார். பயேஸித்தின் ஆதிக்கத்திலிருந்து ஒவ்வொரு மாகாணத்தையும் அடிபணிய வைத்தார். தார்த்தாரியர்களும் துருக்கி யர்களும் 1402ல் நேருக்குநேர் மோதிக்கொண்டனர். துருக்கியர்கள் கான்ஸ்டான்டிநோபிளை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தபோது, சிவாசிலுள்ள தமது துருப்புகளுக்கு எதிராக தாமர்லேன் வெற்றி பெற்ற செய்தி சுல்தானுக்குக் கிடைத்தது. பயேஸித் உடனே தமது துருப்புகளை அணிதிரட்டி, தாமே நேரில் சென்று போரிடுவதற்கு விரைந்தார்; ஆனால் அங்கோராவில் படுதோல்வியடைந்தார். துருக்கிப் பேரரசு தகர்ந்து தரைமட்டமாயிற்று; மிகுந்த தீரத்தோடு கட்டி உருவாக்கப்பட்டு, மன உரத்தோடு பாதுகாத்துப் பராமரிக்கப் பட்ட துருக்கி சாம்ராஜ்யம் ''ஆசியாவின் கொடுங்கோலரிடம்'', ''ஆண்டவனது சீற்றத்தின் உருவகமாக''க் காட்சியளித்தவரிடம் பரிதாபகரமாக சரணடைந்தது. ஓட்டமன் வரலாறு திடீரென முடிவுக்கு வந்துவிட்டதாகவே தோன்றிற்று. பயேஸித்போல் அதிகாரத்தின் உச்சசிகரத்திலிருந்து விலங்கிடப்பட்ட கைதி என்னும் அவமான கரமான அதலபாதாள நிலைக்குத் தள்ளப்பட்ட ஒரு பயங்கரமான வீழ்ச்சியை உலகம் மிக அரிதாகவே கண்டிருக்கிறது.''[1]

ஆனால் துரதிருஷ்டவசமாக தாமர்லேன் தனது வெற்றிக் கனிகளைச் சுவைத்துப் பார்ப்பதற்கு உயிரோடியிருக்கவில்லை; மேலும் அவர் தந்த அடி வெளிக்குத் தோன்றியதுபோல் ஆட்டமன் பேரரசுக்கு இறுதிஅடியாக, மரணஅடியாக அமைந்திடவில்லை; இதுகுறித்து திரு.லேன் பூலே பின்வருமாறு கூறுகிறார்: 'துருக்கியர் களது ஆட்சியின் மிக வியக்கத்தக்க அம்சம் அதன் உயிர் வாழ்வுத் திறமாகும். அதன் விதி முடிந்துவிட்டது, இனி அது பிழைக்காது என்று

1. மேற்படி நூல். பக்கம் 73.

எத்தனை எத்தனையோ ஆரூடக்காரர்கள் திரும்பத் திரும்பக் கூறி விட்டார்கள்; எனினும் அது இன்னும் உயிரோடியிருக்கிறது. மாகாணம் மாகாணமாக பேரரசிலிருந்து துண்டித்துக் கொண்டு விட்டன. ஆயினும் சுல்தான் இன்னமும் விரிந்துபரந்த பிரதேசங் களை ஆண்டு வருகிறார்; பல்வேறு இனங்களைச் சேர்ந்த அவ ருடைய குடிமக்கள் அவரை உயர்வாக மதிக்கின்றனர்; போற்றிப் பாராட்டுகின்றனர்; அவருக்கு அஞ்சி நடக்கின்றனர். அரச பீடத்தை அலங்கரிக்கும் துருக்கியன் மிகப் பல சந்தர்ப்பங்களில் எவ்வளவு குறைந்த உயர் தகுதிகளைப் பெற்றிருக்கிறான் என்பதையும், தனது வாள்முனையில் பணிய வைத்த தன்னுடைய குடிமக்களை ஆசுவாசப்படுத்துவதற்கு எவ்வளவு குறைந்த அக்கறை எடுத்துக் கொள்கிறான் என்பதையும் கருத்திற் கொண்டு பார்க்கும்போது, அவனது அதிகாரம் எவ்வளவு உறுதியாக இருக்கிறது என்பதையும், அவனது ஆட்சி எவ்வாறு ஆட்டி அசைக்க முடியாததாக இருக் கிறது என்பதையும் காண்பதற்கு வியப்பிலும் வியப்பாக இருக் கிறது... இழந்த மாகாணங்கள் ஒரு டஜன் ஆண்டுகளுக்குள்ளாகவே முதலாம் மகமுதின் வல்லமையும் திறமையும் மிக்க ஆட்சியின் கீழ் மீண்டும் ஒன்றிணைக்கப்பட்டன. 1402ல் ஆட்டமன் பேரரசு பகைவர் களது கடும் தாக்குதலுக்கு உள்ளாயிற்று; இந்த மரண அடியிலிருந்து இனி அது ஒருபோதும் மீளவே முடியாது என்றுகூடக் கருதப் பட்டது. ஆனால் நடந்தது என்ன? எதிர்பார்த்ததுபோல் அந்தப் பேரரசு பலவீனமடைந்துவிடவில்லை; வேரற்ற மரம் போல் அடிசாய்ந்து விடவில்லை; மாறாக அது முன்னிலும் ஆற்றல் வளத்துடன் தலை நிமிர்த்தி நெஞ்சுயர்த்தி நின்றது; புதுப்பொலிவும் புத்தூக்கமும் பெற்று, நாடுகள் பிடிப்பதில் துணிகரமான புதுப்புது சாதனைகள் படைக்கத் தொடங்கிற்று. இத்தகைய ஒளிமயமான வெற்றி வாய்ப்பு நிலைகளால் உற்சாகமும் ஊக்கமும் பெற்று மகமுத் தனது தலை நகரை ஆசியாவில் புருசாவிலிருந்து ஐரோப்பாவில் அட்ரியன போலுக்கு மாற்றினார். செல்ஜூக் துருக்கியர்கள் ஹெல்லஸ்பான்ட் வரை வந்தனர்; ஆனால் அதனைக் கடக்கும் பொறுப்பை ஆட்டம ன்களுக்கு விட்டுவிட்டனர். கான்ஸ்டான்டிநோபிளைக் கைப்பற் றுவது பல துருக்கி மன்னர்களின் லட்சியக்கனவாக இருந்தது. ஆட்டமன் அது தன் கைக்கு வந்துவிட்டதுபோல் கனவுகண்டது முதல் அந்த மேன்மை மிக்க, கம்பீரமான நகரை தங்கள் வசம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று பேரவா கொண்டனர். ''இடி யேறான பயேஸித் அதனை முற்றுகையிட்டார்.[1] மூஸா கிட்டத்தட்ட

1. ஸ்டேன்லி லேன் பூலே, "துருக்கி", பக்கங்கள் 74-75

அதனை நெருங்கி விட்டார். இரண்டாம் முராத் அந்நகரைக் கைப்பற்ற மிகவும் பொறுமையோடு திட்டமிட்டார். சுருங்கச் சொன்னால் அம் மாநகரைத் தவிர வெல்வதற்கு அவர்களுக்கு வேறு எதுவும் இல்லை; ஏனென்றால் அதனைச் சுற்றியுள்ள எல்லா மாகாணங்களையும் நீண்ட காலத்திற்கு முன்பே ஆட்டமன்கள் தங்கள்வசம் கொண்டு வந்து விட்டனர். ஆனால் அந்தத் தலைநகரின் எல்லையற்ற வளங்களும் கொள்ளை அழகும், அதன் கேந்திர முக்கியத் துவமும் அவர்களை வெகுவாக ஈர்த்துக் கவர்ந்தன; இதனால் அந் நகரைக் கைப்பற்றுவது துருக்கியர்களின் தலையாய லட்சியமாக, அவர்களது குறிக்கோளின் மணிமகுடமாக இருந்தது.''[1] ஆட்டமன் பேரரசர்களில் ஆறாவது பேரரசரான இரண்டாம் மகமுத் அந்நகரைக் கைப்பற்றுவதற்கு ஏதேனும் சாக்குப்போக்கு கிடைக்காதா என்று காலத்தின்மீது கண்வைத்து மிகவும் விழிப்போடு காத்திருந்தார். போர் தொடங்கியதைப் பயன்படுத்திக் கொண்டு, நகரைத் தாக்கு வதற்குத் தீவிர தயாரிப்புகளை மேற்கொண்டார். இதன்விளைவாக 1453 மே 29 ஆம் தேதி நகரம் வீழ்ச்சியடைந்தது. நகரம் இவ்வாறு வீழ்ச்சியடைந்ததைவிட அது எவ்விதம் இவ்வளவு நீண்டகாலம் தாக்குப்பிடித்து நிற்க முடிந்தது என்பதுதான் உண்மையில் பெரிதும் வியப்பிற்குரியதாகும். ஏனென்றால், ''பைஜாண்டைன் பேரரசு அன் றிருந்த நிலைமையில் பகைவர்களை உறுதியாக எதிர்த்து நிற்கக் கூடிய போதிய ஆற்றல் அதனிடம் இல்லை. எனவே, கான்ஸ்டான்டி நோபிள் நீண்டகாலம் தாக்குப்பிடித்து நின்றதற்கு இது காரணமாக இருக்க முடியாது என்பது தெள்ளத்தெளிவு. அப்படியானால் உண்மை யான காரணம்தான் என்ன? நகரைப் பாதுகாத்து வந்தவர்களுடன் ஒப்பிடும்போது, தாக்குதல் தொடுத்தவர்களின் ஏற்பாடுகளில் குறை பாடுகள் இருந்ததே இதற்குக்காரணம் என்று கூறுவது உசிதமாக வும் பொருத்தமாகவும் இருக்கும்.''[2] இது எப்படியிருப்பினும் இங்கு ஒரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிடவேண்டும். ஆசியா, ஐரோப் பியா, ஆப்பிரிக்கா ஆகிய மூன்று கண்டங்களைப் பொறுத்த வரை யில் உலகில் மிகவும் கேந்திரமுக்கியத்துவம் வாய்ந்த ஓர் இடம் கான்ஸ்டான்டிநோபிளை விட அநேகமாக வேறு எதுவும் இல்லை யென்றே கூறலாம். கான்ஸ்டான்டிநோபிளுக்குள்ள உள்ளார்ந்த ஆற்றலைப்பற்றியும், பல்வேறு தாக்குதல்களை அது சமாளித்தது பற்றியும் டாக்டர் கன்னிங்ஹாம் கூறுவதாவது: ''ஒவ்வொரு நூற் றாண்டு பிறந்த போதும், ஒரு புதிய படையெடுப்பாளர் கும்பல் களத்தில் இறங்கிற்று. நான்காம் நூற்றாண்டில்தான் கான்ஸ்டான்டி நோபிள் நிறுவப்பட்டது; உடனேயே கோத்துகளிடமிருந்து அதற்கு

1. ஸ்டேன்லி லேன் பூலே, "துருக்கி", பக்கங்கள் 107 - 108.
2. பிரிட்டிஷ் கலைக் களஞ்சியம், தொகுதி XXVII பக்கம் 443.

அச்சுறுத்தல் ஏற்பட்டது; ஐந்தாம் நூற்றாண்டில் ஹூணர்களும் முரட்டு ஜெர்மானிய இனத்தவர்களும் ஆறாம் நூற்றாண்டில் ஸ்லாவியர்கள், அவர்களைத் தொடர்ந்து ஏழாம் நூற்றாண்டில் அராபியர்கள், பெர்சியர்கள், எட்டாம் ஒன்பதாம் நூற்றாண்டுகளில் மங்கோலிய இனத்தவர்களான மகியார்கள், பல்கேரியர்கள், ரஷ்யர்கள் இவ்வாறு பல்வேறு இனத்தவர்களது கெடுநோக்கு, தீயபார்வை அதன் மீது விழுந்தது. வெனிசும், நான்காவது சிலுவைப் போரும் வெற்றி பெற்று, ஒரு லத்தீன் அரசு அமைக்கப்பட்ட பிறகும் கூட, புனரமைக்கப்பட்ட பேரரசு துருக்கியர்களை நீண்டகாலம் உறுதியோடு எதிர்த்துத் தாக்குப் பிடித்து நிற்கவே செய்தது. அது பலமுறை ஆட்டம் கண்டுள்ளது; எனினும் எல்லா சோதனைகளையும் அவ்வப்போது சாமர்த்தியமாக சமாளித்து வந்திருக்கிறது. இறுதியில் 1453ல்தான் அது அறவே தோல்வியைத் தழுவியது.''[1]

இந்த மேன்மைமிக்க நகரம் இந்த இடையறாத தாக்குதல்களைச் சமாளித்து நின்றதும், ஒரு செம்மைமிக்க சிறந்த நாகரிகத்தின் சிதைந்த எச்சமிச்சங்களைப் பாதுகாத்ததும் ஒரு மாபெரும் நற்பேறாகும். இதேபோல், கிறித்தவ சமயம் ஐரோப்பாவில் ஓர் உண்மையான சக்தியாக வலுப்பெறுவதற்கு முன்னர் முகம்திய மதத்தின் அலை தடுத்து நிறுத்தப்பட்டது கிறித்தவ சமயத்தைப் பரப்புவதற்கு ஒரு பெரும் நல்வாய்ப்பாக அமைந்தது என்றும் கூற வேண்டும். இந்தச் சிறப்புமிகு நகரம் காட்டுமிராண்டித்தனத்தின் கொடூரத்தாக்குதலின் வேகத்தை, தாக்கத்தைச் சமாளித்தது மட்டுமன்றி, நனிசிறந்த நாகரிகம் வளர்வதற்கும் வழிவிட்டது. கிழக்கே கான்ஸ்டான்டிநோபிள் புரிந்த சாதனையை மேற்கே நீண்ட காலத்துக்கு முன்பே டூர்ஸ் நகரம் - அத்தனைச் சிறப்பாக அல்லாவிட்டாலும் - புரிந்தது. கான்ஸ்டான்டின்நோபிளைக் கைப்பற்றுவதில் துருக்கியர்கள் வெற்றி பெறுவதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே அந்த நகரை தம்வசமாக்க அராபியர்கள் முயன்றனர். ஆனால் இந்த முயற்சியில் அவர்களுக்குப் பெரும் ஏமாற்றமே காத்திருந்தது; இதன் பேரில் அவர்கள் கவனம் தெற்கே திரும்பிற்று; ஆப்பிரிக்கா வழியாக வெற்றிக் களிப்போடு தங்கள் மதத்தைப் பரப்பிக் கொண்டு சென்ற அவர்கள் ஜிப்ரால்டர் வழியாக மேற்குப் பக்கமிருந்து ஐரோப்பாவுக்குள் நுழைய எண்ணினர். இங்கு ஆரம்பத்தில் அவர்களது முன்னேற்றத்திற்கு எதிர்ப்பு மிகக் குறைவாகவே இருந்தது; அவர்களது மூர்க்கத்தனமான பாய்ச்சலுக்கு ஈடுகொடுத்து, கோத்துகள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியாததே இதற்குக் காரணம். கி.பி.711

1. டபிள்யூ. கன்னிங்ஹாம், ''பண்டைய மேற்கத்திய நாகரிகம்'' பக்கங்கள் 197 - 198.

ஆண்டுவாக்கில் ஸ்பெயின் அராபியர்களிடமும் பாபர்களிடமும் வீழ்ச்சியடைந்தது; இதனைத் தொடர்ந்து மூர்கள் கூட்டம் கூட்டமாக ஸ்பெயினில் வந்து குடியேறினர். இத்தகைய வெற்றிகளால் ஊக்க மும் உற்சாகமுமடைந்த அராபியர்கள் கால் நாட்டிற்குள் (பிரான்ஸ் நாட்டின் பழைய பெயர்) பிரவேசிக்க முற்பட்டனர்.அக்யுலைக்கோ மகன் அவர்களைத் தடுத்து நிறுத்தினார்; எனினும் 732ல் போர்டோ வுக்கு அருகில் அவர் தோற்கடிக்கப்பட்டார். இதனால் இரட்டிப்பு உத்வேகமும் வலிமையும் பெற்று போய்ட்ரசை நோக்கி முன்னேறினர்; பின்னர் அங்கிருந்து டூர்ஸை குறிவைத்து முன்னேறினர். ஆனால் இங்கு அவர்கள் வல்லமைமிக்க ஒரு பகைவனை எதிர்கொள்ள நேர்ந்தது. சார்லஸ் தலைமையில் பிராங்குகள் அராபியர்களை டூர்ஸுக்கு அருகில் படுதோல்வியுறச் செய்தனர்; இவ்வாறு அவர்களது முன்னேற் றத்தை நிரந்தரமாகத் தடுத்து நிறுத்தினர். இதற்குப் பிறகு பைரனீஸைக் கடந்துசெல்ல அராபியர்கள் ஒருபோதும் முயலவில்லை. ஐரோப்பாவை அராபியர்கள் அடிபணிய வைத்து தங்கள் வசப்படுத்திக் கொண்டிருந்தால் ஐரோப்பிய நாகரிகத்தின் கதி, எதிர்காலம் என்னவாகியிருக்கும் என்பதை ஊகிப்பது கடினம். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்; அதாவது பிராங்குகளை விட மூர்கள் பல்வேறு துறைகளில் முன்னேயிருந்தார் கள் என்பது நிதர்சன உண்மை. இதுகுறித்து பேராசிரியர் ராபின்சன் பின்வருமாறு கூறுகிறார்: ''சார்லசும் அவருடைய முரட்டுத்தனமான படைவீரர்களும் டூர்ஸில் முகமதியர்களைத் தோற்கடித்து விரட்டி யடித்ததை ஒருபெரும் நற்பேறாகப் பொதுவாக வரலாற்றாசிரியர் கள் கருதுகின்றனர். ஆனால் தெற்குப் பிரான்சில் அராபியர்களை குடி யேற அனுமதித்திருந்தால் பிராங்குகளைவிட மிகத்துரிதமாக அவர் கள் விஞ்ஞானத்தையும் கலையையும் வளர்த்திருப்பார்கள் என்பது நிச்சயம்.''[1]

இந்த ஆசிய நாடோடி இனமக்களின் துரித நடமாட்டங்கள் மத்திய ஆசியாவில் அனைத்து அமைதி நடவடிக்கைகளையும், ஆக்க நடவடிக்கைகளையும் சீர்குலைத்து வந்த வேளையில், அதலகுதலப் படுத்திவந்த நேரத்தில் ரோமானியப் பேரரசு உடைந்து நொறுங்கி சிதைந்து தேய்ந்து கொண்டிருந்தது; ஐரோப்பா சோர்ந்து போய் ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்ந்து போயிருந்தது; ஜெர்மானிய மக்களின் ஓயாத போர் நடவடிக்கைகளால்தான் இந்தத் தூக்கம் அவ்வப்போது கலைந்து கொண்டிருந்தது.

1. பிரேஸ்லி மற்றும் ராபின்சன் - ''ஐரோப்பிய வரலாற்றுக் குறிப்புகள்'', பகுதி I (நியூயார்க்) 1914, பக்கம் 368.

இத்தகைய சூழ்நிலைமைகளில் வாணிகம் நலிவுறுவது, வீழ்ச்சியுறுவது இயல்பு. மத்திய கால வாணிகம் எண்ணற்ற தடங்கல்களை, இடையூறுகளை எதிர்கொள்ள நேர்ந்தது. மேற்கு ஐரோப்பா முழுவதும் அதிகப் பணப்புழக்கம் இல்லாததால் வாணிகம் துரிதமாக வளர்ச்சியுறுவது பாதிக்கப்பட்டது. கிறித்தவ சமயம் எதிலும் நற்கூறையே காணும் மதம்; வாழ்க்கையின் அதீத வசதிகளை எதிர்க்கும் மதத்தால் பொருளாதாரம் கட்டுப்படுத்தப்பட்டது. 'நியாயவிலை'' என்ற கோட்பாடும், மொத்த வாணிகத்துக்கு இருந்த தடையும் வாணிகத்தை மந்தமாக்கின. கடுவட்டி குறித்த கிறித்தவ சித்தாந்தம் வாணிக நடவடிக்கைகளுக்கு மிகப்பெரிய இடையூறாக இருந்தது. வட்டிக்குக் கடன் தரலாகாது என்று ஒரே வீச்சில் மக்கள் அனைவரும் தடைசெய்யப்பட்டனர். பணப் பற்றாக்குறை நிலவி வந்த நிலைமையில் இத்தகைய தடையின் விளைவை எவரும் எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். யூதர்கள் கிறித்தவக் கட்டுக் கோப்புக்குள், வட்டத்திற்குள் இல்லாததால் அவர்கள் மட்டும்தான் பணவரவு செலவு நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தனர்; இவ்வகையில் பொருளாதாரத் துறைக்கு அவர்கள் ஆற்றிய பங்கு அளப்பரியதாகும். ''அவப்பேறுக்கு ஆளான இந்த மக்கள் ஐரோப்பாவின் பொருளாதார வளர்ச்சிக்கு மிக முக்கியப் பங்காற்றினர். ஆனால் கிறித்தவர்கள் அவர்களை மிக மோசமான முறையில் நடத்தினர்; ஏசுவைக் கொன்ற மிகப்பெரும் குற்றத்தைச் செய்தவர்கள் என்று அவர்களைக் கடுமையாகச் சாடினர்.''[2] இத்துடன் சரக்குகளின் புடைபெயர்வின்போது மனம்போன போக்கில் எல்லாம் வரிகள் விதிக்கப்பட்டன. அந்நாட்களில் நிலவியல் ரீதியாக நேரத்தைக் கணிப்பதும் குழப்பம் மிகுந்ததாகவும், பெரும்தொல்லை தருவதாகவும் இருந்தது. இவை யாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போன்றிருந்த மிகப் பெரிய இடர்ப்பாடு ரோமானிய சாலைகளின் மிகவும் சீர்குலைந்த நிலையாகும்.

இத்தகைய பிரதிகூலமான சூழ்நிலைமைகள் ஒன்றிணைந்திருந்த பகைப்புலனில், ரோமானியப் பேரரசு வீழ்ச்சியுற்றதிலிருந்து

1. பிரேஸ்லி மற்றும் ராபின்சன், 'ஐரோப்பிய வரலாற்றுக் குறிப்புகள்'', பகுதி I, (நியூயார்க்) 1914, பக்கம் 368.
2. மேற்படி நூல், பகுதி I, பக்கம் 506.

மேற்கு ஐரோப்பாவில் ஒரு நீண்ட மந்தநிலை நிலவியதிலும், வாழ்க்கை சாரமற்று, சுவாரசியமற்று, விறுவிறுப்பற்று இருந்ததிலும் வியப்பேதும் இல்லை.

கான்ஸ்டாண்டிநோபிள் வாணிகத்தில் அதிக கவனம் செலுத்த வில்லை. அச்சுறுத்திப் பணம் பறிப்பதே அதன் கொள்கையாக இருந்தது. பாஸ்பரசில் தான் அமைந்துள்ள நிலையால் கிட்டக்கூடிய ஆதாயங்களை முழுஅளவுக்குப் பயன்படுத்திக்கொள்ள அது ஒரு போதும் சிரத்தை எடுத்துக் கொண்டதில்லை. மேற்குக்கும் கான்ஸ் டான்டிநோபிளுக்கும் இடையே மிகக் குறைந்த அளவே வாணிகம் நடைபெற்றது; அதுவும் ராணுவ நடவடிக்கைகளே இந்த அளவுக்கேனும் வாணிகம் நடைபெறுவதற்கு ஒரே தூண்டுகோலாக இருந்தன.

(இடம் காலியாக விடப்பட்டுள்ளது)

* * *

எகிப்திலும் சிரியாவிலும் இருந்த சாரசன்களின் ஆட்சியும் அன்றைய பைசாண்டிய ஆட்சியைவிட அத்தனை அதிகம் ஒளி யூட்டக் கூடியதாக இருக்கவில்லை.

எனினும் இந்தப் பாடழிவுகளுக்கிடையேயும் இத்தாலி மத்திய காலத்தின் வாணிக சக்திகளையும் அறிவுத்துறை சக்தி களையும் பேணி பாதுகாத்து வந்தது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் இத்தாலியின் வடகிழக்குப் பகுதியிலும், தென்மேற்குப் பகுதி யிலும் உண்மையிலேயே வாணிக நடவடிக்கைகள் அதிகரித்திருப் பதைப் பார்க்கிறோம். அது இத்தாலிய நகர-குடியரசு சகாப்த மாகும். இந்தக் குடியரசுகள் எல்லாம் கிழக்கத்திய வாணிக நட வடிக்கைகளிலேயே கொழுத்து வளம்பெற்றன. ஒவ்வொரு நகர-குடியரசும் ''நனிசிறந்த கிழக்கின் தயவால் மிகுந்த ஆதாயம் அடைந்தன.''

இவற்றில் முதலாவதும் முதன்மையானதும் அமால்பி. 820 ஆம் ஆண்டுவாக்கில் அது மிகப் பெரும் போராட்டம் நடத்தி

கிழக்கத்தியப் பேரரசிடமிருந்து தனது சுதந்திரத்தைப் பெற்றது. அதன் கடல் நடவடிக்கைகள் மிகத் துரிதமாக வளர்ச்சியடைந்தன; இதனால் ரோமாபுரி மீது சாரசன்கள் கடல்வழித் தாக்குதல்கள் நடத்தியபோது அவர்களைச் சரிநிகர் சமமாக எதிர்த்துப் போராடும் அளவுக்கு அவர்களது கப்பற்படை ஆற்றல் மிக்கதாகப் பரிணமித்து விட்டது; அதன் வாணிகத்தளங்கள் (தற்காலிக வாணிக நிறுவனங் கள்) பாலர்மோ, சிராகுஸ், மெஸ்ஸினா, துரஸ்ஸோ, கான்ஸ்டாண்டி நோபிள் முதலிய பல்வேறு நகரங்களில் அமைந்திருந்தன. '**டேபுளா அமால்பிதனா**'' என்னும் அதன் கடற் பயண விதிகள் கடல்வழி வாணிகத்தில் ஈடுபட்டிருந்த வாணிகர்களால் கடைப்பிடிக்கப் பட்டன; அந்தக் குடியரசின் நாணயம் லத்தீன் ஐரோப்பாவுக்கும் லெவத்துக்கும் இடையே பிரதான நாணயச் செலாவணியாகப் பயன்படுத்தப் பட்டது; இந்த அளவுக்கு ஒரு வாணிகக் குடியரசு என்ற அதன் புகழ் எங்கும் பரவியிருந்தது.''[1]

எனினும் அமால்பியின் துறைமுகம் மிகச் சிறியது; ஒரு மாபெரும் வாணிக மையமாக அது திகழ்வதற்கு இது பெரும் இடையூறாக இருந்தது. எனவே, தனது போட்டியாளர்களுக்கு அது விட்டுக்கொடுக்க வேண்டியதாயிற்று. நேப்பள்ஸ், சாலர்னோ, பிரிந்திசி முதலிய வற்றை அடிபணிய வைத்த நார்மன்களின் நிலப் பசிக்கு அது இரையாயிற்று; கடல் ஆதிக்கத்தில் மற்ற குடியரசுகள் அதனை விஞ்சி நின்றன.

அமால்பி வீழ்ச்சியடைந்தபோது வெனிஸ் எழுச்சியுற்றது. ''சார்ல்மாக்னே காலம் முதல் அட்ரியாட்டிக்கின் ராணியான வெனிஸ் லத்தீன் உலகின் அரசியலிலும் சரி வாணிகத்திலும் சரி பங்கெடுத்துக் கொள்ள ஆரம்பித்தது. அதன் இட அமைவு இத்தாலியின் வேறு எந்தத் துறைமுக நகரத்தையும் விட அதற்கு மிகுந்த அனுகூலங்களைப் பெற்றுத் தந்தது. அது தலைநிலப் பரப்பிலிருந்து கடலாலும் பரந்த கடலிலிருந்து கடற்கழிகளின் தாழ்ந்த சுவர்களாலும் பிரிக்கப்பட்டிருக் கிறது. சுற்றிலும் கிட்டத்தட்ட முழுவதுமாக ஆழமில்லாத நீர்நிலை களால் சூழப்பட்டிருக்கின்றன; ஒரு சில ஆழமான கால்வாய்கள்தான்

1. ரேமாண்ட் பிரஸ்லே, 'தற்கால நிலவியலின் தோற்றம்'', தொகுதி II.

அவற்றை ஊடுருவிச் செல்லுகின்றன. வெனிஸ் எவ்விதத் தாக்குதலுக்கும் அப்பாற்பட்டது என்று அந்நகர மக்களாலும் அதேபோன்று அயல்நாட்டினராலும் பொதுவாகக் கருதப்பட்டு வந்தது. அந்தக் கண்டத்தின் அரசியல் குழப்பங்கள் அடில்லா காலம் முதல் அதனை தஞ்சம் நாடிவருவோரின் புகலிடமாக்கிவிட்டன. அட்ரியாட்டிக்கில் கடல்சார்ந்த அளவில் அதற்குப் போட்டி யாரும் இல்லை; வாணிக நடவடிக்கைகளுக்கும், காலனி நடவடிக்கைகளுக்கும், இன்னும் சொல்லப்போனால் நாடுபிடிக்கும் நடவடிக்கைகளுக்கும்கூட இது மதிப்புவாய்ந்த, விரிந்து பரந்த ஒரு செயற்களத்தைத் தோற்றுவித்துத் தந்தது.''[1] பரந்த மனோபாவம் கொண்ட அதன் நேரிய நடுநிலைமையும், பைஜான்டியனுடன் அதற்கிருந்த நேசமும் நெருக்கமும் அதன் வளமையை, செழுமையைப் பெரிதும் பெருக்கின; மேலும், கிழக்கத்தியப்பேரரசு நலிவுற்றபோது அட்ரியாட்டிக் கடற்கரை முழுவதுமே அதன் செல்வாக்கின் கீழ் வந்தது; பைஜான்டியன் கடற்கரை, அன்டியோச், இனோபுயஸ்டயியா, அதனா, தார்சுஸ், அட்டாலியா, ஸ்ட்ரோபிலோஸ் சியோஸ், எபிசஸ், போயசியா ஹிரக்லியா, செலிம்பிரியா, கிரைசோபோலிஸ், தெமட்ரியாஸ், அட்ரியனோபோல், ஏதென்ஸ், தீப்ஸ், திஸ்ஸலோனிகா, நீக்ரோபான்ட், கொரிந்த் கோர்பஸ், துரஸ்ஸோ முதலான பிரதான சந்தைகள் வெனிஸ் வாணிகத்துக்குத் திறந்துவிடப்பட்டன. அதன் வாணிகக் கொள்கை மிகவும் தொலைநோக்கு கொண்டதாகவும், விவேகமானதாகவும் அமைந்திருந்தது. ''கடல் சம்பந்தப்பட்ட அனைத்து நடவடிக்கைளைப் பொறுத்தவரையில் எப்போதும் வலியோர் பக்கம் இருக்கும்'' விதிமுறையை வகுத்து, பல சந்தர்ப்பங்களில் அதனைக் கடைப்பிடித்து வந்தது; இதன்மூலம் அது தனது பகைவர்கள் அனைவரையும் நசுக்கிற்று; வலியோருக்கு உகந்தவாறு நடந்துகொண்டு, அவர்களது நட்பாதரவைப்பெற்று பெருமையும் மேன்மையும் அடைந்தது.

மற்றொரு நகர அரசான ஜெனோவா காலம் கடந்து கிழக்கத்திய வாணிகத்தில் பங்கெடுத்துக்கொள்ளமுன்வந்தது. கி.பி.1097ல் அது உயர்நிலை அடைந்திருப்பதைப் பார்க்கிறோம். ''இந்த அரசு ஒரு சுதந்திர அமைப்பாக இருந்ததை **காம்பக்னாவில்** அல்லது அரசியல் சங்கத்தில் அது இடம்பெற்றிருந்தது மெய்ப்பிக்கிறது; இந்த சங்கம் பதினோராம் நூற்றாண்டின் இறுதிவாக்கில் அமைக்கப்பட்டு சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் நிர்வகிக்கப்பட்டு வந்தது; ஓபர்ட்டி போன்ற சமயசார்பற்ற பிரபுக்களுக்கு எதிராக நகரின் தலைமைக் குருக்கள் இதற்கு ஆதரவு அளித்தனர்.[2]

---

1. ரேமாண்ட் பிரஸ்லே, 'தற்கால நிலவியலின் தோற்றம்'', தொகுதி II, பக்கம் 401.
2. மேற்படி நூல், தொகுதி II, பக்கம் 419.

1097 முதல் 1122 வரை ஜெனோவா பல முக்கிய வாணிகச் சலுகைகளைப் பெற்றது; லெவன்டைன் கடற்கரையிலும், ஆப்பிரிக்காவிலும் வாணிகக் களங்களை நிறுவிற்று. அலெக்சாந்திரியா மூலம் எகிப்துக்கும், டூனிஷ் மற்றும் பிரான்ஸ், ஸ்பெயின் ஆகியவற்றின் தெற்குக் கடற்கரை நகரங்களுக்கும் அதன் வாணிகம் விஸ்தரித்தது.

பிசா தோன்றிய கதையும் ஏறத்தாழ ஜெனோவா தோன்றிய கதையைப் போன்றதேயாகும். பிசாவின் கதை 1085லிருந்து தொடங்குகிறது. படைபலம்கொண்டு முஸ்லீம்களிடமிருந்தும், பைசாண்டியப் பேரரசிடமிருந்தும் வாணிகச் சலுகைகளைப் பெறுவதில் அது வெற்றியடைந்தது. அதன் மாபெரும் வாணிகப்பெருக்கம் அனைவரையும் திகைக்கவைத்தது. 'உலகின் கோடிகளிலிருந்து 'வாணிக பூதங்கள்' நகரத்தெருக்களில் திரண்டு மொய்ப்பதைக்கண்டு மேலைய சமய மரபு வழுவாத பழைமைவாதிகள் அதிர்ச்சியடைந்தனர்; திடுக்கிட்டனர்; பாகன்கள், துருக்கியர்கள், லிபியன்கள், பார்த்தியர்கள், கால்டியர்கள் நகரை மாசுபடுத்துவதாக, அதன் சுவர்களைக் கருமைப் படுத்துவதாகக் கோபாவேசத்தோடு குற்றம்சாட்டினர். ஆனால் முக்கியமாக இங்கு ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். அதாவது இனம், சமயம், மொழி போன்றவை சம்பந்தமாக லத்தீன் பழமைவாதிகள் விதித்திருந்த அனைத்துக் கட்டுப்பாடுகள் மீதும் வாணிகம் வெற்றிவாகை சூடியதை இங்கு பார்க்கிறோம்.''[1] வாணிகத்தறையில் பிசாவைப் போல் ஏராளமான சலுகைகளும் உரிமைகளும் பெற்ற குடியரசு வேறு எதுவுமே இல்லை எனலாம். அதன் கடல் சார்ந்த நடவடிக்கைகள் குறுகியகாலமே நீடித்த போதிலும் அவை பெரிதும் புகழ் சான்றவையாக, சிறப்பு வாய்ந்தவையாக இருந்தன.

இந்தக் குடியரசுகளின் வாணிக நடவடிக்கைகள் அவற்றின் ஆரம்ப கட்டத்தில் சிலுவைப் போர்களால், கிறித்தவ சமயப் போர்களால் பெரிதும் ஊக்குவிக்கப்பட்டன. இந்தச் சிலுவைப் போர்கள் அந்நாளைய மிகச் சிறப்பு வாய்ந்த வீரச்செயல்களாக, அருஞ்செயல்களாகக் கருதப்பட்டபோதிலும் அவற்றின் ராணுவ அம்சங்களைப் பற்றி இங்கு நாம் சிறிதும் அக்கறை கொள்ளவில்லை. சிலுவைப் போர்களின் வாணிக அம்சம்தான் பிரதானமாக நமது கவனத்தை ஈர்க்கிறது.

கடல் தனக்கே உரிய அபாயங்களையும் அச்சங்களையும் கொண்டிருந்தது.[2] என்னவாயினும் ஒரு கைபார்ப்போம் என்று

1. ரேமாண்ட் பிரஸ்லே, 'தற்கால நிலவியலின் தோற்றம்'', தொகுதி II, பக்கம் 401.
2. மேற்படி நூல், தொகுதி II, பக்கம் 419.

துணிந்தவர்கள் அரிதாகவே இருந்தனர். ''அந்நாட்களில் தவிர்க்க முடியாத அவசியம் இருந்தாலொழிய எவரும் கடலுக்குச் செல்ல மாட்டார்கள்; ஏனென்றால் கடற்பயணம் என்பது சிறைக்கூடத் துக்குச் செல்லுவது போன்றதாகும். இதல்லாமல், எந்தக்கணத் திலும் கடலில் மூழ்கும் அபாயமும் இருந்தது.''[1] முதல் சிலுவைப் போரின்போது (1096-99) மேற்கொள்ளப்பட்ட தரைவழிப் பயணம் களைப்பும் சோர்வும் சலிப்புமூட்டுவதாக இருந்தது; இந்தக் கசப்பான அனுபவம் நீர்வழிப் போக்குவரத்தின் முக்கியத்துவத்தை சிலுவைப் போர்களில் பங்குகொண்டவர்களுக்கு உணர்த்துவதாக இருந்தது. அச்சமயம் கடல் போக்குவரத்து இந்த இத்தாலியக் குடியரசுகளின் ஆதிக்கத்தில் இருந்தது. எனவே, சிலுவைப் போர்வீரர்கள் தங்க ளுக்கு வேண்டியவற்றைப் பெறுவதற்கு இந்தக் குடியரசுகளை மேலும் மேலும் சார்ந்திருக்கத் தொடங்கினர்; இத்தகைய வாணிகப்பெருக் கத்தால் இக்குடியரசுகளில் வளம்கொழித்தன.

''கிறித்தவ சமயத்தின் லட்சியத்துக்கு சேவை செய்யும் அதேசமயம் இக்குடியரசுகள் அதன் மூலம் தமது சொந்தத் தேவைகளையும் பூர்த்தி செய்து கொண்டன. அவை தமது வாணி கத்தைப் பன்மடங்கு பெருக்கிக் கொண்டன; முக்கியமாக ஏற்றுமதி, இறக்குமதி வாணிகத்தை வெகுவாக வளர்த்துக் கொண்டன. அது மட்டுமல்ல, லெவந்த் கடற்கரைகளில் பாதிக்கும் அதிகமாக அரசியல் சலுகைகளைப் பெற்றதோடு அங்கு தங்கள் நிலையையும் வலுப் படுத்திக் கொண்டன. சிலுவைப் போர்களில் ஈடுபட்டிருந்த மன்னர் களுக்கு காலப்போக்கில் அவை மிகவும் இன்றியமையாதவையாகி விட்டன. ஆட்சிப் பொறுப்பில் இருப்பவை என்ற முறையில், சிலுவைப் போர்களின் பிரதான பளு அவற்றின்மீது சுமரும் வரை யில் மனம்போனப்போக்கில் அவை பல்வேறு நிபந்தனைகளை விதித்து வந்தன.''[2] சிலுவைப் போர்கள் வெவ்வேறு கோணங்களி லிருந்து நோக்கப்பட்டன. கத்தோலிக்க திருச்சபை இரட்டை நோக்கம் கொண்டிருந்தது. தூயதிரு பெர்னார்டின் வார்த்தைகள் இதை மெய்ப்பிக்கின்றன. அவர் பின்வருமாறு கூறுகிறார்: ''இந்த எண்ணற்ற பெருந்திரளில் பல்வேறு வகைப்பட்ட மக்கள் இருக் கிறார்கள்; நல்லவர்கள் இருக்கிறார்கள்; நற்பண்புடையவர்கள் இருக் கிறார்கள்; நற்சீலர்கள் இருக்கிறார்கள்; மாசுமருவற்ற பக்தர்கள் இருக்கிறார்கள். அதேசமயம் இக்கும்பலில் கொடியவர்களும், கொலைகாரர்களும், கடவுள் பற்றில்லாதவர்களும், சமயத்தை இகழ்பவர்களும் பொய்ச்சத்தியம் செய்பவர்களும், புனிதத் தன்மையை

1. பிரேஸ்லி, தொகுதி II, பக்கம் 407.
2. மேற்படி நூல், தொகுதி II, பக்கம் 407.

மதியாது அவச்செயல் புரிபவர்களும் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட கயவர்கள் நம்மை விட்டுச் செல்வது இரட்டை ஆதாயமாகும். அவர்களை இழப்பதில் ஐரோப்பா களி உவகை அடைகிறது; அதேசமயம் அவர்களைப் பெறுவதில் பாலஸ்தீனம் பெருமிதம் கொள்கிறது; அவர்கள் இங்கு இல்லாதிருப்பது, அங்கு இருப்பது ஆகிய இரு வகைககளிலும் பயனுள்ளவர்களாக இருக்கிறார்கள்.''[1] அதிருப்தியுற்ற பிரபுக்களும், பொறுப்புக்களைத் தட்டிக்கழிக்கத் துடிப்பவர்களும், குற்றவாளிகளும், பாபாத்மாக்களும் சிலுவைப் போர்களையும் அவற்றின் நோக்கங்களையும் பற்றித் தமது சொந்தக் கண்ணோட்டங்களைக் கொண்டிருந்தனர்; இதேபோல் புத்தார்வ மிக்கவர்களும் ஆழ்ந்த சமயப்பற்றுள்ளவர்களும் இது விஷயத்தில் தங்களுக்கே உரித்தான கருத்துக்களைக் கொண்டிருந்தனர். ''ஆனால் வாணிகக் குடியரசுகளைச் சேர்ந்த தந்திரக்காரர்களான வணிகர்கள் உட்புற மாவட்டங்களைச் சேர்ந்த சராசரி கத்தோலிக்கப் பிரபுக்களிட மிருந்தும் தொழிலாளர்களிடமிருந்தும் முற்றிலும் மாறுபட்டமுறை யில் சிலுவைப் போர் வீரர்களைப் பார்த்தனர்; அவர்களை அறவே வேறுபட்ட கண்களைக்கொண்டு நோக்கினர்; அவர்களுக்குச் சமயப் பற்று இல்லை என்று இதற்குப் பொருள் அல்ல; ஆனால் இதனை அவர்கள் ஒரு தவிர்க்க முடியாத உணர்வாக அல்லாமல் ஒரு பய னுள்ள பண்டமாக, விற்பனைச் சரக்காகப் பாவித்தனர்; இஸ்லா மிடம் அவர்கள் குருட்டுத்தனமாக பகைமை காட்டவில்லை; அதேபோல், விவிலிய நூலில் குறிப்பிடப்பட்டுள்ள புனிதத் தலங் கள் மீதான உணர்ச்சிகரமான பயபக்தி எந்த அளவுக்கு ஆயிரக் கணக்கான போர்வீரர்களையும் யாத்ரிகர்களையும் பாலஸ்தீனம் நோக்கி அணிதிரண்டு செல்லத் தூண்டி ஊக்குவித்ததோ அந்த அளவுக்கான பக்தியை இந்தப் புண்ணிய தலங்களிடம் இவர்கள் காட்டவில்லை. வெனிசையும் பிசாவையும், ஜெனோவாவையும் அமால்பியையும் ஆட்சிபுரிந்தவர்களின் மனங்களில், எங்கெங்கோ இருந்து சரக்குகளை வாங்கிவந்து விற்றவர்களின் உள்ளங்களில் வாணிப ஆர்வம் என்றுமே குன்றிக் குறைந்து, இல்லாதொழிந்த தில்லை.''[2] சிலுவைப் போர்களின் விளைவுகள் எதிர்பாராத விதமாக அமைந்திருந்தன. சிலுவைப்போர்வீரர்கள் என்றும் எண்ணி யிராத, உத்தேசித்திராதவற்றை அவை சாதித்தன; இதனால் கிட்டிய ஆதாயமும் அற்பமானதல்ல; ''சிலுவைப் போர்களின் நிலவழி வெற்றி பல மேலைய நாடுகளின் கடல்வழி வளத்துக்கு வகை செய்தது; இந்த சமயப்போர்கள் முடிவடைந்தபோது, இவற்றின்

1. ''ஐரோப்பாவின் வரலாற்றுக் குறிப்புகள்'' என்னும் தங்கள் நூலிலிருந்து பிரேஸ்லி மற்றும் ராபின்சன் மேற்கோள், பகுதி I, பக்கம் 471,

2. பிரேஸ்லி - தொகுதி II, பக்கம் 408.

பிரதான பலன்கள் கிறித்தவ வாணிகத்தின் விஸ்தரிப்பிலும், கிழக் கத்திய மற்றும் மூரிஸ் நாகரிகத்தின் கணிசமான பகுதி தன்வயப் படுத்திக்கொள்ளப்பட்டதிலும் பிரதிபலிக்கக் காணலாம். இந்தப் பிரம்மாண்டமான மோதலில் கிழக்கும் மேற்கும் சந்தித்துக் கொண்டது அரசியல் கண்ணோட்டத்திலிருந்து நோக்கும்போது ஐரோப்பாவுக்கும் கத்தோலிக்க உலகத்துக்கும் அப்படி ஒன்றும் பெரிய அளவில் நிரந்தரப்பலன் எதையும் அளித்துவிடவில்லை என்றே கூறவேண்டும். எனினும் மறுபுறம் வாணிகத்தின் மூலம் கிறித்தவ தேசங்களின் ஒளிமயமான எதிர்காலத்துக்கு அது வழி திறந்துவிட்டது. சிலுவைப் போர் வீரர்களின் நேரடித் தாக்குதல் வெற்றியடையவில்லை; ஆனால் இந்த சமயப்போராட்டம் ஒரு புதிய கலாசாரத்தையும் பொருளாயத வளத்தையும் கொண்டு வந்தது; அறிவு வேட்கையை அதிகப்படுத்திற்று; பெரும் அளவுக்குச் செல்வத்தைப் பெருக்கிற்று; அயர்வு சோர்வற்ற ஒரு பிடிவாதமான குறிக்கோளை, ஆர்வ விருப்பத்தைத் தூண்டி ஊக்குவித்தது; இதன் கண்கூடான பலன்களை பதினைந்தாம், பதினாறாம் நூற் றாண்டுகளில் நிகழ்ந்த கலை, இலக்கிய மறுமலர்ச்சியில் காண லாம்;' நிலவியலிலும் இயற்கை விஞ்ஞானத்திலும் நிகழ்த்தப்பட்ட மாபெரும் கண்டுபிடிப்புகளில் காணலாம்; இவையெல்லாவற் றுக்கும் மேலாக உலகெங்கிலும் ஐரோப்பிய படைபலமும் துணி வாண்மையும் வெற்றிவாகை சூடியதில் காணலாம்''[1] சிலுவைப் போர்களின் நிலையான பலன்களைப்பற்றி, விளைவுகளைப் பற்றி மேலே கூறப்பட்டவை ஒரு மிகையான வருணனையாகத் தோன்றலாம்; ஆனால் அவை ஐரோப்பியர்களுக்கு ஒரு முற்போக் கான கல்விமுறையை அளித்தது என்பதிலும், கிறித்தவ மன்னர் களின் ஆட்சிப் பகுதிகள் அழித்தொழிக்கப்பட்ட இடங்களில் வணிகர் களுக்கு நிலையான அடித்தளம் அமைத்துக் கொடுத்து வாணிகத் தைப் பேணி வளர்த்துள்ளது என்பதிலும் ஐயமில்லை.

சிலுவைப் போர் வீரர்களுக்கு அளித்த உதவி காரணமாக இத்தாலியக் குடியரசுகள் மிகப் பெருமளவுக்கு ஆதாயம் அடைந் தன; கைம்மாறு பெற்றன. சீனாவில் புதுவகையான 'செல்வாக்கு மண்டலங்கள்'' உருவாகக்கூடும் என்பதை எதிர்பார்த்து, இக்குடியரசு கள் ஒன்றுக்கெதிராக ஒன்று தத்தமது சொந்த 'செல்வாக்கு மண்ட லங்களை'' அமைத்துக் கொண்டன. மத்தியத்தரைக்கடலின் கிழக்குக் கரைப்பகுதியான லெவன்டுக்குப் பின்னாலுள்ள வாணிக மையங் களைத் தமது கட்டுப்பாட்டின்கீழ் கொண்டு வருவதற்கு அவை ஒன்றுடன் ஒன்று போட்டியிட்டன. ''போராடும் சிரியாவுக்கு எதிர்

1. பிரேஸ்லி, தொகுதி II, பக்கம் 395

முகமாக கரைக்குப் பின்னாலுள்ள முஸ்லீம் பிரதேசம் நான்கு பிரதான வாணிக மையங்களைக் கொண்டிருந்தது. அவை வருமாறு: அலெப்போ, டமாஸ்கஸ், ஹெம்ஸ் அல்லது எமெசா மற்றும் ஹாவத் ஆகியவை. இவற்றுக்கும் அப்பால் இன்னும் பெரிய வாணிக மையங்களான பாக்தாத்தும், மோசுலும், பஸ்ஸோரா அல்லது பஸ்ராவும் டைக்ரிஸ் நதியை ஒட்டி அமைந்திருந்தன. அப்பாசிட் காலிபின் தலைநகரிலிருந்து மேற்குப்புறமுள்ள அன்டியோச்சுக்கும் லாடிசியாவுக்கும் செல்லும் வாணிக மார்க்கத்தில் அலெப்போ தலைமை மையமாகத் திகழ்ந்தது. இந்த மாபெரும் மார்க்கம் இரேக், பெர்சியா, கோரசன், பட்டுக்கேந்திரமான அல்லப்பி வழியாகச் சென்று தொலைதூரக் கிழக்கத்திய நாடுகளை அடைகிறது என்று எத்ரிசி கூறுகிறார். பதிமூன்றாம் நூற்றாண்டின் இறுதிவாக்கில்கூட பட்டு சம்பந்தப்பட்ட பொருள்கள் மற்றும் படிகாரம் முதலியவற்றில் வாணிகம் செய்யும்பொருட்டு வெனீசிய வணிகர்கள் இங்கு குடியிருந்தனர். சிலுவைப் போர் வீரர்கள் அன்டியோச் நகரைக் கைப்பற்றியபோது அங்கு மிளகு போன்ற பொருள்கள் இருப்பதைக் கண்டனர்; இந்த மார்க்கத்தின் வழியாக மத்தியதரைக்கடல் நாடுகளுடன் இந்திய வாணிகம் நடைபெற்றது என்பதற்கு இதுசான்று பகர்கிறது. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்த வாணிகம் நடைபெற்றது என்று கிறித்தவ திருச்சபையின் மூத்த உறுப்பினரான சனுட்டோ கூறுவதும் அநேகமாக உண்மையாக இருக்கலாம். பழங்காலத்தில் பெரும்பாலான கீழைநாட்டுப் பொருள்கள் இந்த மார்க்கத்தின் வழியாகவேதான் ரோமாபுரிக் கடற்கரையை அடைந்தன''[1] சாரசன் துருப்புகள் மற்றும் கிறித்தவத் துருப்புகளின் துரித முன்னேற்றம் இந்தியாவுக்கான செங்கடல் மார்க்கத்தை எவ்வகையிலும் பாதிக்கவில்லை; அலெக்சாந்திரியா ''இரு உலகங்களின் வாணிகச் சந்தையாக'' தொடர்ந்து நீடித்து வந்தது.

இந்த இத்தாலியக் குடியரசுகள் கீழைநாட்டுப் பண்டங்களை வாங்கி ஐரோப்பா கண்டத்தின் வடக்கே ஆல்ப்ஸ் மலைக்கு அப்பாலுள்ள நாடுகளுடன் வாணிகம் செய்ய ஆரம்பித்தன; இவ்வாறு அவை மத்திய தரைக்கடல் மார்க்கத்தின் முதுகெலும்பாக இருந்து வந்தன. வடக்கு உண்மையில் அரைக் காட்டுமிராண்டித்தனமான நிலையில் இருந்தது. பால்டிக்கில் வாணிக நடவடிக்கைகள் மிகவும் குறைவு. ஸ்காண்டினேவியன் ''பாதி வணிகனாகவும் பாதி கொள்ளைக்காரனாகவும்'' இருந்தான். 'நாம் அறிந்தவரை...(வடக்கே) இந்த வாணிக நடவடிக்கை பினீசியர்கள் மற்றும் அவர்களை இத்துறையில் இறக்கிவிட்ட கிரேக்கர்களின் வாணிக நடவடிக்கைகளிலிருந்து

1. பிரேஸ்லி, தொகுதி II, பக்கம் 441.

இரண்டு முக்கிய அம்சங்களில் மாறுபடுகிறது. இது முழுஅளவுக்கு ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கவில்லை. இதற்குமாறாக, பினீசியர்கள் பலமுக்கிய இடங்களில் வாணிக களங்களை அமைத்திருந்தனர். தொலைதூர நாடுகளில் நகரக்குடியரசுக்கு நிரந்தரக் காலனிகள் இருந்தன; அவற்றின் உரிமைகளும் கடமைகளும் அங்கீகரிக்கப்பட்டிருந்தன. ஆனால் நகரங்களுக்கும் காலனிகளுக்கும் இடையே குதிரை வாணிகம் நடைபெற்றதாகத் தெரியவில்லை. ஸ்காண்டனேவியன் தீரச்செயல்கள் புரிவதில் ஆர்வம் மிக்கவன்; எவ்வளவு முடியுமோ அவ்வளவு செல்வம் சேர்த்துக் குவிப்பதற்காக அவன் அயர்வு சோர்வின்றி அலைந்து திரிந்தான்; தகுந்த சந்தர்ப்பம் வாய்க்கும்போது ஒரு பண்ணையை உருவாக்கி அதில் குடியமர்ந்துகொண்டான். வேறுசில டியூட்டானியர்களைவிட குதிரை வீரர்களுக்கு நகர வாழ்க்கையின்பால் அதிக நாட்டம் இருப்பது சாத்தியம்; ஆனால் அவர்கள் உழவர்களாகவும் கடல்கடந்து குடியேறுபவர்களாக மாறவும் தயாராக இருந்தனர்; வாணிகத்தோடு நின்றுவிட அவர்கள் விரும்பவில்லை.[1]''

குதிரைவீரர்கள் கிறித்தவ சமயத்தைத் தழுவதற்கு முன்னர் அமைதியான வாணிகத்துக்குப் பேரச்சுறுத்தலாக இருந்தனர். ஆனால் அவர்கள் கிறித்தவ சமயத்துக்கு மாறிய பிறகு பிளாண்டர்ஸ் நகரங்களிடையே அமைதியான வாணிபம் நடைபெற ஆரம்பிப்பதற்கான அறிகுறிகள் தென்பட்டன. இங்கிலாந்தின் கம்பளி உற்பத்தி இதில் முக்கிய பங்கு வகித்தது. இங்கிலாந்தின் கம்பளி பிளாண்டர்ஸ் துணிகளுக்குப் பதில் பரிமாறிக்கொள்ளப்பட்டது. பிளாண்டர்ஸ் வணிகர்கள் ''லண்டனின் பிளாண்டர்ஸ் வாணிக நிலையம்'' ஒன்றை அமைத்துக் கொண்டனர். ''வாணிகப்பொருள்கள்'' கிட்டும் நகரங்கள் மூலம் வாணிகத்தைத் தங்கள் கட்டுப்பாட்டின்கீழ் கொண்டு வந்தனர். பிளாண்டர்சுக்கு அப்பால் ஜெர்மன் வாணிகம் ஜெர்மன் வாணிக நிலையத்தின் ஆதிக்கத்தில் இருந்தது. இது வடக்கு ஜர்மனியைச் சேர்ந்த ஏராளமான நகரங்கள் அடங்கிய ஒரு கூட்டுக் குழுவாக இருந்தது. இந்த ஜெர்மன் கூட்டுக்குழுதான் மத்திய காலத்தின் மிகவும் விரிவடைந்த வாணிக அமைப்பாகத் திகழ்ந்தது. வெட்டுமரங்கள், கீல், உப்பு, இரும்பு, வெள்ளி, உப்பிட்ட மற்றும் புகையூட்டிப் பதப்படுத்தப்பட்ட மீன், விலங்குகளின் மென்மயிர் அடர்ந்ததோல்கள், நிமிளை, சில கரடுமுரடான செய்பொருள்கள் முதலியவற்றை இக்குழு பால்டிக் நாடுகளிலிருந்து சேகரித்து, இத்தாலிய வாணிக நகரங்கள் தொலைதூர நாடுகளிலிருந்து வாங்கிய பொருள்களுக்குப் பரிவர்த்தனை செய்துகொண்டது. இவ்வாறு இந்த இத்தாலியக் குடியரசுகளின் வாணிகத்துறை நிறுவனங்கள் மூலம், ''அராபியா, பெர்சியா, இந்தியா, கிழக்கு இந்தியத் தீவுகள், இன்னும் சொல்லப்போனால் சீனா ஆகிய

1. வில்லியம் கன்னிங்ஹாம், ''மேற்கத்திய நாகரிகம்'' (தற்காலம்) பக்கம் 110.

வற்றின் பண்டங்கள் பண்டைக்காலத்தில் போலவே மத்திய காலத்திலும் நீண்டநெடிய கடினமான மார்க்கங்கள் வழியாக மேற்கு ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டன. பட்டு, பருத்தி மூலப் பொருள்கள், இவற்றிலிருந்து நேர்த்தியாக நெய்யப்பட்ட துணிவகைகள், அவுரி மற்றும் இதர சாயப்பொருள்கள், சந்தனக்கட்டைகள், பிசின், மயக்கமூட்டும் மருந்துச் சரக்குகள், இதர மருந்துச் சரக்குகள், முத்துகள், மாணிக்கங்கள், வைரங்கள், நீலமணிக்கற்கள், இரத்தினக் கற்கள், இதர மதிப்புமிக்க கற்கள், தங்கம், வெள்ளி, உணவாகக் கொள்ளத்தக்க நறுமணப்பொருள்கள், மிளகு, இஞ்சி, இலவங்கப்பட்டை, கிராம்பு முதலியவற்றையும் இதர எல்லா வகையான நறுமணப் பொருள்களையும் ஆசியாவில் மட்டுமே வாங்க முடியும்.''[1] இவ்விதம் ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடையேயான வாணிகம் உயிர்நாடியானதாக அமைந்ததோடு, பல்வேறு வழிகளில் ஊட்டம் பெற்றது.

ஆனால் இஸ்லாமின் தோற்றத்தால் விரைவிலேயே இந்த அமைப்புமுறை பாதிக்கப்பட்டது. வணிகர்கள் தங்கள் சரக்குகளை சுமைதூக்கும் பிராணிகளின் முதுகில் ஏற்றிக்கொண்டு, கல்லென்றும் முள்ளென்றும், பாலைவனமென்றும் பாராமல் கூட்டம் கூட்டமாக மேற்கொள்ளும் காரவான் பயணம் எவ்வளவு தொல்லையும் அலைக்கழிப்பும் மிகுந்தது என்பதை நாம் அறிவோம். இந்நிலைமையில் சாரசன்களின் துரித ராணுவ நடமாட்டங்களால் இப்பயணங்கள் எத்தகைய எண்ணற்ற இக்கட்டுகளுக்கும் இடையூறுகளுக்கும் உள்ளாகியிருக்கும் என்பதை நம்மால் மிக எளிதாக கற்பனை செய்துபார்க்கமுடியும். ஆசியாவிலிருந்து ஐரோப்பாவுக்கு நான்கு பிரதான வாணிக மார்க்கங்கள் இருந்தன என்பதையும், இவை யாவும் சாரசென்களது ஆட்சிப் பகுதிகளின் வழியாகவே சென்றன என்பதையும் இங்கு நாம் நினைவில் கொள்ள வேண்டும். ''சிலுவைப் போர்களின்போது, பாரசீக வளைகுடா மற்றும் செங்கடல் வழியாகச் செல்லும் மார்க்கங்கள் பகை உணர்வு கொண்ட முகமதிய ஆட்சியாளர்களின் கட்டுப்பாட்டில் இருந்தன; இதனால் மற்றொரு மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது; இது அதிக செலவு பிடிக்கக் கூடியதாகவும், சுற்றி வளைத்துச் செல்லுவதாகவும் இருந்தது; மேலும் சில இடங்களில் நில வழியாக சரக்குகளைப் புடைபெயர்ப்பு செய்ய வேண்டியதாகவும், ஆங்காங்கு சரக்குகளை ஏற்றி இறக்க வேண்டியதாகவும் இருந்தது. இந்த மார்க்கம் சிந்து நதிவழியாகச் சென்றது; பிறகு சுமை தூக்கும்

1. எட்வர்டு ஸ்லோ பி. செனே: இங்கிலாந்தின் சமூக மற்றும் தொழில்துறை வரலாறு, பக்கம். 86.

பிராணிகளின் துணைகொண்டு மலைகளைக் கடந்தது; அங்கிருந்து ஆக்சஸ் நதிவழியாகச் சென்று காஸ்பியன் கடலை அடைந்தது. வேறுவழியின்றி இந்தப் பண்டைய மார்க்கத்தையே இப்பொழுது வெனிசும் ஜெனோவாவும் பின்பற்றின. காஸ்பியனிலிருந்து இந்த மார்க்கம் குறிப்பாக வோல்கா உள்ள திசையில்சென்று ஜாரிஸின் என்னும் இடத்தை அடைந்தது; அங்கிருந்து நிலப்பகுதி வழியாக டான் நதியை அடைந்தது; அங்கு நதியின் முகத்துவா ரத்தில், தற் போது அஸோர் எனப்படும் தானா நகரில் வெனிசும் ஜெனோவாவும் அநேக வாணிகச் சலுகைகளைப் பெற்றிருந்தன; மேலும் 12ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்தே வெனிசுக்கு அங்கு வாணிகநல அதிகாரி ஒருவர் இருந்து வந்தார். இதற்குப் பின்னர் கிரிமியாவில் இப்போது ஜட்டா எனப்படும் தியோடோசியா ஜெனோவாவின் ஒரு முக்கிய களஞ்சியமாக இருந்தது''[1] ''இஸ்லாம் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் கிறித்தவ உலகை நெருக்கிற்று. கிழக்கில் போன்றே தெற்கிலும் சிலுவை முன்னேறுவதற்கு எதிராக பிறை ஒரு தடையரணை எழுப்பிற்று.''[2] ஆனால் பிறைக்கும் சிலுவைக்கும் இடையே நடைபெற்ற மாபெரும் போராட்டத்தில் வாணிகம் பெருமளவுக்குப் பாதிக்கப்பட்டது. ''இந்திய வாணிக மார்க்கங்களை ஆட்டமன் பேரரசு கைப்பற்றியது அல்லது தடுத்தது மத்தியதரைக் கடல் குடியரசுகளுக்குப் பேரிடரை விளைவித்ததோடு நின்றுவிட வில்லை. முதல் அடி ஜெனோவா மீதும் வெனிஸ் மீதும் விழுந்தது; ஆனால் இந்த அடி ஐரோப்பிய வாணிக அமைப்பு முழுவதையுமே ஆட்டிக்குலுக்கி அதிரவைத்தது. ஆசியாவின் பண்டங்கள் கிறித்தவ உலகின் மத்திய தேசங்களையும், வடக்கு தேசங்களையும் அடை வதற்கு ஜெர்மன் வாணிகநகரங்களின் கூட்டுக்குழுதான் பிரதான சாதனமாக இருந்தது''.[3] இத்தாலியக் குடியரசுகள் மூலம் வரும் கிழக்கத்தியப் பண்டங்கள்மீது தனக்கு இருந்த கட்டுப்பாட்டின் காரணமாகவே பிரதானமாக இக்குழு ஆதாயமடைந்தது. ஆரம்ப காலம் முதலே ''ஜெர்மனியும் வடக்கு இத்தாலியின் உட்பகுதியும் கீழைநாட்டுப் பண்டங்களுக்கு (வெனிஸ்) குடியரசையே சார்ந்து நின்றன; 1017ல் (★ ) நறுமணப்பொருள்களை ஏற்றிவந்த கப்பல் உடைந்து மூழ்கியதை ஒரு பெரிய துரதிருஷ்டம் என்று (★) ஒரு வரலாற்றுப் பதிப்பாளர் குறிப்பிட்டிருக்கிறார்''[4] ''ஜெர்மன் வாணிக

1 ஜே.அம்.ஓ.எஸ்.

2. டபிள்யூ.எம். கன்னிங்ஹாம், "மேற்கத்திய நாகரிகம்", (தற்காலம்), பக்கம் 130.

3. டபிள்யூ. டபிள்யூ. ஹன்டர், பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாறு, தொகுதி I, பக்கம் 52.

4. பிரிசெலி, தொகுதி II, பக்கம் 405.

நகரங்களது இந்தக் கூட்டுக்குழுவின் வாணிக நடவடிக்கைகளில் இந்திய வாணிகம் ஒரு முக்கிய பங்கு வகித்தது. கிழக்கிந்தியப் போக்கு வரத்து தடைபட்டபோது அதன் ஐரோப்பிய வாணிக மையங்கள் சிதைந்து சீர்குலைந்தன.''*[1] பழைய வாணிக மார்க்கங்களின் இந்த வழியடைப்பில்தான் (★) மேற்கு ஐரோப்பாவின் வாணிக கொடுக் கல்வாங்கல் பெருக்கம் அடங்கியுள்ளது. நிலைமை முழுவதையும் பேராசிரியர் ஏ.எஃப் போலண்ட் இரத்தினச் சுருக்கமாக எடுத் துரைக்கிறார்; (★) பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் அமெரிக்கா ஏன் கண்டுபிடிக்கப்பட்டது என்பதற்கு (★) துருக்கியர்கள் இடையூறு செய் பவர்களாக இருந்ததால்தான் 1492ல் அல்லது அதற்குச் சற்று முன்னர் பின்னர் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தார் என்று கூறுவது புதிரான பதிலாகத்தான் இருக்கும். இவ்வாறு தொடர்புப்படுத்திக் கூறுவது ஐயத்துக்கிடமின்றித் தெளிவானதாக இல்லை. ஆனால் தெளிவான தொடர்புகள் எப்போதும் மேலெழுந்த வாரியானதாக இருக்கும்; இதுவோ மிகவும் ஆழமானது. ஜெர்மானி யர்கள் மத்தியில் ஒரு பழமொழி வழங்குகிறது: **டெர்மன்ஸ்ச் எஸ்ட் வாஸ் அரிஸ்த்** என்பதுதான் அந்தப் பழமொழி - மனிதன் எதைச் சாப்பிடுகிறானோ அவ்வாறே இருக்கிறான். இது (★) அந்த மக்களுக்கு ஒரு பொன்மொழியாக இருக்கிறது. (இங்கு வாசகம் பூர்த்தியடையாததாகத் தோன்றுகிறது - ஆசிரியர்).

★ ★ ★

★ தெளிவாக இல்லாத, அழிக்கப்பட்ட சொற்கள் விடப்பட்டு, அடைப்புக் குறிக்குள் இடம் காலியாக விடப்பட்டிருக்கிறது - ஆசிரியர்.

1. டபிள்யூ.டபிள்யூ. ஹன்டர், தொகுதி I, பக்கம் 53.

## இயல் III*

# மன்னர்பிரான் அரசு ஆட்சிப் பொறுப்பை ஏற்கவிருந்த தருணத்தில்- இந்தியா

உலகில் வேறு எதையும் விட ஏகாதிபத்தியம் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய தேவையில் உள்ளது; ஏகாதிபத்தியவாதிகளுக்கும் விவேகம் போதாது.

கிரேக்கர்கள் ஏகாதிபத்தியம் என்பதற்கு எந்த ஒரு சொல்லையும் கண்டுபிடிக்காதவர்கள்; நகர அரசுகளின் ஒரு கூட்டமைப்பை உருவாக்கும் யோசனையையும் அறியாதவர்கள். ஆனால் ரோமானியர்கள் அப்படியல்ல; அவர்கள்தான் உலகின் முதலாவது மிகப் பெரிய ஏகாதிபத்தியவாதிகள், பேரரசுவாதிகள்; ஏகாதிபத்தியக் கோட்பாட்டை அவர்கள் நியாயப்படுத்தியதோடு, அது அவர்களுடைய கால்வழியினரின் ஒரு மரபுரிமையுமாகி விட்டது.

அவர்கள் தாங்கள் மிகவும் மேம்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று மார்தட்டிக்கொண்டார்கள்; தங்களுடைய கலாசாரம் வேறு எந்தக் கலாசாரத்துடனும் ஒப்பிடமுடியாத அளவுக்கு உன்னதமானது என்று பூரித்துப்புளகாங்கித மடைந்தார்கள்; தாங்கள் மிகச் சிறந்த ஆட்சி அமைப்பு முறையை உருவாக்கியிருப்பதாகவும் பெருமைப்பட்டுக் கொண்டார்கள்; வாழ்க்கைக் கலைகளில் தாங்கள் துறை போனவர்கள் என்றும் இறும்பூதெய்தினார்கள். இத்துடன் அவர்கள் நிற்கவில்லை. உலகிலுள்ள ஏனைய மக்கள் அனைவரும் கீழான இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று தூற்றினார்கள்; கலை உணர்வே அறவே இல்லாதவர்கள் என்று பழித்தார்கள்; அவர்களது ஆட்சிமுறை கொடுங்கோன்மையானது என்றும் இகழ்ந்தார்கள். இத்தகைய சாக்குபோக்குகளை எல்லாம் கூறி ரோமானியர்கள் ஒரு விபரீதமான, விந்தையான வாதத்தை முன்வைத்தார்கள்: அதாவது அதலபாதாளத்தில் வீழ்ந்துகிடக்கும் தங்களது சகோதரர்களைக் கைதூக்கிவிட்டு, அவர்களை நாகரிகப்படுத்துவது தங்களது தெய்வீகப் பணியாகும் என்று குதர்க்கவாதம் பேசினார்கள்; மனித குலத்தின் நலனுக்காக அவர்களை வெற்றிகொண்டு, அவர்கள் மீது தங்களது

---

★ கையெழுத்துப்பிரதியில் இந்த இயல் V என இருக்கிறது. இயல்கள் III-ம், IV-ம் அடுத்தடுத்து இடம்பெறவில்லை. - ஆசிரியர்.

கலாசாரத்தைத் திணிப்பது தங்களது கடமை என்றும் கூச்சநாச்சமின்றி உரிமை கொண்டாடினார்கள்.

இவர்கள் காட்டிய இந்த விநாசகரமான பாதையிலேயே பிரிட்டிஷாரும் நடைபோட்டார்கள்; இதேபோன்ற கவைக்குதவாத வாதங்களை முன்வைத்து இந்தியாவில் தங்களது ஏகாதிபத்தியக் கொள்கைக்கு சப்பைக்கட்டு கட்டினார்கள். பிரிட்டிஷ் வரலாற் றாசிரியர்களும் இதற்குப் பக்கப்பாட்டு பாடினார்கள். அவர்களுக்கு ஒரு நூதனமான நோய் உண்டு: அவர்களது கண்பார்வை இந்தியா வில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்பிருந்த ஆட்சியாளர்களின் குறை பாடுகளையே பெரிதுபடுத்திக்காட்டும், நற்கூறுகளை எவ்வகை யிலும் கண்டுகொள்ளாது. மொகலாய ஆட்சியாளர்களையும் மராத்தா ஆட்சியாளர்களையும் கொடுங்கோலர்கள், கொள்ளைக் காரர்கள், வல்லாட்சியாளர்கள் என்றெல்லாம் வசை பாடியதோடு அவர்கள் நிற்கவில்லை; இந்திய மக்கள் அனைவரது ஒழுங்குணர் வையும் அவர்களது நாகரிகத்தையும் பெரிதும் இகழ்ந்தார்கள், ஏசினார்கள், வரைமுறையின்றி அவற்றுக்குக் களங்கம் கற்பித் தார்கள்.

பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாற்றாசிரியர்கள் பிரிட்டிஷ் ஆட்சியை அதற்கு முந்திய ஆட்சிகளுடன் ஒப்பிடும் தவற்றை அடிக்கடி செய்தார்கள். வரலாற்று நெறிமுறைகளின்படி நியாய மாக அவர்கள் என்ன செய்திருக்க வேண்டும்? இந்தியாவின் ஆட்சி யாளர்களை அச்சமயம் இங்கிலாந்தில் ஆட்சி புரிந்தோருடன் ஒப் பிட்டுப் பார்த்திருக்க வேண்டும். இந்த விதிமுறையை, ஒழுங்கு முறையை நன்கு கடைப்பிடித்திருந்தால், வரலாற்றுத் தவறு பெரு மளவுக்குத் தவிர்க்கப்பட்டிருக்கும். உதாரணமாக, இங்கிலாந்தின் வரலாற்றைப் பார்ப்போம். நார்மனியர்கள் இங்கிலாந்தை வென்று அங்கு ஆட்சி நடத்தியபோது அவர்களது ஆட்சியின்கீழ் ஆங்கிலே யர்களின் மூதாதையர்களான ஆங்கிலோ-சாக்சன்களின் நிலைமை எவ்வாறு இருந்தது? ''ஆங்கிலேயன் என்று கூறுவதே'' ஒரு வசை மொழியாக, இழிசொல்லாக இருந்தது. நீதிவழங்க நியமிக்கப் பட்ட குற்றவியல் நடுவர்கள் அநீதியின் பிறப்பிடமாக, ஊற்றுக் கண்ணாக இருந்துவந்தனர்; நியாயமான, நேர்மையான தீர்ப்புகள் கூறக் கடமைப்பட்ட அவர்கள் கொடுங்கோலர்களிலும் மிகக் குரூரமான கொடுங்கோலர்களாக, பயங்கரமான கொள்ளைக்காரர் களாகக் காட்சியளித்தனர்.; இவர்கள் இப்படியென்றால் பெரிய மனிதர்கள் என்று கூறிக் கொண்டவர்களோ மட்டுமீறிய பணவெறி கொண்டு, அதனை அடைவதற்கு, தங்களது தாகத்தைத் தணிப் பதற்கு, வேட்கையைப் பூர்த்திசெய்வதற்கு எத்தகைய இழிசெயல்

களையும், ஈன காரியங்களையும் செய்யச் சற்றும் தயங்கவில்லை; ஸ்காட்லாந்து இளவரசி தனது அத்துமீறல்களை, அடாவடித்தனங் களை மூடிமறைப்பதற்கு சமயநெறி உடைகளை உடுத்திக் கொண் டதை இதற்கு உதாரணமாகக் கூறலாம். இவற்றை எல்லாம் நினைவுப்படுத்திப் பார்க்கும்போது, முகமதியர்களின் ஆட்சியில் இந்துக்களின் இழிந்தநிலை பற்றிப்படிக்கும்போது அது அப்படி ஒன்றும் மிகுந்த கழிவிரக்கம் கொள்ளத்தக்கதாக, பரிதாபப்படத் தக்கதாக இருக்காது. ''முகமதியர்களின் குரூரம் பற்றி நிறையப் பேசப்படுகிறது; ஆனால் ஜெருசலேமைக் கைப்பற்றிக் கொண் டதும் முதல் சிலுவைப் போர் வீரர்கள் புரிந்த அட்டூழியங்களின் முன்னால் இதெல்லாம் எம்மாத்திரம்! எந்தப் பாகுபாடுமின்றி 40,000 பேர் வாள்முனைக்கு இரையாக்கப்பட்டனர்; பச்சை படுகொலை செய்யப்பட்டனர்; படைக்கலங்கள் மன உறுதி மிக்க வர்களைப் பாதுகாக்கவேயில்லை; பயங்கொள்ளிகளைப் பணிய வைக்கவும் இல்லை; முதியவர்களிடமோ பெண்களிடமோ கருணை காட்டவில்லை; தங்கள் அன்னைமார்களைக் குத்தித்துளைத்த அதே வாளுக்கு அவர்களது பால்மணம் மாறாத சேய்களும் பலி யாயினர். வெட்டிக் குவிக்கப்பட்ட பிணங்கள் ஜெருசலேமின் தெருக்களில் எங்கெங்கும் மலைபோல் குவிந்து கிடந்தன. ஒவ்வொரு இல்லத்திலிருந்தும் வேதனைக்குரல்கள், அவலக்குரல்கள், துயர மிக்க ஓலங்கள் எதிரொலித்தன.''

இவ்வாறு இந்தியாவின் வரலாற்றையும் இங்கிலாந்தின் வரலாற்றையும் ஆய்ந்து அந்நாட்களில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை ஒப்புநோக்கினால் ஒவ்வொரு சுதேசி ரோலண்டுக்கும் ஒரு ஆங்கி லேய ஆலிவர் இருப்பதைக் காணலாம். எனவே இந்தியாவைப் பற்றி எழுதியுள்ள ஆங்கிலேய வரலாற்றாசிரியர்களுக்கு சர் தாமஸ் மன்றோ விடுத்துள்ள எச்சரிக்கையை இங்கு நாம் நினைவு கூருவது உசிதமாக இருக்கும்; அவர் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்: ''ஏனைய நாடுகளை இங்கிலாந்துடன் ஒப்பிடும்போது, தற்போதைய இங்கிலாந்தை மனத்திற் கொண்டே பொதுவாகப் பேசுகிறோம். சமய சீர்திருத்தத்திற்கு முந்தைய காலத்துக்குச் செல்வது பற்றி நாம் அரிதாகவே சிந்திக்கிறோம். ஒவ்வொரு அயல்நாட்டையும் அறியாமையில் மூழ்கிய, அநாகரிக நாடாகக் கருதவே முற்படு கிறோம்; இன்றைய அதன் முன்னேற்றம் நமது முன்னேற்றத்தின் அளவுக்கு இல்லாவிட்டாலும் கடந்த காலத்தில் நம்மைவிட அது முன்னேறியிருந்தது என்பதை மறந்து விடுகிறோம்.''

எனவே, பிரிட்டிஷார் வருவதற்கு முன்னர் இந்தியாவை ஆண்டுவந்த ''கொடுங்கோலர்களையும் கொள்ளைக்காரர்களையும்''

பற்றிப் பார்ப்போம்; அவுர்களது ஆட்சிக் காலத்தில் அவர் களுடைய செயற்பாடுகளையும், அவர்கள் ஆட்சியின் கீழ் இருந்த மக்களின் நிலைமையையும் பரிசீலிப்போம்.

இதனைத் தெரிந்து கொள்வது கிழக்கிந்தியக் கம்பெனியின் கீழ் மக்களின் பொருளாதார நிலையை சரியாக, துல்லியமாக மதிப் பிடுவதற்கு முற்றிலும் இன்றியமையாதது.

பண்டைக்காலத்தில் இந்தியா கண்டிருந்த பொருளாதார வளமையை, செழுமையை இங்கு விரிவாக எடுத்துரைக்க வேண்டிய அவசியமில்லை; ஏனென்றால் இது குறித்து ஏற்கனவே நிறைய கூறியுள்ளோம்.

முகமதிய படையெடுப்பு நடைபெற்ற காலத்தில் இந்தியா செல்வம் செழித்துக்கொழிக்கும் நாடாகத் திகழ்ந்தது என்பதில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் ஒருமித்த கருத்து நிலவுகிறது. கன்னோஜின் சீரும் சிறப்பும், சோமநாத் ஆலயத்தின் எல்லையற்ற செல்வமும் இதற்குச் சான்று பகர்கின்றன. இந்தியா வின் முசல்மான் முடிமன்னர்களை முரடர்களாகவும், கொடுங்கோலர் களாகவும், குரூரமானவர்களாகவும் இருந்தனர் என்று நினைப்பது தவறு. இதற்குமாறாக, இவர்களில் பெரும்பாலோர் வியக்கத்தக்க குணப் பண்புகளைக் கொண்டவர்களாக விளங்கினர். உதாரண மாக கஜினி முகமதை எடுத்துக்கொண்டால், அவர் சான்றோருக்கும் கற்றோருக்கும் வற்றாது வரையாது வாரி வழங்கியதையும், இதனால் ஆசியாவிலேயே வேறுஎங்கும் இல்லாதபடி அவருடைய தலைநகரம் இலக்கிய விற்பன்னர்களின், மேதைகளின் பேரவையாக மிளிர்ந்ததை யும் காண்கிறோம். செல்வம் குவிப்பதில் பேராசை கொண்டவராக இருந்தாலும், நுண்ணறிவாற்றலில் நிகரற்று விளங்கினார்; தமது புகழை எவ்விதம் ஓங்கச் செய்வது என்பதை நன்கு அறிந்திருந்தார்.

இவருடைய புகழ்பெற்ற வழித்தோன்றல்களில் ஒருவர் பெண்மணி ஆவார்(சுல்தானா ரெஸியா); பெரோஸ் ஷா நிர்வாகத் திறமையில் மிகவும் சிறப்புற்று விளங்கியவர். அவருடைய பொதுப் பணிகளில் 'பாசன வசதியைப் பெருக்குவதற்காக நதிகளின் குறுக்கே கட்டப்பட்ட 50 அணைகள், 40 மசூதிகள், 30 கல்லூரிகள், 100 கார வான் அணிகள், 30 நீர்த்தேக்கங்கள், 100 மருத்துவமனைகள், 100 பொதுக்குளிப்பகங்கள், 150 பாலங்கள், மற்றும் மனமகிழ்வு மன்றங் கள், களியாட்டக் களங்கள், அணி வேலைப்பாடுகள் மிக்க நினைவு மன்றங்கள் முதலியவை அடங்கும். இவையெல்லாவற்றுக்கும் மேலாக யமுனை நதியிலிருந்து வெட்டப்பட்டுள்ள கால்வாயைக்

குறிப்பிட வேண்டும். கர்னால் மலைகளிலிருந்து ஹௌசி மற்றும் ஹிஸ்ஸாருக்கு யமுனை நதி செல்லும் இடத்தில் இக்கால்வாய் தொடங்குகிறது; பின்னாளில் பிரிட்டிஷ் அரசாங்கம் இதனை ஓரளவு புனரமைத்தது. இந்த மன்னரைப் பற்றி எழுதியுள்ள வரலாற் றாசிரியர் அவருடைய ஆட்சியில் உழவர்களின் மகிழ்ச்சிகரமான நிலைமையைப் புகழ்ந்துரைத்துள்ளார்; அவர்களுடைய இல்லங் களும் அவர்கள் பயன்படுத்திய தட்டுமுட்டுப் பொருள்களும் நேர்த்தி யானவையாக இருந்ததாக சிலாகித்துள்ளார். தங்கம் மற்றும் வெள்ளி ஆபரணங்கள் பெண்களிடையே சர்வசாதாரணமாகப் புழங்கியதாகக் குறிப்பிட்டிருக்கிறார். நாட்டின் பொதுவான நிலைமை வளம் கொழிப்பதாக இருந்திருக்க வேண்டும். சுமார் கி.பி. 1420ல் இந்தியாவில் சுற்றுப்பயணம் செய்த இத்தாலிய யாத்ரிகர், மிலோ டி கோன்டி தெரிவித்துள்ள கருத்துகள் இதனை உறுதிசெய்வதாக இருக்கின்றன. குஜராத்தில் தாம் கண்டவற்றைப் பற்றி பெரிதும் உயர்வாகக் கூறுகிறார்; கங்கை நதியின் கரைகளில் ஆங்காங்கு எழில் மிகு பூங்காக்களுக்கும் பழத்தோட்டங்களுக்கும் இடையில் வனப்பு மிக்க பல நகரங்கள் உதித்தெழுந்திருப்பதைத் தாம் கண்டதாகத் தெரிவிக்கிறார். மாரஸியாவை அடைவதற்கு முன்னர் அவர் புகழ் பெற்ற நான்கு நகரங்களைக் கடந்துசென்றார். இந்த நகரைப் பற்றி வருணிக்கும்போது அது பெருஞ்செல்வாக்குடைய நகரமென்றும், அங்கு பொன்னும் வெள்ளியும் மணிக்கற்களும் எங்கும் தாராள மாக, ஏராளமாகப் பயன்படுத்தப்படுவதைத் தாம் கண்டதாகவும் அவர் கூறினார். பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இப் பகுதிகளில் சுற்றுப்பயணம் செய்த பார்பாராவும், பார்தமாவும் இவர் கூறியுள்ளதை உறுதிசெய்துள்ளனர். முன்னால் குறிப்பிடப்பட்டவர் முக்கியமாக காம்பேயை சுவைபட வருணித்திருக்கிறார்; அது வனப்பு மிக்க ஒரு நகரம், எல்லா நாடுகளையும் சேர்ந்த வணிகர்களும், கைவினைஞர்களும், பிளாண்டர்ஸ் போன்ற நாடுகளைச் சேர்ந்த பொருள் உற்பத்தியாளர்களும் அங்கு எப்போதும் பெரும் எண்ணிக் கையில் குவிந்துள்ளனர் என்று அவர் கூறுகிறார். சீஸர் பிரெட்ரிக் கும் குஜராத்தைப் பற்றி இதேபோன்ற தகவல்களைத் தருகிறார். பதினைந்தாம் நூற்றாண்டின் மத்தியில் அராஜகமும் ஒடுக்குமுறை யும் மேலோங்கியிருந்த முகமதுபின் துக்ளக்கின் ஆட்சியின்போது, நாட்டின் பல பகுதிகளில் ஆங்காங்கு கிளர்ச்சிகள் நடைபெற்று வந்த சமயத்தில் சுற்றுப்பயணம் மேற்கொண்ட இப்னே-பதுதா மக்கட்தொகை மிகுந்த பல பெரிய நகரங்களையும் ஊர்களையும் பற்றிய விவரங்களைத் தருகிறார். குழப்பமும் கொந்தளிப்பும் அமைதிக்கேடும் ஏற்படுவதற்கு முன்னர் நாடு இருந்த நிலைமை பற்றி மிக உயர்வான கருத்தையே அவர் வெளியிட்டியிருக்கிறார்.''

இந்தியாவில் முகலாய அரசகுலத்தின் நிறுவகரான பாபர் ந[illegible] வளமும் செல்வச் செழிப்பும்மிக்க நிலையில் இருப்பதைக் கண்டார்; அதன் மிகப்பெரும் மக்கட்தொகையையும், எங்கு பார்ப் பினும் எண்ணற்ற கைவினைஞர்கள் நிறைந்திருப்பதையும் பார்த்துப் பெரிதும் வியந்தார். அவர் பரந்த மனோபாவம் கொண்டவர். மக்களுக்கு அவர் ஆற்றியுள்ள பல நற்பணிகள் அவரது அரசியல் மேதகைமை யைப் பறை சாட்டுகின்றன. முகலாயர்களிடமிருந்து அரியணை யைத் தற்காலிகமாகக் கைப்பற்றிய ஷேர் ஷா, அக்பர் நீங்கலாக, முகமதிய ஆட்சியாளர்களில் மிகவும் தலைசிறந்தவர். பாபரைப் போலவே அவரும் மக்களுக்கு பல நற்பணிகளைச் செய்தார்.

அன்பும் பண்பும் பரோபகாரமும் பரந்தஉள்ளமும் கொண்ட அக்பரின் ஆட்சியைப்பற்றி அனைவருக்கும் தெரியும்; எனவே, அதுகுறித்து இங்கு விவரித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

ஷாஜஹான் ஆட்சியில் நாட்டில் மிகவும் வளம்கொழித்தது; எங்கும் பெரிதும் அமைதி நிலவிற்று; அவர் தமது குடிமக்களை ஒரு மன்னனைப்போல் ஆட்சிசெய்யாமல் ஒரு குடும்பத் தலைவன் போல் ஆட்சிபுரிந்தார்.''

பிற்கால முகலாய மன்னர்களின் சமகாலத்தவர் மராட்டி யர்கள். அவர்களது ஆட்சியில் மக்களின் நிலை எவ்வாறு இருந்தது என்பது பற்றி ஒரு யாத்ரிகர் பின்வருமாறு கூறுகிறார்; ''சூரத்தி லிருந்து மலைக் கணவாயைக் கடந்து சென்றேன். மராட்டியர்களின் நாட்டில் பிரவேசித்தபோது, எளிமையும் மனநிறைவும், நல் வாழ்வும் கோலோச்சும் ஒரு பொன் யுகத்தில் இருப்பதுபோன்ற உணர்வைப் பெற்றேன். எங்கும் இயற்கை மாறாது வனப்புடன் மிளிர்ந்தது. போரும் பூசலும் இடும்பையும் இன்னதென்று தெரியா தவையாக இருந்தன. மக்கள் உற்சாகமும் உத்வேகமுமிக்கவர்களாக, சுறுசுறுப்பும் விறுவிறுப்பும் கொண்டவர்களாக இருந்தனர்; மிகுந்த உடல்நலத்துடன் காணப்பட்டனர்; எல்லையற்ற விருந்தோம்பலை வெளிப்படுத்தினர்; இந்த நற்பண்பை எங்கும் காணமுடிந்தது; ஒவ் வொரு வீட்டின் கதவும் திறந்திருந்தது; நண்பர்கள், அன்பர்கள், அண்டைவீட்டார், அயலவர்கள் என்ற பாகுபாடின்றி எல்லோரும் எங்கும் இன்முகத்தோடு வரவேற்று உபசரிக்கப்பட்டனர்.

அடுத்து, தென்னிந்தியாவுக்கு வருவோம். அங்கு நாம் காணும் காட்சி என்ன? அப்போது அங்கு திப்பு சுல்தானின் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அவரது ஆட்சியில் மக்களின்

பொருளாதார நிலைமை எவ்வாறு இருந்தது என்பது குறித்து ஒரு வரலாற்று ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார்: ''முன்பின் தெரியாத ஓர் அயல்நாட்டில் ஒருவர் சுற்றுப்பயணம் செய்யும்போது அது பெரிதும் பண்பட்ட, வளமிக்க நாடாக இருப்பதையும், கடுமையாக உழைக்கும் மக்களைப்பெரும் எண்ணிக்கையில் அது கொண்டிருப் பதையும், ஏராளமான புதிய நகரங்கள் உதித்தெழுந்திருப்பதையும், வாணிகம் மேன்மேலும் விரிவடைந்து வருவதையும், அனைத்துத் துறைகளும் தழைத்தோங்கி வருவதையும், இதனால் எங்கும் மகிழ்ச்சி கரமான சூழ்நிலைமை நிலவுவதையும் காண்கிறார். அப்போது மக்கள் மனதுக்கு உகந்த ஆட்சி இங்கு நடைபெற்று வருவதையே இது குறிக்கிறது என்ற முடிவுக்கு அவர் இயல்பாகவே வருகிறார். இது தான் திப்புவின் நாடு பற்றிய படப்பிடிப்பு. அதன் அரசாங்கம் பற்றிய நமது முடிவும் இதுவேயாகும்.'' ''அவர் நாட்டில் எங்கு பார்த்தாலும் மக்கள் திரள் நிரம்பிவழிகிறது. அங்கு நிலம் அதிகப் பட்ச அளவுக்கு உழுது பண்படுத்தப்பட்டுப் பயிரிடப்படுகிறது.'' அவரது அரசாங்கம் கண்டிப்பையும் கறாரான நோக்கையும் போக்கை யும் கடைப்பிடித்தாலும் அது முறைதவறாத, திறமையான ஓர் அர சாங்கம் கைக்கொள்ளும் கண்டிப்பாகும். எதிர்காலத்தில் தனது செல் வாக்கை மேன்மேலும் வளர்த்துக் கொள்வதற்கு வழிவகைக் கருவி யாக உள்ள குடிமக்களை இந்த ஆட்சி பேணிக் காக்கிறதே தவிர அவர்களை ஒடுக்குவதில்லை. தமது பகைவர்கள் எனத் தாம் கருது வோர்களுக்கு எதிராகத்தான் பொதுவாக அவர் அடக்குமுறைகளை யும் ஒடுக்கு முறைகளையும் கட்டவிழ்த்து விடுகிறார்.

வற்றாத வரையாத செல்வங்கள் மிகுந்த நாடு என்று வங்கா ளத்தை கிளைவ் வருணித்தார். மெக்காலே பின்வருமாறு கூறினார்: ''முசல்மான் கொடுங்கோன்மையும், மராத்தா கடற்கொள்ளையும் ஒருபுறமிருந்தாலும், கிழக்கு உலகம் முழுவதிலும் வங்காளம் பொன் னுலகாக, செல்வவளம் கொழிக்கும் இராச்சியமாகப் புகழ் பெற்றி ருந்தது. அதன் மக்கட் தொகை மேன்மேலும் பெருகி வந்தது; தொலைதூர மாகாணங்கள் ஊட்டி வளர்க்கப்பட்டன; லண்டனை யும் பாரிசையும் சேர்ந்த சீமாட்டிகள் அதன் தறிகளில் நெய்யப் பட்ட கலைநயமும் வேலைப்பாடுகளும் மிகுந்த ஆடைகளை உடுத்து அகமகிழ்ந்தனர்.''

ஆனால் பிரிட்டிஷார் பிரவேசத்திற்குப் பிறகு எல்லாமே மாறத் தொடங்கின. செல்வவளம் இந்தியாவிலிருந்து விடை பெற்றுக் கொண்டு யூனியன் ஜாக் கொடியில் போய் குந்திக் கொண்டது. தீய சக்திகள் பாராளுமன்றம் பக்கமும் கிழக்கிந்தியக் கம்பெனி பக்கமும் அணிதிரண்டன.

கம்பெனி ஆட்சி எவ்வகையிலும் விவேகமிக்கதாக இல்லை. அது கடுங்கண்டிப்பானதாக இருந்தது; பாதுகாப்பை அளித்தாலும் நாட்டின் செல்வத்தை அழித்தது. அதன் நிர்வாக முறை முழு நிறைவானதாக, சரிநுட்பமானதாக இல்லை. இதுகுறித்து ஆடம் ஸ்மித் கூறுவதாவது: ''வணிகர்கள் க்ம்பெனியார் தங்கள் ஆட்சி யாளர்களாக மாறியபோதிலும்கூட இன்னமும் தங்களை அவ்வாறு கருத இயலாதவர்களாக இருந்தனர். ''வாணிகத்தை அல்லது வாங்கிய பொருளை விற்பதையே தங்களது பிரதான தொழிலாகக் கருது கின்றனர்; ஆட்சிபுரிவதை வணிகர்களின் ஓர் உபதொழிலாக அவர் கள் நோக்குவது விந்தையிலும் விந்தையானதாக, நகைப்புக்கு இடமானதாக இருக்கிறது... ஆட்சியாளர்களாக அவர்களது நலன் அவர்கள் ஆட்சி புரியும் நாட்டின் நலனாக இருக்கிறது. ஆனால் வணிகர்கள் என்ற முறையில் அவர்களது நலன் மேற்கூறிய நலனுக்கு முற்றிலும் மாறுபட்டதாக, வேறுபட்டதாக அமைந்திருக்கிறது.''[1] கம்பெனி உரிமையாளர்கள் குழுமத்தையும், இயக்குநர்களையும் பற்றி கடைசி அத்தியாயத்தில் ஆடம் ஸ்மித்ஸ் செய்துள்ள விமர்சன மும் மதிப்புமிக்கதாகும். இந்த விமர்சனத்தில் அவர் பின்கண்டவாறு கூறியிருக்கிறார்: 'கிழக்கிந்தியக் கம்பெனியின் பங்குகளை வாங்கி யுள்ள ஒவ்வொரு பங்குதார்ரரின் நலனும் அவரது நாட்டின் நலனும் எவ்விதத்திலும் ஒன்றாக இருந்ததில்லை; அவரது நாட்டு அரசாங் கத்தில் அவருக்குள்ள வாக்குரிமை அவருக்கு ஒரு குறிப்பிட்ட அளவு செல்வாக்கை வழங்குகிறது; இந்த நிலைமையில் இந்தப் பங்குதாரர்கள் தாங்கள் வாங்கிய பங்குகள் சம்பந்தப்பட்ட நலனைத் தவிர அவர்களுக்கு வேறு எந்த நலனும் இல்லாதிருக்குமாயின் எத்தகைய பிரச்சினையும் எழாது. ஆனால் பல சந்தர்ப்பங்களில் இவர்களுக்கு இதைவிட மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த மற்றொரு நலன் இருக்கிறது. இதனால் மிகவும் வசதி படைத்தவரும் இன்னும் சொல்லப்போனால் ஓரளவே வசதி படைத்தவரும்கூட பதிமூன் றாயிரம் அல்லது பதினான்காயிரம் பவுன் செலுத்த முன்வருகிறார். பங்குதாரர்களின் குழுமத்தில் வாக்களிக்கும் உரிமை பெறுவதன் மூலம் தனக்குக் கிட்டக்கூடிய செல்வாக்கின் பொருட்டே இவ்வாறு அவர் செய்கிறார். இந்தியாவிலிருந்து கிடைக்கக்கூடிய கொள்ளை யிலிருந்து அன்றி இந்தியாவைக் கொள்ளையடிப்பவர்களை நியமிப்பதில் இந்த வாக்குரிமை அவருக்குப் பங்களிக்கிறது. இத்தகைய நியமனங்களை இயக்குநர்கள்தான் செய்ய வேண்டும் என்ற போதிலும், அந்த இயக்குநர்களே பங்குதாரர்கள் குழுமத்தின் செல் வாக்குக்கு உட்பட்டவர்கள்; இந்தக்குழுமம் இயக்குநர்களைத் தேர்ந் தெடுப்பதுமட்டுமன்றி, அவர்கள் செய்யும் நியமனங்களைக்கூட

1. ''தேசங்களின் செல்வவளம்'' (கேன்னரின் பதிப்பு) தொகுதி II, பக்கம் 136-7.

சிலசமயங்களில் ரத்து செய்கிறது. பெரும் வசதி படைத்தவர் அல்லது சுமாரான வசதிபடைத்தவர் கூட ஒரு சில ஆண்டுகளில் இத்தகைய செல்வாக்கைப் பெற்று விடுகிறார்; இந்த ஆண்டுகளில் சில குறிப் பிட்ட எண்ணிக்கையுள்ள தன்னுடைய நண்பர்களுக்கு இந்தியா வில் வேலைவாய்ப்பு கிடைக்க ஏற்பாடு செய்து விடுகிறார். இதுவே அவரது குறிக்கோள். மற்றபடி தாம் செலுத்தியுள்ள சிறு மூலதனத் துக்குக் கிடைக்கக்கூடிய ஆதாயப் பங்கைப் பற்றி அவர் கவலைப் படுவதில்லை; இன்னும் சொல்லப்போனால் கம்பெனியில் தமக்குக் கிடைத்துள்ள வாக்குரிமைக்கு ஆதார அடிப்படையாக உள்ள மூலதனமேகூட கூடினாலும் குறைந்தாலும் அதைப் பற்றி அவர் கவலைப்படுவதில்லை. அதேபோல், இந்த வாக்குரிமையை எந்த அரசாங்கம் தனக்கு அளிக்கிறதோ அந்த அரசாங்கத்துக்கு அஸ்தி வாரமாக, அடித்தளமாக உள்ள தங்களுடைய மாபெரும் சாம் ராஜ்யம் வாழ்ந்தாலும் சரி, வீழ்ந்தாலும் சரி அதுபற்றி அவருக்கு அணுவளவும் அக்கறையில்லை. இவ்வாறு, தங்கள் பிரஜைகள் இன்புற்றாலும் சரி, துன்புற்றாலும் சரி, தங்களுடைய ஆட்சிப் பகுதிகள் விரிவடைந்தாலும் சரி, சிதைவடைந்தாலும் சரி தங்க ளுடைய நிர்வாகம் பெருமையுற்றாலும் சரி, சிறுமையுற்றாலும் சரி இவற்றைப் பற்றியெல்லாம் துளியும் கவலைப்படாத ஆட்சியாளர் கள் எவரும் என்றும் இருந்ததில்லை, இருந்திருக்கவும் முடியாது. ஆனால் இத்தகைய ஒரு வாணிக நிறுவனத்தின் பெரும்பாலான பங்குதாரர்கள் கடைந்தெடுத்த சுயநலமிகளாக இருக்கும்போது இவ்வாறு நிகழ்வது முற்றிலும் இயல்பே.''

இது நிர்வாகம் முழுவதற்கும் எதிராகக் கூறப்பட்ட மிகப் பரந்த அளவிலான குற்றச்சாட்டாகும். எனினும் கம்பெனியின் ஆரம்பகால நிர்வாகத்துக்கு இது முக்கியமாகப் பொருந்தும். பின்னால் இலஞ்ச ஊழல் படிப்படியாக ஒழித்துக் கட்டப்பட்டது.

ஸ்தல அரசாங்கத்திலோ அல்லது இந்திய அரசாங்கத்தின் மேல்மட்டத்திலோ சொந்த நாட்டு மக்களுக்குப் பங்கேதும் இல்லை. கொழுத்த ஊதியம் கிடைக்கும் எல்லா உயர் பணியிடங்களின் கதவுகளும் அவர்களுக்கு மூடப்பட்டு விட்டன. ஒரு சாதாரண எழுத்தரின் பதவிக்கு மேல் அவர்கள் எதையும் எதிர்பார்க்க முடியாது.

ஆளுநர்களும் அவர்களுடைய அதிகாரிகளுமே ஆலோசகர்கள் என்றமுறையில் நாட்டு மக்களைப் பற்றிச் சிந்திக்கும் வகையில் உள்நாட்டு நிர்வாகம் சீரமைக்கப்பட்டிருந்தது. சார்லஸ் டிக்கன்ஸ் தமது புதினம் ஒன்றில் சித்தரித்திருக்கும் சர் ஜான் பௌலி என்ற பாத்திரத்தை அப்படியே எழுத்துக்கு எழுத்து, வரிக்குவரிப் பின்பற்று வர்களாக இந்த ஆலோசகர்கள் அமைந்திருந்தனர். 'ஏழையின் நண்பன்'' என்று வருணிக்கப்படும் சர்.ஜான் பௌலி பின்வருமாறு

கூறுவதைப் பார்க்கிறோம்: ''என் அன்பு நண்பனே, என்னுடன் இருப்பதே உனது ஒரே வேலை. எதைப் பற்றியும் சிந்தித்து அலட்டிக் கொண்டிருக்க வேண்டாம். உனக்காக நானே சிந்திப்பேன்; உனக்கு எதெல்லாம் நன்மை பயக்கக்கூடியது என்பதை நான் அறிவேன்; நான் உன்னுடைய நிரந்தர பெற்றோர். இதுதான் எல்லாம் அறிந்த இறைவன் வகுத்துத் தந்த ஒழுங்குமுறை... மனிதனால் என்ன செய்ய முடியுமோ அதனை நான் செய்கிறேன். ஏழைஎளியவனின் நண்பன், தந்தை என்றமுறையில் என் கடமையைச் செய்கிறேன். அவனுக்கு அறிவு புகட்ட முயற்சிக்கிறேன். என்னையே நம்பியிரு என்ற மாபெரும் போதனையை எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அவனிடம் ஊட்டி வளர்க்கிறேன். அவன்தானே செய்துகொள்ளக் கூடியது எதுவும் இல்லை.''

இந்தப் பௌலிக்கள் எதையும் தெய்விகக் கட்டளையாகப் பாவித்துச் சிந்தித்தார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் துரதிர்ஷ்ட வசமாக அவர்களது சிந்தனையும் செயலும் திட்டவட்டமாக இங்கிலாந்துக்குச் சாதகமாகவும் இந்தியாவிற்கு விநாசகரமானதாகவுமே இருந்தன.

இங்கிலாந்து எவ்வாறு செழித்துக் கொழித்தது, அதேசமயம் இந்தியா எவ்விதம் நலிந்துமெலிந்தது என்பதை நாம் நன்கு தெரிந்து கொள்ளவேண்டுமென்றால் 1600 ஆண்டுக்கு முன்னரும் பின்னரும் இங்கிலாந்து எவ்விதம் இருந்தது என்பதையும், அதோடு இங்கிலாந்துக்கு இந்தியா எவ்வளவு பணத்தை கொள்ளை கொள்ளையாகக் கொட்டி அழுதது என்பதையும் இங்கு நினைவு கூருவது அவசியம்.

1545க்குப் பிறகு இங்கிலாந்தின் நாளுக்கு நாள் வளர்ந்து வந்த வளமையை, செழுமையைப் பற்றி சர் ஜோசியா சைல்டு மிகவும் சுவையான ஒப்பீட்டு வருணனையைத் தந்துள்ளார்.

அவர் கூறுகிறார்: ''1545ல் இங்கிலாந்தில் வாணிகம் மிகச் சிறிய அளவிலேயே நடைபெற்றது; வணிகர்களின் எண்ணிக்கையும் மிகவும் குறைவாக இருந்தது; அவர்களது பொருளாதார நிலைமையும் அவ்வளவு குறிப்பிடத்தக்கதாக இல்லை. ஆனால் இன்று பத்தாயிரம் பவுன் அளவுக்கு வரவு செலவு நடைபெறுகிறது; முன்போ ஆயிரம் பவுன் அளவுக்குக்கூட நடைபெறவில்லை. இது பற்றியெல்லாம் எவருக்கேனும் ஐயம் இருக்குமானால் வயதானவர்களைக் கேட்டுப் பாருங்கள்: அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் மக்களுக்குப் பங்காகக் கொடுத்த ஐநூறு பவுன் இப்போது இரண்டாயிரம் பவுன்மதிப்பை எட்டிவிடவில்லையா? இன்று வேலைக்காரிகூட அணிவதற்கு வெட்கப்படும் முரட்டுக் கம்பளி மேலங்கியை

உடுத்துவதற்கு அன்று சீமாட்டிகள் பெருமிதமடையவில்லையா? முன்னர் நம்மிடம் ஒரே ஒரு 'கோச்' வண்டி இருந்ததற்குப் பதில் இப்போது ஏறத்தாழ நூறு வண்டிகள் இருக்கின்றன. நமது முன் னோர்கள் இருபது ஆண்டுகளில் கட்டியதை விடவும் அதிகமான வரியை இன்று நாம் ஓராண்டில் கட்டுகிறோம். வாணிகம் பெரிதும் அதிகரித்து சரக்குப் போக்குவரத்து வெகுவாகக் கூடியதால் நாம் செலுத்தும் தீர்வைகள் 6 க்கு 1 என்ற விகிதத்தில் உயர்ந்தன.''[1] கி.பி. 1600 ஆண்டுக்குள் வாணிக வர்க்கம் மிகவும் சக்தி வாய்ந்ததாக வளர்ந்து வலுப்பெற்று விட்டது. நகர வணிகர்களின் கடும் எதிர்ப்பு மட்டும் இல்லையென்றால் முதலாம் சார்லஸ் அடிபணிந்திருக்க மாட்டார்; அதேபோல் நகர வணிகர்களின் ஆதரவு மட்டும் இல்லை யென்றால் இரண்டாம் சார்லஸ் மீண்டும் ஆட்சிபீடம் ஏறியிருக்க மாட்டார்.''[2]

இங்கிலாந்து வளமுறுவதற்காக பலவழிகளிலும் இந்தியா பங்காற்றியிருக்கிறது அல்லது பங்காற்றும்படி நிர்ப்பந்திக்கப்பட் டிருக்கிறது.

செல்வத்தைப் பெருக்கும் சாதனம் என்ற முறையில் வாணிகம் முன்னிடம் வகிக்கிறது. பங்குச் சந்தைக் குறியீடுகள் வாணிக நிலைமைகளைக் கணிக்கும் ஓர் அளவுகோலாகும். இந்த அளவுகோலைப் பயன்படுத்தி, இங்கிலாந்தில் இந்திய வாணிகம் எத்தகைய மதிப்பைப் பெற்றிருந்தது என்பதைப் பார்ப்போம். ''18 ஆம் நூற்றாண்டு முழுவதிலும் கம்பெனியின் பங்குகள் எப் போதுமே மிகைமதிப்பைப் பெற்றிருந்தன. 1720ல் பங்கு மதிப்பு குறியீடுகள் பெரிதும் உயர்ந்து 450 பவுனை எட்டியிருந்தன. ஆனால் அது 1755ல் 148 பவுனாக வீழ்ச்சியடைந்தது. இந்த எண்ணிக்கை ஏறத் தாழ அதன் உண்மையான மதிப்பை விட அதிகம். ஆதாயப்பங்கு சராசரியாக 10% என்று வைத்துக் கொண்டால் கூட அடக்க விலை மீது சுமார் 51/3% என்னும் மிதமான வட்டி விகிதத்தையே அது குறிக்கும். இவ்விதம் பங்கு மதிப்பு 1766 வரை இறங்குமுகமாகவே இருந்து வந்தது. பின்னர் வங்காளத்தின் வருவாயால் ஏராளமாக லாபம் கிட்டும் என்ற எதிர்பார்ப்பு ஒரு செயற்கையான திடீர் விலையேற் றத்தைத் தோற்றுவித்தது; இதனால் விலை 233 பவுனுக்கு உயர்ந்தது. இதன் பின்னர் கர்நாடகப் போரின் விளைவாக அது 60% வீழ்ச்சி யடைந்தது. 1799 முதல் 1788 வரை விலை ஓரளவு நியாயமான அளவில் இருந்தது; அது சராசரியாக சுமார் 150 பவுன் என்ற அளவில் இருந்தது; எனினும் 1784 ஆம் வருட நெருக்கடியின்போது 118 பவுன் 10

1. "வாணிகம் பற்றிய ஆய்வு" (1775) பக்கங்கள் 8, 9, 10.

2. டி.பி. மக்காலே, "இங்கிலாந்தின் வரலாறு", இயல் III

ஷில்லிங் என்னும் அளவுக்கு மிகவும் குறைந்தது. பிட் இயற்றிய சட்டத்திற்குப் பிறகு விலைகள் ஏறுமுகம் கண்டன; 1787ல் பங்கு மதிப்பு குறியீடு 118 பவுன் 10 ஷில்லிங்காக இருந்தது. இதன்பின்னர் ஏற்ற இறக்கங்கள் பெருமளவுக்குக் குறைந்தன. கம்பெனி இப்போது ஒரு வாணிகக் கூட்டுரிமைக் குழுமம் என்பதை விட ஆட்சி புரியும் அமைப்பு என்ற அந்தஸ்தைப் பெற்றிருந்தது. அது தனது பங்குதாரர் களுக்கு நியாயமான வட்டியை வழங்கிற்று; அது தனது லாபங்களை முதலீடாக மாற்றி அதனடிப்படையில் தனது பங்கு விலைகளை நிர்ணயித்தது. ஊகவாணிகம் செய்வதற்கு மேற்கொண்டு வாய்ப் பில்லை. அதன் ஐந்தொகை கணக்கு பிந்தைய ஆண்டுகளின் இந்திய வரவு -செலவுத் திட்டத்தைப் பிரதிபலிக்கத் தொடங்கிற்று.''[1] பங்கு தாரர்களுக்கு அளிக்கப்பட்ட ஆதாயப் பங்குகளும் இங்கிலாந்தின் செல்வ வளத்துக்கு இந்தியா எந்த அளவுக்குப் பங்காற்றியிருக்கிறது என்பதைப் புலப்படுத்தும். 1709ஆம் வருட இணைப்புக்கு முன்னர் வாணிகம் ஏற்ற இறக்கங்களுக்கு உள்ளாகியிருந்த போதிலும் எப் போதும் மிகுந்த லாபத்தையே காட்டிவந்தது. 1682ல் ஆதாயப்பங்கு மிகப் பெருமளவுக்கு அதிகரித்து 160% எட்டிற்று. ஆனால் நூற்றாண்டின் இறுதியில் நிலைமை முற்றிலும் மாற்றமடைந்தது. இணைப்புக்குப் பிறகு 1709ல் லாபம் 8% மட்டுமே அதிகரித்தது. 1710ல் 9% மும் இரண்டு ஆண்டுகளுக்குக்குப் பிறகு 10%மும் அதிகரித்தது. இந்த நூற்றாண் டின்போது சராசரி லாப அதிகரிப்பு 9% ஆக இருந்தது. 1768 முதல் 1771 வரை இந்த சராசரிக்கு மேல் லாபம் அதிகரித்தது. 1723ல் பிரெஞ்சுக் கம்பெனியின் போட்டி காரணமாக சிறிதளவு வீழ்ச்சி ஏற்பட்டது; சுவிடிஷ் கம்பெனி நிறுவப்பட்டதாலும் மூலதன அதிகரிப்பாலும் 1732ல் மேலும் 1% சரிவு ஏற்பட்டது. 1744-ல் இது மீண்டும் 8%க்கு உயர்ந்தது; ஐரோப்பாவிலும் கர்நாடகத்திலும் தொடர்ந்து போர்கள் நடைபெற்ற போதிலும் 11 ஆண்டுக் காலம் வரை இதே லாப விகிதம் நீடித்தது. 1755-ல் நிச்சயமற்ற நிலவரம் காரணமாக பாதிப்பு ஏற்பட்டு 2% வீழ்ச்சிகண்டது. 1760ல் பர்துவானும் இதர மாகாணங்களும் பிரிந் ததன் காரணமாக கம்பெனியின் நடைமுறைச் செலவுகள் அதிகரித்து ஆதாயப் பங்கு 6% ஆயிற்று; இவ்வகையில் வருடாந்தரம் விநியோ கிக்கப்பட்ட பணம் 1,91,644 பவுனாக இருந்தது. 1767ல் வங்காளத் தின் பிரதேச ஆட்சியுரிமை அங்கீகரிக்கப்பட்டதன் விளைவாக ஆதாயப்பங்கு 10%க்கு உயர்த்தப்பட்டது; இதன் காரணமாக விநியோ கிக்கப்பட்ட பணம் 3,19,408 பவுனாக எட்டிற்று; இந்த உயர்வு முற்றிலும் நியாயமற்றதாகும். இந்தியாவின் செல்வ வளத்தை மிகைப்பட மதிப்பீடு செய்ததே இதற்குப் பிரதான காரணம். ஏராள மாக லாபம் கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பில் இந்தக் கூடுதலான ஆதாயப் பங்குகள் அறிவிக்கப்பட்டன; ஆனால் இவ்விதம் எதிர்

1. எஃப்.பி. ராபின்சன், ''கிழக்கிந்தியக் கம்பெனி'', பக்கம் 161.

பார்த்த லாபம் கிட்டவில்லை; இதனால் கொள்ளை வட்டிக்கு, கடுவட்டிக்குக் கடன் வாங்கி ஆதாயப் பங்குகளைச் செலுத்த வேண்டியதாயிற்று. எப்படியும் நல்ல காலம் பிறக்கும், நிலைமை யைச் சமாளித்துவிடலாம் என்ற நம்பிக்கையுடனேயே கம்பெனி ஐந்தாண்டுக் காலம் நாட்களை ஓட்டிக்கொண்டிருந்தது. ஆனால் 1772ல் மிகப் பெரிய நொடிப்பு ஏற்பட்டது; ஆதாயப் பங்குகள் 12 1/2% இருந்து 6% ஆக படுவீழ்ச்சியடைந்தது. இச்சமயம் நார்த் பிரபு தலை யிட்டார்; எதிர்காலத்தில் கம்பெனியின் ஆதாயப் பங்கு அமைச் சரவையின் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தப்பட்டது. இந்த ஒழுங்கு முறை சட்டத்தைத் தொடர்ந்து வருவாய் அதிகரித்தது; ஆதாயப் பங்கும் படிப்படியாக, மெள்ள மெள்ள அதிகரிக்கத் தொடங்கிற்று. 1792ல் திப்புவுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ளப் பட்டது; இதன்மூலம் கம்பெனிக்கு 2,40,000 பவுன் வருவாயும், இழப் பீட்டுத் தண்டத்தொகையாக 16,00,000-பவுனும் கிடைத்தன. இதன் பயனாக ஆதாயப்பங்கு 2% மேலும் அதிகரித்தது. 1802-ல் இது 11%த்தை எட்டிற்று.''[1] இதல்லாமல், கிழக்கிந்தியத் தீவுகளில் வாணிகம் செய்வதற்குத் தாங்கள் பெற்ற சலுகைகளுக்காக இங்கி லாந்தின் ஐக்கிய வாணிகர் கம்பெனியார் பிரிட்டிஷ் மக்களுக்கு ஏராள மாகப் பணம்வழங்கினர்; ''1789 ஆம் ஆண்டுக்கும் 1803 ஆம் ஆண்டுக் கும் இடையே இவ்வாறு கொடுக்கப்பட்ட பணம் 2,53,43,215 பவுனாக இருக்கும் என்று திரு. மெக்பெர்சன் மதிப்பிட்டிருக்கிறார்.''[2] அமெரிக்கா வுடனான போரில் இங்கிலாந்துக்கு இந்தியா 3,85,666 பவுன் கொடுத்து உதவியதோடு மட்டுமல்லால், முற்றிலும் இந்திய வாணிகத்தில் ஈட்டியபணத்தைக் கொண்டு திரு.யேல் அமெரிக்காவில் யேல் கல்லூரியைத் தொடங்கியபோது அந்த முயற்சிக்கும் அது பெரிதும் துணைநின்றது.

இந்தியாவிலிருந்து இங்கிலாந்து நேரடியாகவும் மறைமுக மாகவும் பெற்ற சில அனுகூலங்களை தவத்திரு ஜார்ஜ் டக்கர் பின்வருமாறு பட்டியலிட்டுக் கூறுகிறார்:-

1. 'கிழக்கிந்தியக் கம்பெனி பல்வேறு சந்தர்ப்பங்களில் தங்களுடைய ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்களிலிருந்து பிரதேசக் கடனுக்கான வட்டி போக வருடம் பதினைந்து லட்சம் பவுன்வரை மிகை வருமானமாகப் பெற்று வந் துள்ளது; இந்த மிகை வருமானம் என்பது இங்கிலாந் துக்கு இந்தியா நேரடியாகச் செலுத்தும் கப்பமே தவிர வேற்றல்ல என்பது தெளிவு.''

1. எஃ.பி. ராபின்சன், 'கிழக்கிந்தியக் கம்பெனி'', பக்கங்கள் 159, 160, 161.
2. இந்தியாவின் ஐரோப்பிய வாணிகம்'' (1812), பின் இணைப்பு II.

2. பிரதேசக் கடனில் நான்கு பங்கு ஐரோப்பிய பிரிட்டிஷ் பிரஜைகள் சம்பந்தப்பட்டதாகும்; இந்தக் கடனுக்கான வருடாந்தர வட்டியில் பெரும்பகுதியை அதாவது சுமார் இருபது லட்சம் பவுனை இந்தியா இங்கிலாந்துக்கு மறைமுகமாக செலுத்தும் கப்பமாகவே கருதப்பட வேண்டும்.

'3. இந்தியாவில் கட்டப்பட்ட கப்பல்கள் கிழக்கத்தியக் கடல்களில் ஒரு துறைமுகத்திலிருந்து இன்னொரு துறை முகத்துக்கு ஏற்றிச் செல்லும் சரக்குகளின் எடையளவு பிரிட்டிஷ் வணிகக் கப்பல்களின் மொத்த சரக்கேற்ற எடை அளவுடன் ஒப்பிடும்போது குறைவானது ஒன்று மல்ல.

'4. இங்கிலாந்தில் ஒரு குறிப்பிட்ட சமுதாயப் பிரிவினர் மிதமிஞ்சிப் பெருகி வருகின்றனர். பிற நாடுகளிலும் சரி, ஏன் நம் நாட்டிலும் கூட இவர்களது வாழ்க்கைக்குத் தகுந்த வழிவகை ஏற்பாடு செய்வது கடினமாக இருக் கிறது. இந்நிலைமையில், இந்தியா நம் வசமிருப்பது நமது பிரச்சினைக்குத் தீர்வுகாணும் ஒரு வடிகாலாக அமைந்திருக்கிறது... இந்தியாவின் பணித்துறை இவர் களைப் பெரும் எண்ணிக்கையில் வேலைக்கமர்த்திக் கொள்வதற்காக கதவை அகலத் திறந்து விடுகிறது. இதனால் இவர்கள் மட்டுமன்றி இவர்களுடைய நாடும் பலனடைகிறது.''

இங்கிலாந்தின் வளத்துக்கு இந்தியா ஆற்றும் பங்கு இவை மட்டுமே அல்ல.

இந்த மறைமுகமான வழிகளைத் தவிர இந்தியாவுக்கு தீங்கு இழைப்பதற்கு, கேடுசெய்வதற்கு இவற்றை விடவும் நேரடி யான, மிகத் தீவிரமான, கடுமையான நடவடிக்கைகளையும் இங்கிலாந்து மேற்கொண்டது. ஒரு வகையான பாதுகாப்பு முறை மூலம் இது நடை முறைப்படுத்தப்பட்டது. இந்தியப் பண்டங்களுடன் போட்டியிடும் நிலைமையில் எவ்வகையிலும் இங்கிலாந்து இல்லை. பல்வேறு பண்டங்களைத் தயாரிக்கும் நாடு என்றமுறையில் இந்தியா இங்கிலாந்தை விடப் பெரிதும் மேம்பட்டிருந்தது. போக்குவரத்துச் செலவு அதிகமாக இருந்தபோதிலும் இந்தியப் பண்டங்கள் பிரிட்டிஷ் பண்டங்களுக்கு அவற்றின் சொந்தச் சந்தையிலேயே கிராக்கி இல்லாது செய்துவிட்டன. இந்தியப் பண்டங்களின் இந்தக் கடுமை யான போட்டியை ஒழித்துக் கட்டுவதற்கு இங்கிலாந்து தீவிரமான, வலுவான பாதுகாப்புக் கொள்கையைக் கடைப்பிடிக்கத் தொடங் கிற்று.

இந்தியப் பண்டங்களின் மீது விதிக்கப்பட்ட காப்பு வரி எவ்வளவு அதிகமாக இருந்தது என்பதை பின்கண்ட புள்ளி விவரங் களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்:-

| | | |
|---|---|---|
| சோற்றுக்கற்றாழை | .... | 280 |
| பெருங்காயம் | .... | 622 |
| சாம்பிராணி | ..... | 373 |
| பொரிசம் | .... | 102 |
| இலவங்கப்பட்டை எண்ணெய் | ..... | 400 |
| சாதிபத்திரி | ..... | 3000 |
| சாதிக்காய் | ..... | 250 |
| நறுமணப்பிசின் | ..... | 400 |
| ஏலக்காய் | .... | 266 |
| கருவாய்ப்பட்டை | ..... | 140 |
| கிராம்பு | .... | 240 |
| காபி | .... | 373 |
| மிளகுக்காய் | ..... | 320 |
| குங்கிலியம் | ..... | 465 |
| மரப்பிசின் | .... | 187 |
| குங்கிலியப் பிசின் | ..... | 466 |
| ஒருவகை ஆசிய- ஆப்பிரிக்க மரப்பிசின் | .... | 187 |
| எட்டிக்காய் | ..... | 266 |
| கருவாமர எண்ணெய் | ..... | 343 |
| கறுப்பு மிளகு | .... | 400 |
| வெள்ளை மிளகு | .... | 266 |
| பேதி மருந்துவேர் | ..... | 500 |
| அரிசி (ஜாவா) | .... | 150 |
| ரம் (வங்காளம்) | ..... | 1142 |
| சவ்வரி | ..... | 100 |
| சர்க்கரை (வங்காளம் வெள்ளை) | ..... | 118 |
| மேற்படி வெள்ளம் (வெள்ளை) | ..... | 128 |
| மேற்படி (மட்டமானது, பழுப்பு நிறம்) | ..... | 152 |

ஆனால் இங்கிலாந்து இவ்விதம் காப்புவரி விதிப்பதோடு நிற்கவில்லை. அதுமேலும் ஒருபடி சென்று இந்தியப் பண்டங் களுக்கு விஷமத்தனமான முறையில் பாரபட்சம் காட்டிற்று; உலகில் இதர பகுதிகளிருந்து வரும் இதே பண்டங்களைவிட அதிக இறக்குமதி வரி விதித்தது. கிழக்கு இந்தியத் தீவுகளிலிருந்தும், மேற்கு இந்தியத் தீவுகளிலிருந்தும், ஏனைய காலனிகளிலிருந்தும் வரும்

சரக்குகளுக்கு விதிக்கப்படும் இறக்குமதி வரிகள் சம்பந்தப்பட்ட புள்ளி விவரங்கள் எம் 'அக்லோச்சின் வாணிக அகராதியில் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன; இவற்றிலிருந்து இந்தியாவுக்கு எதிராகக் காட்டப்படும் பாரபட்சத்தின் கொடுமையை, குரூரத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

| பொருள்கள் | கிழக்கிந்தியத் தீவுகள் | | | மேற்கு இந்தியத் தீவுகள் முதலியவை | | |
|---|---|---|---|---|---|---|
| | பவுன் | ஷில். | பென். | பவுன் | ஷில். | பென். |
| சர்க்கரை ஒரு குவின்டாலுக்கு | 1 | 12 | 0 | 1 | 4 | 0 |
| காபி ஒரு பவுண்டுக்கு | 0 | 0 | 9 | 0 | 0 | 6 |
| சாராயம், இனிப்பு கலந்தது, காலனுக்கு | 1 | 10 | 0 | 1 | 0 | 0 |
| சாராயம், இனிப்பு கலக்காதது, காலனுக்கு | 0 | 15 | 0 | 0 | 8 | 6 |
| புளி பவுண்டுக்கு | 0 | 0 | 6 | 0 | 0 | 2 |
| பதப்படுத்தப்பட்ட பழவகை பவுண்டுக்கு | 0 | 0 | 6 | 0 | 0 | 3 |
| புகையிலை பவுண்டுக்கு | 0 | 0 | 6 | 0 | 0 | 3 |
| தேக்கு 8 அங்குல சதுரமுடையது ஒரு கண்டிக்கு | 1 | 10 | 0 | 0 | 10 | 0 |
| வெட்டுமரம் - இன்னவை என்று குறிப்பிடப்படாதவை, விலை மதிப்பில் | 20 சதவீதம் | | | 5 சதவீதம் | | |

இந்தியப் பண்டங்களுக்கான காப்பு வரிகள் பாரபட்சமான முறையில் அமைந்திருந்தது மட்டுமின்றி, இங்கிலாந்தில் அவை எவ்வகையில் பயன்படுத்தப்படுகின்றன என்பதைப் பொறுத்தும் வேறுபட்டன. 1813ல் காமன்ஸ் சபைக் குழுவின் கேள்விகளுக்கு திரு. ஜான் ரேங்கிங் அளித்த பதிலிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ள லாம்:

> **கேள்வி** - 'கிழக்கிந்திய மாளிகையில் விற்பனை செய்யப்பட்ட ஜவுளிக்கு எவ்வளவு தீர்வை விதிக்கப்பட்டது என்பதை உங்களால் கூறமுடியுமா?
>
> **பதில்** - 'காலிகோ என்னும் துணிவகை இறக்குமதி செய்யப் படும்போது பவு. 3, ஷில். 6 பென். 8 சதவீதத் தீர்வை விதிக்கப்படுகிறது; அது உள்நாட்டில் பயன்படுத்தப் படும்போது மேலும் பவு. 68 ஷில். 6 பென். 8 சதவீதத் தீர்வை விதிக்கப்படு கிறது.

''மஸ்லின் என்ற மற்றொரு துணிவகை இருக்கிறது. அதற்கு 10 சதவீத இறக்குமதித் தீர்வை விதிக்கப்படுகிறது. அது உள்நாட்டு உபயோகத்துக்குப் பயன்படுத்தப்படுமானால் பவுன் 68, ஷில்லிங் 6, பென்னி 8 சதவீதத் தீர்வை உண்டு.

''மூன்றாவது வகையான வண்ண ஜவுளிரகங்கள் இருக்கின்றன. இந்த நாட்டில் (இங்கிலாந்து) அவற்றை உபயோகிக்கத் தடைவிதிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு இறக்குமதி தீர்வை பவுன் 3, ஷில்லிங் 6, பென்னி 8 சதவீதம்; அவை ஏற்றுமதிக்கு மட்டுமே உரியவை.''

'இந்தப் பாராளுமன்றக் கூட்டத் தொடரில், ஒட்டு மொத்தத் தீர்வைகள் மீது 20 சதவிகித புதிய தீர்வை விதிக்கப் பட்டிருக்கிறது; உள்நாட்டு உபயோகத்துக்குப் பயன்படுத்தப் படும் காலிகோ வகைகளுக்கு அது பவுன் 78, ஷில்லிங் 6, பென்னி 8 சதவிகிதமாகவும், அதேபோல் உள்நாட்டு உபயோகத்துக்குப் பயன்படுத் தப்படும் மஸ்லின் துணிவகைகளுக்கு பவுன் 31, ஷில்லிங் 6, பென்னி 8 சதவிகித மாகவும் இருக்கும்.

இவையெல்லாம் பாரளுமன்றம் திணிக்கும் அதீத வரிச் சுமையாகும். கவர்னர்களும் கவர்னர்-ஜெனரலும் கொடுமை செய்து வரி விதிப்பது கொஞ்ச நஞ்சமல்ல . இந்தியாவுடனான தொடர்புக்குப் பின்னர் ஐரோப்பிய மக்களின் மனநிலைபற்றி சர் டபிள்யூ. டபிள்யூ. ஹன்டர் விவரித்திருப்பதை இங்கு நினைவு கூருவது அவசியம். அவர் கூறுகிறார்: ''வரலாற்றின் இடைநிலைக் காலத்திலிருந்து அப்போதுதான் வெளிவந்திருந்த ஐரோப்பா ஆசியாவை ஆளுவதில் தனது முதலாவது பரிசோதனைகளை மேற்கொண்டிருந்தது. நாடுகளை வென்று அடிப்படுத்தலைப் பற்றிய மத்தியக் காலக் கண்ணோட்டங்கள் கிழக்குலகைச் சுரண்டுவதில் ஈடுபடும்படி ஐரோப்பாவைத் தூண்டி ஊக்குவித்தன. இதன் விளைவாக மத்தியக் கால வாணிக முறைகள் இந்திய வாணிகத்தில் நிலைபெற்றன. இவ்வகையான வாணிக முறைகளும், கண்ணோட்டங்களும் எங்கெங்கும் கோலோட்சிக் கொண்டிருந்த வேளையில் போர்ச்சுக்கல்லும், ஸ்பெயினும், ஹாலந்தும் ஆசியாவில் தங்கள் ஆட்சிகளை நிறுவின. இதன் பின்னர்தான் இந்தியாவில் ஆங்கிலேயர்களின் ஆதிக்கம் ஏற்பட்டது; அது ஆறாம் நூற்றாண்டின் ஐரோப்பியக் குறிக்கோள்களுக்குப் பதிலாக எட்டாம் நூற்றாண்டின் குறிக்கோள்களைத் தன்னகத்தே கொண்டிருந்தது. அது அரை-மத்தியக்கால கிறித்தவ உலகின் சாயையில் அல்லாமல் நவீன

சாயையில் அமைந்திருந்தது. ஆயினும் அந்நாளைய மரபுகளை ஆட்சியாளர்களின் சொந்த ஆதாயங்களுக்காக இந்திய வாணிகத்திலும், இந்திய அரசாங்கத்திலும் ஏகபோகம் செலுத்துவதை உதறித் தள்ளுவது இங்கிலாந்துக்கும்கூட கடினமாக இருந்தது.''[1] ''ஊழல் மலிந்த சிலவராட்சியின் சட்டமன்றத்தை சுயநலம் ஆட்டிப் படைத்தது; எங்கும் எப்போதும் அரசியலே பேசப்பட்டது; கோட்பாடுகள் கைகழுவிவிடப்பட்டன. பொருளாயத நோக்களுக்காக மட்டுமே மனிதர்கள் மூர்க்கவெறியோடு போராடினார்கள். மிகவும் மேம்பட்ட நிலையிலிருந்தவர்களின் ஆர்வ விருப்பங்களில், நாட்டத்தில், விழைவில் தங்கம் மேலாண்மை வகித்தது. இதன் பயங்கரமான, விநாசகரமான விளைவுகளுக்கு இந்தியா அச்சமயம் பல உதாரணங்களை உலகுக்கு அளித்தது.

1757ல் நடைபெற்ற பிளாசியுத்தமும், 1761ல் நடைபெற்ற வந்தவாசி யுத்தமும் முறையே வங்காளத்திலும் சென்னையிலும் ஆங்கிலேயர்களுக்கு மேலாதிக்கத்தைப் பெற்றுத் தந்தன; இந்த வெற்றிகளை அவர்கள் அதிகப்பட்ச அளவுக்குப் பயன்படுத்திக் கொண்டனர். பிளாசி யுத்தத்தில் வெற்றி பெற்ற கிளைவ் தமது மனம்போன போக்கில் மன்னர்களை அரியணையில் அமர்த்தக் கூடியவராகவும், நினைத்த மாத்திரத்தில் அவர்களைக் கீழே இறக்கக் கூடியவராகவும் வல்லமை மிக்கவரானார். நவாபுக்குத் தமது ஆதரவை அவர் விலைக்கு விற்றார்; நவாபும் எத்தனை எத்தனையோ சலுகைகளை அளிக்க ஒப்புக்கொண்டார். அவர் நவாபுகளிடமிருந்தும் ஜெஹாகிர்களிடமிருந்தும் பெருமளவில் கையூற்றுப் பெற்றார்; பிரிட்டிஷ் உள்துறை அதிகாரிகளின் விருப்பங்களுக்கு மாறாக ஆனால் உப்பு வாணிகத்தில் ஏகபோகத்தைப் புகுத்தினார்; ஆனால் அதே சமயம் அரசு அலுவலர்களுக்கு முழு சுதந்திரம் அளித்தார்; ஸ்தல மக்களை அறவே விலக்கி, சில வாணிகங்களில் தனிப்பட்ட முறையில் ஏகபோகமாக ஈடுபடவும் அவர்களை அனுமதித்தார்; ''பிற உயிரினங்களைக் கொன்று இரையாகக் கொள்ளும் விலங்குகளைப் போன்றவர்கள் இவர்கள்'' என்று பர்க் இந்த அலுவலர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். இதன் விளைவாக மக்கள் பெரிதும் அடக்கி ஒடுக்கப்பட்டனர்; கொடியவறுமைப் படுகுழியில் தள்ளப்பட்டனர்; கிளைவ் மலைமலையாகச் செல்வம் குவித்தது பற்றியும், மக்களின் கொத்தியெடுக்கும் கோரவறுமை பற்றியும் மக்காலே மிக அற்புதமாக

1. டபிள்யூ. டபிள்யூ. ஹன்டர், 'பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாறு'' தொகுதி I, பக்கம். 6

2. ஜி.பி.ஹெர்ட்ஸ், 'பழைய காலனியாதிக்க அமைப்பு'', பக்கம் 4.

வருணித்திருக்கிறார். ''அவர் கூறுவதாவது: 'கிளைவைப் பொறுத்தவரையில் அவர் ஈட்டிக்குவித்த் பொருள்களுக்கு அளவே இல்லை; அவரே நிதானம் காட்டினால்தான் உண்டு. வங்கத்தின் கருவூலம் முற்றிலுமாக அவருக்குத் திறந்து விடப்பட்டது. இந்திய மன்னர்கள் காலம் காலமாக, பரம்பரைப் பரம்ரையாகப் பயன்படுத்திவந்த கருவூலம் அது. அதில் மலைமலையாக நாணயங்கள் குவிந்து கிடந்தன. நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக்கொண்டு எந்த ஐரோப்பியக் கப்பலும் செல்வதற்கு முன்னர் வெனிசியர்கள் கிழக்கிந்தியப் பண்டங்களையும் நறுமணப் பொருள்களையும் வாங்குவதற்குத் தந்த ஃபுளோரியன் நாணயங்களையும் பைஜாண்டியம் நாணயங்களையும் இந்தக் குவியலில் கண்டுபிடிப்பது சிரமம்; மலைமலையாகக் குவிந்து கிடந்த தங்கம், வெள்ளி, மாணிக்கங்கள், வைரங்கள் முதலியவற்றிடையே கிளைவ் நடந்து சென்றார்; அவ்வப்போது அந்த நாணயங்களையும் தங்கம், வெள்ளி, விலையுயர்ந்த மணிக்கற்களையும் எடுத்துப் பார்த்தார்... இவ்வாறு அளவிறந்த செல்வங்கள் கல்கத்தாவில் மேன்மேலும் துரிதமாகக் குவிக்கப்பட்டன; அதேசமயம் 3 கோடி மனித ஜீவன்கள் துயரமிக்க, இரங்கத்தக்க, இழிவினும் இழிவான, மிகக் கொடிய வறுமையின் அதல பாதாளத்தில் தள்ளப்பட்டனர். ஆங்கிலேயர்களின் நிர்வாகம் சமுதாயம் ஜீவித்திருக்குமா என்று சந்தேகிக்கும் அளவுக்கு மிக மோசமாக நடைபெற்றது. இந்தச் சந்தர்ப்பத்தில் சில வரலாற்று நிகழ்ச்சிகள் நம் நினைவுக்கு வருகின்றன. பண்டைரோமாபுரி ஏகாதிபத்தியத்தின் புற மாகாண ஆளுநர் ஒருவர் ஒன்றிரண்டு ஆண்டுகள் பதவி வகித்து விட்டு அங்கிருந்து சென்றபோது என்ன செய்தார் தெரியுமா? தமது சொந்த நகரமான காம்போமியா கடற்கரையில் ஆடம்பர ஆர்ப்பட்டமான பளிங்கு மாளிகைகளையும் குளியல் அறைகளையும் கட்டும் பொருட்டு, அவற்றிற்குத் தேவையான பொருள்களை இந்த மாகாணத்திலிருந்து வல்லந்தமாகக் கடத்திச் சென்றார்; அம்பர் குவளைகளில் மதுவருந்தி, பாடும் பறவைகளைச் சமைத்து விருந்துண்டு அகமகிழ்ந்தார்; வாட்போர் வீரர்கள், மல்லர்கள் அடங்கிய படைகளையும் ஒட்டகக் கூட்டங்களையும் அணிவகுத்துக் காட்டி அனைவரையும் பிரமிக்க வைத்தார் என்று வரலாறு கூறுகிறது. இதேபோன்று ஸ்பானிஷ் வைசிராய் மெக்சிக்கோ அல்லது லிமாவிலிருந்து புறப்பட்டுச் சென்றபோது அந்த மக்களின் சாபத்தைத்தான் தன்னுடன் கொண்டு சென்றார்; வெள்ளியிலான லாடங்கள் அடிக்கப்பட்ட குதிரைகள் பூட்டிய பொன்முலாம் பூசப்பட்ட ஆடம்பர வண்டிகள் நீண்டவரிசையில் வர அவர் கோலாகலமாக மாட்ரிட் நகரில் பிரவேசித்தார் என்று சரித்திரம் பகர்கிறது. கிளைவின்

ஆடம்பர ஆர்ப்பாட்டம் இப்போது இவற்றை எல்லாம விஞ்சுவதாக இருந்தது.''

கிளைவ் வங்க மக்களைச் சிதைத்துச் சீர்குலைத்தார், பாழ்ப் படுத்தினார். முதலாவது கவர்னர் ஜெனரலான வாரன்ஹேஸ்டிங்ஸ் சுதேச மன்னர்களைப் பகடைக்காய்களாக வைத்துச் சந்தர்ப்பவாத அரசியல் நடத்தினார்; அதிகாரத்தைப் பெருமளவுக்குப் துஷ்பிர யோகம் செய்தார். காசிமன்னரையும் அயோத்தி பீகம்களையும் அவர் மிக மோசமாக நடத்தியதும், அவர்களைத் துன்புறுத்தி பணம் பெற்றதும், ஆயிரக்கணக்கான ரோஹில்லர்கள் பச்சைப் படுகொலை செய்யப்பட்டதும் போன்ற சம்பவங்கள் பதினெட்டாம் நூற்றாண் டின் மாபெரும் அரசியல் தத்துவஞானியான எட்மண்ட் பர்க்கை மிகுந்த அதிர்ச்சிக்குள்ளாக்கின; அவர் தர்மாவேசம் கொண்டார். அதிகாரத் துஷ்பிரயோகம் செய்ததாக பிரிட்டிஷ் பாராளுமன்றத் தில் வாரன்ஹேஸ்டிங்ஸ் மீது குற்றம் சாட்டினார். இதேபோன்ற காரணங்களுக்காக வெர்ரஸ் மீது சிசரோ கொண்டு வந்த துரோகக் குற்றச்சாட்டை இது நினைவுப்படுத்துவதாக இருந்தது. பர்க் ஒடுக்கப் பட்ட மக்களுக்காக வாதாடினார்; அவர்களுக்கு இழைக்கப்பட்ட கோரக்கொடுமைகளை அகற்றுவதற்கும், அவர்களைத் துன்புறுத்திய வர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவதற்கும் பெருமுயற்சி எடுத் துக் கொண்டார்; இதில் அவர் திட உறுதியைக் காட்டிய போதிலும், ஷெரிடான் அவருக்குத் தீவிர ஆதரவளித்தபோதிலும் வாரன்ஹேஸ் டிங்ஸ் மீதான துரோகக் குற்றச்சாட்டு தோல்வியடைந்தது; எனினும் இந்த முயற்சி பெரும் பாராட்டைப் பெற்றது. நூறு மகத்தான வெற்றிகளுக்குச் சமமான தோல்விகளில் ஒன்றாக இது பாவிக்கப் பட்டது. பர்க்கின் வாழ்க்கை பற்றித் தாம் எழுதியுள்ள நூலில் மார்லி பிரபு பின்வருமாறு கூறுகிறார்: ''ஹேஸ்டிங்ஸ் குற்றமற்றவர் என்று விடுவிக்கப்பட்டது முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. அவர் மீதான குற்றச்சாட்டின் படிப்பினை எவர் மனத்திலும் போதிய அளவு ஆழமாகப் பதியத்தக்கதாக இருக்கிறது. அந்த மாபெரும் படிப் பினை இதுதான்: ஆசிய மக்களுக்கு உரிமைகள் இருக்கின்றன; அதே போன்று ஐரோப்பியர்களுக்குக் கடமைப் பொறுப்புகள் உள்ளன: அடிமைப்பட்ட இனம் விஷயத்தில் மிக உயர்ந்த நீதிமுறைமையை, ஒழுக்கப் பண்பை கடைப்பிடிக்க மேம்பட்ட இனம் கடமைப்பட்டிருக் கிறது. தமது நாட்டு மக்களுக்கும் அவர்களைச் சார்ந்து தாழ் நிலை யில் வாழ்பவர்களுக்கும் இடையேயான உறவுகளில் நேர்மையை, வாய்மையை, கருணையை, உயர் ஒழுக்கநெறியை நிலைநாட்ட அரும்பாடுபட்ட அருள் நெறியாளர், முதல் திருத்தூதர் என்ற முறையில்

பர்க் என்றென்றும் நமது பெரும் போற்றுதலுக்கு, வணக்கத்துக்கு, மதிப்புக்கு உரியவர்.''

இத்தகைய அருந்திறவாளர்கள் போன்றோரின் முயற்சியால், நேரடியான நிர்வாகச் சுரண்டல் முறை முளையிலேயே கிள்ளியெறியப்பட்டது; எனினும் சில மறைமுகமான சுரண்டல் முறைகள் புகுத்தப்பட்டன அல்லது இதே நிர்வாகத்தில் அவை நீடிக்க அனுமதிக்கப்பட்டன. இந்த மறைமுகமான சுரண்டல்முறைகளில் சரக்குகள் உள்நாட்டில் இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்லுவதற்கு விதிக்கப்படும் தீர்வையும் அடங்கும். கம்பெனி ஊழியர்கள் தனிப்பட்ட வாணிகர்கள் என்றமுறையில் இந்த வரியிலிருந்து முற்றிலும் விதிவிலக்கு அளிக்கப்பட்டனர்; ஆனால் அதேசமயம் சுதேசி வணிகர்கள் மீது இந்தத் தீர்வை மிகக் கடுமையான முறையில் திணிக்கப்பட்டது; இதனால் அவர்களது பொருளாதார மேம்பாடு பெரிய அளவுக்குப் பாதிக்கப்பட்டது.

இந்தத் தீர்வைகளைப் பற்றி திரு. ஹோல்ட் மக்கன்சி பின்வருமாறு கூறுகிறார்:

> 'சில பொருள்கள் ராஜதானியைச் சென்றடைவதற்கு முன்னர் பத்துச் சுங்கச்சாவடிகளையும் அநேக சௌக்கிகளையும் (தீர்வை வசூலிக்கும் சிறுநிலையங்கள்) கடந்து நீண்ட பயணம் செய்ய வேண்டியிருந்தது. நாட்டிற்கு மிக முக்கியமான எந்தப்பண்டங்களும் ஆங்காங்கே அடிக்கடி ஏற்படும் இத்தகைய தடைகளிலிருந்து தப்புவதில்லை.
>
> 'சட்ட விரோதமாகப் பணம் கறத்தலும் தாமதங்களும் இல்லாதிருந்தாலும் அப்போதும் இந்த வரி விதிப்பு முறை நாட்டின் வாணிக உறவைக் கடுமையாகப் பாதிக்கவே செய்யும். போக்குவரத்துச்செலவும், இதர வாணிகச்செலவுகளும் அத்துடன் அரசாங்கம் விதிக்கும் 5 அல்லது 7½ சதவீத தீர்வையும் விலை வேறுபாட்டில் அடங்கினாலொழிய வரிசையாக பல சௌக்கிகளால் பிரிக்கப்பட்டுள்ள மாவட்டங்களிடையே பண்டங்கள் பரிவர்த்தனை நடைபெறுவது சாத்தியமல்ல. ஆக, விலைகளில் சமசீரற்ற நிலை அதிகரித்ததன் காரணமாகவும், நியாயமாக பயனீட்டு வரி செலுத்தும் கோட்பாட்டுக்கு மாறுபட்டமுறை கடைப்பிடிக்கப்பட்டதன் காரணமாகவும் பல இடங்களின் மீது சுமை விழுகிறது; இங்கெல்லாம் பயனீட்டாளர் தீர்வையோடு மேற்கொண்டும் பணம் செலுத்த வேண்டியிருக்கிறது.

*''அரசாங்கத்துக்குச் செலுத்தவேண்டிய தொகை தவிர சுங்கச்சாவடி அதிகாரிகளுக்குத் தரவேண்டிய பணத்தையும் சேர்த்துப் பார்க்கும்போது, சிறுமூலதனத்தைக் கொண்டு நடத்தப்படும் வாணிகம் முற்றிலும் தடைபடுவது நிச்சயம் என்றே தோன்றுகிறது. செல்வந்தனான வணிகனால் தன்னிடம் எவ்வளவு தொகை கோரப்பட்டாலும் அதனைத் தர முடியும்; ஏனென்றால் கணிசமாகக் கைக்கூலி தருவது பெரும் முதலீட்டுக்கு அதிகப் பாதிப்பு எதையும் ஏற்படுத்தி விடாது; மேலும் அவனுடைய செல்வமும் செல்வாக்கும் மட்டுமீறிப் பணம் பறிப்பதிலிருந்து அவனைக் காப்பாற்றுகின்றன. ஆனால் சிறு வணிகனுடைய நிலைமையோ பரிதாபத்திலும் பரிதாபமானது; சுமாரான தொகையேகூட அவனுக்குக் கிட்டக்கூடிய லாபத்தை விழுங்கி ஏப்பமிட்டு விடும்; இதிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அவனுக்கு வழி ஏதுமில்லை.*

*''பிரிட்டனில் தயாரிக்கப்படும் பொருள்களுக்கு உகந்த மார்க்கெட்டைத் தேடுவதிலேயே இங்கிலாந்திலுள்ள அதிகாரிகளும் சரி, பொதுவாக இங்கிலாந்தின் வணிக சமூகத்தினரும் சரி இதுவரை பிரதானமாக கவனம் செலுத்தி வந்திருகின்றனர். இதனால் இந்தியாவின் ஏற்றுமதி வாணிகத்தை விடவும் இறக்குமதி வாணிகத்திலேயே அவர்கள் மிகுந்த அக்கறைகாட்டி வருகின்றனர். இதன் காரணமாக, இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு அனுப்பப்படும் ஏராளமான பொருள்கள் 1810 ஆம் வருட ஒழுங்குமுறைச் சட்டப்படி நிர்ணயிக்கப்பட்ட தீர்வைகளிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கின்றன; ஆனால் அதேசமயம் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் அவுரி, பருத்தி, கம்பளி, சணல் நார் ஆகியவை மட்டுமே வரிவிலக்கு பெற்றிருக்கின்றன, அதிலும் இதனால் இந்தியாவை விட இங்கிலாந்துக்கு அனுகூலம் அதிகம் என்ற கண்ணோட்டத்திலேயே இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது எனக் கருதுகிறேன்.''*

இந்த உள்நாட்டுச் சரக்குப் போக்குவரத்துத் தீர்வைகள் பற்றி எல்லன்பரோ பிரபு கூறியிருப்பதை இங்கு படிப்பது உகந்ததாக இருக்கும். அவர் கூறுகிறார்:

*''இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட பருத்திப் பொருள்கள் இந்தியாவில் இறக்குமதி செய்யப்படும்போது அவற்றிற்கு*

$2\frac{1}{2}$ சதவிகித தீர்வை விதிக்கப்படுகிறது. ஆனால் அதே சமயம் இந்தியாவின் பருத்திப் பொருள்கள் விஷயத்தில் என்ன நடக்கிறது? நூலாக இருந்தால் $7\frac{1}{2}$ சதவிகிதத் தீர்வை செலுத்தவேண்டும்; அதுவே நெய்த துணியாக இருந்தால் மேற்கொண்டு $2\frac{1}{2}$ சதவிகிதம் கூடுதலாகத் தீர்வை விதிக்கப் படும்; அதுமட்டுமல்ல, அது வெள்ளைத்துணியாக இருந்தது என்று ரோவனா சான்று பெற்ற பிறகு அது சாயந்தோய் விக்கப்பட்டிருந்தால் மேற்கொண்டும் $2\frac{1}{2}$ சதவிகித தீர்வை விதிக்கப்படும். இவ்வாறு (இந்தியாவில் பயன்படுத்தப் படும்) இந்தியாவின் பருத்திப்பொருள்களுக்கு மொத்தம் $17\frac{1}{2}$ சதவிகித தீர்வை செலுத்த வேண்டும்.

''பதனிடப்படாத தோலுக்கு தீர்வை 5 சதவிகிதம்; அதுவே பதனிடப்பட்ட தோலானால் கூடுதலாக 5 சதவிகிதம்; அந்தத் தோல் மிதியடிகளாகவும் பாத அணிகளாகவும் தயா ரிக்கப்பட்டால் மேலும் 5 சதவிகிதம் தீர்வை விதிக்கப்படு கிறது. இவ்விதம் இந்தியாவில் பயன்படுத்தப்படும் இந்தியத் தோல்பொருள்களுக்கு மொத்தம் 15 சதவிகிதம் தீர்வை செலுத்த வேண்டும்.

'அடுத்து, சர்க்கரை விஷயத்தை எடுத்துக்கொள்வோம். அது ஒரு நகரத்தில் இறக்குமதி செய்யப்படும்போது 5 சத விகிதம் சுங்கவரியும், 5 சதவிகிதம் நகரத் தீர்வையும் செலுத்த வேண்டும்; அது ஏதேனும் பண்டமாகத் தயாரிக்கப்பட்டு அதே நகரிலிருந்து வேறோர் இடத்துக்கு அனுப்பப்படும் போது மேற்கொண்டும் 5 சதவிகித தீர்வை உண்டு. இவ்வாறு, இந்தியாவில் பயன்படுத்தப்படும் இந்திய சர்க்கரைக்கே மொத்தம் 15 சதவிகித தீர்வை செலுத்த வேண்டியிருக்கிறது.

''மொத்தம் 235க்குக் குறையாத பொருள்கள் உள்நாட்டுத் தீர்வைகளுக்கு உட்பட்டிருக்கின்றன. இந்தத் தீர்வையில் சொந்த உபயோகத்துக்கும் வீட்டு உபயோகத்துக்குமான அனைத்தும் அடங்கும்; சோதனைமுறையுடன் கூடிய வரி வசூலிக்கும் செயல்பாடு மிகவும் தொல்லையும் தொந்தரவும் அலைக்கழிப்பும் எரிச்சலுமூட்டக் கூடியதாகும்; இதனால் வருவாய் பெருகுவதற்கு எந்த வாய்ப்பும் இல்லை. சோதனை யிடும் அதிகாரத்தை ஒவ்வொரு சுங்கச்சாவடி அதிகாரியும் உண்மையிலேயே பயன்படுத்தினால் அனாவசியமான கால தாமதம் ஏற்பட்டு, அது உள்நாட்டு வாணிகத்துக்கே முற்றுப்

புள்ளி வைக்கும். கைக்கூலி பெறுவதற்குத்தவிர மற்றபடி இந்த சோதனை மேற்கொள்ளப்படுவதில்லை.''

இவற்றோடு இந்தியாவில் ஒரே மாதிரியான நாணய செலாவணி முறை இல்லாததும் சேர்ந்து கொண்டது.

இவையாவும் இந்தியத் தொழில்களுக்கு உலை வைக்கும் கருவிகளாக இருந்து வந்தன.

பிரெட்ரிக் லிஸ்ட் பின்வருமாறு கூறுகிறார்: ''இந்தியப் பருத்தி மற்றும் பட்டுப் பொருள்களைத் தீர்வையின்றி இங்கிலாந்தில் இறக்குமதி செய்வதற்கு அவர்கள் அனுமதித்திருந்தால், பிரிட்டிஷ் பருத்தி மற்றும் பட்டுப்பொருள்களின் உற்பத்தி விரைவிலேயே நிச்சயமாக ஸ்தம்பித்துப் போயிருக்கும். குறைந்த கூலிக்கு வேலை செய்யும் தொழிலாளர்களையும், மலிவான விலைக்குக் கிடைக்கும் மூலப்பொருள்களையும் இந்தியா பெற்றிருந்தது மட்டுமன்றி, பல நூற்றாண்டுகள் அனுபவமும், ஆற்றலும், நீடித்த பயிற்சியும் அதற்கு இருந்தன.''

இந்திய வரலாற்று ஆசிரியரான திரு.எச்.எச்.வில்சன் இதே கருத்தை இன்னும் அழுத்தம்திருத்தமாக, தெள்ளத் தெளிவாகக் கூறுகிறார். தன்னைச் சார்ந்திருக்கும் நாடான இந்தியாவுக்கு இங்கிலாந்து இழைத்த அநீதி மிகவும் வருந்தத்தக்கது, துயரமிக்கது என்பதை அவர் ஒப்புக்கொண்டு பின்வருமாறு கூறுகிறார்:

> ''இந்தியப் பருத்தி மற்றும் பட்டுப் பொருள்களை இங்கிலாந்தில் தயாரிக்கப்படும் அதேமாதிரியான பொருள்களைவிட 50 அல்லது 60 சதவிகிதம் குறைவான விலைக்கு பிரிட்டிஷ் சந்தையில் நல்ல லாபத்திற்கு விற்கமுடியும் என்பது (1813ல்) தெரிய வந்தது. எனவே, இந்தியப் பொருள்களுக்கு அவற்றின் மதிப்பில் 70 அல்லது 80 சதவிகித தீர்வை விதித்தோ அல்லது அப்பொருள்களுக்கு அறவே தடைவிதித்தோ இங்கிலாந்தின் பருத்தி மற்றும் பட்டுப் பொருள்களைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவ்வாறு செய்திருக்கவில்லை என்றால், இத்தகைய கொடூரமான தீர்வைகளை விதித்திருக்கவில்லை என்றால், பெய்ஸ்லே, மான்செஸ்டர் போன்ற பஞ்சாலைகள் ஆரம்பத்திலேயே நின்றுபோயிருக்கும், நீராவியாற்றலால் கூட அவற்றைப் புனரமைத்திருக்க

முடியாது. இந்தியா செய்த தியாகத்தால்தான் அவை உயிர் பிழைத்தன. இந்தியாமட்டும் சுதந்திர நாடாக இருந்திருந்தால் பழிக்குப்பழி வாங்கியிருக்கும், அடிக்கு அடி கொடுத்திருக் கும்; பிரிட்டிஷ் பண்டங்கள் மீது கடுமையான தீர்வை களை விதித்திருக்கும்; பேரழிவிலிருந்து தனது உற்பத்தித் தொழிலைப் பாதுகாத்திருக்கும். இவ்விதம் தற்காப்பு நட வடிக்கைகள் மேற்கொள்ள அது அனுமதிக்கப்படவில்லை. அன்னியனின் தயவில், கருணையில், கடைக்கண் கடாட் சத்தில் அது இருந்தது. பிரிட்டிஷ் பண்டங்கள் அதன்மீது திணிக்கப்பட்டன; இதற்கு அவர்கள் எத்தகைய தீர்வை யும் செலுத்துவதில்லை. வாணிகத்தில் இந்தியா வுடன் சரிநிகர் சமத்துவமாக இங்கிலாந்து போட்டியிடமுடியாது; அதற் கான ஆற்றல் அதற்கு இல்லை; எனவே, இந்தப் போட்டியை மட்டுப்படுத்துவதற்கு, முடிவில் அதனைக் குரல்வளைப் பிடித்து நெருக்குவதற்கு அந்நிய உற்பத்தியாளன் கொடும் அரசியல் கரத்தைப் பயன்படுத்தலானான்.'' இதன் விளை வாக திரு.சாப்ளினது சொற்களில் கூறுவதானால் ''பல இந்திய உற்பத்தியாளர்கள் தங்கள் பராமரிப்புக்கு வேளாண்மை யிடம் தஞ்சம் புகும்படியான நிர்ப்பந்தத்துக்கு உள்ளாயினர்; இந்தத் துறை ஏற்கெனவே நெருக்கடி தாங்காது கண் பிதுங்கிக் கொண்டிருந்தது.''

இவ்வாறு ஒருபுறம் நிலவருவாய்க் கொள்கை வேளாண் மையை நிர்மூலமாக்கியது என்றால் இன்னொருபுறம், மாற்றானை அடக்கி ஒடுக்கித் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் இங்கிலாந் தின் கொள்கை இந்தியாவில் தொழில்களைக் குழித் தோண்டிப் புதைத்தது; அதன் செல்வத்தால் கவர்ந்து ஈர்க்கப்பட்ட ஈக்கள் கூட்டம் அதனை மிக மோசமான அழிசேற்றில் கொண்டுபோய் அமுக்கிற்று.

இதன் விளைவாக இந்திய மக்களுக்கு ஏற்பட்ட இன்னல் களும் இடுக்கண்களும் இடம்பைகளும் வறுமையும் வெறுமையும் எல்லையற்றவை; இவற்றை பல யாத்ரிகர்களும் ஆளுநர்களும் மிகவும் சோகமயமாக வருணித்திருக்கின்றனர். 1830ல் இந்தியா வில் சுற்றுப்பயணம் செய்த பிஷப் ஹீபர் பின்வருமாறு எழுதினர்: ''தாங்கொண்ணா இப்போதைய வரிச்சுமையில் ஐரோப்பிய விவசாயி யும் சரி, இந்திய விவசாயியும் சரி ஆக்கவளமுற முடியாது, செல்வச் செழிப்புற முடியாது. விளைபொருள்களில் பாதியை அரசாங்கம் கோரி பெற்றுக் கொள்கிறது. இதன் விளைவு என்ன? அதிகம் செலவில்லாமல் மிக எளிய முறையில் விவசாயிகள் நிலத்தை

உழுது பண்படுத்தி சாகுபடி செய்த போதிலும், பொதுவாக இந்தியர்கள் மட்டாக சாப்பிடும் பழக்கம் உடையவர்கள் என்றபோதிலும் அரசாங்கம் எடுத்துக் கொண்டது போக எஞ்சிய விளைபொருள்கள் அவர்களுக்குப் போதவில்லை. இதனால் செழுப்பமிக்க ஆண்டுகளில்கூட மக்கள் கோரக் கொடிய வறுமையின் இரும்புப் பிடியில் சிக்கிக் கண்பிதுங்குகின்றனர். இந்நிலைமையில் மகசூல் சிறிதளவு பொய்த்தால்கூட, கடனைக் குறைத்தல், நிவாரணம், விநியோகம் போன்றவற்றுக்காக பெருந்தொகையைச் செலவிடவேண்டியிருக்கிறது. அப்படியும் ஆண்களும் பெண்களும் பச்சிளம் குழந்தைகளும் கூட்டம் கூட்டமாகத் தெருக்களில் செத்து மடிவதையும், ஆடு மாடுகளின் பிணங்கள் சாலைஓரங்களில் சிதறிக் கிடப்பதையும் தடுத்திட முடிவதில்லை. வளம்பொங்கும் வங்காளத்தில் நிரந்தர வரி மதிப்பீடு முறை நடைமுறையில் உள்ளது; அங்கு பஞ்சம் என்றால் இன்னதென்று தெரியாது. ஆனால் அதேசமயம் இந்துஸ்தானில் (வட இந்தியாவில்) மன்னர்களின் பரிவாரத்தினரிடையே ஒரு பொதுவான கருத்து நிலவுவதைக் காண்கிறேன், சில சந்தர்ப்ப சூழ்நிலைகளை அனுசரித்து இந்தக் கருத்தை நானும் ஏற்றுக்கொள்கிறேன். அந்தக் கருத்து இதுதான்: சுதேச மன்னர்களின் குடிமக்களைவிட கம்பெனியின் மாகாணங்களிலுள்ள உழவர்கள் மிகவும் இழிந்த நிலைமையில், பிணந்தின்னிக் கழுகுகளைப் போல் கொடிதினும் கொடிதான வறுமை வாட்டியெடுக்க, நாடி தளர்ந்தவர்களாக, நம்பிக்கை இழந்தவர்களாக இருக்கின்றனர்; இங்கு சென்னையில், பொதுவாகக் கூறுமிடத்து மண் வளமற்றதாக இருப்பதால், விவசாயிகளின் நிலைமை இன்னும் மிக மோசமாக இருக்கிறது. நாம் செய்வது போல் எந்த சுதேச மன்னரும் அதிகவரி கோரி கெடுபிடி செய்வதில்லை; மாறாக நாம் கைக்கொள்ளும் முறையிலிருந்து சில நல்ல அம்சங்களை அவர்கள் சுவீகரித்துக் கொள்கின்றனர். கம்பெனி ஆட்சியில் மக்களிடமிருந்து அளவுக்கு மீறி வரிகள் தண்டப்படுகின்றன, நாடு படிப்படியாக கொடிய வறுமைப் படுகுழியில் விழுந்து வருகிறது என்று என்னிடம் கூறாதவர்களே இல்லை. கலெக்டர்கள் இந்த உண்மையை அதிகாரப்பூர்வமாக ஒப்புக்கொள்ள விரும்பவில்லை. மிகவும் திறமையான சில கலெக்டர்கள் வரி விகிதத்தை மக்களுக்கு அவ்வப்போது குறைத்துக் காட்டுவதிலும், அதேசமயம் அதனை அரசுக்கு உயர்த்திக் காட்டுவதிலும் வெற்றி பெறுகிறார்கள். எனினும் சோகமயமான துயரக் காட்சிகள் அனைத்தும் இவர்களால் மூடி மறைக்கப்படுகின்றன. இல்லையென்றால் இவை அவர்களுக்கு அவப்பெயரைத் தேடித்தரும்; சென்னையில் அல்லது கல்கத்தாவிலுள்ள செயலாளர்களின் கண்டனத்துக்கும் உள்ளாவார்கள்; இங்கிலாந்திலுள்ள கம்பெனி இயக்குநர்

களும் அதிகப் பணம் வேண்டுமென்று தொல்லைப்படுத்துவார்கள்.'' தொழில், வாணிகம் பற்றிக் கூறும்போது, 'சூரத் வாணிகம் தற்போது மிகவும் குறைந்துவிட்டது; கச்சாப் பருத்தியில்தான் சிறிதளவு வாணிகம் நடைபெறுகிறது; இது படகுகள் மூலம் பம்பாய்க்குக் கொண்டு செல்லப்படுகிறது. இந்த நாட்டில் தயாரிக்கப்படும் பண்டங்களை ஆங்கிலேயர்கள் மிகக் குறைந்த விலைக்கு விற்பனை செய்கின்றனர்; இதன் விளைவாக சுதேசி வணிகர்களின் சந்தர்ப்ப சூழ்நிலைகள் பெரிதும் சீர்கேடடைந்திருக்கின்றன'' என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார். டாக்காவின் சீரழிவு பற்றி அவர் பின் வருமாறு கூறுகிறார்: ''அதன் வாணிகம் முன்பிருந்ததில் அறுபதில் ஒரு பங்காகத்தான் இருக்கிறது; அதன் அனைத்து நேர்த்திமிகு கட்டிடங்களும் மற்றும் பிரெஞ்சு, டச்சு, போர்ச்சுக்கல் தேசங்களின் தொழிற்சாலைகளும் தேவாலயங்களும் தகர்ந்து தரைமட்டமாகிக் கிடக்கின்றன.''

தங்கள் துன்ப துயரங்களுக்கு முடிவு கட்டவேண்டும் என்று கேட்டுக்கொண்டு பாராளுமன்றத்திடம் சுதேச மக்கள் விண்ணப்பித்துக் கொண்டனர். அதில் அவர்கள் பின்கண்டவாறு குறிப்பிட்டிருந்தனர்: ''அந்நியத் தொழில்துறையும், இங்கிலாந்தின் தொழில் துறையும் வளர்ந்து வளம் பெறுவதற்காக இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்குப் பண்டங்களை ஏற்றுமதி செய்வதற்கு எல்லா வகைகளிலும் ஊக்கமளிக்கப்படுகிறது; அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்கு சகல வசதிகளும் செய்து தரப்படுகின்றன. பருத்தியைப் பயிரிட்டும் பருத்திப் பொருள்களைத் தயாரித்தும் அண்மைக் காலம் வரை ஜீவனம் செய்து வந்த ஆயிரக்கணக்கான சுதேசி மக்கள் இன்று **உண்ண உணவின்றிப் பட்டினிக் கிடக்கின்றனர்.''** ஆனால் இந்த வேண்டுதலுக்கு எந்தப் பலனும் கிட்டவில்லை. இந்தியாவை ஆளும் கதிப்போக்கைத் தங்கள் கையில் எடுத்துக்கொண்டவர்களின் கண்ணோட்டத்தில் இங்கிலாந்தின் நலன்களே எப்போதும் முன்னிலையில் இருந்தன.

பிஷப் ஹீபர் மிகச் சரியாகக் கூறியது போல், மக்களின் ''துன்பமயமான சோகக் காட்சிகள் அனைத்தும்'' கம்பெனியின் அதிகாரிகளால் மூடிமறைக்கப்பட்ட போதிலும் இதுவிஷயத்தில் வெளிப்படையாக, அப்பட்டமாக, மனம்திறந்து, அழுத்தம் திருத்தமாகத் தங்கள் கருத்துக்களை சுதந்திரமாக வெளியிட்டவர்களும் உண்டு.

இயக்குநர்களின் மன்றம் 1766 மே 7 ஆம் தேதி பின்கண்டவாறு எழுதிற்று:

> ''மிகவும் வருந்தத்தக்க நிலை நிலவுவதை நாங்கள் உணர்கிறோம்... நமது ஊழியர்கள் பெருமளவில் லஞ்ச ஊழல்களிலும் கொள்ளை லாபவேட்டையிலும் ஈடுபட்டிருக்கின்றனர்; குடியேற்றம் எங்கும் ஒழுக்கச் சீர்கேடுகள் மலிந்து போயுள்ளன. எந்த ஒரு காலத்திலும், எந்த ஒரு நாட்டிலும், என்றும் கண்டிராத மிகக் குரூரமான, கொடுமையினும் கொடுமையான அடக்குமுறையின், ஒடுக்குமுறையின் மூலம் மலைமலையாக செல்வங்கள் ஈட்டிக் குவிக்கப்பட்டிருப்பதை நினைத்துப் பாருங்கள்.''

கிளைவ், அவரே ஒரு குற்றவாளி என்றபோதிலும், இந்தியாவில் ஆங்கிலேயர்கள் கட்டவிழ்த்து விட்டிருந்த குரூர ஒடுக்குமுறையை அவர் அறிந்திருந்தார். 1766 செப்டம்பர் 8ஆம் தேதி ஜார்ஜ் டட்லிக்கு அவர் பின்வருமாறு எழுதினார்:

> ''ஆனால் இத்தனை ஆண்டுகளாக மறந்து போன நடவடிக்கைகளைப் பின்னோக்கிப் பார்ப்பதை எடுத்துக் கொள்வோம்; அவற்றை ஆராய்ந்தால் சில விஷயங்கள் தெரிய வரும். ஆனால் அவை எளிதில் தாங்கக் கூடியவையாக இருக்க மாட்டா; அவை தேசத்துக்கு அவமானத்தைக் கொண்டுவரும், அதேசமயம் மாபெரும் நல்ல குடும்பங்களின் மதிப்பை சிதைத்துச் சீர்குலைக்கும்.''

கம்பெனியின் மோசமான ஆட்சி கண்டு சர் தாமஸ் மன்றோ பெரிதும் சீற்றமடைந்தார். ''நமது அரசாங்க அமைப்பின் விளைவாக மக்கள் அனைவரும் கீழ்நிலைக்குத் தள்ளப்படுவதற்குப்பதிலாக நாம் எல்லோருமே இந்த நாட்டிலிருந்து வெளியேற்றப்படுவது உகந்ததாக இருக்கும்'' என்று அவர் கூறினார்.

திரு.மார்ட்டின் தமது 'கிழக்கு இந்தியா'' 1838 என்ற நூலில் பின்கண்டவாறு கூறுகிறார்: ''பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து ஆண்டுதோறும் 30,00,000 பவுன் இங்கிலாந்துக்கு அபகரித்துச் செல்லப்படுகிறது; 12 சதவிகிதக் கூட்டு வட்டி (வழக்கமான இந்திய வட்டி) என்று முப்பது ஆண்டுகளுக்குக் கணக்கிட்டால் இது மாபெரும் தொகையாக 72,39,00,000 பவுன் ஸ்டெர்லிங்கை எட்டுகிறது. இவ்விதம் இடையறாது வெளியேறும் பணம் இங்கிலாந்தையே கூட விரைவில் திவாலாக்கிவிடும். இவ்வாறிருக்கும்போது, ஒரு தொழிலாளி தினம் இரண்டு அல்லது மூன்று பென்ஸ் கூலிவாங்கும் இந்தியாவில் இது ஏற்படுத்தும் விளைவுகள் எவ்வளவு கடுமையானவையாக, சகிக்க வொண்ணாதவையாக இருக்கும் என்பதைச் சொல்ல வேண்டிய

தில்லை. பிரிட்டிஷ் இந்தியாவில் வாழும் லட்சோப லட்சக்கணக் கான மக்கள் குலைநடுங்க வைக்கும் கோர வறுமைக்கு ஆளான மக்களாக இழிவினும் இழிந்த, பெரிதும் நலிவுற்ற மக்களாக மாற்றப் பட்டுவரும்போது, பிரிட்டிஷ் மூலதனத்துக்கு, திறமைக்கு, தொழில் துறைக்கு எத்தகைய மார்கெட் கிட்டும்!'' வங்க சிவில் சர்வீசைச் சேர்ந்த திரு.பிரெட்ரிக் ஜான் ஷோர் மிகுந்த வேதனையோடு, துய ரத்தோடு பின்வருமாறு கூறுகிறார்:

'இந்தியாவின் அமைதியும் மகிழ்ச்சியுமிக்க நாட்கள் மறைந்தோடி விட்டன; அது பெற்றிருந்த செல்வத்தில் பெரும்பகுதி உறிஞ்சப்பட்டு விட்டது; பேராசை கொண்ட படுமோசமான ஆட்சியால் அதன் ஆற்றல்கள் முடமாக்கப் பட்டு விட்டன; இந்தக் குரூரமான ஆட்சியில் ஒரு சிலரின் நலனுக்காக லட்சோப லட்சம் மக்களின் நலன்கள் பலியிடப் பட்டு வருகின்றன. பிரிட்டிஷ் அரசாங்கம் நிறுவியுள்ள ஆட்சிமுறையின்கீழ் நாடும் மக்களும் படிப்படியாக ஏழை யாகி வருகின்றனர். ஆங்கில அரசாங்கம் மிகக் கொடுமை யான முறையில், கிட்டிப் போட்டுப் பணம் பறித்து வரு வதால் இதுவரை எங்கும் என்றும் கண்டிராத அளவுக்கு நாடும் மக்களும் கோர வறுமையின் பிடியில் சிக்கி உழன்று அல்லல்பட்டு வருகின்றனர்...''

''சாத்தியமான எல்லா வழிகளிலும் இந்திய தேசத்தை தங்களது சொந்த நலன்களுக்கும் அனுகூலங்களுக்கும் கருவி யாகப் பயன்படுத்துவதே ஆங்கிலேயர்களின் அடிப்படைக் கோட்பாடாக இருந்துவருகிறது... மக்களின் சேமநலன் நமது குறிக்கோளாக இருக்குமாயின் முற்றிலும் வேறுபட்டதொரு மார்க்கத்தை நாம் கைக்கொண்டிருப்போம், அதனால் ஏற் படும் பலனும் அறவே வேறுபட்டதாக இருக்கும்.''

ஆனால் இவ்வாறு எதுவும் நிகழவில்லை. இன்னும் சொல்லப் போனால் வேறுவிதமாக நடந்திருக்குமானால் அது இயற்கைக்கு மாறானதாக இருந்திருக்கும்; ஏனென்றால் மில் கூறுவதுபோல், ''மக்களது சொந்த அரசாங்கம் என்பதற்கு ஒரு பொருளும், மூலப் பண்புக்கூறும் உண்டு. ஆனால் ஒரு மக்கள் இன்னொரு மக்கள் மீது நடத்தும் ஆட்சிக்கு இத்தகைய பண்புக்கூறுகள் இருக்கமுடியாது. ஒரு மக்கள் இன்னொரு மக்களைத் தங்களது சொந்த சுயநலத்துக் காகப் பயன்படுத்திக் கொள்ளக்கூடும்; தங்களது நாட்டவரின் ஆதாயத்துக்காக, பணம் கறப்பதற்காக மனித மந்தை இடமாகப் பாவிக்கக் கூடும்.''

கிழக்கிந்தியக் கம்பெனியின் நிர்வாகம் ரோமாபுரிப் பேரரசின் கீழிருந்த ரோமானிய மாகாண நிர்வாகத்தின் ஒரு நகலாகவே காட்சியளித்தது; ஸ்தல அளவில் சிற்சில சுதந்திரங்கள் வழங்கப் பட்டதைத்தவிர, இதில் வேறு எந்த அடிப்படையான மாற்றங்களும் இல்லை. இது சம்பந்தமாக மானசென் பின்வருமாறு கூறுகிறார்: 'ரோமானிய மாகாண அரசியலமைப்புச் சட்டம் சாராம்சத்தில் ராணுவ அதிகாரத்தை மட்டுமே ரோமாபுரி கவர்னருக்கு அளித்திருந்தது. மற்றபடி, நிர்வாகமும் சட்ட அதிகாரமும் சமூகங்களிடம் இருக்க வேண்டும் என்றே உத்தேசிக்கப்பட்டது. சமூக சுதந்திரம் என்ற வடிவத் தில் பழைய அரசியல் சுதந்திரத்தையும் வாழ்க்கை முறையையும் நிலை நாட்டுவதே இதன் நோக்கம்.''

ஆனால் பிரிட்டிஷார் எல்லாவற்றையும் அடக்கிஒடுக்கினர். இது சம்பந்தமாக திரு.ஃபெர்ரரோ பின்வருமாறு வலியுறுத்திக் கூறுகிறார்: ''பொது நலனைக் கருத்திற் கொண்டும், மக்களுக்கு நல்லது செய்து விரிந்து பரந்த, அனுகூலங்களை வழங்கும் அரசாங்கக் கோட்பாடுகளைக் கைக்கொண்டும் ரோமாபுரி பரந்து விரிந்த மனோபாவத்தோடு தனது மாகாணங்களை நிர்வகித்தது என்ற மிகவும் தவறான கருத்தை நாம் கைவிடவேண்டும்; அப்போதுதான் கிழக்கிந்தியக் கம்பெனி குறித்து சுயதிருப்தியடையும் போக்குக்கு எதிராகவும், 1700 ஆண்டு இடைவெளியில் மனித இயல்பு தார்மிகத் தரத்தில் வெகுவாக முன்னேறியிருக்கிறது என்று சாதிக்கமுயலும் வரலாற்றாசிரியர்களின் விபரீதப்போக்குக்கு எதிராகவும் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்காலத்தில் நிலவிய நிலைமை குறித்து நமது இந்த ஆய்வு இரத்தினச் சுருக்கமாக அமைந்து விட்டது. இருப்பினும் முகலாயர்களையும் மராட்டியர்களையும் கவிழ்த்துவிட்டு ஆட்சிக்கு வந்தவர்கள் அவர்களை விடச் சிறந்த தார் மிகப் பண்புடையவர்கள் அல்ல என்பதையும், உன்னதமான கலா சாரத்துக்குச் சொந்தக்காரர்கள் என்று பீற்றிப் பெருமையடித்துக் கொண்டவர்களின் ஆட்சியில் விட கொடுங்கோலர்கள், கொள்ளைக் காரர்கள் என்று தூற்றப்பட்டவர்களின் ஆட்சியில் இந்தியாவின் பொருளாதார நிலைமை மேம்பட்டதாகவே இருந்தது என்பதையும் இந்த சுருக்கமான ஆய்வு தெளிவுபட எடுத்துரைத்திருப்பதைக் காணலாம்.

ஒருபுறம், தொழில்கள் நசிந்து நாசமாகிவந்தன; இன்னொரு புறம் வேளாண்மைத் துறையை நம்பி வாழ்பவர்களின் எண்ணிக்கை

மேன்மேலும் அதிகரித்து வந்தது; மற்றொருபுறம் உற்பத்தியாற்றல் குறைந்து அதேசமயம் வரிகள் எண்ணிப் பார்க்க முடியாதபடி ஏறு முகமாக இருந்தன; வேறொருபுறம், சுதேசிகள் தங்கள் ஆற்றல் களை, திறமைகளை வெளிப்படுத்துவதற்கான வாய்ப்பு வசதிகள் மிகக் குறைவாக இருந்தன. இத்தகையதோர் பரிதாபகரமான, துயர மான சூழ்நிலைமையில்தான் இந்திய மக்கள் கம்பெனி ஆட்சி யிலிருந்து மன்னர் பிரான் ஆட்சியில் காலடியெடுத்து வைத்தனர்.



# தீண்டப்படாதோரும் பிரிட்டிஷ் பேரரசும்

*(இந்தப் பகுதி 123 தட்டச்சுப் பக்கங்களைக் கொண்டது; படைகளில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அனுமதிக்கப்படாததையும், பிரிட்டிஷ் அரசாங்கத்தால் அவர்கள் பல வகைகளிலும் புறக்கணிக்கப்பட்டதையும் இது எடுத்துரைக்கிறது. முதல் பக்கம் காணப்படாத இந்தப் பகுதியை வட்டமேசை மாநாடுகளின்போது லண்டனில் தங்கியிருந்த டாக்டர் அம்பேத்கர் தயாரித்ததாக அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதியுள்ள மராட்டிய எழுத்தாளர் திரு. சி.பி. கைர்மோடே குறிப்பிட்டிருக்கிறார். இப்பகுதி எங்கள் கைக்கு எப்படிக் கிடைத்ததோ அப்படியே வெளியிட்டுள்ளோம் - ஆசிரியர்.)*

## முகப்புரை

*அமெரிக்கக் கண்டத்தைக் கண்டுபிடித்த அவரது பயணத்தின் குறிக்கோள் இந்தியாவைச் சென்றடைவதேயாகும். கொலம்பசின் இந்தப்பயணம்கூட திடீரென மேற்கொண்ட துணிகர முயற்சியல்ல. இந்தியாவுக்குக் கடல்வழி மார்க்கத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஒரு திட்டத்தின் ஒரு பகுதியேயாகும். இம்முயற்சிக்கு போர்ச் சுக்கல் மன்னர் ஹென்றிதான் முதல் தூண்டுகோலாக இருந்தார். இதுவிஷயத்தில் அவர் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார்; தமது 42 ஆண்டுக்கால ஆட்சியில் (1418-1460) இம்முயற்சிக்கு எல்லா வகைகளிலும் உதவி செய்தார்.

போர்ச்சுக்கீசியர்கள், டச்சுக்காரர்கள், பிரெஞ்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் போன்றோர் தங்களுடைய ஒதுங்கிய நிலையி லிருந்து வெளிவருவதற்கும், ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்கு ஒரு நேரடியான கடல்மார்க்கத்தைக் கண்டுபிடிக்கவேண்டும் என்ற இந்த வேட்கை அவர்களுக்கு எழுவதற்கும் காரணம் என்ன? ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்கு வந்தது தனியொரு இனம் மட்டும் மேற்கொண்ட இடர்த்துணிவு அல்ல; மாறாக இது பலர் சேர்ந்து ஈடுபட்ட ஒன்றுபட்ட முயற்சியாகும்; இந்த ஒன்றுபட்ட முயற்சியில் ஒவ்வொரு ஐரோப்பிய தேசமும் எல்லையற்ற ஆர்வத்தோடு பங்கு கொண்டது; இதனால் இந்தியாவை முதலில் சென்றடைவது யார் என்பதில் அவற்றிடையே கடுமையான போட்டி நிலவிற்று. இவ் வகையில் போர்ச்சுகீசியர்கள்தான் முதலில் இந்தியாவுக்கு வந்தனர் என்பதை வைத்து மற்றவர்கள் முயற்சியற்று வாளாயிருந்தனர் என்றோ, அலட்சியமாக இருந்தனர் என்றோ கருதிவிடக் கூடாது. நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக் கொண்டு வருவதை விட இந்தியாவுக்கு வேறொரு குறுகிய மார்க்கம் இருக்கக்கூடும் என்று ஆங்கிலேயர்களும் டச்சுக்காரர்களும் நம்பினர்; இதற்கான சாத்தியக் கூறுகளைக் கண்டறிவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்ததே அவர்கள் இந்தியாவுக்கு வருவதில் தாமதம் ஏற்பட்டதற்குக் காரணமாகும். பிரெஞ்சுக்காரர்கள் கடைசியாக வந்து சேர்ந்தவர்களாயினும் போர்ச்சுக்கீசியர்களுக்கு இரண்டாவது இடத்தில் அவர்கள் இருந் தனர்; அவர்களது முதல் பயணம் 1529ல் சுமத்ரா நோக்கி மேற் கொள்ளப்பட்டது.

---

★ இந்தக் கையெழுததுப்பிரதியின் ஆரம்பப்பகுதி அடங்கிய முதல் பக்கம் காணப்படவில்லை. இந்தக் கட்டுரையின் தலைப்பும் எங்கும் காணவில்லை. பம்பாய் மக்கள் கல்விக் கழகத் தின் வசமுள்ள தட்டச்சு செய்யப்பட்ட குறிப்புகளைக்கொண்டு இந்தத் தலைப்பு தரப்பட்டிருக்கிறது.

இந்தியாவுக்கும் ஏனைய கிழக்கிந்தியத் தீவுகளுக்கும் செல்ல வேண்டுமென்ற இந்த ஆர்வத்துக்கு, துடிப்புக்கு அடிப்படைக் காரணம் என்ன? இந்தியாவுக்குக் கடல் மார்க்கம் கண்டுபிடிப் பதற்காக போர்ச்சுக்கீசியர், ஸ்பானிஷ்காரர்கள், ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள், டச்சுக்காரர்கள் போன்றோர் பல நூற்றாண்டுளாக சலியாது, சளையாது ஏன் தீவிர முயற்சி மேற்கொண்டார்கள்? இந்த விடாமுயற்சியின் நோக்கம் இன்ப வாழ்க்கைக்கான நறுமணப் பொருள்களைப் பெறுவதே ஆகும் - மிளகாய், கிராம்பு, சாதிக்காய் முதலியவை இவற்றில் அடங்கும். இப்பொருள்கள் இந்தியாவி லும் கிழக்கிலும்தான் கிடைக்கும்.

இந்த நீண்டநெடும் பயணங்கள் எல்லாம் நறுமணப் பொருள் களுக்காகவா என்று எண்ணும்போது விந்தையாகத் தோன்றக்கூடும். ஆனால் ஐரோப்பாவின் இந்த விஸ்தரிப்பில் நறுமணப் பொருள் கள் மிக முக்கிய பங்காற்றின என்பதில் ஐயமில்லை.

பதினைந்தாம் பதினாராம் நூற்றாண்டுகளில் ஐரோப்பிய மக்கள் நறுமணப் பொருள்களை எந்த அளவுக்கு மிகுந்த ஆர்வத் துடன் விரும்பினார்கள், எந்த அளவுக்கு அவற்றைப் பயன்படுத்தி னார்கள் என்பதைப் பேராசிரியர் செய்னே சேகரித்த பின்கண்ட தகவல்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்:''[1]

> 'மத்திய காலத்தின் பிரதான உயர் இன்ப வாழ்க்கைப் பொருள்களில் உணவாக உண்ணத்தக்க நறுமணப் பொருள் களும் அடங்கும். மதுபான வகைகளுடன் பல்வேறு நறுமணப் பொருள்களும், சுவையூட்டும் பொருள்களும் பயன்படுத்தப் பட்டன. சர் தோபாவின் காட்டில் 'நோட்டமுகே புட்டே இன் ஏல்' வளர்ந்தது.''
>
> ''பிராஸ்ஸர்ட் மன்னரின் விருந்தினர்களை அரண் மனைக்கு அழைத்துச் சென்றார்; அங்கு அவர்கள் முன் ஒயினும் நறுமணப்பொருள்களும் வைக்கப்பட்டன. 1224ல் ஒரு மார்செல்லஸ் யுவதிக்கு அளிக்கப்பட்ட சீதனத்தில் 'சாதி பத்திரி, இஞ்சி, ஏலக்காய் முதலியவையும் இடம் பெற்றி ருந்தன.''

---

1. அமெரிக்க வரலாற்றின் ஐரோப்பியப் பின்னணி, பக்கம் 10-11

''பிரபுக்களின் நிலையையும் விவசாயிகளின் நிலையையும் வேறுபடுத்திக்காட்ட விரும்பிய ஜான்பால் அவர்களுக்கு ஒயின் வகைகளும், நறுமணப்பொருள்களும், நேர்த்தியான சுவையான ரொட்டியும் கிடைக்கின்றன, ஆனால் எங்களுக்கோ புல்லரிசியும், வைக்கோல் கழிவும்தான் கிடைக்கின்றன.'' 'லேட்டினர் கழுவில் ஏற்றுவதற்குக் கொண்டு சென்றபோது, சாதிக்காய்களை தம்முடைய நண்பர்களுக்கு நினைவுப் பொருள்களாக வழங்கினார்.

''இந்த நறுமணப் பொருள்களிலேயே மிளகுதான் சர்வ சாதாரணமாகப் பயன்படுத்தப்படக் கூடியது, மிகவும் மதிப்பு வாய்ந்தது. இதனால் பரிசளிப்பதற்குப் பணத்துக்குப் பதிலாக மிளகு அளிக்கப்படுகிறது. 'மடில் தடி சௌசர் மன்னனுக்குப் பரிசாக அளிக்கப்பட்டாள்; அவளுடைய நிலத்தின் மதிப்பு 8 பவுன் 2 பென்ஸ் மற்றும் 1 பவுண்டு மிளகு, 1 பவுண்டு இலவங்கம், 1 அவுன்ஸ் பட்டு' என நில அளவாய்வுத்துறையில் தற்செயலாகத் கிடைத்த ஆவணம் ஒன்று கூறுகிறது. இந்த நறுமணப் பொருள்களுக்குள்ள அபரிதமான கிராக்கியும், பயனீடும் வியக்கத்தகாக உள்ளது. வெனீசிய, ஜெனோவா மற்றும் இதர மத்தியதரைக்கடல் நாடுகளைச் சேர்ந்த கப்பல்களும் படகுகளும் ஏராளமான நறுமணப் பொருள்களை மேற்குநோக்கி ஏற்றிச் சென்றன; எங்கெங்கும் அவை சந்தைகளிலும் அங்காடிகளிலும் விற்கப்பட்டன. ஜெர்மன் கொள்ளைக்கார கோமான்கள் இந்த வணிகர்களுக்கு ''மிளகு மூட்டைகள்'' என்று நையாண்டியான, எனினும் ரசிக்கத்தக்க பட்டப்பெயரைக் கொடுத்துள்ளனர்; ரைன் நதிவழியாக சரக்குகள் செல்லும்போது அவற்றை கொள்ளையடிப்பதை ஒரு வழக்கமாக இவர்கள் கொண்டிருந்தனர். ஆண்டுதோறும் எகிப்திய சுல்தானிடமிருந்து 4,20,000 பவுண்டு மிளகு வாங்க வேண்டுமென்ற ஓர் ஒப்பந்தம் பல ஆண்டுகளாகவே நடைமுறையில் இருந்து வருகிறது. இந்தியாவுக்கு முதலில் சென்ற கப்பல்களில் ஒன்று 2,10,000 பவுண்டு மிளகைக் கொண்டு வந்தது. 1520ல் போர்ச்சுக்கீசியர்கள் ஓர் இந்திய சிற்றரசருக்கு 2,00,000 பவுண்டு மிளகை அபராதமாக விதித்தனர். வீர சாகசங்களிலும், வரலாற்றுப் பதிவு ஏடுகளிலும், சமையல் குறிப்புகளிலும், சுங்கவரிப் பட்டியலிலும் நறுமணப் பொருள்கள் அடிக்கடி குறிப்பிடப்படுகின்றன.''

அந்நாளைய ஐரோப்பியர்களுக்கு நறுமணப் பொருள்கள் ஏன் தேவைப்பட்டன? இதற்கு ஒரு பதில் அவற்றின் சுவை என்பதாகும். ''சலிப்பூட்டும் ஆகார வகைகள், நயமற்ற உணவு, திறமையற்ற சமையல் போன்ற மத்தியகால ஐரோப்பிய சமையற் கலையில் இருந்த குறைபாடுகளை இந்த நறுமணப் பொருள்கள் ஓரளவு போக்கின.''[1] பலருக்கு இவை சுவை சம்பந்தப்பட்டவையாக இருந்தன. ஏழைகளுக்கோ இவை இன்றியமையாதவையாக இருந்தன. ஏழை மக்களுக்கு நறுமணப்பொருள்கள் அவசியம் தேவைப்பட்டதற்கு முக்கிய காரணம் உண்டு. பண்டைக்காலத்தில் உணவுப் பொருள்களுக்கு பெரும் பற்றாக்குறை நிலவிற்று; போதிய எந்திர வசதிகள் இல்லாததால் மனிதனது உற்பத்தி ஆற்றலும் மிகவும் குறைவாக இருந்தது. இதனால் உணவை வீணாக்கவோ அல்லது ஊசிப் போய்விட்டது என்று அதைத் தூக்கியெறியவோ முடியாது. மிஞ்சிய உணவையோ அல்லது உடனடி உபயோகத்துக்குத் தேவையில்லாத உணவையோ கெடாமல் பாதுகாப்பது அவசியமாயிற்று. இவ்வகையில் நறுமணப் பொருள்கள் மிகச்சிறந்த பதனச் சரக்குகளாகும். இதன் காரணமாகவும், சுவை காரண மாகவும் மத்தியகால ஐரோப்பாவில் எங்கும் அவை பெரிதும் தேவைப்பட்டன.

இந்தியாவுக்குச் சென்று இந்த நறுமணப் பொருள்களை வாங்கி வருவதற்கு ஐரோப்பிய தேசங்களுக்கு ஒரு நேரடிக் கடல் மார்க்கம் ஏன் தேவைப்பட்டது என்ற மற்றொரு கேள்வி இங்கு எழுகிறது. நன்னம்பிக்கை முனையைச் சுற்றிக்கொண்டு இந்தியாவுக்குச் செல்லும் கடல் மார்க்கத்தை ஐரோப்பிய தேசங்கள் கண்டுபிடிப்பதற்கு முன்னர் நன்கு நிலை நாட்டப்பட்ட மூன்று தரைவழி மார்க்கங்கள் இருந்தன; இவை வடக்கு, மத்திய மற்றும் தெற்கு மார்க்கங்கள் எனப்பட்டன; இந்த மார்க்கங்கள் மூலமாகத்தான் இந்த நறுமணப் பொருள்கள் அப்போது ஐரோப்பாவுக்கு வந்துகொண்டிருந்தன.

இவற்றில் வடக்கு மார்க்கம் தூரக்கிழக்குக்கும் மேற்குக்கும் இடையே அமைந்திருந்தது; அது சீனாவின் உட்புற மாகாணங்களிலிருந்து மேற்கு நோக்கி சென்று மாபெரும் கோபி பாலைவனத்தைக்கடந்து சீன மலைகளுக்குத் தெற்கே உள்ள லோப் ஏரியை அடைந்தது; பின்னர் கோதான், யார்க்கண்ட், காஷ்கர், சமரோ, பொகாரா முதலான பல பண்டைய நகரங்கள் வழியாக

1. செய்னே, மேற்படி நூல், பக்கம் 10.

இறுதியில் காஸ்பியன்கடல் பிராந்தியத்தை அடைந்தது. இந்தப் பிரதான வடக்கு மார்க்கங்களுடன் வேறு சில மார்க்கங்களும் இணைந்து ஓர் ஒன்றுபட்ட மார்க்கமாக இமாலய மற்றும் இந்துக் குஷ் கணவாய்களைக் கடந்து சென்றது. இந்த மார்க்கத்தின் வழியாக இந்தியப் பண்டங்களும் சீனப் பண்டங்களும் கொண்டு செல்லப்பட்டன. சீன நெடுங்சுவருக்கும் காஸ்பியன் கடலுக்கும் இடையேயான இந்த மார்க்கத்தில் தகிக்கும் பாலைவனங்களையும், மலைகளையும், ஸ்டெப்பி வெளிகளையும் கடந்து செல்ல என்பது முதல் நூறு நாட்கள் பிடித்தன. சீனாவில் இன்னும் சற்று வடக்கே இதற்கு இணையாக ஒரு சாலை பாலைவனத்தையும் மலைகளையும் கடந்து பால்காஷ் ஏரியை ஒட்டி காஸ்பியன் கடலுக்குக் கிழக்கே அமைந்துள்ள மக்கட்தொகை மிக்க அதே பண்டைய பிராந்தியத்தைச் சென்றடைந்தது. இங்கு காரவான் மார்க்கங்கள் மீண்டும் பிரிந்தன. இவற்றில் சில மார்க்கங்கள் தென் மேற்குத்திசையில் சென்று, மேலேகூறிய மத்திய மார்க்கங்களுடன் இணைந்து, இறுதியில் ஆசியா மைனர் மற்றும் சிரியா வழியாக கருங்கடலையும் மத்தியதரைக்கடலையும் அடைந்தன. மற்ற மார்க்கங்கள் காஸ்பியனின் வடக்குக் கரையை ஒட்டி தரைவழியாகச் சென்று அல்லது அதனைக்கடந்து அஸ்திரக்கானை அடைந்தன. அஸ்திரக்கானிலிருந்து வோல்கா நதியைக் கடந்து டான்நதி முகத்துவாரத்துக்கு அருகே தாணாவில் கருங்கடலையோ அல்லது கிரிமியாவில் காஃபாவையோ கடந்து கருங்கடலை அடைந்தன.

மத்திய மார்க்கம் மெசப்பட்டோமியா, சிரியா வழியாக லெவந்துக்குச் சென்றது. கப்பல்கள் இந்தியாவிலிருந்து ஆசியக் கடற்கரை வழியாக பெர்சிய வளைகுடாவை அடைந்து தாம் கொண்டுவந்த விலை உயர்ந்த பண்டங்களை சால்டிய அல்லது கீழ் யூப்ரட்டஸ் சந்தைகளில் விற்றன. வளைகுடாவின் கழிமுகத்துக்கு அருகிலுள்ள ஓர்முஸிலிருந்து பஸ்ஸோரா வரை அதன் கரைகளில் அமைந்துள்ள பல வாணிக நகரங்கள் இந்த வாணிகச் சரக்குகளை ஏற்றி வந்த கப்பல்களுக்கு துறைமுகங்களாகப் பயன்பட்டன. இந்தக்கடற்கரை நகரங்களில் பல காரவான் மார்க்கங்கள் முடிவடையும் இடங்களாகவும் இருந்தன; இவை கிழக்கிலிருந்து வந்து பின்னல் வலையமைப்புபோல் அமைந்து பெர்சியாவின் பல்வேறு மாகாணங்களை இணைத்தன; பின்னர் ஆப்கானிஸ்தானின் கணவாய்கள் வழியாக வடஇந்தியாவை அடைந்தன. பெர்சிய வளைகுடாவின் முகப்புப் பகுதியிலிருந்து இந்த மார்க்கத்தின் ஒரு கிளை டைக்ரஸ் நதியை ஒட்டி பாக்தாத்தைச் சென்றடைந்தது. இந்த இடத்திலிருந்து காரவான் உதவியுடன் வாணிகச்சரக்குகள் குர்திஸ்தான்

வழியாக பெர்சியாவின் மாபெரும் வடக்குத் தலைநகரமான தப்ரிசுக்குக் கொண்டு செல்லப்பட்டன; அங்கிருந்து மேற்கு திசையில் கருங்கடலுக்கோ அல்லது மத்தியதரைக்கடலிலுள்ள லயாசுக்கோ அவை எடுத்துச் செல்லப்பட்டன. மற்றொரு கிளை மார்க்கத்தில் ஒட்டகங்கள் வரிசை வரிசையாகச் சென்ற வண்ணமிருந்தன; அவை பால்யோராவிலிருந்து பாலைவனத்தின் வழியாக மேற்குதிசையில் சென்று அலெப்போ, அன்டியோச், டமாஸ்கஸ் போன்ற சிரிய நகரங்களை அடைந்தன. இறுதியாக இந்த சரக்குகள் மத்தியத்தரைக் கடற்கரையிலுள்ள லாவ்டிசியா, டிரிபோலி, பெய்ரூட், அல்லது ஜாபாவை சென்றடைந்தன; சில சரக்குகள் தெற்கே அலெக்சாந்திரியா வரை கூட கொண்டு செல்லப்பட்டன.

தெற்கத்திய மார்க்கம் கடைசிக் கட்டங்கள் நீங்கலாக மற்றபடி ஒரு கடல் மார்க்கமேயாகும். இது செங்கடல் வழியாகச் சென்றது. இந்தியப்பண்டங்களும் தூரக்கிழக்கு நாடுகளின் பண்டங்களும் கடல் மார்க்கமாக எகிப்துக்குக் கொண்டு வரப்பட்டன; அங்கிருந்து அவை நைல் நதியின் முகத்துவாரங்களிலிருந்து ஐரோப்பாவைச் சென்றடைந்தன.

தரை மார்க்கங்கள் சுற்றி வளைத்துச் செல்லுபவையாகவும் ஆபத்தானவையாகவும் இருந்தன. அவை பாதுகாப்பற்றவையாக இருந்தன; இந்த மார்க்கத்தில் சரக்குகளை ஏற்றிச் செல்வது கடினமானதாகவும், அதிகம் செலவு பிடிக்கக் கூடியதாகவும் இருந்தது. இந்த மார்க்கத்தில் செல்லும் வணிகர்களை கொள்ளைக்காரர்கள் சூறையாடினர்; அரசாங்கங்களோ இன்னும் ஒருபடி மேலேசென்று அளவுக்கு அதிகமாக வரிகள் விதித்தன. இவ்விரண்டு மார்க்கங்களில் மத்திய மார்க்கத்தின் அளவுக்கு வடக்கத்திய மார்க்கம் நெடுஞ்சாலை அல்ல. மேலும் கடுவெப்பான, வறட்சிமிக்க பிரதேசங்களின் வழியாக மேற்கொள்ளப்படும் பயங்கர ஒட்டகப்பயணமாக இது இருந்ததால் சிறு அளவிலேயே சரக்குகளை ஏற்றிச் செல்ல முடிந்தது. இந்த மார்க்கம் மத்திய மார்க்கத்தைப் போன்ற முக்கியத்துவத்தை ஒருபோதும் பெற்றதில்லை. இந்த மத்திய அல்லது இந்தோ-சிரிய மார்க்கம்கூட எப்போதும் திறந்த மார்க்கமாக இருந்ததாகக் கூற முடியாது. அது இருமுறை மூடப்பட்டது. கி.பி.632-651ல் இஸ்லாம் வெற்றிவாகை சூடிவந்தபோது அதனால் உத்வேகம் பெற்ற சாரசன் அராபியர்கள் இந்த இந்தோ-சிரிய மார்க்கத்தில் இருந்த நாடுகளைக்

கைப்பற்றியதைத் தொடர்ந்து இந்த மார்க்கம் மூடப்பட்டது. 11 ஆம் நூற்றாண்டில் சிலுவைப் போர்கள் நடைபெற்ற காலத்தில இரண்டாம் முறை இந்த மார்க்கம் மூடப்பட்டது. பெரும்பாலும் கடல்மார்க்க மாக இருந்த தெற்கு மார்க்கமும் இதேபோன்று பாதுகாப்பற்றதாக இருந்தது. ''இந்து மாகடலிலும் அண்டை நீர்ப்பரப்பிலும் அடிக்கடி சுழன்றுவீசும் பயங்கர புயல்கள் ஏராளமான கீழைநாட்டு நாவாய் களுக்குப் பலத்த சேதம் விளைவித்தன; இந்த அழிவுப் பணியில் புயல்களோடு கடற்கொள்ளை பெரிதும் போட்டியிட்டது; இதுமட்டு மல்ல, துறைமுக வரிகள் உள்நாட்டுவரிகளைவிட மிக அதிகமாக இருந்தன.''[1] ஆயினும் இத்தகைய எத்தனை எத்தனையோ இடர்ப் பாடுகளும் இக்கட்டுகளும் இருந்த போதிலும் கீழைநாட்டுப் பண்டங் கள் பெருமளவில் மத்தியத் தரைக்கடல் பிரதேசத்துக்கு வந்து சேர்ந்தன.''[2] ஐரோப்பிய வணிகர்களுக்கு அவை தங்குதடையின்றிக் கிடைத்தன.

இந்தத் தரைமார்க்கங்கள் எல்லாம் இருக்கும்போது ஒரு கடல் மார்க்கத்தைக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் ஏன் ஏற் பட்டது? மேலைய ஆசியாவில் துருக்கியர்களும் மங்கோலியர்களும் எழுச்சியுற்று சாரசன் கலாசாரத்தை வீழ்த்தினர்; ஐரோப்பாவுட னான வாணிகத்தை அழித்தனர். இதன் வெளிப்பாடு 1038ல் புலனா யிற்று; மூர்க்கப்பிடிவாதம் கொண்ட துருக்கியர்கள் பெர்சியாவின் மீது பாய்ந்தனர். இதற்கு இரண்டு நூற்றாண்களுக்குப் பின்னர் செங் கிஸ்கான் தலைமையில் மங்கோலியர்கள் காட்டாற்றுவெள்ளம் போல் கரைபுரண்டு ஆசியாவில் புகுந்தனர். 1258ல் மங்கோலியர் கள் பாக்தாத்தைக் கைப்பற்றினார். 1403ல் தைமூர் சிரியாவைப் பிடித்துக்கொண்டார். 1453ல் கான்ஸ்டான்டிநோபிள் துருக்கியர் களிடம் வீழ்ச்சியடைந்தது. துருக்கியர்கள் மற்றும் மங்கோலியர்களின் இந்த எழுச்சி இரண்டு தரைமார்க்கங்களையும் முற்றிலுமாக மூடி விட்டது. தெற்கத்திய மார்க்கம்தான் சிறிது காலம் திறந்திருந்த ஒரே மார்க்கமாகும். ஆனால் இதுவும்கூட 1516ல் துருக்கியர்கள் எகிப்தை வென்று கைப்பற்றியபோது மூடப்பட்டு விட்டது.

ஐரோப்பிய தேசங்களை இந்தியாவுக்குக் கொண்டு வருவ தற்கு இரண்டு காரணக்கூறுகள் உண்டு. முதலாவது காரணக்கூறு

1. செய்னே, மேற்படி நூல், பக்கம் (தட்டச்சுப் படியில் காணப்படவில்லை. ஆசிரியர்)
2. மேற்படி, பக்கம்.

நறுமணப்பொருள்கள், இரண்டாவது காரணக்கூறு துருக்கியர்களும் மங்கோலியர்களும் பழைய தரைவழி வாணிக மார்க்கங்களை மூடி விட்டதாகும். இந்தக் காரணக்கூறுகள்தான் இந்தியாவுக்கு ஒரு கடல் மார்க்கத்தைக் கண்டுபிடிக்கும்படி ஐரோப்பிய தேசங்களை நிர்ப் பந்தித்தன; இறுதியில் அத்தகைய மார்க்கத்தைக் கண்டுபிடிப்பதில் அவை வெற்றியும் கண்டன.

கிழக்கிந்தியத் தீவுகளுடன் வாணிகம் செய்வதற்காகத்தான் இந்த ஐரோப்பியர்கள் முதலில் வந்தனர்; ஆனால் சுக்கு, மிளகு என்று சொல்லிக் கொண்டு வந்த அவர்களுக்கு நாடு பிடிக்கும் ஆசை விரைவிலேயே வந்துவிட்டது; ஆதிக்கப்பித்து அவர்களைப் பிடித்துக் கொண்டு ஆட்டிப்படைத்தது. இதனால் அவர்களிடையே போட்டி யும் பொறாமையும் தலைதூக்கி, மேலாதிக்கத்தைப் பெறுவதற்கான போராட்டமாக அது மாறிவிட்டது. ஆங்கிலேயர்களுக்கும் போர்ச்சுக் கீசியர்களுக்கும் இடையேயான போராட்டம் வாணிக மேலாண்மைக் கான போராட்டமாகவே ஆரம்பத்தில் இருந்தது. ஆங்கிலேயர் களுக்கும் போர்ச்சுக்கீசியர்களுக்கும் இடையேயான பேராட்டகளம் இந்தியாவும் பெர்சிய வளைகுடாவுமாகும். இந்தியாவைப் பொறுத்த வரையில் 1612லும், வளைகுடாவைப் பொறுத்தவரையில் 1622லும் இந்தப் போராட்டம் ஆங்கிலேயர்களுக்குச் சாதகமாக முடிந்தது. 1622லிருந்து இந்தியாவும் பெர்சிய வளைகுடாவும் இங்கிலாந்துக்கு கதவுதிறந்துவிடப்பட்ட வீடுகளாக இருந்தன; ஆங்கிலேயர்களின் வாணிக, தொழில் வளர்ச்சிக்கு போர்ச்சுக்கீசியர்கள் இனியும் ஓர் அபாயமாக இருக்கவில்லை. ஆங்கிலேயர்களுக்கும் டச்சுக்காரர் களுக்கும் இடையேயான போராட்டத்தின் களம் மலேயா தீவுக் கூட்டத்தில் அமைந்திருந்தது. இந்தப் போராட்டம் ஆங்கிலேயர் களுக்குப் பாதகமாக முடிந்தது. 1823ல் நடைபெற்ற இப்போராட்டம் 'மாஸ்க்கேயர் ஆப் அம்போயனா' என அழைக்கப்பட்டது. மலேயா தீவுக்கூட்டத்துடனான வாணிகத்தை முற்றிலுமாக டச்சுக்காரர் களிடம் விட்டுவிட்டு ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்குப் பின்வாங் கினர். இது இப்படியென்றால் ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக் காரர்களுக்கும் இடையேயான போராட்டம் மாபெரும் போராட் டமாக இருந்தது. இந்தியாதான் இந்தப் போராட்டத்துக்கான அரங்கம் ஆகும். இப்போராட்டத்தின் குறிக்கோள் அரசியல் மேலாண்மை பெறுவதேயன்றி, வாணிக ஆதிக்கம் பெறுவது அல்ல. பிரெஞ்சுக் காரர்கள் தெற்கிலும் கிழக்கிலும் வலுவாகக் காலூன்றிக் கொண் டிருந்தனர். தென்னிந்தியாவைப் பொறுத்தவரையில், போராட்டம்

1744ல் தொடங்கி 1760ல் வந்தவாசிப் போரில் முடிவடைந்தது; இப்போரில் பிரெஞ்சுக்காரர்கள் முற்றிலும் முறியடிக்கப்பட்டனர். கிழக்கு இந்தியாவைப் பொறுத்தவரையில், இந்தப் போராட்டம் ஒரே ஒரு போருடன் முடிவடைந்து விட்டது; அதுதான் 1757ல் நடைபெற்ற பிளாசிப்போர். இந்தப் போரில் பிரெஞ்சுக்காரர்களும் அவர்கள் ஆதரித்த நவாபும் தோல்வியடைந்தனர். இவ்விதம் பிரெஞ்சுக் காரர்கள் களத்திலிருந்து வெளியேற்றப்பட்டதைத் தொடர்ந்து, ஆங்கிலேயர்கள் தனிக்காட்டு ராஜாக்களாக இந்தியாவை ஆளும் ஆட்சியாளர்களாயினர்.

★ ★ ★

ஆனால் இந்தியா ஆங்கிலேயர்களின் வசமானது குறித்து இந்திய மக்களின் பிரதிபலிப்பு என்ன?

★ ★ ★

பிரிட்டிஷார் இந்தியாவை அடிமைப்படுத்தியதை ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது ஒரு விபத்து அல்லது எதிர்பாராத நிகழ்ச்சி என்றே கூறவேண்டும். ஒரு விபத்து என்ற முறையில் அதனை இந்தியக் கதிப்போக்கின் ஒரு பகுதி யாகக் கருதுவதே தகும். இந்தப் பொருளில்தான் கர்ஸான் பிரபு பின்வருமாறு கூறினார்:

(மேற்கோள் தட்டச்சுப் பிரதியில் இல்லை - ஆசிரியர்)

சரி, இது போகட்டும். பிரிட்டிஷார் இந்திய மக்களுக்கு என்ன செய்திருக்கிறார்கள்? இது ஒரு மிகப் பெரிய கேள்வியாகும். இது குறித்து எத்தனை எத்தனையோ தொகுதிகள் எழுதப்பட்டுள்ளன; இந்நிலைமையில் ஏற்கனவே எழுதப்பட்டதற்கும் அதிகமாக நான் கூறவேண்டிய அவசியம் இல்லை. இந்தக் கேள்வியை ஒரு குறுகிய வட்டத்திற்குள் கொண்டுவந்து பின்வருமாறு கேட்க விரும்புகிறேன்: தீண்டப்படாதோருக்காக பிரிட்டிஷார் என்ன சாதித்திருக்கிறார் கள்? பிரிட்டிஷார் ஆட்சியாளர்களானதும் தீண்டப்படாதோரைப் பிணித்திருக்கும் தளைகளை அகற்றுவதற்கும், அவர்களை அதல பாதாளத்திலிந்து .கைதூக்கிவிடுவதற்கும் என்ன செய்திருக்கிறார் கள்? இந்தக் கேள்வியில் பல அம்சங்கள் அடங்கியுள்ளன. எனினும் பொது அரசுப் பணி, கல்வி, சமூக சீர்திருத்தம் ஆகியவற்றுடன் மட்டும் இங்கு நிறுத்திக் கொள்கிறேன்.

## II

நாட்டின் பொது அரசுப் பணிகளில் தீண்டப்படாதோருக்குப் போதிய பிரதிநிதித்துவம் பெற்றுத் தருவதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் என்ன செய்தது?

முதலில் படைத்துறையை எடுத்துக் கொள்கிறேன். தீண்டப் படாதோருக்கு நேர்ந்துள்ள கதியை, அவலத்தைப் புரிந்து கொள் வதற்கு, உணர்ந்து கொள்வதற்கு பிரிட்டிஷார் இந்தியாவை வெற்றி கொண்டு கீழ்ப்படுத்துவது சாத்தியமாயிற்று என்றால் அது எவ்வாறு முடிந்தது என்ற கேள்வியை இங்கு கேட்பது அவசியம்.

இந்தியா வெற்றி கொள்ளப்பட்டது ஓர் அசாதாரணமான நிகழ்ச்சியாகும். இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பிய தேசங் களுக்குத் திடுமெனத் திறந்து விடப்பட்ட நாடுகள் மூன்று வகைப் படும். முதல் வகையில் வாஸ்கோ ட காமா, உலகுக்குத் திறந்து காட்டிய நாடுகள் அடங்கும்; இவற்றில் மிகப்பெரும்பாலானவை பெரும் மக்கட்தொகை கொண்டவையாக இருந்தன; அங்கெல்லாம் தொன்றுதொட்ட, விரிந்து பரந்த, நன்கு ஒழுங்கமைக்கப்பட்ட அரசுகள் இருந்து வந்தன. இரண்டாவது வகையில் கொலம்பஸ் கண்டுபிடித்த நாடுகள் அடங்கும். இந்த நாடுகளில் மக்கட்தொகை குறைவு. ஆட்சி அமைப்பு முறையும் மிகவும் ஆரம்பக் கட்டத்தில் இருந்தது. மூன்றாவது வகையில் .............. கண்டுபிடித்த நாடுகள் அடங்கும். அவை மக்கட் தொகையே இல்லாத வெறும் காலி பிரதேசங்கள். இந்த மூன்றுவகை நாடுகளில் இந்தியா முதலாவது வகையில் இடம்பெறுகிறது. இந்தியா வெற்றிக் கொள்ளப்பட்டது ஓர் அசாதாரணமான நிகழ்ச்சி என்று கூறுவதற்கு இதுவும் ஒரு காரண மாகும்.

இந்தியா வெற்றி கொள்ளப்பட்டது அசாதாரணமான நிகழ்ச்சி என்று கூறுவதற்கு இரண்டாவது காரணம் அது நடை பெற்ற காலமாகும். இந்தியா எப்போது வெற்றி கொள்ளப்பட்டது? 1757க்கும் 1818க்கும் இடைப்பட்ட காலத்தில் அது வெற்றிக் கொள்ளப் பட்டது.

*1757 ஆம் ஆண்டில் கிழக்கிந்தியக் கம்பெனியின் படைகளுக்கும் வங்காள நாவாபான சிராஜ்-உத்-தெளலாவின் படைகளுக்கும் இடையே ஒரு போர் நடைபெற்றது. இந்தப் போரில் பிரிட்டிஷ் படைகள் வெற்றி பெற்றன. இது பிளாசிப்போர் என வரலாற்றில் அறியப்படுகிறது. இந்த யுத்தத்தின் விளைவாகவே பிரிட்டிஷார் முதல் தடவையாக இந்தியாவில் பிரதேசங்களைக் கைப்பற்றுவதில் வெற்றி பெற்றனர். இவ்வாறு அவர்கள் இந்நாட்டில் பிரதேசங் களைக் கைப்பற்றுவதற்கான கடைசிப்போர் 1818ல் நடைபெற்றது. அது கோரேகௌன் போர் என அழைக்கப்படுகிறது. இந்தப் போர் தான் மராட்டியப் பேரரசுக்கு முடிவு கட்டி, அதனிடத்தில் இந்தியா வில் பிரிட்டிஷ் பேரரசை நிலைநிறுத்திற்று. ஆக, இவ்வாறு பிரிட்டி ஷாரால் இந்தியா வெற்றிக் கொள்ளப்பட்ட நிகழ்ச்சி 1757க்கும் 1818க்கும் இடையே நடைபெற்றது என்பது தெளிவு. இதே கால கட்டத்தில் ஐரோப்பாவின் நிலவரம் எவ்வாறு இருந்தது? ஆங்கி லேயர்கள் எத்தகைய நிலைமையில் இருந்தனர்? அது ஐரோப்பா வில் மிகப் பெருமளவில் குழப்பமும் கலவரமும் கொந்தளிப்பும் நிலவிய காலம். அது புகழ்பெற்ற நெப்போலிய யுத்தங்கள் நடைபெற்ற காலம். இவற்றில் கடைசி யுத்தம் 1815ல் வாட்டர்லூவில் நடை பெற்றது. இந்த யுத்தங்களில் பிரிட்டன் வெறும் பார்வையாளராக இருக்கவில்லை. இவற்றில் அது ஆழமாக, முனைப்பாக ஈடுபட் டிருந்தது. நெப்போலியனையும் பிரெஞ்சுப் புரட்சியையும் நசுக்கு வதற்காக உருவாக்கப்பட்டிருந்த ஐரோப்பிய நாடுகளின் கூட் டணிக்கு அது தலைமை தாங்கிற்று. இந்தக் கடும் போராட்டத்தில் தன்னைப் பாதகாத்துக் கொள்வதற்குப் பிரிட்டனுக்கு ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு பென்னியும், ஒவ்வொரு கப்பலும், ஒவ்வொரு துப்பாக்கியும் தேவைப்பட்டன. இத்தகைய நிலைமையில், தாய்நாட் டிலிருந்து வெகுதொலைவில் உள்ள அரங்கில் செயல்பட்டுக் கொண்டிருந்த கிழக்கிந்தியக் கம்பெனிக்கு அதால் எதையும் கொடுக்க முடியவில்லை; அவ்வாறு எதையும் கொடுக்க முடியாதது மட்டுமல்ல, ஐரோப்பாவில் நெப்போலியனின் அச்சுறுத்தலை எதிர்த்துப் போராடுவதற்காக கிழக்கிந்தியக் கம்பெனியிடமிருந்தே ஆட்களையும், கப்பல்களையும், பணத்தையும் பெறவும் செய்தது. மக்பெர்சன் தந்துள்ள பின்கண்ட காலக் குறிப்பிலிருந்து ஐரோப்பா வில் போர்களை முன்னின்று நடத்துவதற்கு கிழக்கிந்தியக் கம்பெனி பிரிட்டனுக்கு எந்த அளவுக்கு உதவ வேண்டியிருந்தது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.*

'முதலாவது, ஐரோப்பியர்களின் இரும்புக் கட்டுப்பாட்டின் முன் சுதேசிப்படைகளின் பலவீனம்; இரண்டாவது, ஐரோப் பியர்களிடம் சேவை செய்யும் சுதேசிகளிடம் அத்தகைய கட்டுப்பாட்டை ஊட்டிவளர்க்கும் திறன்; அவர் மேலும் கூறும்போது இந்த இரண்டு கண்டுபிடிப்புகளும் பிரெஞ்சுக் காரர்களுடையவயாகும்' என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

சிப்பாய்களை விட ஆங்கிலேயர்கள் நன்கு போரிட் டார்கள், இரு சாரார்களும் புரிந்த பொதுவான சாதனைகளில் அவர்களது பங்கு அதிகம் என்று ஒரு வாதத்துக்காக ஒப்புக் கொண்டாலும் ஆங்கில தேசம் இந்திய தேசங்களை வெற்றி கொண்டது என்று கூறுவது முற்றிலும் தவறாகும். சராசரியாக சுமார் ஐந்திலொரு பங்கு ஆங்கிலேயர்களைக் கொண்ட படைகளால் இந்திய தேசங்கள் வெற்றிகொள்ளப்பட்டன என்பதுதான் உண்மை. ஆனால் இந்த சாதனையில் நமது பங்கை நாம் மிகைப்படுத்தியதோடு அல்லாமல், இந்த சாதனையையே நாம் முற்றிலும் தவறாகப் புரிந்து கொண் டிருக்கிறோம், அதனை தவறாக விவரித்திருக்கிறோம். படை யின் இதர ஐந்தில் நான்கு பங்கினர் எந்த இனத்திலிருந்து வந்தவர்கள்? இந்தியாவின் சுதேசி மக்களிடமிருந்து வந்த வர்கள் அவர்கள்! ஆதலால் இந்தியா முற்றிலும் அயல் நாட்டவர்களால் வெல்லப்பட்டது என்று கூற முடியாது; அது தன்னைத்தானே வெற்றிகொண்டது என்றுதான் கூற வேண்டும்.''[1]

பேராசிரியர் சீலியின் இந்த விளக்கம் அது கூறப்பட்டவரை சரியானதே. ஆனால் இதற்குமேல் அது செல்லவில்லை. இந்தியா பிரிட்டிஷாரால் இந்தியர்களைக் கொண்ட ஒரு படையின் உதவி யால் வெல்லப்பட்டது. இந்த உண்மையைத் தெரிந்து கொள்வது, புறக்கணிக்காமல் இருப்பது இந்தியர்களுக்கும் சரி, பிரிட்டிஷாருக்கும் சரி நல்லது. ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது; அயல்நாட்டினர் படையில் சேர்ந்த இந்த இந்தியர்கள் யார்? பேராசிரியர் சீலி இந்தக் கேள்வியை எழுப்பவில்லை. ஆனால் இது இன்றைய சந்தர்ப்பத்தில் மிக முக்கியமான கேள்வி. கிழக்கிந்தியக் கம்பெனி யின் படைகளில் சேர்ந்து, இந்தியாவை வெற்றிக் கொள்வதற்கு பிரிட்டிஷாருக்கு உதவிய இந்த மக்கள் யார்? கிழக்கிந்தியக் கம்பெனி யின் படைகளில் சேர்ந்த இந்த மக்கள் இந்தியாவின் தீண்டப்படா

1. சீலி, இங்கிலாந்தின் விஸ்தரிப்பு, பக்கங்கள் 200-202

தோர்கள்தான் என்பதே இந்தக் கேள்விக்கு நான் அளிக்கக்கூடிய பதிலாகும் - பெருமளவிலான ஆராய்ச்சியின் அடிப்படையில் அமைந்ததே இந்தப்பதில். பிளாசிப்போரில் கிளைவுடன் சேர்ந்து போரிட்டவர்கள் துசாத்துகள்; இந்த துசாத்துகள் தீண்டப்படாத வர்கள். கோரேகௌன் போரில் பங்குகொண்டு சமர்புரிந்தவர்கள் மகர்கள்; இந்த மகர்கள் தீண்டப்படாதவர்கள். இவ்வாறு முதல் போரிலும் கடைசிப் போரிலும் பிரிட்டிஷார் பக்கம் சேர்ந்து போரிட்டு, அவர்கள் இந்தியாவை வெற்றிகொள்ள உதவியவர்கள் தீண்டப்படாதவர்களே. இந்த உண்மையை பீல் கமிஷனுக்கு அனுப்பிய தமது குறிப்பில் டுவீடில்டேல் கோமானே ஒப்புக் கொண் டுள்ளார்; இந்திய ராணுவத்தை மறுசீரமைப்பது குறித்து ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்கும் பொருட்டே இந்தப் பீல் கமிஷன் நியமிக்கப் பட்டது. இந்த அறிக்கையில் அவர் குறிப்பிட்டிருந்தாவது:

*(மேற்கோள் தட்டச்சுப் பிரதியில் காணப்படவில்லை - ஆசிரியர்)*

தீண்டப்படாதவர்கள் இவ்வாறு பிரிட்டிஷாருடன் சேர்ந்து கொண்டது பச்சை தேசத்துரோகம் என்று கருதுபவர்கள் பலர் இருக் கிறார்கள். துரோகமோ, துரோகமில்லையோ தீண்டப்படாதவர் களின் இந்த செயல் முற்றிலும் இயல்பானதே. நாட்டின் ஒரு பகுதி யினர் படையெடுப்பாளரிடம் அனுதாபம் காட்டிய நிகழ்ச்சிகள் வரலாற்றில் எத்தனை எத்தனையோ உண்டு; தங்கள் நாட்டவரின் கொடிய ஒடுக்குமுறைகளிலிருந்து புதிதாக வருபவர்கள் தங்களைக் காப்பற்றுவார்கள் என்ற அவர்களது நம்பிக்கையே இதற்குக் காரணம். தீண்டப்படாதவர்களைப் பழிப்பவர்கள் பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கங்கள் வெளியிட்ட பின்கண்ட கொள்கை விளக்க அறிக்கை யைப் படித்துப் பார்க்கட்டும். (அரைகுறையாக விடப்பட்டிருக்கிறது.)

* * *

*(சம்பந்தப்பட்ட பகுதிகள் தட்டச்சுப் பிரதியில் காணப்பட வில்லை - ஆசிரியர்)*

தீண்டப்படாதவர்களின் இந்தப்போக்கு வேறு எங்கும் காணப்படாத ஒன்றா? இந்தியாவில் தீண்டப்படாதவர்கள் எத்தகைய கொடுங்கோன்மையின் கீழ், துன்ப துயர சூழ்நிலையில் வாழ்கின் றனர் என்பதுடன் ஒப்பிடும்போது பிரிட்டிஷ் தொழிலாளர்கள் படும் வேதனைகள் அப்படி ஒன்றம் பெரிதல்ல. இத்தகைய சோதனையும் வாதனையுமிக்க பகைப்புலனில் அந்நியப் படையெடுப்பாளர்களை

வரவேற்க பிரிட்டிஷ் தொழிலாளர்களுக்கு ஒரு காரணம் இருக்கிற தென்றால், தீண்டப்படாதவர்களுக்கு நூறு காரணங்கள் இருக்கின்றன.

(தட்டச்சுப் பிரதியில் இடம் காலியாக விடப்பட்டிருக்கிறது - ஆசிரியர்).

இந்தியாவை வெற்றி கொள்ள பிரிட்டிஷாருக்கு தீண்டப் படாதவர்கள் உதவியதோடு மட்டுமன்றி, பிரிட்டிஷ் ஆட்சி நிலைத்து நிற்கவும் துணை புரிந்திருந்தனர். 1857 ஆம் வருடக்கலகம் இந்தியா வில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முடிவு கட்ட மேற்கொண்ட முயற்சியே யாகும். பிரிட்டிஷாரை விரட்டியடித்துவிட்டு இந்தியாவை அவர் களிடமிருந்து மீட்கும் முயற்சியே அது. படைகளைப் பொறுத்த வரையில் இந்தக் கலகத்துக்கு வங்கப் படையே தலைமை வகித்தது'* பம்பாய்ப் படையும் சென்னைப் படையும் பிரிட்டிஷாரிடம் விசுவாச மாக இருந்தன; அவற்றின் உதவி கொண்டே கலகம் ஒடுக்கப் பட்டது. பம்பாய்ப் படை, சென்னைப் படை ஆகியவற்றின் இயைபு யாது? பம்பாயைச் சேர்ந்த மகர்கள், சென்னையைச் சேர்ந்த பறை யர்கள் போன்ற தீண்டப்படாத மக்களைக் கொண்டே இந்த இரு படைகளும் அமைக்கப்பட்டிருந்தன. எனவே, இந்தியாவை வெற்றி கொள்வதறகு மட்டுமன்றி, அதனைத் தக்கவைத்துக் கொள்வதற் கும் பிரிட்டிஷாருக்குத் தீண்டப்படாதவர்கள் துணைபுரிந்தனர் என்று கூறுவது உண்மையேயாகும்.

படை சேவையைப் பொறுத்தவரையில், பிரிட்டிஷார் தீண்டப் படாதவர்களை எவ்வாறு நடத்தினர்? விந்தையாகத் தோன்றினாலும் இந்தக் கேள்விக்கான பதில் ஏறத்தாழ 1890லிருந்து இந்தியப் படைப் பிரிவுகளில் தீண்டப்படாதவர்களைச் சேர்ப்பதற்குத் தடைவிதிக்கப் பட்டிருந்தது என்பதேயாகும். ஏற்கனவே சேர்க்கப்பட்டவர்கள் படை களில் நீடித்தனர். இவ்வாறு சேர்க்கப்பட்டவர்கள் படையணிகளி லிருந்து வெளியேற்றப்படாததை ஒரு மாபெரும் கருணை என்றே கூறவேண்டும். எனினும் நாளடைவில் அவர்களில் பலர் காலமாகி விட்டனர் அல்லது ஓய்வூதியத்துடன் ஓய்வுபெற்றுவிட்டனர். இதன் விளைவாக, இறுதியில் 1910ல் அவர்கள் படைப் பிரிவுகளி லிருந்து முற்றிலும் மறைந்து விட்டனர். படைசேவையிலிருந்து

---

* வங்க படைப்பிரிவு வங்க அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்ததாலேயே அவ்வாறு பெயர் பெற்றதே தவிர, வங்காளிகளைக் கொண்டதாக இருந்ததாலல்ல. உண்மையைக் கூறுவதானால் அதில் வங்காளிகள் எவரும் இல்லை. நாட்டு உட்பகுதிகளைச் சேர்ந்த வர்களைக் கொண்டே அது பெரும்பாலும் உருவாக்கப்பட்டிருந்தது.

தீண்டப்படாதவர்கள் விலக்கப்பட்டது போன்ற இத்தகைய ஒரு நன்றி கெட்ட செயல் வேறு எதுவுமே இல்லை எனலாம்.

இத்தகைய நம்பிக்கைத் துரோகச் செயலை, நன்றிக் கொலையை பிரிட்டிஷார் ஏன் செய்தார்கள்? படைப் பிரிவுகளில் தீண்டப்படாதவர்களைச் சேர்ப்பதற்கு இந்தத் தடை விதிக்கப்பட்டதற்கான காரணம் எதையும் பிரிட்டிஷ் அரசாங்கம் என்றும் தந்ததில்லை. இந்த விலக்கல் வேண்டுமென்றே செய்யப்பட்டதல்ல, மாறாக, படைகளின் ஆற்றலை மேம்படுத்தும் நோக்கோடு 1890ஆம் ஆண்டுவாக்கில் கைக்கொள்ளப்பட்ட கொள்கையின் விளைவே இது என்று அடிக்கடி கூறப்படுவதைக் கேட்கிறோம். ஆனால் இது உண்மையா?

இந்தக் கொள்கை இரண்டு கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டது. ஒன்று ஒழுங்கமைப்பு சம்பந்தப்பட்டது, மற்றொன்று படைக்குப் புதிதாக ஆளெடுப்புச் செய்வது சம்பந்தப்பட்டது.

1890ல் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்ட ஒழுங்கமைப்புக் கோட்பாடு வகுப்பு இயைபு கோட்பாடு எனப்படுகிறது; பழைய கலப்பு படைவகுப்பணி கோட்பாட்டுக்குப் பதிலாக இது கொண்டுவரப்பட்டது. இந்தப் புதிய கோட்பாட்டின்படி இந்திய ராணுவம் வகுப்பு படை வகுப்பணி (ரெஜிமெண்ட்) அல்லது வகுப்புப் படையணிப் பிரிவு (ஸ்குவாட்ரன்) அல்லது வகுப்புப் படைப் பிரிவு (கம்பெனி) என ஒழுங்கமைக்கப்பட்டது. இதற்குப் பொருள் என்ன? முதல் நேர்வில் முழு ரெஜிமெண்டும் ஒரே வகுப்பை (அல்லது சாதியை) கொண்டதாக இருக்கும்; இரண்டாவது நேர்வில் ஒவ்வொரு ஸ்குவாட்ரனும் அல்லது கம்பெனியும் முற்றிலும் ஒரு குறிப்பிட்ட வகுப்பினரைக் கொண்டு அமைக்கப்படும். எல்லோரினும் மிகச் சிறந்தவர்களை அவர்கள் எந்த இனம் அல்லது சமயத்தைச் சேர்ந்தவராக இருப்பினும் படைக்குத் தேர்ந்தெடுப்பதே பழைய கோட்பாட்டின் அடிப்படையாக இருந்தது. புதிய கோட்பாட்டின்படி ஒருவனது இனமே அவனது உடலின் கட்டுக்கோப்பு வளத்தையும் அறிவுத் திறத்தையும் விட மிகுந்த முக்கியத்துவத்தைப் பெற்றது. படைக்குப் புதிதாக ஆளெடுக்கும் நோக்கங்களுக்காக இந்தியாவின் பல்வேறு சாதியினரும் வகுப்பினரும் போர்த் திறன்மிக்க இனங்களைச் சேர்ந்தவர்கள் என்றும் போர்த்திறமிக்க இனங்களைச் சேராதவர்கள் என்றும் வகைப் பிரிக்கப்பட்டனர். போர்த்திறமிக்க இனங்களைச் சேராதவர்கள் படைத்துறை சேவையிலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டனர். போர்த் திறமிக்க இனங்களின் வகைப்பிரிவில் இடம்பெற்றுள்ள

சாதியினரும் சமூகத்தினரும் மட்டுமே ராணுவ சேவைக்குத் தகுதி யானவர்களாக்கப்பட்டனர்.

இந்த இரண்டு கோட்பாடுகளும் ஏற்புடையவை அல்ல. வகுப்பு இயைபு கோட்பாடு 'ஓரளவு அரசியல் சார்புடையது, 1857 கலகத்தின்போது நேரிட்டபோல் ஒரு பெரிய கூட்டணி உருவாகாத படித் தடுப்பதே இதன் அடிப்படை நோக்கம்'' என்று கூறப்படுகிறது. கலப்புப் படை அணியை உருவாக்கும் பழையமுறை பாதுகாப்பானது என்று நான் கருதியிருக்கவேண்டும் என்று கூறலாம்.[1] ஆனால் இந்தக் கோட்பாடு பழுதற்றது, நேர்மையானது என்றே வைத்துக் கொள் வோம். அப்போது இங்கு ஒரு கேள்வி எழுகிறது: தீண்டப்படாதவர் களை படைகளில் சேர்ப்பதற்கு இந்தக் கோட்பாடு ஏன் குறுக்கே நிற்க வேண்டும்? வகுப்பு இயைபு முறையின்படி சீக்கியர்கள், டோக் ராக்கள், கூர்க்காக்கள், ராஜபுத்திரர்களின் ரெஜிமெண்டுகள் இருக்கக் கூடுமானால் தீண்டப்படாதவர்களின் ரெஜிமெண்ட் ஏன் இருக்கக் கூடாது? மேலும், போர்த்திறமிக்க இனங்களிலிருந்து ராணுவத்துக்கு ஆள் எடுப்பதே நேரிய கோட்பாடு என்று வைத்துக் கொண்டால், தீண்டப்படாதவர்கள் போர்த்திறமில்லாத இனங்களைச் சேர்ந்தவர் கள் என்று கருதப்பட்டாலொழிய அது அவர்களை ஏன் பாதிக்க வேண்டும்? இந்திய ராணுவத்தின் முதுகெலும்பாகத் திகழ்ந்துவந்த, 150 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியப் படைகளுக்கு ஆதார அடிப் படையாக இருந்துவந்த தீண்டப்படாதவர்களை போர்த்திறமற்ற இனங்களைச் சேர்ந்தவர்களாகப் பாவிப்பது எவ்வகையில் நியாய மாகும்? தீண்டப்படாதவர்களை போர்த் திறமற்ற இனங்களைச் சேர்ந்தவர்களாக பிரிட்டிஷ் அரசாங்கம் கருதவில்லை என்பதற்குப் பின்வரும் அசைக்க முடியாத, மறுக்க முடியாத சான்றினைக் கூற லாம்; உலக யுத்தத்தின்போது படைகளுக்கு ஏராளமானோர் தேவைப் பட்டனர்; தீண்டப்படாதவர்களை ராணுவத்தில் சேர்ப்பதற்கு இருந்த இந்தத் தடை அப்போது விலக்கிக் கொள்ளப்பட்டது; முற்றிலும் தீண்டப்படாதவர்களைக் கொண்டே ஒரு காலாட் படைப்பிரிவு உருவாக்கப்பட்டு, அது ''மகர்கள் என அழைக்கப்பட்டது. அதன் ஆற்றலுக்கு (...★) போன்றவர்களே நற்சான்று பகர்ந்துள்ளனர். அப்படியிருக்கும்போது, காரியம் முடிந்ததும் அந்தப் படைப்பிரிவு கலைக்கப்பட்டது; தீண்டப்படாத மக்கள் மிகுந்த ஏமாற்றமும் கடுஞ்சினமும் அடைந்தனர். ஐயா பின்வருமாறு கூறினார்:

(மேற்கோள் தட்டச்சுப்பிரதியில் காணப்படவில்லை - ஆசிரியர்)

---

1. ''பிரான்சில் இந்தியர்களுடன்'' என்ற தமது நூலில் ஜெனரல் வில் காக்ஸ் தெரிவித் துள்ள கருத்தையும் காண்க, பக்கம் (தட்டச்சுப் பிரதியில் பக்கம் குறிப்பிடப்படவில்லை)

★ தட்டச்சுப் பிரதியில் இடம் காலியாக விடப்பட்டுள்ளது.

இத்தகைய வலுமிக்க சான்று இருக்கும்போது தீண்டப் படாதவர்கள் போர் திறமற்ற இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று யார் கூற முடியும்? ஆக, படைகளிலிருந்து தீண்டப்படாதவர்கள் ஒதுக்கி வைக்கப்படுவதற்குக் கூறப்படும் இரண்டு காரணங்களும் சத்தற் றவை, சாரமற்றவை, ஆதாரமற்றவை என்பது தெளிவு. அவ்வா றானால் உண்மையான காரணம் என்ன? படைகளிலிருந்து தீண்டப் படாதவர்கள் ஒதுக்கி வைக்கப்படுவதற்கு உண்மையான காரணம் தீண்டாமையே என்பது என் கருத்து. தீண்டப்படாதவர்களைச் சேர்ப்பது ஒரு பிரச்சினையாக இல்லாதவரை அவர்கள் படையில் சேரும்படி அழைக்கப்பட்டனர். பிரிட்டிஷ் வரலாற்றின் ஆரம்ப காலத்தில் இது எவ்வகையிலும் ஒரு பிரச்சினையாக இருக்கவில்லை; ஏனென்றால் அப்போது தீண்டத்தக்கவர்கள் பிரிட்டிஷ் ராணுவ த்தில் சேரவில்லை. இந்திய மன்னர்கள் ஆட்சிபீடத்தில் இருக்கும் வரை அவர்கள் பிரிட்டிஷ் ராணுவத்தில் சேராமல் வெளியேதான் இருந்துவந்தனர். 1857 கலகத்துக்குப்பிறகு இந்திய மன்னர்களின் இனம் அருகி கருகியபோதுதான், ஏற்கனவே தீண்டப்படாதவர்கள் பெரும் எண்ணிக்கையில் நிரம்பியிருந்த பிரிட்டிஷ் ராணுவத்தில் இந்துக்கள் சேர ஆரம்பித்தனர். அப்போதுதான் பிரச்சினை எழுந்தது; தீண்டத்தக்கவர்களும் தீண்டப்படாதவர்களும் தத்தமது நிலையை எப்படித் தகவமைத்துக் கொள்வது என்பதுதான் பிரச்சினை. இதில் பிரிட்டிஷார் எவ்வாறு நடந்து கொண்டார்கள்? நியாயமாகவும் நேர்மையாகவும் நடந்துகொண்டார்களா? பிரிட்டிஷாரின் மனோ பாவம் நமக்குத் தெரியாததல்ல. நியாயத்துக்கும் சுயநலத்துக்கும் இடையேயான போராட்டத்தில் அவர்கள் எப்போதும் சுயநலத்தின் பக்கமே இருப்பார்கள். இப்போதும் அவ்வாறேதான் செய்தார்கள். எத்தகைய நன்றி விசுவாசுமுமின்றித் தீண்டப்படாதவர்களைக் கைகழுவி விட்டுப் பிரச்சினைக்குத் தீர்வுகண்டார்கள்.

இவ்வாறு ஒதுக்கப்பட்டதற்கான காரணங்கள் என்னவாக இருந்தாலும், இதற்கு அவர்கள் எத்தகைய நொண்டி சமாதானம் கூறினாலும் இந்தப் புறக்கணிப்பு தீண்டப்படாதவர்களின் வாழ்க்கை யில் மிகவும் விநாசகரமான, விபரீதமான, ஆபத்தான சமூக விளைவு களை ஏற்படுத்தின என்ற உண்மையை மறுக்க முடியாது. ராணுவ சேவைதான் தீண்டப்படாதவர்களின் பிழைப்புக்கும் ஜீவனதுக்கு மான ஒரே வாழ்க்கைத் தொழிலாகும். தீண்டப்படாதர்கள் பலர் இத்துறையில் பெரும் பாராட்டுக்குரிய சாதனைகளைப் புரிந்துள் ளனர் என்று வரலாறு பகர்கிறது; இவர்களில் நூற்றுக்கணக்கானோர் தமது அருந்திறலைக்காட்டி, வீரத்தை தீரத்தை நிலைநாட்டி ஜமேதார், சுபேதார், சுபேதார் மேஜர்நிலைக்கு உயர்ந்துள்ளனர். போர்வீரர் தொழில்

இந்துக்களின் பார்வையில் அவர்களுக்கு மதிப்பை, கண்ணியத்தை அளித்துள்ளது; முக்கியத்துவத்தைப் பெற்றுத் தந்துள்ளது; அதிகாரத்தின், புகழின், மேன்மையின், சீர்மையின் கதவுகளை அவர்களுக்குத் திறந்துவிட்டுள்ளது. 150 ஆண்டுகளுக்கும் மேலாக ராணுவத்தில் சேவை செய்யப்பழக்கப்பட்டு விட்டமையால் இதனைத் தீண்டப் படாதவர்கள் பரம்பரைத் தொழிலாகவே கருதி இதனால் வேறு எந்தத் தொழிலுக்கும் தங்களைத் தகுதியானவர்களாக்கத் தவறிவிட்டனர். இத்தகைய நிலைமையில்தான் 1890ல் அவர்களுக்கு ஒரு பேரிடி காத்திருந்தது; புதிய சுற்றுச்சூழல்களுக்குத் தங்களைத் தகவமைத்துக் கொள்வதற்கு அவகாசம் அளிக்காமலேயே ராணுவத்திற்கு அவர்கள் தேவை யில்லை என்று திடீரென்று அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது - 1935ல் ஆங்கிலோ- இந்தியர்களுக்கும் இதே கதிதான் ஏற்பட்டது. ராணுவத்தில் சேருவதற்கு அவர்களுக்கு விதிக்கப்பட்ட தடை அவர் களுக்குப் பேரதிர்ச்சியூட்டுவதாகவும், பெரும் பின்னடைவாகவும் இருந்தது; இதிலிருந்து அவர்கள் பின்னர் மீளவே முடியவில்லை. செங்குத்துப் பாறையிலிருந்து அவர்கள் தூக்கியெறியப்பட்டனர்; சுதேசி அரசாங் கங்களில் அவர்கள் பெற்றிருந்த நிலைக்கும் வெகு தூரம் கீழே, படு பாதாளத்தில் தள்ளப்பட்டனர் என்று கூறினால் அது மிகையாகாது.

படைத்துறையில் தீண்டப்படாதவர்கள் சேருவது சம்பந்தப் பட்ட நிலை இதுதான். அடுத்து,படைத்துறை சாராத ஐ.சி.எஸ். போன்ற உயர் அரசுப் பணிகளில் இவர்கள் இடம்பெறுவது குறித்த நிலை யாது?

சிவில் சர்வீஸ் போன்றவற்றுக்கு உயர் கல்வி தகுதி வேண்டும். பல்கலைக் கழகப் பட்டங்கள் பெற்றவர்கள்தான் இதில் சேர முடியும். ஆனால் தீண்டப்படாதவர்களோ இந்திய மக்களில் மிகவும் கல்விகற்காத பகுதியினர்களாக இருந்து வருகின்றனர். இத னால் சிவில் சர்வீசின் கதவுகள் அநேகமாக அவர்களுக்கு மூடப் பட்டுவிட்டன என்றே கூறவேண்டும். பல்கலைக் கழகப் பட்டங்கள் பெற்றவர்கள் அண்மைக் காலமாக அவர்களிடையே காணப்படு கின்றனர். அவர்களின் கதி என்ன? ஒவ்வொரு அலுவலக வாசல் படியாக அவர்கள் ஏறி இறங்கி வருகின்றனர் என்று கூறுவது எவ் வகையிலும் மிகையாகாது. சிவில் சர்வீசில் அவர்கள் இடம்பெறு வதற்கு இரண்டு விஷயங்கள் குறுக்கே நிற்கின்றன. முதலாவதாக இதில் அவர்களுக்கு எந்த முன்னுரிமையும் அளிக்க பிரிட்டிஷ் அரசாங்கம் மறுத்துவிட்டது. சிவில் சர்வீஸ் போன்ற உயர் அரசுப் பணிகளில் போதிய பிரதிநிதித்துவம் பெறாத வகுப்புகளுக்கு முன் னுரிமை அளிக்கும் கோட்பாட்டை பிரிட்டிஷ் அரசாங்கம் அங்கீகரிக்க வில்லை என்று கூறிவிட முடியாது. உதாரணமாக, முகமதியர்கள்

குறைந்தபட்சத் தகுதி பெற்றிருந்தால் அவர்களுக்கு முன்னுரிமை அளிக்க வேண்டும் என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் திட்டவட்டமாக ஏற்றுக்கொண்டுள்ளது. அவர்களது விஷயத்தில் இந்தக் கோட்பாடு நடைமுறைப் படுத்தப்பட்டு வருகிறது என்பதை ஐ.சி.எஸ் பணியிடங்களில் சிலவற்றை நியமனத்தின் மூலம் நியமிக்கும் அதிகாரத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது முதல் இவ்வாறு நியமனங்கள் செய்யப் பட்டு வருகின்றன என்பதிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ளலாம்.

ஆனால் குறைந்தபட்ச தகுதி சோதனைக்கு அழைக்கப்பட்டு அதில் வெற்றி பெற்ற தீண்டப்படாதவர்கள் பலர் இருந்தபோதிலும் அவர்களில் ஒருவரைக்கூட பிரிட்டிஷ் அரசாங்கம் நியமனம் செய்யவில்லை.

உரிய கல்வி தகுதி பெற்றிருந்த போதிலும் தீண்டப்படாதவர்கள் சிவில் சர்வீசில் இடம் பெறாததற்கு இரண்டாவது காரணம் இந்தப் பணியிடங்களுக்கு ஆட்களைத் தேர்ந்தெடுக்கும் முறையேயாகும். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் காலியிடங்களை நிரப்பும் அதிகாரம் இலாகாத் தலைவருக்கு அளிக்கப்பட்டுள்ளது. இலாகாத் தலைவர்களாக உயர்சாதி இந்துக்களே இருந்து வந்திருக்கின்றனர்; இனியும் தொடர்ந்து அவர்களே இருந்துவருவர். ஒரு ஜாதி இந்து அவனது இயல்பு காரணமாக ஒரு தீண்டப்படாத வேட்பாளனிடம் அன்பாதரவோ, பரிவோ காட்டமாட்டான். அவன் ஒருபுறம் மிகுந்த இரக்கமும் இன்னொருபுறம் சிறிதும் ஈவுஇரக்கமில்லாதவன். அவனுடைய கருணை முதலில் அவனது குடும்பத்தின் மீது விழுகிறது, பின்னர் தனது உறவினர்களிடமும், அதன் பின்னர் தன்னுடைய நண்பர்களிடமும், பின்னர் தனது சாதியினரிடமும் கருணை காட்டுகிறான். இந்தப் பரந்த வட்டத்திற்குள் காலியிடத்திற்கு ஆள் கிடைப்பது நிச்சயம்.[1] எனவே, தனது சாதியின் எல்லைகளுக்கு அப்பால் அவன் பயணம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. ஒருவேளை அவ்வாறு அவசியம் ஏற்படும்போதுதான் தீண்டப்படாத வேட்பாளனைப் பற்றிப் பரிசீலிக்கிறான்; அதுவும் தீண்டத்தக்க இந்து எவனும் அவனுக்குப் போட்டியாக இருக்கக் கூடாது. அப்படி தீண்டத்தக்க சாதியைச் சேர்ந்த எவனும் போட்டியாக இருந்தால் அப்போது தீண்டப்படாதவன் தேர்ந்தெடுப்பதற்கு

1. இந்தக் கோட்பாட்டின் அடிப்படையில்தான் காலிஇடங்கள் நிரப்பப்படுகின்றன என்பது சர்ச்சைக்கிடமற்ற உண்மையாகும். இலாகாத் தலைவர் என்ன சாதியைச் சேர்ந்தவர் என்பது தெரிந்தால் அவர் கீழ் பணியாற்றும் ஊழியர்கள் எந்த சாதியைச் சேர்ந்தவர்களாக இருப்பார்கள் என்பதை எளிதில் தெரிந்து கொள்ளலாம்.

*வாய்ப்பே இல்லை. ஆக, இவ்வாறு சிவில் சர்வீஸ் நியமனங்கள் விஷயத்தில் தீண்டப்படாதவன் எப்போதும் இறுதியாகப் பரிசீலிக் கப்படுபவனாகவே இருக்கிறான். இத்தகைய பரிசீலனையில் கடைசி நபராக இருப்பதால் அவன் பணியிடத்தைப் பெறும் வாய்ப்பு மிக மிகக் குறைவு.*

*தீண்டப்படாதவர்களுக்கு குறிப்பாக பொருத்தமான இரண்டு உத்தியோகங்கள் இருக்கின்றன. ஒன்று காவல்துறை உத்தியோகம்; மற்றொன்று அரசு அலுவலகங்களில் குற்றேவல் புரியும் உத்தி யோகம். காவல்துறை உத்தியோகங்களைப் பொறுத்தவரையில் தீண்டப்படாதவர்களின் நிலைமை என்ன?*

*காவல்துறை உத்தியோகம் அவர்களுக்கு இல்லை என்றாகி விட்டது.*

*1925 டிசம்பர் 17 ஆம் தேதி ஐக்கிய மாகாணங்களின் சட்ட மேலவையில் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது; அரசுப் பணித் துறையில், அதிலும் குறிப்பாக காவல் துறையில் தீண்டப்படாத வர்கள் இடம்பெறுவதற்கு இருந்துவரும் அனைத்துத் தடைகளும் அகற்றப்பட வேண்டுமென்று அத்தீர்மானம் வலியுறுத்திற்று. ஆனால் சம்பந்தப்பட்ட துறைக்குப் பொறுப்பான அரசு உறுப்பினர் அரசாங்கத்தின் சார்பில் பேசும்போது பின்கண்டவாறு கூறினார்:*

> *''இல்லை, எல்லோருக்கும் வாய்ப்பளிக்க வேண்டும் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் விரும்பினால், அதில் எனக்கு ஆட்சேபம் ஏதும் கிடையாது. ஆனால் குற்றபரம்பரையைச் சேர்ந்த ஒருவரோ அல்லது சாமர் போன்ற கீழ்ச்சாதி ஆளோ தற்போது இப்பதவிகளுக்கு வருவதை நான் கடுமையாக ஆட்சேபிக்கிறேன்.''*

*1927 ஜுலை 22ஆம் தேதி பஞ்சாப் சட்ட மேலவையில் லாலா மோகன்லால் பின்கண்ட கேள்வியைக் கேட்டார்:*

> *லாலா மோகன் லால்: தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்தவர்கள் காவல்துறையில் சேர்க்கப்படுகின்றனரா என்பதை மாண்புமிகு நிதித் துறை உறுப்பினர் அன்புகூர்ந்து தெரிவிப்பாரா? அவ்வாறு சேர்க்கப்பட வில்லை என்றால், காவலர் பணியிடங்களுக்கு ஆளெடுக்கும்போது தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்தவர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று ஆணை பிறப்பிக்கும் உத்தேசம் ஏதும் அரசாங்கத்துக்கு உண்டா?*

மாண்புமிகு சர் ஜியோஃப்ரே டி மான்ட்மொரன்சி: தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்தவர்கள் காவல்துறையில் சேர்த்துக் கொள்ளப் படுவதில்லை. தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் சமூகத்தின் அனைத்துப் பகுதியினராலும் சமத்துவமாக நடத்தப்படுகின்றனர். (என்றென்றைக் கும் இது நடைபெறாது) என்று தெரியவரும்போது அல்லது பணியில் சேர்க்கப்படும் இந்த வகுப்பு உறுப்பினர்கள் திறமை சம்பந்தப்பட்ட தேவைகளைப் பூர்த்திசெய்வார்கள் என்றும், அவர்களது தேர்வானது பணித்துறை இயைபின் நலன்களுக்கு முற்றிலும் உகந்ததாக இருக்கும் என்றும் அரசாங்கம் திருப்தியடையும்போது, இவர்களைப் பணியிடங் களுக்குத் தேர்ந்தெடுக்க அரசாங்கம் முற்றிலும் தயாராக இருக்கிறது; ஆனால் இவர்கள் உடலமைப்புச் சம்பந்தப்பட்ட தரங்களுக்கும் ஏனைய தரங்களுக்கும் ஏற்றவர்களாக இருப்பது அவசியம்.

இந்தப் பிரச்சினைகள் குறித்து ஆராய 1928ல் பம்பாய் அர சாங்கம் நியமித்த குழு பின்வருமாறு தெரிவித்தது:

( தட்டச்சுப் பிரதியில் இந்த மேற்கோள் காணப்படவில்லை - ஆசிரியர்)

கீழ்மட்ட பணியிடங்களும் அவர்களுக்கு மறுக்கப்படுகின்றன. இதற்கான காரணத்தைக் கூறினால் அதை ஒரு சிலரே நம்புவர்; இந்தக் காரணத்தை ஒரு சிலரே ஊகிக்க முடியும். எனினும் அந்தக் காரணம் என்ன என்பது தெள்ளத்தெளிவானது. தீண்டாமைதான் அந்தக் காரணம். ஒரு காவலர் தனது கடமையின் ஒரு பகுதியாக, ஒரு நபரைக் கைது செய்ய வேண்டியிருக்கிறது. ஒரு காவலர் தனது கடமையின் ஒரு பகுதியாக உதாரணமாக சோதனையிடும் ஆணையை நிறை வேற்றும் பொருட்டு ஒரு வீட்டிற்குள் பிரவேசிக்க வேண்டியிருக் கிறது. இந்நிலைமையில், கைதுசெய்யப்பட்டவர் ஓர் இந்துவாக வும், கைது செய்தவர் ஒரு தீண்டப்படாதவராகவும் இருந்தால் என்ன நடைபெறும்? காவலர்கள் காவலர் குடியிருப்புகளில் அடுத்து அடுத்து வசிக்க வேண்டியவர்கள்; பொதுவான குடிநீர்க் குழாய் களைப் பயன்படுத்த வேண்டியவர்கள். இப்படிப்பட்ட பகைப் புலனில், தனது அண்டை வீட்டுக்காரர் தீண்டப்படாத இனத்தைச் சேர்ந்த காவலராக இருந்தால் ஓர் இந்து காவலரின் பிரதிபலிப்புகள், மனோநிலை எவ்வாறு இருக்கும்? காவலர் பணித்துறையில் தீண்டப் படாதவர்கள் சேருவதற்கு தடைநீடிப்பதற்கு இவை போன்ற அம்சங் களே காரணம். இதர கீழ்நிலைப் பணித் துறைகளுக்கும் இது பொருந்தும். அரசு அலுவலகத்தில் பணிபுரியும் ஒரு கீழ்நிலை ஊழியர் சட்டப்படி அலுவலகத்தில் பணியாற்ற வேண்டியவர். ஆனால் அவரது பணியின் காரணமாக இந்துக்களான இதரர்களுடன் தொடர்பு கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த அவரது தொடர்பு தீட்டை ஏற்படுத்துகிறது. அப்படியிருக்கும்போது மற்றவர்கள்

இதனை எப்படிச் சகித்துக் கொள்வர்? தவிரவும் நடைமுறை வழக்கப்படி ஒரு பியூன் இலாகாத் தலைவருக்கும் அவரது குடும்பத்திற்கும் சேவை செய்ய வேண்டியிருக்கிறது; அவரது குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இத்தகைய நிலைமையில், இந்தக் கீழ்நிலை நியமனங்கள் தீண்டப்படாதவர்களுக்குச் சென்றால், இந்த வசதிகள் எல்லாம் இலாகாத் தலைவருக்கு இல்லாது போய்விடும். இத்தகைய சேவைகள் இலாகாத் தலைவருக்கு இல்லாது போய்விடக்கூடாது என்றுதான் கீழ்நிலை பணியிடத்துக்குத் தீண்டப்படாதவன் நியமிக்கப்படுவதில்லை. இவ்வாறு இந்தத் தடை முழுஅளவுக்கு இருந்ததால்தான் இது குறித்து ஒரு விசேடப் பரிந்துரையை பம்பாய் குழு செய்ய வேண்டியிருந்தது.

## III

தீண்டப்படாதவர்களின் கல்விக்காக பிரிட்டிஷ் அரசாங்கம் செய்தது என்ன? இதற்கு உதாரணமாக பம்பாய் ராஜாதானியை எடுத்துக்கொள்கிறேன். கல்வியைப் பொறுத்தவரையில் பிரிட்டிஷ் நிர்வாக காலத்தை மூன்று கால கட்டங்களாகப் பிரிக்கலாம்.

### 1. 1813 முதல் 1854 வரை

1. 1815ல் பம்பாய் கல்விக்கழகம் நிறுவப்பட்டது முதல்தான் பிரிட்டிஷ் ஆட்சியில் பம்பாய் ராஜதானியில் கல்விப்பணி ஆரம்பமாயிற்று. இந்தக் கழகம் ஐரோப்பியக் குழந்தைகளுக்குக் கல்வி போதிப்பதுடன் நின்றுவிடவில்லை. சூரத்திலும் தாணாவிலும் இருந்த அதன் பள்ளிக்கூடங்களில் படிப்பதற்கு சுதேசிகளின் குழந்தைகள் ஊக்குவிக்கப்பட்டனர்.1820 ஆரம்பத்தில் பம்பாயில் சுதேசிகளுக்காக நான்கு தனித்தனிப் பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டன; இவற்றில் ஏறத்தாழ 250 மாணவர்கள் சேர்ந்து படித்தனர். அதே ஆண்டு ஆகஸ்டில் சுதேசிகளுக்கான கல்வி வசதியைப் பெருக்குவதற்கு மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. வட்டார மொழிகளில் பாடப் புத்தகங்களைத் தயாரிப்பதற்காகவும், ஆங்காங்கு வட்டாரமொழிப் பள்ளிக்கூடங்களைத் திறப்பதற்காகவும் அல்லது அவற்றைத் திறப்பதற்கு உதவுவதற்காகவும் கழகம் ஒரு விசேடக் குழுவை நியமித்தது. ஆனால் இந்தப் பணியின் வீச்செல்லை பிரதானமாக ஏழைக்குழந்தைகளின் கல்விக்காக அமைக்கப்பட்ட ஒரு கழகத்தின் குறிக்கோள்களுக்கு வெகுதூரம் அப்பால் செல்லுவதாகத் தோன்றிற்று; 1822 ல் இந்தக்குழு ஒரு தனிக் கழகமாக உருவெடுத்தது; பின்னர் அதன் பெயர் பம்பாய் சுதேசிக் கல்விக்கழகமாக மாறிற்று; மாண்புமிகு மவுண்ட்ஸ்டூவர்ட் எல் பின்ஸ்டன்

இந்தப் புதிய கழகத்தின் முதல் தலைவரானார். தலைம நீதிபதியும், பம்பாய் அரசாங்க நிர்வாகக்கவுன்சில் உறுப்பினர்கள் மூவரும் துணைத் தலைவர்களாக இருந்தனர்; நிர்வாகக்குழுவில் பன்னிரண்டு ஐரோப்பியரும் பன்னிரண்டு சுதேசி கனவான்களும் இடம்பெற் றிருந்தனர்; காப்டன் ஜார்ஜ் ஜெர்விஸ் ஆர்.இ. மற்றும் திரு. சதாசிங் காசிநாத் சாத்ரே ஆகிய இருவரும் செயலாளர்களாகப் பொறுப்பேற்ற னர். அரசாங்கம் மாதம் ரூ.600 மானியம் அளிக்க முன்வந்த நிலைமை யில், கழகம் தனது பணியைத் தொடங்கிற்று. 1825 ஆம் ஆண்டு வாக்கில் பம்பாய் அரசாங்கம் தனது சொந்த செலவில் மாவட்டத் தலைநகரங்களில் தொடக்க நிலைப் பள்ளிகளை அமைக்கத் தொடங் கிற்று. இப்பள்ளிகள் அந்தந்த மாவட்ட ஆட்சியர்களின் கட்டுப் பாட்டில் இருந்தன. இந்த இரு சுயேச்சையான அமைப்புகளின் நடவடிக்கைகளை ஒருங் கிணைக்கும் பொருட்டு 1840ல் ஒரு கல்விக்குழுமம் நிறுவப்பட்டது; இந்தக்குழுமத்தின் உறுப்பினர் கள் மொத்தம் ஆறுபேரில் 3 பேர் அரசாங்கத்தாலும், 3 பேர் சுதேசி கல்விக் கழகத்தாலும் நியமிக்கப் பட்டவர்கள். 1855ல் பொதுக்கல்வி இயக்குநர் நியமிக்கப்படும்வரை இந்தக் குழுமம் கல்வி இலாகா வின் பொறுப்பிலேயே இருந்து வந்தது.

2. 1855 மார்ச் 1 ஆம் தேதி குழுமம் கலைக்கப்பட்டது; 2850 மாணவர்கள் படிக்கும் 15 ஆங்கிலக் கல்லூரிகளும் பள்ளிகளும், 18,883 மாணவர்கள் படிக்கும் 256 வட்டார மொழிப் பள்ளிகளும் அது சமயம் அதன் பொறுப்பில் இருந்தன. இந்தக் குழுமம் சமர்ப் பித்த அறிக்கையில் பின்வருமாறு கூறப்பட்டிருந்தது:

'24. 1855 ஆகஸ்டில் அகமத்நகர் வாசிகள் சிலரிடமிருந்து எங்களுக்கு ஒரு விண்ணப்பம் வந்தது; தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கல்விக்காக ஒரு பள்ளிக்கூடத்தைத் தொடங்க வேண்டும் என்று அதில் கேட்டுக் கொள்ளப் பட்டிருந்தது; அண்மைய விதிமுறைகளின்படி ஆசிரியர்களுக்கான சம்பளத்தில் பாதியைத் தாங்கள் ஏற்றுக் கொள்வதாகவும் அதில் குறிப் பிடப்பட்டிருந்தது. விண்ணப்பதாரர்களால் ஒரு பள்ளிக் கூட அறை கட்டப் பட்டிருந்தது; அதில் 30 மாணவர்கள் படிக்க முடியும் என்று கணக் கிடப்பட்டிருந்தது. இத்தகைய பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதை செல்வந்தர் களான மேல்தட்டு சாதியினர் கடுமையாக எதிர்த்தனர்; அத்தோடு, சுமாரான சம்பளத்தில் ஓர் ஆசிரியரை வேலைக்கமர்த்திக் கொள்வதிலும் ஓரளவு சிரமம் இருந்தது. ஆயினும் இந்த விஷயம் குறித்து சமீபத்தில் வெளியிடப்பட்ட அறிவிக்கையில் தெரிவிக்கப்பட்டிருந்த நிபந்தனை களுக்கு முற்றிலும் உட்பட்டு இந்த விண்ணப்பம் செய்து கொள்ளப் பட்டிருந்ததால் அவர்களின் வேண்டுகோளைத் தட்டின்றி ஏற்றுக் கொண்டோம்; இதனைத் தொடர்ந்து பள்ளிக்கூடம் நவம்பரில் தொடங்கப் பட்டது. இந்த வகுப்பினருக்காக ஒரு பள்ளிக்கூடத்தைத் தொடங்குவது

இதுவே முதல்முறையாதலால்தான் இந்த விஷயத்தை இங்கு குறிப்பிட்டோம்.''

3. இந்த ராஜதானியில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக ஒரு பள்ளிக்கூடம் தொடங்கப்படுவது இதுவேமுதல்முறை என்று குழுமம் தனது அறிக்கையில் கூறியிருப்பது 1855க்கு முன்னர் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கல்வி விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் எத்தகைய கொள்கையைக் கடைப்பிடித்து வந்தது என்ற கேள்வியை இயல்பாகவே எழுப்புகிறது. இந்தக் கேள்விக்குப் பதில் காண்பதற்கு இந்த ராஜதானியில் 1813 முதல் 1854 வரை பிரிட்டிஷ் அரசாங்கம் கடைப்பிடித்துவந்த கல்விக்கொள்கையின் வரலாற்றை நுணுகி ஆராய்வது அவசியம். பேஷ்வாக்களின் அரசாங்கத்தின்கீழ் தாழ்த்தப்பட்டவகுப்பினர் முற்றிலும் கல்வி வசதி அளிக்கப்படாத நிலையில் வைக்கப்பட்டிருந்தனர். கல்வி சம்பந்தப்பட்ட எந்த அரசுத் திட்டத்திலும் அவர்களுக்கு இடம் இல்லை. பேஷ்வாக்களின் அரசாங்கம் மனுதர்மத்தின்படி அமைக்கப்பட்டிருந்த புரோகிதர் அரசாங்கமாக இருந்ததே இதற்குக் காரணம்; மனுதர்மத்தின் பிரகாரம் சூத்திரர்களுக்கும் ஆதிசூத்திரர்களுக்கும் (கல்வி இலாகாவில் குறிப்பிடப்படும் பிற்பட்ட வகுப்பினர் போன்றவர்கள்) உயிர், உடைமை, சுதந்திரம் ஆகியவற்றுக்கு உரிமை இருந்தாலும் இருக்கலாமே தவிர கல்விவசதிபெற அவர்களுக்கு நிச்சயமாக உரிமை இல்லை. இத்தகைய இயலாமைகளின் கீழ் கண் பிதுங்க நசுங்கி உழன்று கொண்டிருந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இந்த வெறுக்கத்தக்க ஆட்சி வீழ்ச்சியுற்றபோது நிம்மதிப் பெருமூச்சு விட்டது முற்றிலும் இயல்பே. பிரிட்டிஷ் ஆட்சி வந்ததும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையே நல்லகாலம் பிறக்கும் என்று மனக்கோட்டை கட்டினர். இதற்குக் காரணம் இருந்தது. முதலாவதாக, பிரிட்டிஷ் ஆட்சி ஜனநாயக ஆட்சியாதலால் உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள் என்ற பாகுபாடின்றி அனைவரையும் சமமாக மதிக்கும் கோட்பாட்டில் அது நம்பிக்கை கொண்டிருக்கும் என்று எண்ணினர். இத்தகைய ஜனநாயகம் அது தனது கோட்பாடுகளுக்கு விசுவாசமாக இருக்குமாயின் பேஷ்வாக்களின் புரோகிதர் ஆட்சிக்கு முற்றிலும் வேறுபட்டதாகவே இருக்கும். இரண்டாவதாக, இந்த நாட்டை வெற்றிகொள்ள பிரிட்டிஷாருக்குத் தாங்கள் உதவி செய்திருப்பதால் பிரிட்டிஷார் இதற்குப் பிரதியாக தங்களுக்கு உதவுவார்கள், பிரத்தியேகமாக அல்லாவிட்டாலும் குறைந்தபட்சம் மற்றவர்களுக்கு சரிசமமாகவாவது உதவுவார்கள் என்று தாழ்த்தப்பட்ட வகுப்பினர் வெகுவாக நம்பினர்.

4. சுதேசி மக்களிடையே கல்வியை வளர்க்கும் பிரச்சினை குறித்து பிரிட்டிஷார் நீண்ட நெடுங்காலம் மௌனம் சாதித்து வந்த

னர். இந்திய மக்களிடையே அறிவொளி பரப்புவதில் தங்களுக்குள்ள தார்மிகக் கடமையையும் நிர்வாக அவசியத்தையும் தனிப்பட்ட உயர் அதிகாரிகள் முற்றிலும் புறக்கணித்து விட்டார்கள் என்றும் கூறிவிட முடியாது; எனினும் இது விஷயத்தில் தங்களுக்குள்ள பொறுப்பு பற்றி, கடமைப்பாடு பற்றி 1813 வரை எந்தவிதமான அதிகாரப்பூர்வமான அறிவிப்பும் வெளியிடப்படவில்லை. பின்னர் தான் ஜார்ஜ் IV, அத்தியாயம் 155, சட்டம் 53, பிரிவு 43-ன்படி பாராளுமன்றம் பின்கண்டவாறு அறிவித்தது :''இந்தியாவின் வருமான மிகுதியிலிருந்து ஆண்டுதோறும் ரூ 1. லட்சத்துக்குக் குறையாமல் ஒதுக்கப்படும்; இலக்கியத்துக்குப் புத்துயிரூட்டுவதற்கும் அதனை மேம்படுத்துவதற்கும், இந்தியாவின் அறிவாளிகளை ஊக்குவிப் பதற்கும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிப்பகுதிகளில் வாழ்வோ ரிடையே விஞ்ஞான அறிவை ஊட்டி வளர்ப்பதற்கும் இந்தப் பணம் செலவிடப்படும்.'' எனினும் 1823 வரை சுதேசி மக்களின் கல்வியை ஓர் உறுதியான, நன்கு ஒழுங்கமைக்கப்பட்ட அடித்தளத் தின்மீது நிறுவுவதற்கு எத்தகைய திட்டமிட்ட முயற்சியில் இறங் கவும் இந்தச் சட்டம் வழிவகை செய்யவில்லை. கம்பெனியின் இயக்குநர்கள் மன்றம் ஜூன் 3, 1814 தேதியிட்டு கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபைக்கு தந்திச் செய்தி ஒன்றை அனுப்பிற்று; இந்துக்க ளிடையே சமஸ்கிருத கல்வியை வளர்க்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படியும், பாராளுமன்றத்தின் உத்தேச நோக்கங்களை இது பூர்த்தி செய்யும் என்றும் அந்தச் செய்தியில் கூறப்பட்டிருந்தது. சுதேசி மக்களின் கல்வியை ஓர் உறுதியான, நன்கு ஒழுங்கமைக்கப்பட்ட அடித்தளத்தின் மீது நிறுவுவதற்கு ஒரு திட்டமிட்ட முயற்சி மேற் கொள்ளப்படும் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இது எவ்வளவு பெரிய ஏமாற்றம், அதிர்ச்சி!! கல்வி கற்பது என்பது மேல்தட்டு வகுப்பினர்களுக்கே உரித்தானது என்று பிரிட்டிஷ் அரசாங்கம் திட்டவட்டமான முறையில் தீர் மானித்தது. இது ஏதோ கற்பனை என்று சிலர் நினைக்கக்கூடும். பம்பாய் ராஜதானியின் கல்விக்குழுமத்தின் 1850-51 ஆம் ஆண்டுக் கான அறிக்கையில் கண்டுள்ள பின்வரும் பகுதிகளை இவர்களது கவனத்திற்குக் கொண்டு வருகிறோம்;

> ''பத்தி 5 - இயக்குநர்கள் மன்றம் தெரிவித்துள்ள கருத்துகளின் அடிப்படையில் குழுமம் மேற்கொண்ட முறைமை - பெருமதிப்பிற் குரிய மன்றம் அனுப்பிய ஆணைகளின் அடிப்படையிலும், இந்தியாவில் கல்வியின் முன்னேற்றத்தைக் கவனத்தோடு ஆராய்ந்துவரும் ஆக்லண்ட் கோமான், மேஜர் கேண்டி மற்றும் இதரர்களது கருத்துக்களை அதிக அளவில் அடிப்படையாகக் கொள்ளாமல், சுதேசிகளில் மிகவும் அறிவுத் திறம் வாய்ந்தோர் பகிரங்கமாக, பட்டவர்த்தனமாகத் தெரிவித்த விருப் பங்களின் அடிப்படையிலும் இந்த ராஜதானியின் கல்விக் குழுமம் ஒரு கல்வித் திட்டத்தை வகுத்திருந்த நிலைமையில், இது மாற்றப்பட

வேண்டுமென்று தங்களுக்கு முன்னர் அதிகாரத்தில் இருந்தோரால் குழு மத்துக்குத் தெரிவிக்கப்பட்டது.''

''பத்தி-8 மேல்தட்டு வகுப்பினருக்குக் கல்வி வசதி செய்து தரும் விகிதம் குறித்து மன்றத்தின் கருத்துகள் - குறிப்பாக கல்விக்காக மிகக் குறைந்த நிதியே ஒதுக்கப்பட்டிருக்கும் நிலைமையில், பெருமதிப்பிற் குரிய மன்றம் தெரிவித்துள்ள கருத்துக்கள் அரசாங்கம் எந்தப் பகுதி யினரின் கல்வி முன்னேற்றத்துக்காக பெருமுயற்சி மேற்கொண்டு வரு கிறதோ அந்தப் பகுதியினரைப் போன்றே எங்களுக்கும் விவேகமானவை யாகத் தோன்றுகின்றன. பெருமதிப்புக்குரிய மன்றம் 1830ல் சென்னைக் குப் பின்வருமாறு எழுதுகிறது: 'கல்வித் துறையில் மேற்கொள்ளப்படும் மேம்பாடுகள், அபிவிருத்திகள் மக்களின் தார்மிகப் பண்பையும் அறிவுத் திறத்தையும் உயர்த்துவதில், வளப்படுத்துவதில் பெரும் பங்காற்றும் என்பதில் ஐயமில்லை; ஆனால் இந்த மேம்பாடுகள் மேல்தட்டு வகுப் பினரின் கல்வி சம்பந்தப்பட்டவையாக இருப்பது அவசியம்; ஏனென் றால் இவர்கள் போதிய ஓய்வுநேரமும், தங்கள் நாட்டவரின் மனங்களை இயல்பாகவே ஈர்க்கும் திறமும், தேர்ச்சியும் கொண்டவர்கள். இத்தகைய வகுப்பினரிடையே கல்வியின் தரத்தை உயர்த்துவதன் மூலம் ஒரு மாபெரும் சாதனையைச் சாதிக்க முடியும். அதாவது நேரடியாக எண் ணற்ற மக்களிடம் ஏற்படுத்தக்கூடிய தாக்கத்தை விட சமுதாயத்தின் கண்ணோட்டத்திலும், உணர்வுகளிலும் பயனுள்ள மிக அதிகமான மாற்றங்களை ஏற்படுத்த முடியும். மேலும், நமது இந்திய அரசாங்கத் தின் கீழ் இதுவரை நடைமுறையில் இருந்ததை விடத் தங்கள் நாட்டின் சிவில் நிர்வாகத்தில் அதிகம் பங்கெடுத்துக் கொண்டு, உயர் பதவிகளில் அமரக்கூடிய, தங்கள் பழக்க வழக்கங்களிலும் தேட்டங்களிலும் பண்புக் கூறுகளிலும் பெரிதும் தகுதி பெற்ற சுதேசிகள் நம் வசம் இருக்க வேண்டும் என்ற நமது ஆர்வ விருப்பங்களும் இதன்மூலம் நிறைவேறும்; எனினும் இங்கு பலரும் பல்வேறு கண்ணோட்டங்கள் கொண்டிருப்பதைக் காண் கிறோம்; இந்தியாவில் பத்து கோடி அல்லது பதினான்கு கோடி (இங்கு எண்ணிக்கை முக்கியமல்ல) மக்களிடையே ஐரோப்பியக் கலைகளை யும் விஞ்ஞானங்களையும் பரப்பும் மற்றும் பரந்த ஜனப் பகுதியினருக்குக் கல்வி போதனை அளிக்கும் அவசியத்தையும், அதற்குத் தேவையான வாய்ப்பு வசதிகளையும் பற்றி நன்கு தெரிந்திருக்க வேண்டியவர்களே இந்த விஷயம் குறித்துத் தெளிவற்ற கண்ணோட்டங்களை வெளிப்படுத்து கின்றனர்; அதுவும் இங்கிலாந்திலுள்ள ஒரு தனிப்பட்ட நிறுவனத்துக்கு வழங்குவதை விடக் குறைவாகவே ஏதோ ஒரு சிறுதொகை அளிப் பதற்குப் பதில் நாட்டின் வள ஆதாரங்கள் முழுவதையுமே கல்விக் குழுமங்களிடம் ஒப்படைத்து விடுவதுபோல் ஒரு பார்வையாளர் எண்ணக் கூடும்.

''பத்தி 9 - கடந்த பத்து ஆண்டுகாலத்தில் கல்விகுறித்த உண்மை களை பின்னோக்கிக் காண்பது அவசியம். இந்த ராஜதானியில் கல்வி சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளின்போது தம்மை வெளிப்படுத்திக் கொண்ட பிரதான நிகழ்வுப்போக்குகளை அலசி ஆராய்வதும், எதார்த்த உண்மைகளைக் கவனமாகப் பரிசீலிப்பதும் பயனில்லாமல் போக மாட்டா; ஆனால் இதனை நம்பிக்கையூட்டும் வகையிலும் போதிய முயற்சி யோடும், பாரபட்சமின்றியும், வீண் சர்ச்சைகளையும் ஊகங்களையும் அகற்றி யெறியும் உறுதியோடும் செய்யவேண்டும்; கடைசி சில பத்திகளில்

காணப்படும் வாதங்கள் இதைத்தான் புலப்படுத்துவதாகத் தோன்றுகிறது. இப்போதைய காலகட்டமும் முக்கியமாக இத்தகைய பின்னோக்கு ஆய்வுக்குரியதாகத் தென்படுகிறது. 1850ல் போலவே இரண்டாவது பத்தாண்டு தொடங்கியபோது ராஜதானியின் பள்ளிக்கூடங்கள் அரசாங்க குழுமத்தின் முழுக்கட்டுப்பாட்டின் கீழ் வந்துவிட்டன; இது சம்பந்தப்பட்ட கணிசமான தகவல்கள் இப்போது நமக்குக் கிடைக்கக்கூடும் என்பது தெளிவு; அச்சமயம் குழுமத்தில் இடம்பெற்றிருந்த இன்றைய உறுப்பினர்களில் பெரும்பாலோர் தங்களது அனுபவத்தைக் கூற முடியும்; தெளிவற்ற ஆனால் மிக முக்கியமான சில பிரச்சினைகள் குறித்து அவர்கள் விளக்கம் தர முடியும்; பின்னாளில் இந்தக் குழுமத்தில் அங்கம் வகிக்கப்போகும் உறுப்பினர்கள் முன்னால் இத்தகைய பிரச்சினைகள் எழுதுவது சாத்தியமாதலால் இந்த விளக்கம் மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

''பத்தி 10. - வங்காளத்திலும் பம்பாயிலும் தானாகவே உருவாகியுள்ள ஒருசீரான முறைமை - நம் கவனத்தைக் கவர்ந்துள்ள கல்வி சம்பந்தப்பட்ட முக்கிய தகவல்களை கூடிய மட்டும் துல்லியமான முறையில் இப்போது தர உத்தேசித்திருக்கிறோம். இந்த உண்மைகள் உரிய முறையில் புரிந்துகொள்ளப் படுமானால், இந்தியக் கல்வித் துறையில் தோன்றும் சர்ச்சைக்குரிய பல பிரச்சினைகள் அவையாகவே தீர்வு காணப்பட்டுவிடுவதை நாம் காணமுடியும் என்று கருதுகிறோம்; பம்பாயில் போன்றே ஏனைய ராஜதானிகளிலும் ஒரு முறைமை பொதுவாக உருவாகி, அது நாட்டின் சந்தர்ப்பசூழ்நிலைமைகளுக்கு நன்கு ஏற்புடையதாக இருக்கும்; இத்தகைய தன்னிச்சையான முன்னேற்றம் எத்தகைய காரணக்கூறுகள் செயல்பட்டுவருகின்றன என்பதை புலப்படுத்தும்.

''பத்தி 11. பம்பாயில் கல்வி குறித்த புள்ளிவிவரங்கள்: 1840க்கும் ஏப்ரல் 1850க்கும் இடைப்பட்ட காலத்தில் கல்வி நிலையங்கள் குழுமத்தின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தபோது, அரசாங்கப் பள்ளிகளின் எண்ணிக்கையும் அவற்றில் படித்த மாணவர்களின் எண்ணிக்கையும் கீழே தரப்பட்டுள்ளன. இந்தக் காலகட்டத்தின் பிற்பகுதியில் கூடுதலாக நான்கு ஆங்கிலப் பள்ளிகளும் 83 வட்டார மொழிப் பள்ளிகளும் தொடங்கப்பட்டிருப்பதையும், பொதுவாக மாணவர்களின் எண்ணிக்கை நூறுசத விகிதம் கூடியிருப்பதையம் இதிலிருந்து தெரிந்து கொள்லாம். அரசாங்கப் பள்ளிகளில் கல்விகற்கும் மொத்த மாணவர்களின் எண்ணிக்கை தற்போது 12,712 ஆக இருந்துவருகிறது. இதன் விகிதாசாரம் வருமாறு:

ஆங்கிலக் கல்வி ... ... ... ... ... ... ...... 1,699
வட்டார மொழிக்கல்வி ... ... ... ... ... 10,730
சமஸ்கிருதக் கல்வி ... ... ... ... ... ... ... 283

(ஒப்பீட்டு அட்டவணைகள்: 1840ல் 97 பள்ளிக்கூடங்கள் இருந்தன; அவற்றில் படித்தமாணவர்களின் எண்ணிக்கை 5,491; பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கை 185, மாணவர்களின் எண்ணிக்கை 12,712).

''பத்தி 12. இதேவிஷயம் குறித்து: ஆனால் பம்பாய் ராஜதானியின் மக்கட்தொகை தற்போது 1 கோடி என்று மதிப்பிடப்பட்டுள்ளது. பிரஷிய குடிமதிப்பு முறையை அடிப்படையாகவும் கொண்டுபெறப்பட்ட புள்ளி

விவரத் தொகுப்பு விதியைப் பயன்படுத்திப் பார்க்கும்போது, இந்த அளவுள்ள மக்கட்தொகை ஏழுவயதுக்கும் பதினான்கு வயதுக்கும் உட்பட்ட 9,00,000 ஆண் குழந்தைகளைக் கொண்டதாக இருக்கும் என்பதும், இவர்கள் பள்ளிக்கூடம் செல்லத் தகுதிவாய்ந்தவர்களாக இருப்பார்கள் என்பதும் தெரியவரும். முந்தைய அறிக்கை ஒன்றில் (1842- 43, பக்கம் 26) இந்த விவரம் காணப்படுகிறது. எனவே இந்த ராஜதானியில் பள்ளி செல்லும் வயதுள்ள ஒவ்வொரு அறுபத்துநான்கு பையன்களிலும் ஒருவனுக்கு மட்டும்தான் பள்ளிசெல்லும் வாய்ப்பை அரசாங்கம் செய்து தந்திருப்பது இதிலிருந்து தெரியவரும்.

''பத்தி 13. - இதே விஷயம் குறித்து - தவிரவும், வட்டார மொழிப் பள்ளிகளில் அளிக்கப்பட்டவந்த கல்வி அத்தனை தரம் வாய்ந்ததாக இருக்கவில்லை என்பதும் இங்கு ஒப்புக்கொள்ளவேண்டிய உண்மையாகும். இந்தப் பள்ளிகள் குறைபாடுகளுடையதாகவும், குறிப்பிடத்தக்க சாதனைகள் எவற்றையும் புரிய இயலாதவையாகவும் உள்ளன என்று திரு.வில்லோக்பி தமது குறிப்புகளில் கண்டனம் தெரிவித்திருக்கிறார். இந்த உண்மையைக் குழுமம் ஒப்புக்கொண்டிருக்கிறது; அது மட்டுமல்ல, கடந்த பல ஆண்டுகளாகவே இதனை தீவிரமாகச் சுட்டிக்காட்டி வந்திருக்கிறது; மேலும், விவரம் தெரிந்த சில நோக்கர்கள் வட்டார மொழிப்பள்ளிகளைப் பற்றி சாதகமற்ற ஒரு கண்ணோட்டத்தையே கொண்டுவந்துள்ளனர். ஆனால் இங்கு சுட்டிக்காட்டப்படும் பல்வேறு குறைபாடுகளுக்கு என்னதான் பரிகாரம்? ''திறமைவாய்ந்த ஆசிரியர்கள் நியமிக்கப்பட வேண்டும், ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகள் அதிக எண்ணிக்கையில் உருவாக்கப்பட வேண்டும், வட்டார மொழிப் பள்ளிகளின் பாடப் புத்தகங்களில் கூடுதல் பாடங்கள் சேர்க்கப்படவேண்டும்'' என்பன போன்ற பரிகாரங்களை திரு.வில்லோக்பி பரிந்துரைத்திருக்கிறார். இந்த விஷயங்கள் எல்லாம் குழுமத்தின் கவனத்தைப் பல ஆண்டுகளாகவே ஈர்த்துவருகின்றன; எனினும் கூடுதல் செலவில்லாமல் இத்திசை வழியில் ஓர் அடிகூட எடுத்துவைக்க இயலாது. ஆனால் ''தொடர்ந்து நீண்ட காலத்திற்குக் குழுமத்துக்கு நிதிஉதவி செய்யும் அதிகாரம் அரசாங்கத்திற்கு இருப்பது சாத்தியமல்ல'' என்பதை மாட்சிமை தங்கிய தங்கள் கடிதத்திலிருந்து புரிந்துகொண்டோம்.

''பத்தி 14. - பரந்த மக்கட் பகுதியினருக்குக் கல்வி வசதி அளிப்பதற்கு வழிவகை இல்லை என்ற முடிவு: 175 வட்டார மொழிப் பள்ளிக் கூடங்களை உரியமுறையில் ஒழுங்கமைப்பதற்கும், 10,730 சிறுவர்களுக்கு முழுநலம் வாய்ந்த தொடக்கக் கல்வியை அளிப்பதற்கும் போதிய நிதிவசதி இல்லையென்றால் பரந்த ஜனப்பகுதியினருக்கு அதாவது பதினான்கு கோடிப்பேர்களுக்கு, பம்பாய் ராஜதானியில் 9,00,000 சிறுவர்களுக்குக் கல்வி போதிக்கும் குறிக்கோள் நிறைவேறுவது வீண் கனவாகிவிடும் என்பது இந்த விவரங்களிலிருந்து மிகத் தெள்ளத்தெளிவாகிறது. இது அரசாங்கத்தால் எய்தப்படக்கூடிய குறிக்கோள் அல்ல; எனவே, காரிய சாத்தியமான அளவுக்கு அதிகமாக பண உதவியை கல்விக் குழுமங்கள் எதிர்பார்த்தல் கூடாது.

''பத்தி 15. - வரையறைக்குட்பட்ட வாய்ப்பு வசதிகளைக் கொண்டு செயல்படும் மிகச் சிறந்த முறை குறித்து இயக்குநர்கள் மன்றத்தின் கருத்துகள்: கடைசிப் பத்தியில் குறிப்பிடப்பட்டிருக்கும் முடிவை

இயக்குநர்கள் மன்றம் எப்போதுமே மிகத் தெளிவாகக் கருத்தில் கொண்டு வந்திருக்கிறது என்று தோன்றுகிறது. மக்களுக்குக் கல்வி போதிக்கும் முயற்சிகளை மிகச் சிறிய அளவிலேயே மேற்கொள்ளமுடியும் என்பதை உணர்ந்துள்ள மன்றம் வரையறைக்குட்பட்ட வாய்ப்பு வசதிகளைக் கொண்டு பெரும் சாதனைகள் புரியும் முறைகளைத் தங்களது பல்வேறு அரசாங்களுக்குச் சுட்டிக்காட்டுவது அவசியம் என்ற முடிவுக்கு வந்தது. இது சம்பந்தமாக சென்னை அரசாங்கத்துக்கு அவர்கள் அனுப்பிய செயல்துறைக் கட்டளைகளையும்(பத்தி 7), அதே தேதியில் அவர்கள் அனுப்பிய செய்தியில் பிரதிபலித்த பின்வரும் உணர்வுகளையும் ஏற்கனவே நாங்கள் குறிப்பிட்டுள்ளோம்: 'இந்தியாவின் மேல்தட்டு வகுப்பினர்களுக்கு ஐரோப்பிய விஞ்ஞானங்களைப் போதிக்க வேண்டும், நாகரிகமடைந்த ஐரோப்பாவின் இலக்கியச் செல்வம் அவர்களுக்குக் கிட்டும்படிச் செய்ய வேண்டும் என்பதில் நாங்கள் மிகுந்த ஆர்வம் கொண்டுள்ளோம். வாய்ப்புவசதிகளும் இயல்பான செல்வாக்கும் படைத்த வகுப்பினர்கள் பெறும் சிறப்பியல்பு முடிவாக மக்கள் அனைவரது இயல்புகளையும் தீர்மானிக்கிறது.''

''பத்தி 16. - இந்தியாவின் மேல்தட்டு வகுப்பினர்களைப் பற்றிய ஆய்வாராய்வு: இதன் பின்னர், மக்களில் ஒரு சிறுபகுதியினரையே இந்தியாவில் அரசாங்கக் கல்வியின் செல்வாக்கின்கீழ் கொண்டு வர முடியும் என்பது புலனாகிய நிலைமையில், இந்தப்பகுதியினர் ''மேல்தட்டு வகுப்பினர்களைக்'' கொண்டவர்களாக இருக்கவேண்டும் என்று மாண்புமிகு மன்றம் முடிவு செய்துவிட்ட நிலைமையில், இந்த வகுப்பினரில் யார் யார் அடங்குவர் என்பதை உறுதிப்படுத்துவது இன்றியமையாததாகிறது. ஆங்கிலோ- இந்திய ஊக ஆய்வுகளில் கிட்டத்தட்ட தங்களை அறியாமலேயேத் தங்களை நுழைத்துக் கொள்ளும் ஐரோப்பிய ஆய்வாளர்கள் இந்த மனோபாவத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொள்வது இங்கு மிகமுக்கியம். ஐரோப்பாவில் அதிலும் குறிப்பாக இங்கிலாந்தில் உள்ள சூழ்நிலைமைகள், பழக்க வழக்கங்கள், செல்வம், அரசியல், சமூக செல்வாக்கு போன்றவற்றில் மேல்தட்டு வர்க்கத்தினருக்கும் கீழ்த்தட்டு வர்க்கத்தினருக்கும் இடையே ஒரு திட்டவட்டமான எல்லைக்கோட்டை நாம் இந்தியாவில் காணமுடியாது. அங்கு எல்லா வல்லாட்சிகளிலும் ஒருவருடைய தகுதியே வாழ்க்கையில் மிகக் கீழ்நிலையிலிருந்து மேல் நிலைக்கு உயர்வதற்கான சாதனமாக அமைந்துள்ளது; இதனால் அங்கு பழக்கவழக்கங்களில் எப்போதும் பெருமளவுக்கு ஒருசீரான தன்மை காணப்படுகிறது. பிரிட்டிஷ் கண்ணோட்டங்களின்படி ஓர் யாசகன் மரச் சட்டத்தில் கைகால் செருகிவைத்து தண்டிக்கப்படுவதற்கோ அல்லது ஒரு தொழிலகத்தில் கட்டாய உழைப்பு செய்வதற்கோ மட்டுமே தகுதியானவன். ஆனால் இந்தியாவில் அப்படியல்ல; இங்கு அவன் மரியாதைக்குரியவன்; பிராமணீய சித்தாந்தத்தின்படி போற்றிப் பாராட்டுவதற்குரியவன்; அறிவுவளத்தைப் பெருக்குவதற்காகவும், பரம்பொருளை அமைதியாகத் தியானிப்பதற்காகவும் வாழ்க்கையின் எல்லா சுகபோகங்களையும் கவர்ச்சிகளையும் துறந்தவன் என்று அவன் பெரிதும் மதிக்கப்படுகிறான்.

''பத்தி 17. - இந்தியாவில் மேல்தட்டு வகுப்பினர்கள்: இந்தியாவில் செல்வாக்கு மிக்கவர்கள் என்று கருதப்படும் மேல்தட்டு வகுப்பினர்களைப் பின்கண்டவாறு வரிசைப்படுத்தலாம்:-

*முதலாவது:-* பண்டைய நிலப்பிரபுத்வ அமைப்பின் பிரதிநிதிகளான நிலச்சுவன்தார்களும், ஜாகீர்தார்களும், சிற்றரசர்களும்; இவர்களைப் படைவீரர் வகுப்பினர் எனக் கூறலாம்.

*இரண்டாவது:-* தொழில் அல்லது வாணிகத்தின் மூலம் செல்வம் திரட்டியவர்கள் அல்லது வணிகர்கள்.

*மூன்றாவது:-* அரசாங்கத்தில் உயர் பதவிகளில் இருப்பவர்கள்.

*நான்காவது:-* பிராமணர்கள், பம்பாயைச் சேர்ந்த பர்பூஸ்கள், சென் விஸ்கள், வங்காளத்தின் காயஸ்தர்கள் போன்ற எழுத்தைப் பிழைப்பாகக் கொண்ட உயர்ஜாதி எழுத்தாளர்களையும் இவர்களுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்; கல்விஅறிவுமூலமோ, சமுதாய படிநிலை மூலமோ இவர்கள் தங்களுக்குரிய அந்தஸ்தைப் பெறுகிறார்கள்.

''பத்தி 18. - **பிராமணர்கள், மிகவும் செல்வாக்கு படைத்தவர்கள்:** இந்த நான்கு வகுப்பினர்களில் ஈடு இணையற்ற முறையில் மிகுந்த செல்வாக்கு வாய்ந்தவர்கள், அரசுப் பணிகளில் வெகு எளிதாக இடம்பெறக் கூடிய வர்கள் கடைசியாகக் குறிப்பிட்டவர்களேயாவர். பண்டைய ஜாகிர்தார் கள் அல்லது படைவீரர் வகுப்பினர் இந்தியா வெங்கணும் நமது ஆட்சி யில் நாளும் நலிந்து சிதைந்து சீர்குலைந்து வருகின்றனர் என்பது நன்கு ஒப்புக்கொள்ளப்பட்ட, மறுக்கமுடியாத உண்மையாகும். அவர்களது பழைய வாழ்க்கைத் தொழில் இல்லாதொழிந்துவிட்டது; ஒரு புதிய வாழ்க்கைத் தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் அல்லது அமைதி யைப் பேணும் கலையை வளர்க்கும் மனப்பக்குவமோ அல்லது ஆற்றலோ அவர்களுக்கு இல்லை. இந்த ராஜதானியில் நிலக்கிழார்களைக் கொண்ட மேற்குடியினரை முட்டுக் கொடுத்துத் தாங்கி நிற்பதற்கு திரு. எல்பின்ஸ் டனும் அவருக்குப் பிறகு வந்தவர்களும் மேற்கொண்ட முயற்சிகள் யாவும் பரிதாபகரமாகத் தோல்வியடைந்தன; சிறப்புப்பட்டங்கள் வழங்கியும், கல்விவசதிகள் செய்துதந்தும் அவர்கள் மேம்பாடைவதற்குச் செய்யப்பட்ட சகல பிரயத்தனங்களும் ஏமாற்றத்திலேயே முடிந்தன; இந்துஸ்தானத் தின் சமவெளிகளில் அவர்களது மூதாதையர்கள் நடத்திய வெற்றிகரமான தாக்குதல்கள் பற்றிய பழைய நினைவுகளும், வீண் ஆடம்பரமும், ஆர்ப் பாட்டமும், ஊதாரித்தனங்களும் தவிர வேறு எதுவும் அவர்களைத் தூண்டி ஊக்குவிக்கும் என்று தோன்றவில்லை. வாணிக வகுப்பினரிடையேயும், ஒருசில விதிவிலக்குகள் தவிர, மேம்பட்ட கல்வி மிகுந்த செல்வாக்கு வகிப்பதற்கு வாய்ப்பு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. இளம் வாணிகர் தமது தொழிலுக்குத் தேவையான விசேடப்பயிற்சியையும், அனுபவத்தையும் பெறும்பொருட்டு முன்கூட்டியே பள்ளியிலிருந்து வெளியேற வேண்டியதாக இருக்கிறது; பள்ளிப்படிப்புக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. இதனை எல்லா நாடுகளிலுமே காணமுடியும்; இருப்பினும் பெரிதும் நாகரிகமடைந்த ஐரோப்பிய நாடு களை விடவும் இந்தியாவில்தான் இத்தகைய நிலை அதிகமாகக் காணப் படுகிறது. இறுதியாக, அரசு அலுவலர்களை எடுத்துக் கொள்வோம். அரசுடன் தொடர்பு கொண்டிருக்கும் ஏராளமானோரிடம் அவர்களுக்கு மிகுந்த செல்வாக்கு இருக்கிறது என்பதில் ஐயமில்லை; ஆனால் அதே சமயம் அரசுடன் தொடர்பில்லாத இதைவிட அதிக எண்ணிக்கையி லுள்ளவர்களிடம் அவர்களுக்கு எத்தகைய செல்வாக்கும் இல்லை; இங்கி

லாந்திலுள்ள அரசு அலுவலர்களைப் போன்றே இவர்களும் மக்களின் அவநம்பிக்கையைப் பெற்றுள்ளனர்; இவர்கள் அரசாங்கத்தின் வெறும் சவாரிக்குதிரைகளாகப் பல சந்தர்ப்பங்களில் பொதுமக்களால் கருதப்படு கின்றனர்.

''பத்தி 19. - பிராமணர்களின் வறுமை - மேற்கண்ட பகுத்தாய்வு நீண்ட தாகத் தோன்றினாலும், அது தவிர்க்கமுடியாதது, இன்றியமையாதது; ஏனென்றால் இதிலிருந்து சில முக்கிய முடிவுகளை உய்த்துணரமுடியும். முதலாவதாக, கல்வி வித்துகளை விதைத்து, அது முளைத்துத் தளிர்விட்டு மரமாவதற்கு அரசாங்கத்துக்குத் துணைபுரியக்கூடிய செல்வாக்கு மிக்க வகுப்பினர் பிராமணர்களும் அவர்களையொத்த இதர மேல்சாதியினரும் தான் என்பதை இது புலப்படுத்துகிறது. ஆனால் பிராமணர்களும் இந்த மேல்சாதியினரும் பெரும்பாலும் மிகவும் இரங்கத்தக்க முறையில் பரம ஏழைகளாக உள்ளனர்; இந்தியாவின் பல பகுதிகளில் பிராமணன் என்னும் சொல் ''இரவலன்'' என்னும் சொல்லைக் குறிப்பதாக உள்ளது.

''பத்தி 20. - செல்வச்சிறப்புடைய வகுப்பினர் தற்போது மேம்பட்ட கல்வியை விரும்ப மாட்டார்கள்: ஆக, பெருகனாராகிய தாங்கள் தங்களது 1850 ஏப்ரல் 24ஆம் தேதியிட்ட கடிதத்தில் பெரிதும் வலியுறுத்திப் பிறப் பித்திருந்த ஆணையைச் செயல்படுத்துவது மிக மிகக் கடினம் என்பதைக் காண்கிறோம். மேற்கல்வி கற்பதற்கு ஆகும் செலவை ஏற்கும் சக்தியுள்ள செல்வந்த வகுப்பினருக்கும், அதேபோல் அசாதாரணமான அறிவுத் திறம் படைத்த இளைஞர்களுக்கும் மட்டுமே இத்தகைய கல்வி அளிக்கப்பட வேண்டும் என்ற தங்களது ஆணை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது சரியானதாகவும் நேரியானதாகவும் தோன்றக்கூடும். ஆனால் இது போன்றதொரு கண்ணோட்டத்தைச் செயல்படுத்த முற்பட்டபோது குழுமம் கண்டமுடிவு வேறுபட்டதாக அமைந்துள்ளது; அதாவது மேற்கல்வி விஷயத்தில் செல்வந்த வகுப்பினர் ஒட்டுமொத்தத்தில் அக்கறையின் மையையும் அலட்சியப்போக்கையும் கொண்டுள்ளனர்; இது இப்படி யென்றால், ஏழைகளிடையே அசாதாரணமான கூர்மதியுடையவர்கள் இருக்கிறார்களா என்று கண்டுபிடிப்பதற்கு தகுந்த உபாயங்கள் ஏதும் தென்படவில்லை; பள்ளிப் பயிற்சியின் மூலம்தான் இவர்களது வினைத் திறனை சோதிப்பதும், வளர்ப்பதும் சாத்தியம். எனினும், மேற்கல்வி யின் அனுகூலங்களை, சிறப்புகளை நன்கு அறிந்துபுரிந்துள்ள ஒரு சிறு பகுதியினர் செல்வந்த வகுப்பினனரிடையே இருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை; அரசாங்கத்தால் நீண்ட காலமாக கல்வி பெரிதும் பேணி வளர்க்கப்பட்ட வங்காளத்தில்தான் இத்தகையோர் பம்பாயைவிட அதிக எண்ணிக்கையில் இருப்பதாகத் தெரிகிறது. கல்வியில் மேம்பட்ட தரங்களை எய்துவது பெருமதிப்புக்கும் உயர்வுக்கும் புகழுக்கும் இட்டுச்செல்லும், சமுதாய சமத்துவத்தில் ஐரோப்பியர்களை நெருங்கி வரச் செய்யும் என்று அனுபவரீதியாக உணரும்போது இத்தகைய வகுப் பினர் பெருகுவது தவிர்க்க முடியாதது என்று நாங்கள் கருதுகிறோம். ஆனால் மாணவர்களிடமிருந்து கட்டணம் வசூலித்தோ, நிதிஉதவி பெற்றோ, ஐரோப்பியக் கலைகளையும் விஞ்ஞானங்களையும் போதிப்பது தற்போதைக்குச் சாத்தியமல்ல என்பதை உணர்ந்துள்ளோம்.

''பத்தி 21. - கீழ்ச்சாதியினருக்குக் கல்வி போதிக்கும் பிரச்சினை: பல ஆண்டுக்கால அனுபவம் நம் கவனத்துக்குக் கொண்டுவந்துள்ள இந்த

விவரங்களிலிருந்து ஒரு நடைமுறை சாத்தியமான முடிவுக்கு நாம் வர முடியும். நம்மிடமிருந்து கல்வி போதனை பெற ஆர்வம் கொண்டுள்ள உயர்ஜாதிகளைச் சேர்ந்த ஏழைக் குழந்தைகளுக்கு பள்ளிக்கூடங்களின் கதவுகள் மிக அகலத் திறந்து விடப்பட வேண்டும் என்பதே அந்த முடிவு. ஆனால் இங்கு நம் கவனத்தை ஈர்க்கும் ஒரு சிக்கலான கேள்வி எழு கிறது; அந்தக்கேள்வி இதுதான்: அரசாங்கம் நடத்தும் பள்ளிக்கூடங்களில் ஏழைக்குழந்தைகள் கட்டணமின்றி இலவசமாகக் கல்வி கற்பதற்கு அனுமதிக்கப்படும்போது தெத்துகள், மகர்கள் முதலான இழிவாகக் கருதப்படும் சாதிகளைச் சேர்ந்த குழந்தைகள் பெரும் எண்ணிக்கையில் இந்தப் பள்ளிக்கூடங்களுக்கு வருவதை எப்படித் தடுக்க முடியும்?

''பத்தி 22. - இந்துக்களின் சமூகரீதியான பாரபட்சப் போக்கு: மேலே குறிப்பிடப்பட்ட குழந்தைகளைக் கொண்ட ஒரு வகுப்பு பம்பாயில் தொடங்கப்படுமானால் குழுமத்தில் பணிபுரியும் பேராசிரியர்கள் மற்றும் ஆசிரியர்களின் வழிகாட்டுதலில் சமுதாயத்தில் வேறு எவருக்கும் இணை யான முறையில் இக்குழந்தைகள் மேம்பட்ட அறிவுத் திறமிக்கவர் களாகப் பயிற்றுவித்துத் தயாரிக்கப்படுவர்; இவ்வாறு இவர்கள் உயர் கல்வித் தகுதிகளைப் பெறும்போது, நீதிபதி, தனிச் சிறப்புச் சான்றாளர் குழு உறுப்பினர், மாட்சிமை தங்கிய அரசியாரின் சமாதான ஆணையத்தின் உறுப்பினர் போன்ற உயர் பதவிகளைப் பெறு வதற்கு அவர்கள் விழைவதைத் தடுப்பதற்கு எதுவும் இருக்க முடியாது. இத்தகைய நியமனங்கள் இந்து சமூகத்தினரிடையே வெறுப்பையும் சீற்றத்தையும் கிளர்த்திவிடும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் அச்சம்கொள்வது அதன் குறுகிய நோக்கையும் போக்கையும், பலவீனத்தின் உச்சக்கட்டத்தையும் காட்டுகிறது என்றும், சாதித் தடைகளைப் பகிரங்கமாகத் தாக்கி உடைத்துத் தகர்க்கவேண்டும் என்றும் பரந்த உள்ளம் கொண்டவர்கள் கருதுகின்றனர்.

''பத்தி 23. - மாண்புமிகு மவுண்ட் ஸ்டுவர்ட் எல்பின்ஸ்டனின் விவேகமிக்கக் கருத்துகள் மேற்கோள் காட்டப்படுகின்றன:- ஆனால் இந்தியாவுக்கு வருகை தந்த சிறந்த முற்போக்காளரும் பரந்த மனம் கொண்ட நிர்வாகியுமான திரு.எல்பின்ஸ்டன் தெரிவித்துள்ள விவேக மான கருத்துகள் உண்மையில் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றன. அவர் கூறுகிறார்: ''மிகவும் அடிமட்டத்திலுள்ள ஜாதியினர்தான் மிகச்சிறந்த மாணக்கர்களாக விளங்குகின்றனர் என்பதைச் சமயப்பரப்பாளர்கள் தெரிந்துகொண்டதாகக் கூறப்படுகிறது; ஆனால் மேலே வருணிக்கப்பட்டவர்களை விசேடமாக ஊக்குவிக்கும் விஷயத் தில் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்; அவர்கள் மிகவும் வெறுக்கப் படுபவர்கள் மட்டுமன்றி, சமுதாயத்தின் மாபெரும் பிரிவினர்களில் குறைந்த எண்ணிக்கையில் இருப்பவர்கள்; நமது கல்வி முறை முதலில் இவர்களிடம் வேரூன்றுமானால் அது ஒருபோதும் மேற்கொண்டு விரி வுறாது, பயனுள்ள அறிவாற்றலில் மற்றவர்களை விட மேம்பட்ட நிலை யில் இருக்கும், ஆனால் இந்த நல்வாய்ப்பு எவருக்குக் கிட்டுவது விரும்பத் தக்கதாக இருக்குமோ அந்தச் சாதிகளால் வெறுக்கப்படும், இழிவாகக் கருதப்படும் ஒரு புதிய வகுப்பினரின் தலைமையின்கீழ் நாம் இருப்பதைக் காண்போம்; நமது ராணுவத்தையோ அல்லது மக்களின் ஒரு பகுதியின ருடன் நம்மைப் பிணைத்துக் கொள்வதையோ நமது ஆட்சிக்கு ஆதார மாகக் கொள்வதுடன் நாம் மனநிறைவு அடைவோமானால், அதனை மேலும் விரிவடைந்த அடித்தளத்தின்மீது அமைக்கும் நமது ஒவ்வொரு முயற்சிக்கும் அது முரண்பாடானதாக, ஒவ்வாததாக இருக்கும்.''

5. எனவே, பம்பாய் ராஜதானியில் 1855க்கு முன்னர் தாழ்த்தப் பட்ட வகுப்பினருக்கு எந்தப் பள்ளிகளும் திறக்கப்படவில்லை யென்றால் கல்வி கற்கும் வாய்ப்புகளை உயர் ஜாதிகளைச் சேர்ந்த அதிலும் குறிப்பாக பிராமண வகுப்பைச் சேர்ந்த ஏழைகளுக்கு மட்டுமே அளிப்பது என்ற பிரிட்டிஷ் அரசாங்கத்தின் திட்டமிட்ட கொள்கையே இதற்குக் காரணம். இந்தக் கொள்கை சரியானதா, தவறானதா என்பது வேறு விஷயம். ஆனால் இந்தக் காலகட்டத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் கல்வியின் அருள் வளத்தைப் பெறு வதற்கு அரசாங்கம் அனுமதிக்கவில்லை என்பது நிதர்சன உண்மை யாகும்.

## 11 - 1854 to 1882

6. 1854 ஜூலை 19 ஆம் தேதியிட்ட தங்களது 49ஆம் எண் அறிக்கையில் இயக்குநர்கள் மன்றம் பின்கண்டவாறு குறிப்பிட் டிருந்தது:

> "இப்போது நாம் நமது கவனத்தை ஓர் உண்மையின் பால் செலுத்த வேண்டும்; இதுவரை நாம் பெரிதும் அலட் சியப்படுத்தி வந்த உண்மை அது; இதனை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்; அந்த அசைக்க மறுக்க முடியாத உண்மை இதுதான்: வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திற் கும் பெரிதும் உகந்ததான பயனுள்ள, நடைமுறைக்கு ஏற்ற கல்வி அறிவை மிகப்பெரும் திரளான மக்களுக்குக் கிடைக்கச் செய்வது மிக மிக அவசியம்; எத்தகைய கல்வியையும் தங் களது சொந்த முயற்சிகளால் பெற இயலாத துர்ப்பாக்கிய சாலிகளாக அவர்கள் இருந்து வருகின்றனர்; எதிர்காலத்தில் இந்தக்குறிக்கோள் நிறைவேற அரசாங்கம் தீவிர நடவடிக்கை கள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று நாங்கள் விரும்பு கிறோம். இந்த இலக்கை எட்ட கணிசமான அளவு செலவிட நாங்கள் தயாராக இருக்கிறோம்."

இந்த அறிக்கைதான் இந்த நாட்டில் வெகுஜனக் கல்விக்கு அடித்தளமிட்டது என மிகச்சரியாகவே கருதலாம். இந்தியாவில் கல்வி குறித்து ஆராய 1882ல் நியமிக்கப்பட்ட ஹன்டர் கமிஷன்தான் இந்தக் கொள்கையின் பலாபலன்கள் பற்றி முதன்முதலில் பரிசீலித்தது. 28 ஆண்டுகளில் என்ன சாதிக்கப்பட்டது என்பதைப் பின்கண்ட புள்ளிவிவரங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

## தொடக்கக் கல்வி

**1881- 82**

| | பள்ளியில் மாணவர் எண்ணிக்கை | மொத்தத்தில் சதவிகிதம் |
|---|---|---|
| கிறித்தவர்கள் ... ... ... | 1,521 | .49 |
| பிராமணர்கள் ... ... ... | 63,071 | 20.17 |
| இதர இந்துக்கள் ... ... ... | 2,02,345 | 64.69 |
| முகமதியர்கள் ... ... ... | 39,231 | 12.54 |
| பார்சிகள் ... ... ... | 3,517 | 1.12 |
| ஆதிவாசிகளும் மலைச்சாதியினரும் ... ... ... | 2,713 | .87 |
| கீழ்ச்சாதி இந்துக்கள் ... ... ... | 2,862 | .87 |
| யூதர்களும் ஏனையோரும் ... ... | 373 | .12 |

## உயர்நிலைக் கல்வி

**1881 - 1882**

| | நடுநிலைப் பள்ளிகள் | | உயர்நிலைப் பள்ளிகள் | |
|---|---|---|---|---|
| | மாணவர்கள் எண்ணிக்கை | மொத்த மாணவர்கள் எண்ணிக்கையில் சதவிகிதம் | மாணவர்கள் எண்ணிக்கை | மொத்த மாணவர்கள் எண்ணிக்கையில் சதவிகிதம் |
| கிறித்தவர்கள் | 1,429 | 12.06 | 111 | 2.26 |
| பிராமணர்கள் | 3,639 | 30.70 | 1978 | 40.29 |
| இதர இந்துக்கள் — விவசாயிகள் | 624 | 5.26 | 140 | 2.85 |
| இதர இந்துக்கள் — கீழ்ச் சாதியினர் | 17 | .14 | - | - |
| இதர இந்துக்கள் — ஏனைய சாதியினர் | 3,823 | 32.25 | 1,573 | 32.04 |
| முகமதியர்கள் | 687 | 5.80 | 100 | 2.04 |
| பார்சிகள் | 1526 | 12.87 | 965 | 19.66 |
| ஆதிவாசிகளும் மலைச்சாதியினரும் | 6 | .05 | - | - |
| மற்றவர்கள் (யூதர்கள் போன்றோர்) | 103 | .87 | 92 | .86 |

### கல்லூரிக் கல்வி
### 1881-1882

| | | | |
|---|---|---|---|
| கிறித்தவர்கள் | | 14 | 3 |
| பிராமணர்கள் | | 241 | 50 |
| இதர இந்துக்கள் | விவசாயிகள் | 5 | 1 |
| | கீழ்ச்சாதியினர் | 0 | 0 |
| | ஏனைய சாதியினர் | 103 | 21.3 |
| முகமதியர்கள் | | 7 | 1.5 |
| பார்சிகள் | | 108 | 21.5 |
| ஆதிவாசிகளும் மலைச்சாதியினரும் | | 0 | 0 |
| மற்றவர்கள் (யூதர்கள் போன்றோர்) | | 2 | 0.4 |

7. இந்தப் புள்ளி விவரங்கள் காட்டுவது என்ன? வெகுஜனக் கல்வியே அரசாங்கத்தின் கொள்கையாக இருந்தபோதிலும் பெருந் திரளான மக்கள் 1854 ஆம் ஆண்டுக்கு முன்பிருந்தது போலவே இப்போதும் கல்வி வட்டத்திற்கு வெளியேதான் இருக்கின்றனர்; இந்துக்களில் மிகவும் கீழ்ச்சாதியினரும் ஆதிவாசிகளும் வசதி பெறு வதில் இன்னமும் மிகமிக கீழ் மட்டத்திலேயே இருக்கின்றனர்; இதன் விளைவாக 1881-82ல் இந்த மாகாணத்தின் உயர்நிலைப் பள்ளிகளிலோ அல்லது கல்லூரிகளிலோ இந்தச் சமூகத்தைச் சேர்ந் எவருமே இடம்பெறவில்லை. இரத்தக் கண்ணீர் வடிக்கத்தக்க இத் தகைய ஓர் அவலக் காட்சியைத்தான் இந்தப் புள்ளி விவரங்களில் காண்கிறோம். கல்வி வசதி பெறும் விஷயத்தில் ஏனையோரின் படிநிலைக்குத் தாழ்த்தப்பட்ட இனமக்களை உயர்த்தத் தவறிய தற்குக் காரணம் எதுவாக இருக்கமுடியும்? இந்தக் கேள்விக்குப் பதிலளிப்பதற்கு இந்த ராஜதானியினது அரசாங்கத்தின் கல்விக் கொள்கையின் வரலாற்றை மீண்டும் அலசியாராய்வது அவசியம்.

8. பெருந்திரளான மக்களுக்குக் கல்வி வசதி கிட்டச் செய்வது அரசாங்கத்தின் கடமை என்பதை நாற்பதாண்டு இடை வெளிக்குப் பிறகு இயக்குநர்கள் மன்றத்தின் 1854 ஆம் வருட அறிக்கை முதல் தடவையாக ஒப்புக்கொண்டது. எனினும் இந்த அறிக்கையில் இடம்பெற்றிருந்த கோட்பாட்டின் விவேகம் குறித்து பெரும் ஐயம் தெரிவித்த கடைந்தெடுத்த பிற்போக்காளர்கள் இன்ன மும் இருந்து வரவே செய்தனர்; இந்தக் கொள்கையைக் கைவிட வேண்டுமென்று அவர்கள் ஆர்ப்பரித்தனர். பின் தங்கிய வகுப்பினரை வாழ்க்கையில் இப்போதுள்ள படிநிலையிலிருந்து அவர்களை உயர்த்து வது பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கடுமையான விளைவுகளை ஏற்படுத்தும்

என்ற அச்சங்கள்கட்டுப்பாட்டுக் குழுமத்தின் தலைவரான எல்லன்பரோ பிரபு போன் றோரின் மனங்களை அலைக்கழித்தன. எனவே, அவர் இயக்குநர்கள் மன்றத்தின் தலைவருக்கு 1858 ஏப்ரல் 28ஆம் தேதி எழுதிய கடிதத்தில் பின்கண்ட எச்சரிக்கையை விடுக்கச் சற்றும் தயங்க வில்லை:

'பெருந்தகையாளர்களே: - 1854ல் இயக்குநர்கள் மன்றம் அனுப்பிய ஆணைகளின்படி, இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் கல்வியின் நிலை குறித்து மதிப்பாய்வு செய்து அண்மையில் எழுதப்பட்ட பல கடிதங்கள் என் முன் இருக்கின்றன. அச்சமயம் வெளியிடப்பட்ட திட்டம் நல்ல பலனை அளித்திருக்கிறது என்ற எ்ண்ணத்தை இக்கடிதங்கள் என் மனத்தில் தோற்றுவிக்கவில்லை என்பதை இங்கு குறிப்பிடவிரும்புகிறேன்; அதேசமயம் எதிர்பார்த்தபடி கட்டண உயர்வு செயல்படுத்தப்பட்டு வருகிறது.

★ ★ ★

'பத்தி-11: நாம் விரும்புகிறபடி கல்வியைப் போதிப்பதில் வெற்றி பெறும் நோக்கத்தோடு, கீழ்மட்ட வகுப்பினருக்கு மேலே உள்ள வகுப்பினரின் பெற்றோர்களைத் தங்கள் குழந்தைகளை நமது பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பும்படித் தூண்டி ஊக்குவித்தாலும்கூட - இதனை நாம் அரிதினும் அரிதாகவே செய்கிறோம் - நடைமுறையில், செயலளவில் நாம் தொழிலாளர் வர்க்கத்தின் அறிவுவளத்தைப் பெரிதும் பெருக்கி, செல்வந்தர் வர்க்கத்தை அறியாமையில் ஆழ்த்துகிறோம்.

'பத்தி 12: இது ஓர் ஆரோக்கியமான சமுதாய சூழ்நிலையை உருவாக்கத் துணை புரியாது. நாம் அடையவிரும்பும் குறிக்கோளை எய்துவதற்கு கீழ்மட்ட வகுப்பினரில் மிகவும் கல்விகற்றவர்களை ஒரு சாதனமாக நமது அரசாங்கம் பயன்படுத்த முடியாது.

'பத்தி 13: ஏழைகளுக்கு மேம்பட்ட கல்வியை நாம் அளிப்பதன் மூலம் மிகவும் அதிருப்தியடைந்த, பெருந்திரளான மக்கள்மீது மேலாதிக்க உரிமையுடைய ஒரு கூட்டத்தைத்தான் நாம் உருவாக்குவோம்.

'பத்தி 14: கல்வியும் நாகரிகமும் மேல்தட்டு வகுப்பினர்களிடமிருந்து கீழ்த்தட்டு வகுப்பினர்களை வந்தடையலாம்; இவ்வாறு செய்வதன்மூலம் சமுதாயத்துக்கு புதிய வலிமையை, உயிர்த் துடிப்பை அளிக்கமுடியும்; ஆனால் அவை கீழ்த்தட்டு வகுப்பினரிடமிருந்து அவர்களுக்கு மேலே உள்ள வகுப்பினரை ஒருபோதும் சென்றடைய முடியாது; கீழ்த்தட்டு வகுப்பினரிடம் மட்டுமே அவை ஊட்டி வளர்க்கப்படுமானால் அது சமுதாயக் கொந்தளிப்புக்கே இட்டுச்செல்லும்; இதற்கு அயல்நாட்டினர்தான் முதல் பலியாவார்கள்.

'பத்தி 15: கல்வி அறிவைப் பரப்ப நாம் விரும்பினால் அதனை முதலில் மேல்தட்டு வர்க்கத்தினரிடையேதா பரப்ப வேண்டும்.

'பத்தி 16: இவற்றைப் பின்கண்ட இரண்டு வழிகளில்தான் செய்ய முடியும். முதலாவதாக மேல்தட்டு வகுப்பினர்களின் பிள்ளைகளை

மட்டுமே அனுமதிக்கும் கல்லூரிகளை நாம் தொடங்க வேண்டும்; இரண்டாவதாக, படைகள் மறுசீரமைக்கப்படும்போது, மேல்தட்டு வகுப்பினரின் தகுதி வாய்ந்த புதல்வர்களுக்கு உடனடியாக கமிஷன் அந்தஸ்து வழங்கப்பட வேண்டும்.

9. தீண்டப்படாத வகுப்பினர்கள்பால் ஐரோப்பிய அதிகாரிகள் காட்டிவந்த இந்த வெறுப்பு மனோபாவத்தை இந்தியா மந்திரி தமது 1859ஆம் வருட அறிக்கையில் முடிவாகத் திருத்தி சரிப்படுத்தினார்; வெகுஜனக் கல்வி சம்பந்தமாக அரசாங்கத்துக்குள்ள பொறுப்பை இந்த அறிக்கை மீண்டும் வலியுறுத்திற்று.

10. ஆனால் விந்தையாகத் தோன்றினாலும், வெகுஜனக் கல்வி சம்பந்தமாக தனக்குள்ள பொறுப்பை அரசாங்கம் அங்கீகரித்த போதிலும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களைப் பொறுத்தவரையில் அது பெயரளவில்தான் நன்மை தந்தது. ஏனென்றால், வெகுஜனங்களுக்குப் பல்வேறு மாவட்டங்களில் பள்ளிக்கூடங்கள் தொடங்கப்பட்டாலும், இந்தப் பள்ளிக்கூடங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைச் சேர்ந்த குழந்தைகளை அனுமதிக்கும் பிரச்சினை இன்னமும் தீர்வுகாணப்படாமலேயே இருந்தது. இத்தகையதொரு பிரச்சினை 1856 ஆம் ஆண்டில் எழவே செய்தது. ஆனால் இதுகுறித்த அரசாங்கத்தின் முடிவு தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குச் சாதகமாக இல்லை; 1856-57 ஆம் ஆண்டுக்கு பம்பாய் ராஜதானி சம்பந்தமாக பொதுக்கல்வி இயக்குநர் சமர்ப்பித்த அறிக்கையின் பின்வரும் பகுதிகளிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ளலாம்:-

''பத்தி 177: கீழ்ச்சாதியினருக்கும் பழங்குடியினருக்குமான பள்ளிக்கூடங்கள் - கீழ்ச்சாதியினருக்காக அரசாங்கம் நேரடியாகத் தொடங்கிய பள்ளிக்கூடங்கள் எவையும் இல்லை; இத்தகைய பள்ளிக்கூடங்கள் திறக்கப்படுவதை உச்ச அரசாங்கம் ஏற்கவில்லை. முற்றிலும் அரசாங்கத்தின் ஆதரவில் நடைபெற்று வந்த சாதாரண பள்ளிக்கூடங்களில் எத்தகைய பாகுபாடுமின்றி கொள்கை அளவில் அனைத்துச் சாதிக் குழந்தைகளும் சேரலாம். எனது 1855- 56ஆம் வருட அறிக்கையைப் பரிசீலித்த அரசாங்கம் பின்கண்டவாறு குறிப்பிட்டது: ''அரசாங்கப் பள்ளிகளில் மிகவும் கீழ்ச்சாதி மாணவர்களை சேர்த்துக் கொள்ளும் பிரச்சினை குறித்து இதுவரை அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்ட ஒரே சம்பவம் ஒரு மகர் சாதிப் பையனைப் பற்றியதாகும். 1856 ஜூனில் அச் சிறுவன் சார்பில் ஒரு மனு தாக்கல் செய்யப்பட்டது; எல்லாப் பையன்களையும் போல் வழக்கமான பள்ளிக்கூடக் கட்டணத்தைக் கட்டுவதற்கு அவன் தயாராக இருப்பதாகவும், அப்படியிருந்தும் தார்வார் அரசாங்கம் பள்ளியில் அவனுக்கு அனுமதி மறுக்கப்பட்டதாகவும் அந்த மனுவில் குறிப்பிடப்பட்டிருந்தது.

''இந்தச் சந்தர்ப்பத்தில் அரசாங்கம் ஒரு பெரும் நடைமுறைச் சிக்கலை எதிர்நோக்கநேரிட்டது; இந்தப் பள்ளியில் சேருவதற்கு அந்த மகர்

சிறுவனுக்குக் கோட்பாட்டளவில் உரிமை இருப்பதை நாங்கள் உணர்ந் தோம். ஆனால் இந்த உரிமையை அவன் அனுபவிக்க அனுமதிப்பது மிகப்பெரும் திரளான மக்களின் கடும் எதிர்ப்பைக் கிளர்த்திவிடும்; மேலும், இவர்கள் கூடிய மட்டும் மிகப் பெருமளவுக்கு அறிவொளி பெற வேண்டும் என்பதற்காகவே அரசுக் கல்வித்துறை உருவாக்கப்பட்டிருக் கிறது; எனவே, அரசாங்கம் ஒரு முடிவுக்கு வந்தது; அச்சமயம் சிறிது தயக்கத்துடன் இயற்றப்பட்ட ஒரு தீர்மானத்திலிருந்து* இதனைத் தெரிந்து கொள்ளலாம். அந்த முடிவு இதுதான்:

சாதி இந்துக்கள் மட்டுமே படிக்கும் ஒரு பள்ளியில் சேருவதற்கு அனுமதி வேண்டி ஒரே ஒரு மகர்தான் இதுவரை வந்திருக்கிறான்; அந்த ஒரு நபருக்காக நடவடிக்கை மேற்கொள்வதும், அவனை சாதி இந்துக் களின் பிள்ளைகள் மத்தியில் திணிப்பதும் சரியல்ல, இந்தக் கல்வி நிலையத்தை ஏராளமான சுதேசி மக்களுக்குப் பயனற்றதாகச் செய்து விடும் அபாயம் இதில் பொதிந்துள்ளது.''

இந்த விஷயத்தில் பம்பாய் அரசாங்கம் மேற்கொண்ட நட வடிக்கைகள் குறித்து இந்திய அரசாங்கம் 1857 ஜனவரி 23 ஆம் தேதியிட்ட 111 ஆம் எண் கடிதத்தில் பின்கண்டவாறு கருத்து வெளி யிட்டிருந்தது:

'இந்தப் பிரச்சினையில் பம்பாய் அரசாங்கம் விவேகத்துடன் நடந்து கொண்டதாகவே அநேகமாக கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபை கருது கிறது. ஆனால் வங்காள ராஜதானியில் எந்த அரசாங்கப் பள்ளியிலும் இத்தகைய பையனுக்கு அனுமதி மறுத்திருக்கப்பட மாட்டாது என்று நான் (அதாவது இந்திய அரசாங்கத்தின் செயலாளர்) கூற விரும்புகிறேன்.''**

ஜாதி விஷயத்தில் நடைமுறையில் கடைப்பிடிக்கப்பட்டு வருவதை விட நாடெங்கும் பள்ளிக்கூடங்களில் குறைந்த அளவில் ஒதுக்கல் கொள்கையைக் கடைபிடிப்பதற்கான எந்த வழிமுறை

---

★ 1856 ஜூலை 21ஆம் தேதி அரசாங்கம் நிறைவேற்றிய தீர்மானம் வருமாறு:

1. கடிதப்போக்குவரத்தில் விவாதிக்கப்பட்ட பிரச்சினை மிகவும் சிக்கலான பிரச்சினை.
2. மனுதாரனான மகர் பையன் பக்கம் கோட்பாட்டளவில் நியாயம் இருக்கிறது என்பதில் ஐயமில்லை; தார்வாரில் தற்போதுள்ள கல்விவசதியை அவன் பயன்படுத்திக் கொள்வ தற்குக் குறுக்கே நிற்கும் தப்பெண்ணங்கள் விரைவில் அகற்றப்படும் என்று அரசாங்கம் நம்புகிறது.
3. ஆனால் பன்னெடுங்காலமாக நடைமுறையிலிருந்துவரும் சம்பிரதாயங்களில் தனியொரு நபருக்காகவோ அல்லது ஒருசில நபர்களுக்காகவோ அதிரடியான முறையில் தலையிடுவது கல்வி லட்சியத்துக்கு மிகப்பெரும் பாதிப்பை ஏற்படுத்தும் என்பதை அரசாங்கம் கவனத்தில் கொள்ளவேண்டியிருக்கிறது. விண்ணப்பதாரருக்கு ஏற்பட்டுள்ள பிரதிகூலமான நிலைமை இந்த அரசாங்கத்திடமிருந்து தோன்றியதல்ல; மாறாக, மனுதாரர் விண்ணப்பித்துக் கொண்டுள்ளபடி அவர் சார்பாக அரசாங்கம் தலையிட்டு முடிவாக அகற்றப்பட வேண்டிய ஒன்று.

(அடுத்த பக்கம் பார்க்க)

களையும் அலட்சியம் செல்வதற்கு இந்த அரசாங்கம் ஒருபோதும் விரும்பாது என்பதை இந்திய அரசாங்கத்துக்கு உத்தரவாதம் அளிக்க வேண்டுமென்று இந்தக் கடிதம் கிடைத்ததும் தீர்மானிக்கப்பட்டது; அரசாங்கப் பள்ளிகளுக்கு மொத்தத்தில் அவப்பெயர் ஏற்பட்டு விடாதபடியும், அவற்றின் பயனாற்றல் பாதிக்கப்படாதபடியும், இந்தப் பள்ளிகள் எந்த நோக்கத்துக்காக ஆரம்பிக்கப்பட்டனவோ அந்த நோக்கம் தோல்வியடையாதபடியும் இதனைச் செய்ய வேண்டும். அரசாங்கப் பள்ளிகளின் பொது உபயோகம் சம்பந்தப் பட்டமட்டில் வங்காளத்தில் கடைப்பிடிக்கப்பட்டுவரும் கோட்பாடு எந்த அளவு நடைமுறையில் செயல்படுத்தப்பட்டு வருகிறது என்பதைக் கண்டறிவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

*11.* வங்காளத்தில் செயல்படுத்தப்பட்டுவந்த நடைமுறை குறித்து விசாரணைகள் மேற்கொள்ளப்பட்டபோது, ''இந்திய அர சாங்கம்'' எண்ணியிருந்ததற்கு மாறாக, அங்கு கீழ்ச்சாதியினரைப் பள்ளிகளில் சேர்த்துக் கொள்ளும் அல்லது சேர்க்கமறுக்கும் விஷ யத்தில் அந்தப் பகுதிகளில் நிலவும் ஸ்தல உணர்வுகளைக் கணக்கி லெடுத்துக் கொண்டு உசிதம்போல் தீர்மானிக்கும் அதிகாரத்தை வங்காள அதிகாரிகள் மாவட்டக் கல்விக்குழுக்களுக்கு வழங்கி யிருப்பது தெரியவந்தது. இதன் விளைவாக தாழ்த்தப்பட்ட வகுப் பினர்கள் நடுத்தெருவில் விடப்பட்டனர்; அரசாங்கம் தனது குடிமக்கள் அனைவரின் நலன் கருதி ஏற்றிவைத்த அறிவுத்தீபத்தின் முன்னால் இந்தப் பரிதாபத்துக்குரிய மக்களை அமரவிடாமல் தீண்டத்தக்க வர்கள் தடுத்து விட்டதே இதற்குக் காரணம்.

*12.* இத்தகைய சூழ்நிலைமைகளில், *1854* ஆம் வருட அறிக்கை யில் உத்தேசிக்கப்பட்ட வெகுஜனக் கல்வி என்பது தாழ்த்தப்பட்ட

---

★★ *1858 ஏப்ரல் 28 ஆம் தேதியிட்ட அறிக்கை எண் 58ல் இயக்குநர்கள் மன்றம் இவ்விஷயம் குறித்துப் பின்கண்ட ஆணையைப் பிறப்பித்தது:-*

*''அரசாங்கக் கல்வி நிலையங்கள் எல்லா வகுப்பினர்களுக்கும் பயன்பட வேண்டும் என்பதே நமது நோக்கம்; அடிப்படையில் ஆரோக்கியமான, முழு நலம் வாய்ந்த ஒரு கோட்பாட்டிலிருந்து நாம் விலகிச் செல்ல முடியாது; இக் கோட்பாட்டைப் பேணிப்பராமரிப்பதே நமது முழுமுதல் கடமையாகும். ஒருசில சந்தர்ப்பங்களில் இந்தக் கோட்பாட்டை நடைமுறைப்படுத்தும்போது மாணக்கர்களில் ஒரு பகுதியினரை விலக்குவது அசாத்தியமல்ல. இத்தகைய கோட்பாட்டைச் செயல்படுத்துவதை ஆட்சேபிப்பவர்கள் தங்கள் பங்களிப்பு களை நிறுத்திக் கொண்டு, வேறுபட்டதொரு அடிப்படையில் பள்ளிக்கூடங்களை நிறுவதற்கு தங்கள் நிதி உதவிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதை இங்கு குறிப்பிட விரும்புகிறோம்."*

வகுப்பினர்களைத் தவிர நடைமுறையில் மற்றெல்லோருக்கும் கிட்டிற்று. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கல்விகற்பதற்கு இருந்து வந்த தடை 1854ல் அகற்றப்பட்டதானது ஒருவெறும் சம்பிரதாயப்பூர்வமான சடங்காகவே அமைந்திருந்தது. ஏனென்றால், கல்வி கற்பதிலிருந்து எவரையும் விலக்கி வைக்கக்கூடாது என்ற கோட்பாட்டை அரசாங்கம் உறுதி செய்த போதிலும், அந்தக் கோட்பாட்டை நடைமுறையில் செயல்படுத்துவது மிகுந்த கவனத்தோடு தவிர்க்கப்பட்டது; எனவே, இந்தத் தடை முன்போலவே நடைமுறையில் நீடித்தது என்றே கூறவேண்டும்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குக் கல்வி போதிக்கும் பொறுப்பை ஏற்கும் ஒரே அமைப்பினராக கிறித்தவ சமயப் பரப்பாளர்களே திகழ்ந்தனர். மவுண்ட் ஸ்டூவர்ட் எல்பின்ஸ்டனின் சொற்களில் கூறுவதானால் ''மிகவும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களையே மிகச்சிறந்த மாணக்கர்களாக'' அவர்கள் கண்டனர். ஆனால் சமய விவகாரங்களில் நடுநிலைமை பூண அரசாங்கம் உறுதிகொண்டிருந்தது. மிஷினரிப் பள்ளிகளுக்கு மானியங்கள் வழங்குவதை 1854 ஆம் வருடக்கல்வி அறிக்கை தடைசெய்யவில்லை என்ற போதிலும் இந்த நடுநிலைமை காரணமாக மிஷினரிப் பள்ளிகளை அரசாங்கம் ஆதரிக்க முடியாத நிலையில் இருந்தது; எனவே, இந்தக் காலக் கட்டத்தின் முற்பகுதியில் இந்த ராஜதானியில் எந்த மிஷினரிப் பள்ளிக்கும் மானியம் ஏதும் வழங்கப்படவில்லை.

13. இந்த சிக்கலிலிருந்து, முட்டுச் சந்திலிருந்து மீள்வதற்கு அரசாங்கம் இரண்டு நடவடிக்கைகளை மேற்கொண்டது: 1. கீழ்ச் சாதிக் குழந்தைகளுக்காக தனியாக அரசாங்கப் பள்ளிகளை நிறுவுவது; 2. சமயப்பரப்பு அமைப்புகள் அவற்றின் கல்விப் பணியை தங்கு தடையின்றி மேற்கோள்வதற்கு உதவித் தொகை வழங்குவது சம்பந்தமான விதிகளைத் தளர்த்தி அவற்றை விசேடமாக ஊக்குவிப்பது. இந்த இரண்டு நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டிருக்கவில்லைஎன்றால் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கல்வி எத்தகைய பலன்களையும் அளித்திருக்காது. 1882 ல் ஹன்டர் கமிஷன் சமர்ப்பித்த அறிக்கையின்படி அந்நாட்களில் அது மிக மிக கீழ்நிலையில் இருந்தது.

## III - 1882 முதல் 1923 வரை

14. 1882 ஆம் ஆண்டுக்குப் பிறகு 1923 ஆம் ஆண்டுதான் பம்பாய் ராஜதானியின் கல்வி வரலாற்றில் அடுத்த திரும்புகட்டமாகும்.

அந்த ஆண்டில் தொடக்கக் கல்வி மாகாண அரசாங்கங்களின் கட்டுப் பாட்டிலிருந்து தலத்தாபன அமைப்புகளின் கட்டுப்பாட்டிற்கு மாற்றப் பட்டது. ஆதலால் 1923 ஆம் ஆண்டில் இருந்த நிலையைக் கூர்ந்து ஆராய்வது இங்கு உகந்ததாக இருக்கும். 1923ல் பம்பாய் ராஜதானியில் கல்வித்துறையில் பல்வேறு சமூகத்தினர் கண்டிருந்த முன்னேற்றத்தைப் பின்கண்ட அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்:-

| *ராஜதானியில் மக்கள் வகைப் பிரிவினர் | மக்கட் தொகையின் படி நிலை | கல்வி விஷயத்தில் படிநிலை | | |
|---|---|---|---|---|
| | | தொடக்கக் கல்வி | உயர்நிலைக் கல்வி | கல்லூரிக் கல்வி |
| முன்னேற்றமடைந்த இந்துக்கள் | 4 ஆவது | 1 ஆவது | 1 ஆவது | 1 ஆவது |
| நடுத்தர இந்துக்கள் | 1 ஆவது | 3 ஆவது | 3 ஆவது | 3 ஆவது |
| பின்தங்கிய இந்துக்கள் | 2 ஆவது | 4ஆவது | 4 ஆவது | 4 ஆவது |
| முகமதியர்கள் | 3 ஆவது | 2 ஆவது | 2 ஆவது | 2 ஆவது |

15. கல்வித் துறையில் இந்தப் பல்வேறு சமூகத்தினர் அடைந் துள்ள முன்னேற்றத்தில் மிகுந்த ஏற்றத்தாழ்வு நிலவுவதை இந்த அட்டவணையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இந்த மக்கட் பிரி வினர் மக்கட் தொகையில் அவர்கள் வகிக்கும் இடத்தையும், கல்வி முன்னேற்றத்தில் அவர்கள் பெற்றுள்ள இடத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது நாம் என்ன காண்கிறோம்? மக்கட்தொகையில் முதல் இடம் வகிக்கும் நடுத்தரப் பிரிவினர் கல்லூரிக் கல்வியில் மூன்றாவது இடத்தையும், உயர்நிலைக் கல்வியில் மூன்றாவது இடத் தையும், தொடக்கக்கல்வியில் மூன்றாவது இடத்தையும் வகிப் பதைப் பார்க்கிறோம். மக்கட் தொகையில் இரண்டாவது இடம் பெற்றுள்ள தாழ்த்தப்பட்டவகுப்பினர் கல்லூரிக்கல்வியில் நான் காவது இடத்தையும் அதாவது வேறுவிதமாகச் சொன்னால் கடைசி இடத்தையும், அதேபோன்று உயர்நிலைக் கல்வியில் கடைசி இடத் தையும், தொடக்கக் கல்வியிலும் கடைசி இடத்தையும் பெற்றுள் ளனர். மக்கட் தொகையில் மூன்றாவது இடம்வகிக்கும் முகமதி யர்கள் கல்லூரிக் கல்வியிலும், உயர்நிலைக் கல்வியிலும், துவக்கக் கல்வியிலும் இரண்டாவது இடம் வகிக்கின்றனர்; அதேசமயம் மக்கட் தொகையில் நான்காவது இடத்தில் உள்ள ''முன்னேற்ற

மடைந்த இந்துக்கள்'' கல்லூரிக் கல்வியிலும் சரி, உயர்நிலைக் கல்வியிலும் சரி, தொடக்கக் கல்வியிலும் சரி முதல் இடத்தைப் பெற்றுள்ளனர். இவற்றை எல்லாம் கொண்டுபார்க்கும்போது, 1882 ஆம் ஆண்டில் என்ன நிலை இருந்ததோ அதில் முன்னேற்றம் ஏதும் இல்லை என்பதை நாம் நிச்சயமாகக் கூறமுடியும்.

16. 1923-24 ஆம் ஆண்டுக்கு பம்பாய் ராஜதானியின் பொதுக் கல்வி இயக்குநர் சமர்ப்பித்த மேற்கண்ட அறிக்கை பல்வேறு வகுப்பினரின் கல்வி முன்னேற்றத்தில் காணப்படும் ஏற்றத் தாழ்வை மட்டுமே வெளிப்படுத்துகிறது. பல்வேறு வகுப்பினரிடையே கல்வியின் தரத்தில் நிலவும் ஏற்றத்தாழ்வு மிக அதிகமாக இல்லாதபட்சத்தில் அது ஒரு மிக சிறிய விஷயமேயாகும். இந்த ஏற்றத்தாழ்வின் பரிமாணத்தைத் தெரிந்து கொண்டாலொழிய நாம் எந்த முக்கிய முடிவுக்கும் வரமுடியாது. இந்தக் கண்ணோட்டத்திலிருந்து இந்த விஷயத்தைத் தெளிவாக்கிக்கொள்ளும் பொருட்டு பின்கண்ட அட்டவணை முன்வைக்கப்படுகிறது:-

அட்டவணை

| மக்கட் தொகை பிரிவினர் | தொடக்கக் கல்வி, இப்பிரிவைச் சேர்ந்த மக்கட் தொகையில் ஒவ்வொரு 1000 பேருக்கான மாணவர்கள் விகிதம் | உயர்நிலைக் கல்வி, இப்பிரிவைச் சேர்ந்த மக்கட் தொகையில் ஒவ்வொரு 100000 பேருக்கான மாணவர்கள் விகிதம் | கல்லூரிக் கல்வி, இப்பிரிவைச் சேர்ந்த மக்கட் தொகையில் ஒவ்வொரு 200000 பேருக்கான மாணவர்கள் விகிதம் |
|---|---|---|---|
| முன்னேற்றமடைந்த இந்துக்கள் ..... | 119 | 3,000 | 1,000 |
| முகமதியர்கள் ..... | 92 | 500 | 52 |
| நடுத்தர வகுப்பினர் ..... | 38 | 140 | 24 |
| பின்தங்கிய வகுப்பினர் ..... | 18 | 14 | இல்லை (அல்லது அப்படியே இருந்தாலும் ஒருவர் மட்டும்) |

17. மேற்கண்ட புள்ளிவிவரங்கள் தொடக்கக் கல்வி, உயர் நிலைக்கல்வி, கல்லூரிக்கல்வி ஆகியவற்றில் ஒவ்வொரு சமூகமும் மற்ற சமூகத்தைவிட எந்த அளவுக்கு முன்னேறியுள்ளது என்பதைக் காட்டுகின்றன. இந்த ராஜதானியில் கல்வி விஷயத்தில் பல்வேறு சமூகங்களிடையே நிலவும் ஏற்றத்தாழ்வின் வீச்சை வெளிப்படுத்து கின்றன; இதுவிஷயத்தில் சில சமூகங்களின் நிலைமை மிகவும் அதிர்ச்சியும் வேதனையுமளிப்பதாக இருப்பதையும் அவை புலப் படுத்துகின்றன. மேலே தரப்பட்டிருக்கும் புள்ளிவிவரங்களி லிருந்து இரண்டு விஷயங்கள் சிறிதும் சர்ச்சைக்கிடமற்ற முறையில் மிக முனைப்பாக வெளிப்படுகின்றன: 1. இந்த ராஜதானியில் பிற்பட்ட வகுப்பினரின் கல்வி நிலைமை மிகவும் வருந்தத்தக்கதாக, துயரந் தரத்தக்கதாக இருக்கிறது. மக்கட்தொகையில் அவர்கள் இரண்டாவது இடத்தை வகிக்கின்றனர். ஆனால் கல்வித்துறையிலோ அவர்கள் கடைசி இடத்தை மட்டுமன்றி, மிகமிக அற்பமான இடத்தைப் பெற் றுள்ளனர்; (2) அதேசமயம் இந்த ராஜதானியைச் சேர்ந்த முகமதி யர்கள் கல்வித் துறையில் தாண்டுகால் போட்டு முன்னேறியுள்ளனர்; குறுகிய 30 ஆண்டுக் காலத்திற்குள் அவர்கள் நடுத்தரவகுப்பினர், பின்தங்கிய வகுப்பினர் போன்ற இதர வகுப்பினரை வெகுதூரம் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னேறியிருப்பதோடு, பிராமணர்களை யும் அவர்களை ஒத்த சாதியினரையும் நெருங்கி வந்துள்ளனர்.

18. இதற்குக் காரணம் என்ன? அரசாங்கம் கடைப்பிடிக்கும் சமத்துவமற்ற, பாரபட்சமான கொள்கைதான் இதற்குக் காரணம் என்பதே இந்த நிரந்தரமான கேள்விக்கு நமது பதிலாகும். இரண்டு வகுப்பினர் எவ்விதம் பாரபட்சமான முறையில் நடத்தப்படுகின்றனர் என்பதை கல்வி குறித்த ஐந்தாண்டு அறிக்கையில் காணப்படும் பின்வரும் பகுதிகளிலிருந்து தெள்ளத்தெளிவாகத் தெரிந்து கொள்ள லாம். கல்விவிஷயத்தில் முகமதியர்கள் எவ்வாறு நடத்தப்படு கின்றனர் என்பதைப் பொறுத்தவரையில், மூன்றாவது ஐந்தாண்டு அறிக்கையில்(1892-96) இடம்பெற்றிருக்கும் பின்கண்ட கருத்துகள் குறிப்பிடத்தக்கவை:

> "முதலாவதாக ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு முகமதிய அதிகாரி துணை ஆய்வாளராக அல்லது உதவி ஆய்வாளராக நியமிக்கப்படு கிறார்; கைரா, ஷோலாப்பூர், ஹைதராபாத் ஆகிய இடங்களில் மூன்று முகமதிய பட்டதாரிகள் ஆய்வாளர்களாக இருக்கின்றனர்; நான்காவது ஒரு பட்டதாரி வருவாய்த்துறையில் உயர் பதவிக்கு நியமிக்கப்பட்டிருக் கிறார். இவ்வாறு முகமதிய மக்களுடன் தொடர்புடைய முஸ்லிம் அதிகாரி இல்லாத மாவட்டமே இல்லை எனலாம்; அதுமட்டுமல்ல, பம்பாய்,

கராச்சி, ஜுனாகத் (கத்தியவாரிலுள்ள ஒரு முகமதிய சமஸ்தானம்) ஆகிய இடங்களில் குறைந்த கட்டணங்களில் முகமதியர்களின் குழந்தைகள் படிப்பதற்கு உயர்நிலைப் பள்ளிகளைத் தொடங்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன; இதர இடங்களில் அஞ்சுமான்கள்(முகமதிய சங்கங்கள்) சிறு பள்ளிக்கூடங்களைத் திறந்து நடத்தி வருகின்றன. கல்வி இலாகா முகமதியர்களுக்காகப் பல சலுகைகளை அளித்துள்ளது; விசேட வகுப்புகளை நடத்தி வருகிறது; குறிப்பிட்ட சில இடங்களில் தனிப் பள்ளிக்கூடங்களைப் பராமரித்து வருகிறது; மாகாண மற்றும் ஸ்தல ஸ்தாபன உதவிச்சம்பளங்களில் மூன்றிலொரு பங்கை அவர்களுக்கு ஒதுக்கியுள்ளது. இதுவன்றி, கான் பகதூர் காஸி ஷாபுத்தீன் (ஒருசமயம் பரோடாவில் திவானாக இருந்தவர்) நிறுவிய விசேட உபகாரச் சம்பளங்கள் உள்ளன; சிந்துவில் கைர்பூர் சமஸ்தானத்தின் வழித்தோன்றல் கலைக் கல்லூரியில் படிக்கும் மாணவர்களின் உணவுக்கான மானியங்கள் அளித்து வருகிறார். (இது மாதம் ரூ.25 மதிப்புடையது என்றாலும் சென்ற ஆண்டு இதனை நிரப்புவதற்கு மிகவும் சிரமப்பட்டு விட்டேன்). துவக்கப் பள்ளிகளில் கட்டணங்கள் விஷயத்தில் முகமதியர்களுக்குப் பெரிதும் சலுகைக் காட்டப்படுகிறது. பயிற்சிக் கல்லூரிகளில் சேரும்படி அவர்கள் வெகுவாக ஊக்குவிக்கப்பட்டிருக்கின்றனர்; இதன் பொருட்டு விசேட விதிகளின் மூலம் அவர்களுக்கு இந்துக்களை விட மிக எளிதான பிரவேசத் தேர்வுகள் நடத்தப்படுகின்றன; பம்பாயிலுள்ள கூட்டுப்பள்ளிகள் குழு ஒரு முகமதிய துணை ஆய்வாளரை நியமித்து, முகமதியர் கல்வி பயில்வதை ஊக்குவிப்பதற்கு அண்மைக்காலத்தில் விசேட முயற்சிகள் மேற்கொண்டுள்ளது.''

19. ஐந்தாவது ஐந்தாண்டு அறிக்கையில் (1902-1907) தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களின் கல்வி சம்பந்தமாக தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துக்களை இதனுடன் ஒப்பிட்டுப் பாருங்கள்:

''959. பம்பாய் - பம்பாயின் மத்திய வட்டாரத்தில் கீழ்ச்சாதிக் குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் கட்டணங்கள் ஏதுமின்றி இலவசமாக அனுமதிக்கப்படுகின்றனர்; புத்தகங்கள், கற்பலகைகள் முதலியவற்றை அவர்கள் இலவசமாகப் பெறுகின்றனர். கத்தியவாரில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த மூன்று குழந்தைகள் மட்டுமே கல்வி கற்கின்றனர். தெற்கு வட்டாரத்தில் இவர்களுக்காக 72 விசேடப் பள்ளிக்கூடங்கள் அல்லது வகுப்புகள் நடத்தப்படுகின்றன; இவற்றில் பெரும்பாலானவற்றில் உரிய தகுதியற்ற ஆசிரியர்களே பாடம் போதித்து வருகின்றனர்.''

20. இவ்வாறு தாழ்த்தப்பட்ட இனங்களைச் சேர்ந்த குழந்தைகள் பாரபட்சமான முறையில் நடத்தப்படுவதற்கு ஹன்டர் கமிஷனின் பரிந்துரைகளே மூலகாரணம். ஹன்டர் கமிஷன் முகமதியர்கள் விஷயத்தில் எவ்விதம் தனிப் பற்றோடு நடந்து கொண்டிருக்கிறது என்பது அவர்கள் சம்பந்தமாக அது செய்துள்ள பரிந்துரை

களையும் அதேசமயம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் குறித்து அது செய்துள்ள பரிந்துரைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் தெள்ளத் தெளிவாகப் புலனாகும். முகமதியர்கள் சம்பந்தமாக கமிஷன் பதினேழு பரிந்துரைகளை முன்மொழிந்துள்ளது; அவற்றில் பின்கண்டவை குறிப் பிடத்தக்கவை:

1. ஸ்தல, நகரசபை, மாகாண நிதி உதவிகளைக் கொண்டு முகமதி யர்களின் கல்விக்கு தனிஊக்கமும் உத்வேகமும் அளிப்பதை ஒரு சட்ட ரீதியான கடமையாகக் கருதப்பட வேண்டும்.

7. முகமதியர்கள் திருத்தமான ஆங்கில மொழி நடையில் உயர் ஆங்கிலக் கல்வி கற்பதற்கு அந்த சமூகத்துக்கு விசேட உதவி தேவைப் படுகிறது; இவ்விஷயத்தில் தாராள மனப்பான்மையுடன் அவர்களை ஊக்குவிப்பது அவசியம்.

8. எங்கெல்லாம் அவசியமோ அங்கெல்லாம் முகமதியர்களுக்கு விசேட உபகாரச்சம்பளங்கள் படிப்படியாக வழங்கும் முறை கைக் கொள்ளப்படவேண்டும்; இந்த உபகாரச் சம்பளங்கள் அ. தொடக்கப் பள்ளிகளிலும், குறிப்பிட்ட காலத்திற்கு நடுநிலைப் பள்ளிகளிலும் ஆ. நடுநிலைப் பள்ளிகளிலும் குறிப்பிட்ட காலத்துக்கு உயர்நிலைப் பள்ளி களிலும்; இ. மெட்ரிக்குலேஷன் மற்றும் இளங்கலைப் பட்டப்படிப்புத் தேர்வுகளது முடிவுகளின் அடிப்படையிலும் வழங்கப்பட வேண்டும்.

9. பொதுநிதியிலிருந்து பராமரிக்கப்படும் பள்ளிக்கூடங்களில் எல்லா வகுப்புகளிலும் கட்டணமின்றிப் படிப்பதற்குத் தகுதிபெற்ற மாணவர்களின் எண்ணிக்கையில் ஒரு குறிப்பிட்ட விகிதாசாரம் முகமதிய மாணவர்களுக்காக ஒதுக்கப்பட வேண்டும்.

10. முகமதியர்களின் நலன்களுக்காக அரசாங்க நிர்வாகத்தின்கீழ் கல்விமானியங்கள் நிறுவப்பட்டுள்ள இடங்களில் ஒவ்வொரு மானியத் திலிருந்தும் கிட்டும் பணம் முற்றிலும் முகமதியர்களின் கல்வி முன்னேற் றத்திற்காகச் செலவிடப்படவேண்டும்.

11. தனிநபர்கள் அல்லது அமைப்புகளின் நிர்வாகத்தின் கீழ் முகமதியர்கள் பணியாற்றும் இடங்களில் பணித்துறை உதவித் தொகை திட்டத்தின்படி ஆங்கிலம் போதிக்கும் பள்ளிக்கூடங்களை அல்லது கல்லூரிகளை அமைத்துக்கொள்ளுவதற்கு அவர்களுக்குத் தாரளமாக நிதி உதவி அளிக்கப்பட வேண்டும்.

12. முகமதிய ஆசிரியர்களைப் பயிற்றுவிப்பதற்கான ஆசிரியப் பயிற்சிப் பள்ளிக் கூடங்களை அல்லது வகுப்புகளை அவசியமான இடங்களில் நிறுவ வேண்டும்.

16. முகமதியர்களுக்கான தொடக்கப் பள்ளிக்கூடங்களை மேற்பார்வை செய்வதற்கு இதுவரை இல்லாத அளவுக்கு அதிக எண்ணிக்கையில் முகமதிய ஆய்வு அதிகாரிகள் வேலைக்கமர்த்தப்பட வேண்டும்.

17. கல்விகற்ற முகமதியர்களுக்கும் ஏனையோருக்கும் இடையே எந்த விகிதாசாரத்தில் மானியம் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்னும் விஷயம் ஸ்தல தாபன அரசாங்கங்களின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட வேண்டும்.

21. ஹன்டர் கமிஷன் முன்வைத்துள்ள இந்தப் பரிந்துரைகளில் ஒவ்வொன்றும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களின் நலன்களுக்கும் இன்றியமையாததாகும். ஆனால் பின்தங்கிய வகுப்பினரின் நலன்களுக்காக கமிஷன் அளித்துள்ள பரிந்துரைகளை நுணுகி ஆராயும் போது, பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் கல்வி அரசாங்க நிதிகளிலிருந்து மேற்கொள்ளப்பட வேண்டிய ஒரு நடவடிக்கை என்று கூறுவதையோ, உபகாரச் சம்பளங்கள் அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டுமென்று வலியுறுத்துவதையோ, அவர்களது கல்வித் தேவைகளைக் கவனித்துக்கொள்ள விசேடக் கண்காணிப்பு அலுவலர்கள் நியமிக்கப்பட வேண்டும் அல்லது அவர்களிடையே கல்வியை ஊக்குவிக்கும் வகையில் பொதுமக்கள் ஆதரவு அளிக்கப்பட வேண்டும் என்று எடுத்துரைப்பதையோ அவற்றில் நாம் காணவில்லை. மாறாக, கமிஷன் கூறுவதெல்லாம் இதுதான்: 1. ''வெறும் ஜாதி அடிப்படையில் எந்தப் பையனுக்கும் ஓர் அரசாங்கக் கல்லூரியிலோ அல்லது பள்ளியிலோ அனுமதி மறுக்கப்படலாகாது'' என்ற கோட்பாடு இப்போது மீண்டும் ஊர்ஜிதப்படுத்தப்பட வேண்டும்; எந்தக் குறிப்பிட்ட இனங்களுக்கும் ஒதுக்கப்படாமல் முற்றிலும், மாகாண, நகரசபை அல்லது ஸ்தல ஸ்தாபன போன்றவற்றின் பொதுநிதிகளிலிருந்து பராமரிக்கப்படும் ஒவ்வொரு கல்வி நிறுவன விஷயத்திலும் இந்தக் கோட்பாட்டை உரிய முன்னெச்சரிக்கையோடு செயல்படுத்த வேண்டும். 2. தனிப் பள்ளிக்கூடங்களையோ அல்லது வகுப்புகளையோ அமைப்பதற்கு போதுமான எண்ணிக்கையில் கீழ்ச்சாதிக் குழந்தைகள் இருக்கும் இடங்களிலோ அல்லது ஏற்கெனவே பொது நிதிகளிலிருந்து நடத்தப்படும் பள்ளிக்கூடங்கள் இவர்களது கல்விக்குப் போதிய வசதி செய்து தராத இடங்களிலோ கீழ்ச்சாதிக் குழந்தைகளுக்கு விசேடப் பள்ளிகளை அல்லது வகுப்புகளைத் தொடங்குவதை தாராளமாக ஊக்குவிக்க வேண்டும்.'

'முகமதியர்கள் விஷயத்தில் கமிஷன் செய்துள்ள பரிந்துரைகள் உண்மையில் முகமதியர்களின் நலன்களைவிட பிற்பட்ட வகுப்பினர் களின் நலன்களுக்கு மிக அவசியமானவையேயாகும்.'' ''மேற்கல்வி விஷயத்தில் தவிர முகமதியர்களின் பின்தங்கிய நிலையை மிகைப் படுத்திக் காட்டும் ஒருபோக்கு இருந்து வந்திருக்கிறது என்பதை *1871-73* ஆம் ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் மெய்ப்பிக்கின்றன'' என்பதை முகமதியர்களின்பால் தீவிர அனு தாபம் கொண்ட ஒருவரைத் தலைவராகக் கொண்ட ஹன்டர் கமிஷன்கூட ஒப்புக்கொள்ள வேண்டியதேற்பட்டது. இவ்வாறெல்லாம் இருந்தும் ஹன்டர் கமிஷன் செய்த பரிந்துரைகள் மேலே கூறிய இரண்டுமட்டும்தான். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்பந்தமாக கமிஷன் முன்மொழிந்த இந்த இரண்டு பரிந்துரைகள்கூட அதிக நன்மை செய்யும் நோக்கம் கொண்டவை அல்ல; பெரும் தோல்வியில் முடியக்கூடியவை. கமிஷன் குறிப்பிட்டுள்ள கோட்பாடு ஐந்தா வது தடவையாக மீண்டும் உறுதி செய்யப்பட்ட போதிலும் அதில் பயன்ஏதும் இல்லை. ஏனென்றால் கமிஷன் புகுத்தியுள்ள நிபந்தனையின்படி இந்தக் கோட்பாடு நடைமுறையில் செயல் படுத்துவது தவிர்க்கப்படுகிறது. இதேபோன்று, தாழ்த்தப்பட்ட வகுப் பினர்களுக்கு தனிப் பள்ளிக் கூடங்களைத் திறப்பது என்பது சாத்திய மல்ல; இது வீண்முயற்சிதான். துவக்கக் கல்வி அளிப்பதை ஒரு சுமையாக ஏற்றுள்ள ஓர் அரசாங்கத்துக்கு கூடுதல் செலவு பிடிக்கக் கூடிய தனிப்பள்ளிக்கூடங்களைத் தொடங்குவது ஏற்புடையதாக இருக்காது. தவிரவும், பிற்பட்ட வகுப்பினர்கள் பெரும் எண்ணிக்கை யில் இருக்கும் இடங்களில்தான் இத்தகைய தனிப் பள்ளிக்கூடங் களைத் தொடங்க வேண்டும் என்ற நிபந்தனையேகூட கமிஷனின் பரிந்துரைகளைச் செல்லாக்காசாக்கி விடுகின்றன; பயனற்றதாக்கி விடுகின்றன; ஏனென்றால் கிராமப்புறங்களில் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் பின்தங்கிய வகுப்பினர்கள் பெரும் எண்ணிக்கையில் வசிப்பது மிகவும் அரிது.

22. பின்தங்கிய வகுப்பினர்களின் கல்வித்தேவைகள் விஷ யத்தில் ஹன்டர் கமிஷன் ஏன் இவ்வளவு குறைந்தகவனம் செலுத்து கிறது, ஏன் இப்படிப் பராமுகமாக இருக்கிறது என்பதைப் புரிந்து

கொள்வது கடினமாக இருக்கிறது. முகமதியர்கள் விஷயத்தில் தாராள மனோபாவம் காட்டுவது அவசியம் என்று கருதும் கமிஷன் கல்வி, செல்வம், செல்வாக்கு, சமூக அந்தஸ்து போன்றவற்றில் பின்தங்கிய வகுப்பினர்கள் முகமதியர்களுக்கு வெகுதூரம் பின்னடைந்திருக்கின் றனர் என்பதையாவது குறைந்தபட்சம் தெரிந்துகொண்டிருப்பது நியாயம். ஹன்டர் கமிஷன் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை எங்கு தள்ளியதோ அங்குதான் அவர்கள் இன்னமும் இருந்து வருகின்றனர்; அரசாங்கம் அவர்கள்பால் எத்தகைய அக்கறையும் எடுத்துக் கொள்ள வில்லை. இந்திய அரசாங்கக் கல்வி இலாகாவின் 1923 பிப்ரவரி 21 ஆம் தேதியிட்ட தீர்மானத்தை இந்தப் புறக்கணிப்பு மனோபாவத் துக்கு ஓர் உதாரணமாகக் கூறலாம். இந்திய அரசாங்கத்தின் மிக முக்கியமான தீர்மானங்களில் இதுவும் ஒன்றாகும். பேரரசு வருவாய் களிலிருந்து நிதி கிடைக்கும்போது பல்வேறு மாகாணங்களில் கல்வி வசதியைப் பெருக்குவதற்கு ஸ்தல அரசாங்களுக்குப் பெருமளவில் மானியங்கள் அளித்து உதவ இத்தீர்மானத்தின்படி இந்திய அர சாங்கம் முடிவு செய்தது. ''குடிவாழ்வுரிமையுள்ள சமூகத்தினரதும், முகமதிய சமூகத்தினரதும் கல்வித் தேவைகளை முக்கியமாக அவர்கள் மாகாண அரசாங்கங்களுக்குச் சுட்டிக்காட்டி இருந்தனர். ஆனால் பின்தங்கிய வகுப்பினர்களைப் பற்றி அந்தத் தீர்மானத் தில் அவர்கள் ஒரு வார்த்தைகூடக் குறிப்பிடவில்லை. பம்பாய் அர சாங்கம் உடனே இந்த யோசனையை ஏற்றுக்கொண்டது; முகமதியர் களிடையே கல்வியை வளர்ப்பதற்கான பரிந்துரைகளை முன்மொழி வதற்கு 1913ல் ஒரு முகமதியக் கல்விக் குழுவை நியமித்தது. பிற் பட்டவர்கள் விஷயத்தில் அரசாங்கம் காட்டிய மிகவும் கண்டனத் திற்குரிய இந்தப் புறக்கணிப்பு குறித்து ஒருவர் மிகுந்த சீற்றம் கொள்ள எல்லா நியாயமுமுண்டு; அதுவும் ஜனவரி 6 ஆம் தேதி கல்கத்தாப் பல்கலைக்கழகம் வாசித்தளித்த வரவேற்புரைக்குப் பதிலளித்து மாட்சிமை தங்கிய பேரரசர் பேசும்போது அளித்த வாக்குறுதிக்கு இணங்க பெறப்பட்டவையே 1913 ஆம் ஆண்டுக்குப் பிறகு இந்திய அரசாங்கம் வழங்கிய பெரும் மானியங்கள் என்பதை அறியும்போது இந்த உளக் கொதிப்பு மேலும் அதிகரிக்கிறது. அன்றைய தினம் பேரரசர் பின்கண்டவாறு குறிப்பிட்டார்:

> ''நாடு முழுவதும் வலைப் பின்னல்போல் ஏராளமான பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் தோன்ற வேண்டும் என் பதும், தங்களது தொழில் துறைகளையும், வேளாண்மையை யும், இதர வாழ்க்கைத்தொழில்களையும் நடத்தக்கூடிய விசு

வாசமும், நற்குணங்களும் கொண்ட பயன்மிக்க குடிமக்கள் இந்தக் கல்வி நிலையங்களிலிருந்து உருவாக வேண்டும் என்பதும் என் விருப்பம். மேலும் அறிவு பெருகுவதன் மூலம் எனது இந்தியக் குடிமக்களின் இல்லங்கள் ஒளி துலங்கப் பொலிவுற வேண்டும். அவர்களது உழைப்பு இனிமையும் இன்னலமும் மிக்கதாகத் திகழ வேண்டும், அவர்கள் உயரிய சிந்தனையாயற்றலும், வாய்ப்பு வளங்களும், ஆரோக் கியம் பெற்று மிளிர வேண்டும் என்பதும் எனது ஆசையாகும்.''

# IV

*பிரிட்டிஷ் அரசாங்கத்தின்கீழ் சமூக சீர்திருத்தத்தின் நிலை என்ன?*

மிகவும் பிரபலமானவரும், முற்போக்கு மனோபாவம் கொண்ட இந்துவுமான ராஜா சர் டி. மாதவராவ் பின்கண்டவாறு கூறினார்:

''நீண்ட நெடுங்காலம் வாழும் ஒருவர், எதையும் நுணுகிக் காணும் ஒருவர், சீர்தூக்கிச் சிந்திக்கும் ஆற்றலுடைய ஒருவர் இந்து சமூகத்தைப் போல் அரசியல் தீமைகளை விடவும் தானே தன்மீது வருவித்துக் கொண்ட, தீமைகளினால் - எனவே இவை தவிர்க்கப்படக்கூடிய தீமைகளே யாகும் - பெரிதும் அவதிப்படும் வேறொரு சமூகத்தை இந்த உலகில் காண முடியாது என்பதை ஆழமாக உணர்கிறார்.''

இந்த ஒப்புநோக்கு ஆய்வு ஒருபுறமிருக்க, இந்து சமூகம் வேறு எந்த சமூக்த்தை விடவும் சமூகக்கேடுகளால் வெகுவாகப் பாதிக் கப்படுகிறது, துன்புறுகிறது என்பதில் ஐயம் ஏதும் இருக்க முடியாது.

மெய்யார்வம் கொண்ட சமூக சீர்திருத்தவாதிகளில் தகை யார்ந்த, மதிப்பிற்குரிய மற்றொருவ்ர் மகாதேவ் கோவிந்த் ரானடே ஆவார். அவர் மற்றொரு, மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த கருத்தை வெளியிட்டார். இந்து சமூகத்தின் வேறொரு அம்சத்தை வலியுறுத்தி அவர் பின்கண்டவாறு கூறினார்:

''வெறும் சூழ்நிலைமைகளை மட்டும் கருத்திற் கொண்டோ அல்லது லாபநஷ்டங்களைக் கணக்கிட்டோ மட்டுமே சமூக சீர்திருத்தங்களைச் செயல்படுத்தும்படி நம்முடையது போன்ற ஒரு சமூகத்தை அதிலும் குறிப்பாக காலகாலமாக பழம் பழக்கவழக்கங்களில், அதிகார ஆணையில் கட்டுண்டு

கிடக்கிற ஒரு சமூகத்தைத் தூண்டி ஊக்குவிக்கமுடியாது. நம்முடைய சில பழக்கவழக்கங்கள் தீங்கு பயப்பவை என்பதை நமது மக்கள் உண்மையி லேயே உணர்ந்துள்ளனர்; ஆனால் இந்தத் தீங்கு உலகியல் சார்புடைய தாதலால் தெய்வக் கட்டளைகளை மீறுவதை அது நியாயப்படுத்தவில்லை; ஏனென்றால் இத்தகைய மீறலுக்குக் கடுமையான தண்டனை காத்திருக் கிறது என்று அவர்கள் கருதுகின்றனர். உண்மை என்னவென்றால் பழமை யில் ஊறிப்போன சமூகம் தனது ஜீவசக்தியை இழந்துவிட்டது; அது எத்தகைய சீர்திருத்தத்தையும் தொடங்கிவைக்காது, அதற்கு ஆதரவும் அளிக்காது.''

வேறுவிதமாகச் சொன்னால் எல்லாச் சமூகத் தீமைகளும், கேடுகளும் சமயத்தை ஆதார அடிப்படையாகக் கொண்டவை; அதிலிருந்து ஊற்றெடுப்பவை. ஓர் இந்து ஆணும் சரி, பெண்ணும் சரி எதைச் செய்தாலும் அதை ஒரு சமயச் சடங்காகவே செய்கின்றனர். ஓர் இந்து சமய உணர்வுடனேயே உணவு அருந்துகிறான், சமய உணர்வுடனேயே நீராடுகிறான், சமய உணர்வுடனேயே உடை உடுத்துகிறான், சமய உணர்வுடனேயே பிறக்கிறான், சமய உணர் வுடனேயே திருமணம் செய்து கொள்கிறான், அதேபோல் சமய உணர்வுடனேயே சிதையில் வைத்து எரிக்கப்படுகிறான். அவனுடைய செயல்கள் அனைத்தும் மதசார்புடைய செயல்களாக அமைந் துள்ளன. உலகியல் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது அவை என்னதான் தீங்கானவையாக இருந்தாலும் அவனுக்கு அவை பாவ மானவை அல்ல; பழியார்ந்தவை அல்ல, ஏனென்றால் அவை அவனது சமயத்தின் ஒப்புதல் பெற்றவை, அதன் இசைவாணைக்கு உட்பட்டவை. எவராவது ஒருவர் ஓர் இந்துவின் மீது அவர் பாவம் இழைத்ததாகக் குற்றம்சாட்டினால், 'நான் பாவம் செய்கிறேன் என்றால், சமயநெறிக்கு இணங்கவே அந்தப் பாவத்தைச் செய் கிறேன்' என்பதே இதற்கு அவரது பதிலாக இருக்கிறது.

சமுதாயம் எப்போதுமே பழமைப் பற்றுதலுடையதாக, மாறுதல் விரும்பாததாக இருந்து வருகிறது. நிர்ப்பந்திக்கப்பட்டா லொழிய அது மாறுவதில்லை; அந்த மாறுதலும்கூட மிக மெது வாகவே நடைபெறுகிறது. மாறுதல் தொடங்கும்போது பழமைக்கும் புதுமைக்கும் இடையே எப்போதும் போராட்டம் நடைபெறுகிறது; இந்தப் போராட்டத்தில் புதுமை ஒழித்துக்கட்டப்படக்கூடிய அபாயம் எப்போதும் இருந்துவருகிறது; புதுமைக்கு ஆதரவு பெருகினால் தான் இதனைத் தவிர்க்க முடியும். சீர்திருத்தத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்துவதற்கான நிச்சயமான வழி சட்டத்தைக் கொண்டு அதற்கு வலுவூட்டுவதுதான். சட்டத்தின் உதவி இல்லாமல் எந்தச் சீர்கேட்டையும் ஒருபோதும் சீர்திருத்தமுடியாது. அதிலும் சீர்திருத்த வேண்டிய தீங்கு சமயத்தின் அடிப்படையில் அமைந்திருக்கும் போது சட்டத்தின் உதவி மிக மிக அவசியமாகிறது.

பிரிட்டிஷ் ஆட்சியில், சமூக சீர்திருத்தத்துக்கு ஆதரவாக மொத்தம் எத்தனைச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன? சமூக சீர் திருத்த விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் சாதித்திருப்பது, மிக மிக நிதானமாகக் கூறினால்கூட, பெருத்த ஏமாற்றமளிப்பதாகவும், மிகுந்த வருந்ததக்கதாகவும் உள்ளது. 150 ஆண்டுக்காலத்தில் ஆறு சமூகத்தீமைகள் குறித்துத்தான் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன.

பிரிட்டிஷார் மேற்கொண்ட முதல் சமூக சீர்திருத்த சட்டம் வங்காள ஒழுங்குமுறை சட்டம் XXI 1795-ல் இடம்பெற்றிருப் பதைக் காணலாம். காசி மாகாணத்தில் பிராமணர்கள் கூர்ஹாஸ் கள் அமைப்பதையும், தங்களுடைய பெண் குழந்தைகளைக் கொல் வதையும் தடுப்பதற்காகவே இந்தச் சட்டம் இயற்றப்பட்டது. அந்தச் சட்டம் வருமாறு:

## முகப்புரை

பிராமணர்களிடம் இந்துக்கள் பெருமதிப்பு வைத்துள்ளனர்; பிராமணர்களின் ஆளுமை பெருமதிப்பு மிக்கதாகக் கருதப்படுகிறது. இப்படிப்பட்டவர்களின் மரணத்துக்கான காரணம் பெனாரஸ் மாகாணத்தில், அதிலும் குறிப்பாக குந்தித் வட்டாரத்தில் தெரியவந்தால் அது கடுமையான விளைவுகளை ஏற்படுத்தும் என்ற அச்சம் அரசாங்கத்தின் நிர்ப்பந்தத்தால் இவர்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கும் கட்டாயத்துக்கு உள்ளாகும் அத்தனைப் படிப்பறிவில்லாதவர்களைச் சட்டத்தை மீறுவதற்கு இட்டுச் செல்லுகிறது. இத்தகைய சந்தர்ப்ப சூழ்நிலைமைகளில் இந்தப் பிராமணர்கள் அவ்வப்போது சில உபாயங்களைக் கைக்கொள்கின்றனர். அவற்றில் பின் வருபவையும் அடங்கும்: சாதாரணக் கத்திகளைக் கொண்டோ, சவரக் கத்திகளைக் கொண்டோ தங்கள் உடல்களை இலேசாகவோ அல்லது பலமாகவோ கிழித்துப் புண்படுத்திக் கொள்கின்றனர்; நஞ்சையோ அல்லது நஞ்சென அவர்கள் கூறிக்கொள்ளும் ஏதோ ஒரு பொடியையோ விழுங்கப் போவதாக அச்சுறுத்துகின்றனர்; சில சமயங்களில் உண்மையில் விழுங்க வும் செய்கின்றனர்; அல்லது கூர்ஹ் எனப்படும் ஒரு வட்ட வடிவமான அடைப்பைக் கட்டியெழுப்புகின்றனர்; அதில் விறகுக்குக் கட்டைகளையோ அல்லது தீப்பற்றி யெறியக்கூடிய வேறு ஏதேனும் பொருள்களையோ அடுக்கி வைக்கின்றனர்; பின்னர் உண்மையாகவோ அல்லது பாசாங் காகவோ உண்ணாவிரதம் மேற்கொள்கின்றனர்; கூர்ஹின் எல்லைக் குள் வயதான ஒரு பெண்மணியை உட்கார வைக்கின்றனர்; நீதிமன்ற அழைப்பாணையைத் தங்களிடம் தாக்கல் செய்வதற்கு எவரேனும் தங்களை அணுகினாலோ அல்லது அரசாங்கமோ அதன் பிரதிநிதி களோ ஏதேனும் நிர்ப்பந்த நடவடிக்கை எடுப்பதற்கு முனைந்தாலோ கூர்ஹுக்குத் தீயிட்டு அந்த வயதான பெண்மணியைப் பலியிடுவதே அவர்களது நோக்கம். இதேபோல், நியாயமாகவோ, நியாயமற்ற முறை யிலோ ஏதேனும் இழப்புக்கு அல்லது ஏமாற்றத்துக்கு உள்ளாகும் இதே பிராமணர்கள் குறிப்பிட்ட காலத்திற்குள் தங்களுக்குப் பரிகாரம் கிட்டாத போது பல சமயங்களில் ஒரு காரியம் செய்கின்றனர்: அதாவது தங்களை நோக்கி தொலைவில் வரும் அரசாங்கச் சேவகன் அல்லது பிரதிநிதிகளின் பார்வையில் படும்படியாக தங்களுடைய பெண்டிர்களையும் குழந்தை களையும் அழைத்து வந்து உட்கார வைக்கின்றனர்; சேவகன் நெருங்கி

வந்ததும், தங்கள் வாட்களைச் சுழற்றி இந்தப் பெண்டிர்களை அல்லது குழந்தைகளைக் கொன்று விடுவதாகவோ அல்லது தலைகளை வெட்டி விடுவதாகவோ அச்சுறுத்துகின்றனர்; இதுமட்டுமல்ல, தாங்கள் கைது செய்யப்படும் நிலையில் இருக்கும்போது, வல்லந்தப்படுத்தப்படும் போது அல்லது வேறு ஏதேனும் வகையில் தொல்லைப்படுத்தப்படும் போது அவர்கள் கடும் சீற்றமடைந்து, உண்மையிலேயே தங்கள் உடல் களில் காயங்கள் ஏற்படுத்திக்கொள்வதோடு, தங்கள் குடும்பங்களைச் சேர்ந்த பெண்டிர்களையோ அல்லது தங்கள் சொந்தப் பெண் சிசுக்களையோ அல்லது இதற்கென அழைத்துவரப்பட்ட வயதான பெண்களையோ அணுவளவும் ஈவு இரக்கமின்றி, மன உறுத்தலின்றி தங்களுடைய குத்து வாள்களைக் கொண்டு கொல்கின்றனர்; இவ்வாறு நிகழ்ந்த சம்பவங்கள் பல உண்டு. இதில் சம்பந்தப்பட்ட பெண்களும் ஒருபோதும் அவர்களது விருப்பத்துக்குப் புறம்பாகப் பலியிடப்படுவதில்லை; மாறாக, அவர் கள் தாங்க ளாகவே இதற்கு முன்வருகின்றனர்; தங்களுக்கு நற்பெயர் கிட்டும் என்ற தவறான எண்ணத்திலோ அல்லது தங்களது சீற்றத்தை வெளியிடவும் பழிவாங்கவும் இது ஒரு சந்தர்ப்பம் என்று கருதியோ தங்களை மனமகிழ்வோடு தியாகம் செய்து கொள்வது தங்களது கடமை என்று எண்ணுகின்றனர்; தாங்கள் பலியாவதற்குக் காரணமாக உள்ள வர்களை மரணத்திற்குப்பிறகு மிகுந்த வேதனைக்கு உள்ளாக்கக் கூடிய வர்களாகத் தாங்கள் மாற முடியும் என்றும் இவர்கள் நம்புகின்றனர். இதே கோட்பாடுகளின் அடிப்படையில், இந்தப் பிராமணர்கள் கடனைத் திரும்பப்பெறுதல், நன்கொடை வசூலித்தல் போன்ற நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளும் பொருட்டு, ஏதேனும் தாக்குதல் ஆயுதங் களை அல்லது விஷத்தை எடுத்துக் கொண்டு அதே ஊரில் அல்லது கிரா மத்தில் உள்ள ஒருவரது வீட்டிற்குச் செல்லுகிறார்கள்; அங்கு தர்ணா மேற்கொள்கிறார்கள்; தங்கள் நோக்கம் நிறைவேறும்வரை அந்த இடத்தில் உண்ணாவிரதம் இருப்பதுதான் தர்ணா என்பது; இதில் விசேடம் என்ன வென்றால், இவர்கள் இவ்வாறு உண்ணா விரதம் இருக்கும்போது அவர்களது கோரிக்கைகள் நிறைவேறும் வரை வீட்டுச் சொந்தக்காரரும் அவரைச் சேர்ந்தவர்களும் எதுவும் சாப்பிடக் கூடாது; வீட்டிற்குள் எவரும் செல்லு வதற்கோ, வெளியே வருவதற்கோ அனுமதிக்கப்பட மாட்டார்கள். இது மீறப்படுமானால் பிராமணன் தனது ஆயுதத்தால் தன்னைக் காயப்படுத்திக் கொள்வான்; அல்லது தன்னுடன் கொண்டுவந்திருக்கும் விஷத்தைச் சாப்பிட்டு விடுவான். எனினும் பல சந்தர்ப்பங்களில் இவ்வாறு செய்யாத படி இந்தப் பிராமணர்கள் தடுக்கப்படுகிறார்கள்; தர்ணா செய்யும் இடத்தி லிருந்து நீதிமன்ற அதிகாரிகள் அவர்களை அகற்றுகிறார்கள்; இதனால் விபரீத விளைவுகள் எவையும் ஏற்படாதபடிப் பார்த்துக் கொள்கிறார்கள். பிராமணர்கள் கைது செய்யப்பட்டு அரசாங்கக் காவலில் இருக்கும்போது தற்கொலை செய்து கொள்வதோ அல்லது தங்களைக் காயப்படுத்திக் கொள்வதோ அல்லது மற்றவர்களைக் காயப்படுத்துவதோ அரிது. இந்தப் பிராமணர்கள் செய்வதை விட மிகவும் காட்டுமிராண்டித்தனமான ஒரு வழக்கம் ராஜ்கூமார்கள் எனப்படும் இனத்தவரிடையே நிலவுகிறது; ஜுவான்போருக்கு அருகில் மாகாணத்தின் எல்லைகளில் வசிக்கும் இவர்கள் மிகக் குரூரமான, கொடூரமான, மிலேச்சத்தனமான ஒரு செயலைப் புரிகிறார்கள்: அதாவது தங்களது பெண் குழந்தைகளை வளர்த்து ஆளாக்குவதில் உள்ள சிரமம் கருதி, பால்மணம் மாறாத பருவத்திலேயே அவர்களை வதைத்துக் கொன்று விடுகின்றனர்; பழி பாவத்துக்கு அஞ்சாத இத்தகைய கொடிய வழக்கங்களுக்கு முற்றுப் புள்ளி வைக்கவும், அந்தப் பழிகேடுகள் திரும்பவும் நிகழாதபடித் தடுக்

கவும் விதிமுறைகளும் நடவடிக்கைகளும் வகுத்து, அவை இங்கு ஒழுங்குமுறைச் சட்டமாக இயற்றப்படுகின்றன.

## பிராமணர்கள் கூர்ஹ் அமைக்கவும் அல்லது தங்களுடைய பெண்களை அல்லது குழந்தைகளைத் காயப்படுத்தவும் முடமாக்கவும் அல்லது அவர்களைப் படுகொலை செய்யவும் தயாராகுதல்

11. ஏதேனும் ஓர் அதிருப்தி காரணமாகவோ அல்லது அதனை யொத்த வேறு ஏதேனும் காரணமாகவோ எந்த ஒரு பிராமணனும் அல்லது பிராமணர்களும் இந்த ஒழுங்குமுறைச் சட்டத்தில் விவரிக்கப்பட்டுள்ள முறையில், கூர்ஹ் அமைத்தாலும் அல்லது தங்களுடைய பெண்டிர்களை அல்லது குழந்தைகளை அல்லது இரு தரப்பினரில் எவரையேனும் முடமாக்கவோ, காயப்படுத்தவோ அல்லது படுகொலை செய்யவோ தயாரானாலும் அவர்களுக்கு எதிராக நகர அல்லது மாவட்ட குற்றவியல் நடுவரிடம் எழுத்து மூலமாகத் தகவல் தரலாம்; இதன்பேரில் குற்றவியல் நடுவர் உடனே சம்பந்தப்பட்ட பிராமணனுக்கு அல்லது பிராமணர்களுக்கு ஓர் எழுத்துப் பூர்வமான அறிவிப்பை அனுப்புவார்; அந்த அறிவிப்பு பெர்சிய மொழியிலும் பெர்சிய எழுத்திலும், இந்துஸ்தானி மொழியிலும் நாகரி எழுத்திலும் இருக்கும், குற்றவியல் நடுவரின் அதிகார முத்திரை யும் அதில் பொறிக்கப்பட்டிருக்கும். குற்றவியல் நடுவரின் உசிதப்படி இந்த அறிவிப்பு சம்பந்தப்பட்ட பிராமணனின் அல்லது பிராமணர் களின் உறவினர்கள், நண்பர்கள் அல்லது அவர்களுடன் தொடர்புடைய வர்கள் மூலம் அவர்களிடம் தாக்கல் செய்யப்படும்; இதே சமயத்தைச் சேர்ந்த ஒரு சேவகன் மூலமும் தாக்கல் செய்வதற்கு குற்றவியல் நடுவர் ஏற்பாடு செய்யலாம். கூர்ஹுும் அதில் அமர்த்தப்பட்டிருக்கும் பெண் டிரும் ஏனையோரும் அகற்றப்பட வேண்டும் என்று மேற்கண்ட பிராம ணனை அல்லது பிராமணர்களை இந்த அறிவிப்பு கோரும்; அல்லது தங்களுக்குக் கிடைத்துள்ள தகவலின்படி பெண்கள் அல்லது குழந்தை களை இவர்களில் ஒரு சாராரையோ அல்லது இரு சாராரையுமோ காயப் படுத்தவோ அல்லது கொல்லவோ தயாராவதைத் தவிர்க்கும்படியும் இதில் வலியுறுத்தப்பட்டுள்ளது. மேலும், அந்த அறிவிப்பில் சம்பந்தப் பட்ட பிராமணர் அல்லது பிராமணர்களுக்கு ஆக்கப்பூர்வமான, உத்வேக மூட்டும் ஓர் உறுதி மொழியும் அடங்கியிருக்கும்; அதாவது கூர்ஹையும் அதில் அமர்த்தப்படும் நபர் அல்லது நபர்களை அகற்றவும், பெண்களை யும் குழந்தைகளையும் காயப்படுத்துவதற்கு அல்லது கொல்வதற் கான தயாரிப்பை கைவிடவும் அவர்கள் தயாராக இருக்கும் பட்சத்தில் அதனை நேராகவோ அல்லது வக்கீல்மூலமாகவோ மாநகர அல்லது மாவட்ட நீதிமன்றத்துக்குத் தெரிவித்தால், தடைசெய்யப்பட்ட இந்த செயல் அல்லது செயல்களைப் புரிவதற்குக் காரணமாக உள்ள பூசல் குறித்து முறையான விசாரணை நடத்தப்படும். ஆனால் இந்த அறிவிப்பை வெளியிடுவது சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்களிடம் சாதகமான பிரதிபலிப்புகளைத் தோற்றுவித்து, உரிய பலனை அளிக்க வில்லை என்றால், அதனை அவர்களிடம் சமர்ப்பித்ததற்கான எழுத்து மூலமான அத்தாட்சி அப்பணியை மேற்கொண்டவர்களிடமிருந்து பெறப் படுகிறது; இதன்பேரில் சம்பந்தப்பட்ட பிராமணனை அல்லது பிராமணர் களைக் கைது செய்வதற்கான ஆணையை குற்றவியல் நடுவர் தமது அதிகார முத்திரையுடனும் கையெழுத்துடனும் பிறப்பிக்கிறார்; அவன்

அல்லது அவர்கள் இழைத்த குற்றங்களும் தீச்செயல்களும் அதில் குறிப் பிடப்பட்டிருக்கின்றன; இந்தக் கைது ஆணையைச் செயல்படுத்தும் பொறுப்பு முகமதிய சமயத்தைச் சேர்ந்த சேவகர்களிடம் ஒப்படைக்கப் படுகிறது; இத்தகைய பணிக்கு எந்த இந்துவும் அனுப்பப்படுவதில்லை. பிடியாணை தாக்கல் செய்யப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்கள் குற்றவியல் நடுவர் முன் கொண்டுவரப்பட்டு அவர்கள் புரிந்த குற்றங்கள் அல்லது தீச்செயல்கள் சம்பந்தமாக ஒழுங்குமுறைச்சட்டம் IX, 1793 பிரிவு 5ன்படி வழக்கு நடைபெறுகிறது; இந்தக் குற்றங்கள் (அதாவது கூர்ஹை நிர் மாணிப்பது அல்லது பெண்களையும் குழந்தைகளையும் காயப்படுத்தவோ அல்லது கொல்லவோ தயாராக இருப்பது போன்றவை) உண்மையி லேயே இழைக்கப்பட்டிருக்கின்றன என்பதும், இந்தக் குற்றத்தை அல்லது குற்றங்களைப் புரிவதில் பிரதான குற்றவாளியாகவோ அல்லது அவ னுக்கு உடந்தையாளனாகவோ கைதியை அல்லது கைதிகளைச் சந்தே கிப்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன என்பதும் முந்திய விசாரணையி லேயே குற்றவியல் நடுவருக்குத் தோன்றினால் அவனை அல்லது அவர் களை அவர் சிறையில் அடைக்கலாம் அல்லது அடுத்த விசாரணைக்கு (பிரதான குற்றவாளியாகவோ அல்லது உடந்தையாளனாகவோ) ஆஜ ராகும்படிப் பிணையமளித்து விடுவிக்கலாம்; அதேபோல் இது சம்பந்த மான தகவல் தந்தவரையும் அல்லது புகார் செய்தவரையும் சாட்சி களையும் விசாரணையன்று நீதிமன்றத்தில் ஆஜராகும்படி மேற்கண்ட பிரிவின்படிக் கட்டளையிடலாம்.

## விசாரணையும் மேற்படி குற்றங்களுக்கான தண்டனையும்

III. மேற்படிக் குற்றங்கள் புரிந்ததாகக் குற்றம்சாட்டப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்களுக்கு எதிராக ஏனைய குற்றங்கள் சம்பந்தமான ஒழுங்குமுறைச் சட்டம் IX, 1793 மற்றும் ஒழுங்குமுறைச் சட்டம் XVI, 1795ல் வகுத்துத் தரப்பட்டுள்ள முறையின்படி சுற்றலா நீதிமன்றம் வழக்கு விசாரணையை மேற்கொள்ளும்; ஆனால் ஸ்தல இயல்புடைய இத்தகைய குற்றங்கள் விஷயத்தில் முகமதிய சட்டத்தைப் போதிய அளவுப் பயன் படுத்த முடியாது; எனவே, கூர்ஹைக் கட்டுவது சம்பந்தமாகவும், பெண்களை அல்லது குழந்தைகளைக் காயப்படுத்துவதற்கு அல்லது கொல் வதற்குத் தயாராக இருந்தது சம்பந்தமாகவும் பிரதான குற்றவாளியாக இருந்ததாக நிரூபிக்கப்பட்ட கைதிக்கு அவனது ஆண்டு வருமானத்துக்குச் சமமான ஒரு தொகையை அபராதமாக மேற்படி நீதிமன்றம் விதிக்க இதன்மூலம் வழிவகை செய்யப்படுகிறது; இது சம்பந்தமாகப் பெறப்படும் மிக நம்பக மானத் தகவலின் அடிப்படையில் இந்த அபாரதத்தொகை நிர்ணயிக்கப்படும்; இந்தக் குற்றங்கள் புரிவதற்கு கைதி உடந்தையாக மட்டுமே இருந்தான் என்று நீதிமன்றம் திருப்தியடையும் பட்சத்தில் அவனது வருட வருமானத்தில் நான்கில் ஒரு பங்கு அபாரதமாக விதிக்கப் படும். இவ்வாறு அபராதம் விதித்துத் தண்டிக்கப்படும அனைவரும் அந்த அபராதத் தொகையைக் கட்டும்வரை அல்லது தாங்கள் விடுதலை செய்யப்பட்ட ஆறுமாதத்திற்குள் அந்தத் தொகையைக் கட்டிவிடுவதாக சுற்றுலா நீதி மன்றத்திலோ அல்லது அந்த நடுவரிடமோ முழுஅளவுக்குப் போதிய பிணையம் தரும்வரை சிறையில் இருக்கவேண்டும்; இத்தகைய நபர்கள் விடுதலையாவதற்கு முன்னர் அபராதத்தொகைக்குப் பிணையம் தந்த பிறகு, எதிர்காலத்தில் இத்தகைய குற்றங்களைச் செய்ய மாட்டோம் என்பதற்கு உத்தரவாதமாக சுற்றுலா நீதிமன்றத்திலோ அது இல்லாத

பட்சத்தில் குற்றவியல் நடுவரிடமோ மிகவும் தகுதிவாய்ந்த ஒரு நபரோ அல்லது அதற்கு மேற்பட்டவர்களோ ஃபாயல்ஜாமீனி அதாவது நபர் ஜாமீன் தரவேண்டும்.

## அபராதங்களைக் குறைப்பதற்கு நிஜாமுத் அதாலத்துக்குள்ள அதிகாரம்

IV. பிரிவு 3-ன்படி சுற்றுலா நீதிமன்றம் வழங்கும் எல்லாத் தண்டனை களும், அவற்றின் நிறைவேற்றத்துக்கு இடைக்காலத் தடையேதுமில் லாமல், நிஜாமுத் அதாலத் நீதிமன்றத்துக்குத் தெரிவிக்கப்பட வேண் டும்; தண்டனைகள் வழங்கப்பட்ட ஏழுநாட்களுக்குள் இதனைச் செய்ய வேண்டும்; இந்த நீதிமன்றம் தனக்கு உசிதம் என்று தோன்றும் முறையில் அபராதம் அல்லது அபராதங்களைக் குறைக்கலாம் அல்லது ரத்துசெய்ய லாம்; ஆனால் நிஜாமுத் அதாலத் எத்தகைய ஆணை பிறப்பிக்கும் வரை யிலும் சுற்றுலா நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பு முற்றிலும் நடைமுறை யில் இருப்பதாகக் கருதப்பட்டு, அதற்கிணங்கச் செயல்படுத்தப்படும்.

## பிரிவு 2-ன்படி குற்றவியல் நடுவர் பிறப்பித்த ஆணையின் பிரகாரம் கைதாவதிலிருந்து தப்புவதற்குத் தலைமறைவாகும் பிராமணர்களுக்கு அபராதம் விதித்தல்

V. பிரிவு 2ல் நிர்ணயிக்கப்பட்டுள்ள பிரகாரம் ஒரு மாநகர அல்லது மாவட்ட குற்றவியல் நடுவர் பிடியாணை பிறப்பித்து அதனை சம்பந்தப் பட்டவர்களிடம் தாக்கல் செய்யும்படி சேவகர்களை அனுப்புவார்; அந்தப் பிடியாணையை ஏற்க சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்கள் மறுக்கக்கூடும், அல்லது எதிர்க்கக்கூடும் அல்லது கைதான பிறகு அவர் களிடமிருந்து தப்பிச் செல்லக்கூடும் அல்லது தலைமறைவாகக்கூடும் அல்லது தன்னிடம் அல்லது தங்களிடம் பிடியாணையைத் தாக்கல் செய்யமுடியாதபடி எந்த ஒரு வீட்டிலோ அல்லது கட்டிடத்திலோ ஒளிந்து கொள்ளக்கூடும் அல்லது ஏதேனும் ஒரு தனிமையான இடத்துக்குச் சென்றுவிடக்கூடும். இத்தகைய நிலைமையில் குற்றவியல் நடுவர் ஆட்சி யருக்கு ஒரு தாக்கீது அனுப்புவார்; சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்களுக்குச் சொந்தமான அல்லது அடைமானத்திலுள்ள நிலங் களை, பண்ணையை அல்லது லக்ஷராஜேயை ஜப்தி செய்யுமாறு அப்பகுதி யைச் சேர்ந்த வட்டாட்சியருக்கு ஆணையிடுமாறு அந்தத் தாக்கீதில் பணிப்பார். சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்கள் சரணடை யும் வரை நிலங்கள் ஜப்தி செய்யப்பட்ட நிலையிலேயே இருக்கும்; ஜப்தி செய்யப்பட்ட நிலங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தில் அரசாங் கத்துக்குச் சேர வேண்டியதுபோக எஞ்சிய பகுதி கூர்ஹ் யாருக்காகக் கட்டப்பட்டதோ அந்தப் பெண்ணுக்கு அல்லது பெண்களுக்கு அல்லது யார் காயப்படுத்தப்படுவதாக அல்லது கொல்லப்படுவதாக இருந்தார்களோ அந்தப் பெண்களுக்கு அல்லது குழந்தைகளுக்குப் பகிர்ந்தளிக்கப்படும்; கூர்ஹை அமைத்த அல்லது தங்களது பெண்களை அல்லது குழந்தைகளைக் கொல்லுவதற்குத் தயாராக இருந்த பிராமணன் அல்லது பிராமணர்கள் சரணடைந்த பிறகு அல்லது கைதான பிறகு அவனது அல்லது அவர்களது நிலங்கள் விடுவிக்கப்படும்; ஆனால் அவர்கள் ஆரம்பத்தில் இழைத்த குற்றம் அல்லது குற்றங்களுக்கான பிரிவு 3 மற்றும் 4 இன்படி தொடர்ந்து வழக்கு நடை பெறும்.

## வருவாய்த்துறை மேற்கொள்ளும் எந்த ஒரு நடவடிக்கைக்கும் எதிராக பிராமணர்கள் கூர்ஹ் அமைக்கும் பட்சத்தில் அல்லது பெண்களை அல்லது குழந்தைகளைக் கொல்லுவதற்குத் தயாராகும் பட்சத்தில் அது சம்பந்தமாக குற்றவியல் நடுவருக்கு ஆட்சியர் புகார் செய்தல்

VI. எந்த ஒரு பிராமாணனும் அல்லது பிராமணர்களும் வரி பாக்கியைச் செலுத்தாதபோது, ஒழுங்குமுறைச் சட்டம்VI 1795-இன்படி அவர்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்க வட்டாட்சியர் அல்லது ஆட்சியர் அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். இதன்படி அவர்கள் தஸ்தக்கை அல்லது பிடியாணையைத் தங்களிடம் தாக்கல் செய்வதைத் தடுக்கும் பொருட்டு ஒரு பிராமணனோ அல்லது பிராமணர்களோ ஒரு கூர்ஹைக் கட்டுவதில் இறங்கக்கூடும் அல்லது தன்னுடைய அல்லது தங்களுடைய பெண்டிர்களை அல்லது குழந்தைகளை அல்லது இவர்களில் ஒருவரையோ அல்லது எல்லோரையுமோ காயப்படுத்துவதற்கு அல்லது கொல்வதற்குத் தயாராகக் கூடும். இத்தகைய சந்தர்ப்பத்தில் வட்டாட்சியர் தனது தஸ்தக்கைப் பெற்றுக்கொள்ளும்படி சம்பந்தப்பட்டவர்களை நிர்ப்பந்திக்கக்கூடாது; மாறாக உடனடியாக இந்த விஷயத்தை ஆட்சியரின் கவனத்திற்குக் கொண்டுவரவேண்டும்; தஸ்தக்கை தாக்கல் செய்வதற்கு அனுப்பப்பட்ட சேவகனது எழுத்துப் பூர்வமான சான்றுகளையும் இத்துடன் இணைந்து அனுப்பவேண்டும்; ஆட்சியர் இவை கிடைத்ததன் பேரில் அல்லது தான் மேற்கொண்ட நடவடிக்கையும் இதேபோன்று எதிர்க்கப்படும் பட்சத்தில், சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்கள் எவ்வளவு வரிபாக்கி செலுத்தவேண்டும் என்பதையும், தானும் வட்டாட்சியரும் இது சம்பந்தமாக எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளையும் வரிபாக்கி வரவேண்டிய நிலங்கள் எவருடைய அதிகார எல்லைக்குள் இருக்கின்றனவோ அந்த நகர அல்லது மாவட்ட நீதிபதிக்கும் குற்றவியல் நடுவருக்கும் அரசாங்க வழக்குரைஞர் மூலம் தெரியப்படுத்துவார்; இதைத்தொடர்ந்து, வட்டாட்சியர் அல்லது ஆட்சியரின் தஸ்தக்கை கொண்டுசென்ற சேவகரோ அல்லது வேறு எந்த நம்பிக்கையும் தகுதியும் வாய்ந்த நபரோ அல்லது நபர்களோ நீதிமன்றத்தில் ஆஜர் ஆவார்கள்; ஆட்சியரின் முறையீட்டில் தெரிவிக்கப்பட்டுள்ள விவரங்களும், சம்பந்தப்பட்ட பிராமணர் அல்லது பிராமணர்கள் கூர்ஹை அமைந்திருந்தார்கள் அல்லது பெண்களையும் குழந்தைகளையும் காயப்படுத்தவோ அல்லது கொல்லவோ தயாராக இருந்தார்கள் என்ற குற்றச்சாட்டுகளும் உண்மைதான் என்று பிரமாண வாக்குமூலம் கொடுக்கிறார்கள்; இதன்பேரில் இத்தகைய பிராமணர்களுக்கு குற்றவியல் நடுவர் எழுத்துப் பூர்வமான ஓர் அறிவிப்பை வெளியிடுவார்; தமது அதிகாரமுத்திரை பொறிக்கப்பட்ட, பெர்சிய மொழியிலும் பெர்சிய எழுத்திலும், இந்துஸ்தானி மொழியிலும் நாகரி எழுத்திலும் அது எழுதப்பட்டிருக்கும்; குற்றவியல் நடுவரின் உசிதப்படி இந்த அறிவிப்பு சம்பந்தப்பட்ட பிராமணனின் அல்லது பிராமணர்களின் உறவினர்கள், நண்பர்கள் அல்லது அவர்களுடன் தொடர்புடையவர்கள் மூலம் அவர்களிடம் தாக்கல் செய்யப்படும்; மேற்கண்ட பிராமணன் அல்லது பிராமணர்களின் இத்தகைய உறவினர்கள், நண்பர்கள், அல்லது அவர்களுடன் தொடர் புடையவர்கள் இதைச் செய்யத்தவறினால் இதே சமயத்தைச் சேர்ந்த ஒரு சேவகன் மூலம்

இந்த அறிவிப்பு தாக்கல் செய்யப்படுவதற்கு குற்றவியல் நடுவர் ஏற்பாடு செய்வார்; அந்த அறிவிப்பின் சாரம்சம் பின்கண்டவாறு இருக்கும்: கூர்ஹா~ம் அதில் அமர்த்தப்பட்டிருக்கும் பெண்டிரும் ஏனையோரும் அகற்றப்பட வேண்டும், பெண்களை அல்லது குழந்தைகளைக் காயப் படுத்துவதற்கு அல்லது அவர்களைக் கொல்வதற்கு செய்யப்படும் தயாரிப்பைத் தவிர்க்கவேண்டும், அதேபோல் அவன் அல்லது அவர்கள் செலுத்த வேண்டிய வரி பாக்கியை செலுத்தவேண்டும் அல்லது நீதிமன்றத் தில் ஆஜராகி இந்தத் தொகைக்கு ஜாமீன் அளிக்கவேண்டும், இத்தொகை செலுத்துவது சம்பந்தமாக ஏதேனும் ஆட்சேபம் இருந்தால் அவர்கள் மாநகர நீதிமன்றத்திற்கோ அல்லது மாவட்ட நீதிமன்றத்துக்கோ நேரில் வந்து தெரிவிக்க வேண்டும்; இதன்பேரில் வழக்கின் தகுதிகள் பற்றி ஒழுங்குமுறைச் சட்டம் VI, 1795-இன்படி விசாரித்துத் தீர்மானிக்கப்படும். மேலும், மேற்கண்ட அறிவிப்பு சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்களுக்கு ஆக்கப்பூர்வமான, உத்வேகமூட்டும் ஓர் உறுதிமொழி யைக் கொண்டதாகவும் இருக்கும். அதாவது கூர்ஹையும் அதில் அமர்த் தப்படும் நபர் அல்லது நபர்களை அகற்றவும், பெண்களையும் குழந்தை களையும் காயப்படுத்துவதற்கு அல்லது கொல்வதற்கான தயாரிப்பைக் கைவிடவும், அதேபோல் வரிபாக்கியைச் செலுத்தவோ அல்லது மாநகர நீதிமன்றத்தில் அல்லது மாவட்டநீதிமன்றத்தில் நேரில் ஆஜராகியோ அல்லது வழக்குரைஞர் மூலமோ அத்தொகைக்குப் பிணையம் அளிக்கவோ தயாராக இருந்தால், நீதிகோரி அவர்கள் முன்வைக்கும் கோரிக்கை கள்மீது முறையாக விசாரணை நடத்தப்படும். இந்த அறிவிப்பில் குறிப் பிட்டுள்ளபடி நடந்துகொள்ள சம்பந்தப்பட்ட பிராமணனோ அல்லது பிராமணர்களோ தவறினால், அந்த அறிவிப்பு அவர்களிடம் தாக்கல் செய்யப்பட்டதற்கான ஓர் ஆவணம் தயாரிக்கப்பட்டு, அவ்வாறு தாக்கல் செய்யும் பணியைச் செய்த நபர் அல்லது நபர்களின் உறுதிமொழிக் கையெழுத்து அதில் வாங்கப்படும்; அதன் பிறகு உடனே அந்த பிராமணன் அல்லது பிராமணர்களைக் கைதுசெய்வதற்கு குற்றவியல் நடுவர் தமது அதிகாரமுத்திரையும் கையெழுத்தும் இட்டு பிடியாணையைப் பிறப்பிப் பார்; அவர்கள் செய்த குற்றங்களும் அரசாங்கத்துக்குத் தர வேண்டிய நிலுவைப்பாக்கியும் அந்தப் பிடியாணையில் குறிப்பிடப்பட்டிருக்கும்; பிரிவு 2ல் கூறியுள்ளபடி, முகமதிய சமயத்தைச் சேர்ந்த சேவகர்களால் பிடியாணை நிறைவேற்றப்படவேண்டும்; ஆனால் அந்தப் பிடியாணையை ஏற்க சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்கள் மறுக்கக்கூடும்; அல்லது எதிர்க்கக்கூடும், அல்லது கைதானபிறகு அவர்களிடமிருந்து தப்பிச் செல்லக்கூடும் அல்லது தலைமறைவாகக்கூடும் அல்லது தன்னிடம் அல்லது தங்களிடம் பிடியாணையைத் தாக்கல் செய்யமுடியாதபடி எந்த ஒரு வீட்டிலோ அல்லது கட்டிடத்திலோ ஒளிந்து கொள்ளக்கூடும் அல்லது ஏதேனும் ஓர் ஒதுக்குப்புறமான இடத்துக்குச் சென்றுவிடக் கூடும்; இந்தத் தகவல்கிடைத்ததும் குற்றவியல் நடுவர் ஆட்சியருக்கு ஒரு தாக்கீது அனுப்புவார்; சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர் களுக்குச் சொந்தமான அல்லது அடைமானத்திலுள்ள நிலங்களை, பண்ணையை அல்லது லக்ஷராஜேயை ஜப்திசெய்யுமாறு அப்பகுதியைச் சேர்ந்த வட்டாட்சியருக்கு ஆணையிடுமாறு அந்தத் தாக்கீதில் பணிப்பார்; அவ்வாறே அந்த நிலங்கள் ஜப்தி செய்யப்படும்; பாக்கி செலுத்தப்படும் வரை நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தை அரசாங்கம் எடுத்துக்

கொள்ளும்; இல்லையென்றால் சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்கள் தங்களது வேறு வருமானங்களிலிருந்து இதனைச் செலுத்த வேண்டும் அல்லது அவர்கள் நீதிமன்றத்தில் ஆஜராக வேண்டும்; கூர்ஹை அமைத் ததற்காகவோ அல்லது தன்னுடைய அல்லது தங்களுடைய பெண்டிர்களையும் குழந்தைகளையும் கொல்லுவதற்குத் தயாராக இருந்த தற்காகவோ அவர்கள் மீது வழக்கு நடைபெற்று தண்டனை வழங்கப் படும்; தண்டனையைக் குறைப்பதைப் பொறுத்தவரையில் பிரிவுகள் 2,3 மற்றும் 4 ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள அதே நடைமுறைக் கைக்கொள்ளப்படும்.

## கூர்ஹை நிர்மாணிக்கும் பிராமணர்களும், அதற்குத் தீ வைப்பவர்களும் கொலை குற்றத்திற்காக அதாவது உயிரை அல்லது உயிர்களைப் பலியிட்டதற்காக விசாரணைக்கு உட்படுத்தப்படுவார்கள்

VII. அரசாங்கத்துக்கோ அல்லது அதன் அதிகாரிகளுக்கோ அல்லது அதன் ஊழியர்களுக்கோ எதிராக நியாயமான அல்லது ஆதாரமற்ற அதிருப்தி காரணமாக அல்லது பீதி காரணமாக எந்த ஒரு பிராமணனும் அல்லது பிராமணர்களும் ஒரு கூர்ஹை நிர்மாணித்து, அது நிர்மாணிக்கப்பட்ட திலிருந்து அது அகற்றப்படும் வரையிலான காலத்தில் எந்த ஒரு நபரும் அல்லது நபர்களும் சுட்டெரிக்கப் படுவார்களேயானால், அல்லது இத்தகைய கூர்ஹுக்கு எவரேனும் ஒருவர் தீவைத்து அதன் விளைவாக அவர்கள் உயிரிழக்க நேருமானால், அத்தகைய கூர்ஹை நிர்மாணித்த பிராமணன் அல்லது பிராமணர்கள் கொலைக் குற்றஞ்சாட்டப்படத் தக்கவர்களா வர். அதேபோல், கூர்ஹுக்குத் தீவைக்க அப்போது அமர்த்தப்பட்ட நபர் அல்லது நபர்கள் இக்கொலைக்கு உடந்தையாக இருந்தவர்களாகக் குற்றஞ்சாட்டப்படத் தக்கவர்களாவர்; இத்தகைய குற்றசாட்டுகளுக்குப் போதிய ஆதாரங்கள் இருக்கின்றன என்று சுற்றுலா நீதிமன்றம் திருப்தி யடையும்போது இத்தகைய பிராமணனுக்கும் அல்லது பிராமணர்களுக் கும் கூர்ஹுக்கு தீவைத்த நபருக்கும் அல்லது நபர்களுக்கும் மரண தண்டனை விதிக்கும்; குதில் அல்லது திட்டமிட்டுச் செய்யப்படும் கொலைக்கு முகமதிய சட்டப்பிரகாரம் எவ்வாறு தண்டனை அளிக்கப் படுமோ அவ்வாறே இதற்கும் தண்டனை அளிக்கப்படும்; கூடிய மட்டும் பொதுமக்களுக்கு ஓர் உதாரணமாக இருக்க வேண்டும் என்ற கண்ணோட் டத்தோடு (முகமதிய சட்ட அதிகாரிகளின் எதிர்காலத்துக்கு இது இசை வானதாக இருந்தாலும் இல்லாவிட்டாலும்) சுற்றுலா நீதிமன்றம் இவ்வாறு தண்டிக்கப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்களுக்கு எதிரான இத்தகைய தண்டனையை முறைப்படி அறிவிக்கவேண்டும்; அதே சமயம் இது சம்பந்தமான எல்லா விசாரணை விவரங்களும் அவற்றின் முடிவில் விதிக்கப்பட்ட தண்டனை விவரங்களும் (ஒழுங்கு முறைச் சட்டம் IX, 1793 பிரிவு 47ல் குறிப்பிட்டுள்ளவாறு) நிஜாமுத் அதாலத்திடம் சமர்ப்பிக்கப்படும் என்பதைத் தண்டிக்கப்பட்ட நபர் அல்லது நபர் களுக்கு விளக்கிக் கூறவேண்டும்; இந்த விதியின்படித் தண்டிக்கப்படும் நபர் அல்லது நபர்கள் இந்த நீதிமன்றத்தின் இறுதித் தீர்ப்பு வரும் வரை சிறையில் இருக்கவேண்டும்; நிஜாமுத் அதாலத் இந்தத் தண்டனையை அங்கீகரிப்பதாக இருந்தால் சம்பந்தப்பட்ட பிராமணன் அல்லது பிராம ணர்களைக் கல்கத்தாவுக்கு அனுப்பும்படி ஆணையிடுவார்; அங்கிருந்து

அவர்கள் ஆயுட்காலத்துக்கு நாடுகடத்தப்படுவார்கள்; காசி மாகாணத்தில் வசிக்கும் பிராமணர்கள் கொலைக் குற்றம் செய்தால் ஒழுங்குமுறைச் சட்டம் XVI, 1795 பிரிவு 23 இத் தண்டனையைக் குறைப்பதற்கு வகை செய்கிறது. மேலும் கூர்ஹை நிர்மாணித்த பிராமணன் அல்லது பிராமணர்கள் விஷயத்திலும், அதேபோல் அதில் நெருப்பு வைப்பதற்கு அமர்த்தப்பட்ட நபர் அல்லது நபர்கள் விஷயத்திலும் விதிக்கப்பட்ட தண்டனையை நிறைவேற்றாமல் இருப்பதற்குப் போதிய முகாந்திரம் இருப்பதாக நிஜாமுத் அதாலத் காணுமானால் வழக்கை நிர்வாக சபை யுடன் கூடிய கவர்னர் ஜெனரலின் பரிசிலனைக்கு முன்வைக்கலாம்; அதற்கு உசிதமெனத் தோன்றும் அடிப்படையில் குற்றவாளிகளை மன்னிக்கும்படியோ அல்லது தண்டனையை இன்னும் குறைக்கும்படியோ பரிந்துரைக்கலாம்.

## பெண்களையும் குழந்தைகளையும் காயப்படுத்தும் பிராமணர்களுக்குத் தண்டனை

VIII. அமில்தார்கள், வட்டாட்சியர்கள், இதர அதிகாரிகள் அல்லது வருவாய்த் துறையிலோ, நீதித்துறையிலோ பணிபுரியும் ஊழியர்கள் போன்றோர் தங்களுக்கு இழைத்த தீங்குகள் குறித்து - இவை உண்மையாகவும் இருக்கலாம் வெறும் ஊகமாகவும் இருக்கலாம் - எந்த ஒரு பிராமணனும் அல்லது பிராமணர்களும் சீற்றமடைந்து, முகப்புரையில் விவரிக்கப்பட்டிருக்கும் சூழ்நிலைமைகளில் குத்துவாளையோ அல்லது வேறு ஏதேனும் தாக்குதல் ஆயுதத்தையோ கொண்டு தங்களுடைய பெண்டிர்களையோ குழந்தைகளையோ, இவர்களில் எவர் ஒருவரையோ அல்லது எல்லோரையுமோ காயப்படுத்தினால், அல்லது எந்தத் தனிநபருடனும் தனக்கோ, தங்களுக்கோ உள்ள அபிப்பிராய பேதம் காரணமாகவோ கோபம் காரணமாகவோ தன்னுடைய அல்லது தங்களுடைய சொந்தப் பெண்டிர்களையோ குழந்தைகளையோ அல்லது வேறு எந்தப் பெண்டிரையோ குழந்தையையோ காயப்படுத்தினால் இத்தகைய செயலுக்காக அல்லது செயல்களுக்காக நாடுகடத்தும் தண்டனை அளிக்கலாம்; ஆனால் அதே சமயம் பிரிவு 7ல் குறிப்பிட்டுள்ளபடி இத்தண்டனையைக் குறைக்கவோ அல்லது மன்னித்து ரத்துசெய்யவோ நிஜாமுத் அதாலத்துக்கு இந்த வழக்கு விவரங்களையும் மற்றும் தண்டனை விவரங்களையும் சமர்ப்பிப்பதற்கு இந்த நீதிமன்றம் கட்டுப்பட்டுள்ளது.

## பெண்களை அல்லது குழந்தைகளைக் கொல்லும் பிராமணர்களுக்குத் தண்டனை

IX. அமில்தாரர்கள், வட்டாட்சியர்கள், இதர அதிகாரிகள் அல்லது வருவாய்த்துறையிலோ, நீதித்துறையிலோ பணிபுரியும் ஊழியர்கள் போன்றோர் தங்களுக்கு இழைத்த தீங்குகள் குறித்து - இவை உண்மையாகவும் இருக்கலாம், வெறும் ஊகமாகவும் இருக்கலாம் - எந்த ஒரு பிராமணனும் அல்லது பிராமணர்களும் சீற்றமடைந்து, முகப்புரையில் விவரிக்கப்பட்டிருக்கும் சூழ்நிலைமைகளில் குத்துவாளையோ அல்லது வேறு ஏதேனும் தாக்குதல் ஆயுதத்தையோ கொண்டு தங்களுடைய பெண்டிர்களையோ அல்லது இவர்களில் எவர் ஒருவரையோ அல்லது

எல்லோரையுமோ உண்மையிலேயே கொலை செய்தால் அல்லது எந்தத் தனிநபருடனும் தனக்கோ தங்களுக்கோ உள்ள அபிப்பிராயபேதம் காரண மாகவோ அல்லது கோபம் காரணமாகவோ தன்னுடைய அல்லது தங்க ளுடைய சொந்தப் பெண்டிர்களையோ குழந்தைகளையோ அல்லது வேறு எந்தப் பெண்டிரையோ குழந்தையையோ கொன்றால், அவனோ அல்லது அவர்களோ இத்தகைய கொலைக்காக விசாரணை செய்யப்பட்டு, இது உண்மையென நிரூபணமானால் சுற்றுலா நீதிமன்றம் மரண தண்டனை விதிக்கும்; எனினும் இந்த வழக்கு விவரங்களும் தண்டனை விவரங் களும் நிஜாமுத் அதாலத்துக்குச் சமர்ப்பிக்கப்பட்டு பிரிவு 7-ன் பிரகாரம் இந்தத் தண்டனை குறைக்கப்படலாம் அல்லது மன்னிக்கப்படலாம்; இப்பிரிவின்படி கொலைக்குற்றவாளிகளாகத் தண்டிக்கப்பட்ட பிராமணன் அல்லது பிராமணர்களின் குடும்பங்கள் நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலின் 1789 ஜூன் 17ஆம் தேதிய உத்தரவுப் பிரகாரமும், காசியி லுள்ள ரெசிடெண்ட் இதற்கிணங்கள ஜூலை 7 ஆம் தேதியிட்டு வெளி யிடப்பட்ட அறிவிப்புப் பிரகாரமும் காசி மாகாணத்திலிருந்தும் கம்பெனி யின் பிரதேசங்களிலிருந்தும் வெளியேற்றப்படுவர்; குற்றவாளியான பிராமணனுடைய அல்லது பிராமணர்களுடைய நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டு, அரசாங்கம் தனது உசிதம்போல் அந்நிலங்களைப் பற்றி முடிவெடுக்கும்; இந்தப் பிரிவின்படி கொலைக் குற்றத்துக்கு சுற்றுலா நீதிமன்றம் பிராமணர்கள் மீது விதிக்கும் எல்லாத் தண்டனைகளும் இந்த உத்தரவுக்கு இசைந்ததாக இருக்கவேண்டும்; அதேசமயம் இத்தகைய தண்டனைகளையும் அவை சம்பந்தப்பட்ட உத்தரவுகளையும் நிஜாமுத் அதாலத்துக்குத் தெரிவிப்பதோடு, இத்தகைய பிராமணன் அல்லது பிராமணர்களது குடும்பத்தினரின் எண்ணிக்கை, அவர்களது பால், வயது முதலிய விவரங்களையும் சுற்றுலா நீதிமன்றம் நிஜாமுத் அதாலத் துக்குச் சமர்ப்பிக்க வேண்டும்; மேலும், இந்தப் பிராமணன் அல்லது பிராமணர்களது குடும்பத்தை நாடுகடத்தும் தண்டனையைக் கண்டிப்பான முறையில் செயல்படுத்துவதோ, அவர்களது அசையா சொத்தைப் பறிமுதல் செய்வதை உறுதிப்படுத்துவதோ, குறைப்பதோ, ரத்து செய்வதோ எந்த அளவுக்கு உசிதமானது என்பது குறித்து தனது கருத்தையும் அது தெரி விக்க வேண்டும்; இதன்பேரில் நிஜாமுத் அதாலத் சுற்றுலா நீதிமன்றம் விதித்த இந்தத் தண்டனையையும் உத்தரவையும், அது தெரிவித்த கருத் தையும் பரிசீலித்து, அதனை முற்றிலுமாக உறுதிசெய்யலாம் அல்லது தனக்கு உசிதமானது எனத் தோன்றும் முறையில் இத்தகைய தண்டனை யையும் உத்தரவையும் குறைக்குமாறு நிர்வாகசபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரலுக்குப் பரிந்துரைக்கலாம்; எல்லாச் சந்தர்ப்பங்களிலும் இத்தகைய பிராமணனதும் அல்லது பிராமணர்களதும், அவர்களுடைய குடும்பத் தினரதும் நிலங்கள் போன்ற அசையாச் சொத்துக்களைப் பறிமுதல் செய் வதை நிஜாமுத் அதாலத் அங்கீகரிக்கவேண்டும். இது சம்பந்தமாக இந்த நீதிமன்றம் நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலுக்கு ஆலோசனை கூறவேண்டும்; இதற்குப்பிறகு, நிலங்களைப் பறிமுதல் செய்வது போன்ற தண்டனையை நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலின் அங்கீகாரம் இல்லாமல் நிறைவேற்றக்கூடாது; அவ்வாறு அங்கீகாரம் கிடைத்தால், பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களை எப்படிப் 'பைசல்' செய்வது என்பது குறித்த வழிகாட்டுதலையும் நிர்வாகசபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலிட மிருந்து பெற வேண்டும்.

## குற்றவாளிகளது குடும்பத்தினரின் நிலங்களைப் பறிமுதல் செய்வதற்குக் கட்டுப்பாடு

X. சுற்றுலா நீதிமன்றம் விதித்த தண்டனைகளையும் உத்தரவுகளையும் குறைக்கும்படி நிர்வாகசபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலுக்கு தன் உசிதம்போல் பரிந்துரைக்கும் அதிகாரம் 9ஆவது பிரிவின்படி நிஜாமத் அதாலத்துக்கு உண்டு; ஆனால் கொலைக்குற்றம் புரிந்த தரப்பை அல்லது தரப்புகளை நாடுகடத்துவதை ஒரு வரையறைக்குட்படுத்துவதோ அல்லது சம்பந்தப்பட்ட பிராமணனது அல்லது பிராமணர்களது குடும்பத்தை அல்லது குடும்பங்களைச் சேர்ந்த குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ளவர்களுடன் அத்தண்டனையை நிறுத்திக் கொள்வதோ உசிதமென நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்ஜெனரல் முடிவெடுக்கலாம்; இத்தகைய சந்தர்ப்பத்தில் நிலத்தைக் கைப்பற்றுவதோ, பறிமுதல் செய்வதோ கூடாது; நாடு கடத்தப்படுவதிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்ட குடும்ப உறுப்பினர்களிடம் அந்த நிலங்களை முற்றிலுமாக விட்டுவிட வேண்டும்.

## தர்ணா செய்யும் பிராமணர்கள் சம்பந்தமான ஒழுங்குமுறைச் சட்டங்கள்

XI. முதலாவது. - நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரல் 1792 நவம்பர் 2 ஆம் தேதி பிறப்பித்த ஆணைக்கு இணங்கவும், இதனைத் தொடர்ந்து அதே ஆண்டு டிசம்பர் 22ஆம் தேதி காசியில் வெளியிடப்பட்ட அறிவிப்புக்கு இணங்கவும், 1794 நவம்பர் 7 ஆம் தேதி நிர்வாக சபையுடன்கூடிய கவர்னர்-ஜெனரல் மேற்கொண்டு பிறப்பித்த ஆணைக்கு இணங்கவும் தர்ணாவைத் தடுப்பதற்கும், இக்குற்றத்தைச் செய்யும் பிராமணர்கள் மீது வழக்கு தொடர்ந்து தண்டிப்பதற்கும் பின்கண்ட சட்டங்கள் இயற்றப்பட்டன.

## தர்ணா செய்யும் பிராமணர்களைக் கைதுசெய்ய குற்றவியல் நடுவர் ஆணையிடலாம்.

இரண்டாவது. - தர்ணா செய்வதாக எந்தப் பிராமணன் அல்லது பிராமணர்களுக்கு எதிராக எழுத்துப்பூர்வமான முறையீடு வந்தால் அதுபற்றிய உண்மையை உறுதிசெய்துகொண்டு, குற்றவியல் நடுவர் அவனை அல்லது அவர்களை கைதுசெய்து தம்முன் கொண்டு வந்து நிறுத்தும்படி தமது முத்திரையுடனும் கையெழுத்துடனும் ஆணையிடுவார்; குற்றம் இழைக்கப்பட்ட சந்தர்ப்பச் சூழ்நிலைமைகளை ஆராய்வார்; கைதியை அல்லது கைதிகளையும் அல்லது கைதிகளின் தவறான நடவடிக்கைகள் பற்றித் தெரிந்தவர்களையும் விசாரிப்பார்; அவர்களது வாக்குமூலங்களை எழுத்துப் பூர்வமாகப் பதிவுசெய்துகொள்வார்; இந்த விசாரணைக்குப் பிறகு, கைதி அல்லது கைதிகள் இத்தகைய தவறான நடவடிக்கைகள் எவற்றிலும் ஈடுபடவில்லை, இவற்றில் சம்பந்தப்பட்டதாக அவர்களைச் சந்தேகிக்க ஆதாரம் ஏதுமில்லை என்று குற்றவியல் நடுவருக்குத் தோன்றினால் அத்தகைய பிராமணனை அல்லது பிராமணர்களை உடனடியாக விடுவிக்கும்படி உத்தரவிடுவார்; இந்த முடிவுக்குத் தாம் வந்ததற்கான காரணங்களைப் பதிவு செய்து ஒழுங்குமுறைச் சட்டம் IX,1793, பிரிவு 17ல் குறிப்பிட்டுள்ளபடி சுற்றுலா நீதிமன்றத்துக்குத் தெரிவிப்பார். இவ்வாறின்றி,

உண்மையிலேயே குற்றம் இழைக்கப்பட்டது என்றும், சம்பந்தப்பட்ட கைதி அல்லது கைதிகள் பிரதான குற்றவாளிகளாகவோ அல்லது அக்குற்றங் களுக்கு உடந்தையாளர்களாகவோ இருக்கக் கூடுமென நம்புவதற்கு ஆதார மிருக்கிறது என்றும் குற்றவியல் நடுவருக்குத் தோன்றினால், அவனை அல்லது அவர்களை சிறையில் அடைப்பார் அல்லது பிணையத்தின் பேரில் விடுவார் (இதனை அவர் தமது உசிதம்போல் தேர்ந்து முடிவெடுக் கலாம்); சுற்றுலா நீதிமன்றத்தில் விசாரணைக்கு ஆஜராகும்படி பணிப் பார்; வாதியை நீதிமன்றத்துக்கு வந்து வழக்காடும்படியும், அதேபோல் சாட்சிகளையும் ஒழுங்குமுறைச் சட்டம் IX, 1793 பிரிவு 5ல் கண்டுள்ள படி நீதிமன்றத்தில் ஆஜராகி சாட்சியம் அளிக்கும்படியும் கட்டளை யிடுவார். மேலே கூறிய ஒழுங்குமுறைச் சட்டத்திலும், ஒழுங்குமுறைச் சட்டம் XVI,1795லும் நிர்ணயித்துள்ள முறையில் சுற்றுலா நீதிமன்றத் தில் வழக்கு விசாரணை நடைபெறும்; சாட்சியம் முடிந்ததும் நீதி மன்றத்தின் பண்டிட்டுக்கு அதாவது சட்டநிபுணருக்கு அது அனுப்பப்படும்; சாட்சியத்தில் அடங்கியுள்ள விஷயங்கள் கைதி அல்லது கைதிகள் தர்ணா செய்த குற்றத்தை நிரூபிக்கப் போது மானவையாக இருக்கின்றனவா என்பது குறித்து வியுவுஸ்தா அல்லது சாஸ்திர விளக்கத்தை அவர் எழுத்துமூலமாக அளிப்பார்; இத்தகைய வியுவுஸ்தா குற்றம் இழைக்கப் பட்டது உண்மைதான் என்பதை உறுதிப் படுத்துவதாக இருக்குமானால் கைதியை அல்லது கைதிகளை காசி மாகா ணத்திலிருந்து வெளியேற்றும் தண்டனையை அளிக்கும்; மேலும், எந்தக் கோரிக்கையை அடைவதற்காக இந்தக் குற்றம் இழைக்கப்பட்டதோ அந்தக் கோரிக்கையை எய்துவதற் கான உரிமைத்தகுதிகள் அனைத்தையும் ரத்துசெய்யும்; ஆனால் சுற்றுலா நீதிமன்றம் இந்தத் தண்டனையை நிஜாமத் அதாலத்துக்குத் தெரிவிக்கும் வரை அது நிறைவேற்றப்படமாட்டாது; நிஜாமத் அதாலத் இந்தத் தண்டனையை ஒன்று உறுதிசெய்யும் அல்லது மாகாணத்திலிருந்து கைதி அல்லது கைதிகளை வெளி யேற்றும் தண்டனையைக் குறைப்பது அல்லது எந்தச் சொத்தின் மீது உரிமைகொண்டாடி அவன் அல்லது அவர் கள் தர்ணா செய்தார்களோ அந்த உரிமையை அல்லது கோரிக்கையை நிராகரிப்பது ஆகிய இவ்விரண்டில் எது முறையானது என்று மேற்கண்ட நீதிமன்றத்துக்குத் தோன்றுகிறதோ அதைச் செய்யும்படிக் கட்டளையிடும்.

## தர்ணா செய்யும் குற்றம் பெருமளவுக்கு இழைக்கப்பட்டிருந்த போதிலும் அதனை உறுதி செய்வதற்கான எல்லா சட்ட ஆதாரங்களும் இல்லாத நிலைமையில் சுற்றுலா நீதிமன்றம் எத்தகைய நடைமுறையை மேற்கொள்வது

XII. சாட்சியத்தில் கூறப்பட்டிருக்கும் சந்தர்ப்ப சூழ்நிலைமைகள் தர்ணா செய்த குற்றம் புரிந்ததை உறுதிசெய்வதாக இல்லை என்று பிரிவு-2ன்படி பண்டிட் சமர்ப்பிக்கும் வியுவுஸ்தாவில் குறிப்பிடப்பட லாம்; இந்த நூல்களில் விவரிக்கப்பட்டுள்ளபடி தர்ணா என்பதற்கு சட்ட உருக்கொடுக்கும் வகையிலான சந்தர்ப்பச் சூழ்நிலைமைகளில் இந்தச் செயல்புரியப்படாதிருக்கக்கூடும், ஆனாலும் இந்தச் சொல்லின் பொதுவான அர்த்தத்தில் கைதி உண்மையில் தர்ணா செய்திருக்க லாம்; இத்தகைய சூழ்நிலைமையில் (1794 நவம்பர் 7ஆம் தேதியிட்டு நிர்வாகசபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரல் பிறப்பித்த உத்தரவின் படி) மேற்கண்ட நீதிமன்றம் கைதி அல்லது கைதிகளிடமிருந்து ஒரு

முச்சிலிக்கையை அல்லது வாக்குறுதியைப் பெறும்; இதன்படி, கைதி அல்லது கைதிகள் மீண்டும் தர்ணா செய்தாலோ அல்லது அதனையொத்த செயலைப் புரிந்தாலோ அவர்கள் சுற்றுலா நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தப் படுவார்கள், அந்த நீதிமன்றத்தின் நீதிபதிகள் அல்லது அவர்களின் பெரும்பாலோர் இவர்களின் இந்தச்செயல் தர்ணாவைப் போன்றது அல்லது அதற்கு ஒப்பானது என்று கருதுவார்களேயானால், மேற்கண்ட கைதி அல்லது கைதிகள் இந்த இரண்டாவது குற்றத்தைப் புரிந்தமைக் காக, நிர்வாகசபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரலின் உத்தரவுப் பிரகாரம், தர்ணா செய்ததற்கான முழுத் தண்டனையையும் பெறுவார்கள்; மாகாணத் திலிருந்து வெளியேற்றப்படுவார்கள்; பிரச்சினையிலுள்ள கோரிக்கை சம்பந்தமான சகல உரிமைகளையும் இழப்பார்கள்.

## தங்கள் பெண் குழந்தைகளை அன்ன ஆகாரமின்றிப் பட்டினி போட்டு வதைத்து மாண்டு மடியச் செய்யும் ராஜ்கூமார்கள் மீது எவ்வாறு வழக்குத் தொடர்வது

XIII. ராஜ்கூமார்கள் எனும் இனத்தினர் தங்கள் பெண்குழந்தை களைப் பட்டினிபோட்டு கொல்லும் வழக்கத்தைக் கைவிடுவதாக 1789 டிசம்பரில் உறுதிகூறினர்; தற்போது காசியில் மாநகர நீதிமன்றம், மாவட்ட நீதிமன்றம், சுற்றுலா நீதிமன்றம் முதலியவை அமைக்கப் பட்டுள்ள நிலைமையில், இந்த ஒழுங்குமுறைச்சட்டத்தின் முகப்புரை யில் கூறியுள்ளபடி, எந்த ஒரு ராஜ்கூமாரும் தன் பெண்குழந்தைக்கு ஆகாரம் எதுவும் தராமலோ அல்லது வேறு எந்த முறையிலோ அதன் மரணத்திற்குக் காரணமாக இருக்கும்பட்சத்தில், இது சம்பந்தமான நம்பகமான தகவல் கிடைத்ததும் அல்லது இத்தகைய குற்றம் இழைக்கப் பட்டிருக்கக்கூடும் என்று தெரிய வந்ததும் ஒழுங்குமுறைச் சட்டம் IX, 1793, பிரிவு 5-ன்படி அத்தகைய ராஜ்கூமாரைக் கைது செய்யும்படி குற்ற வியல் நடுவர் ஆணையிடுவார்; பிறகு, இந்தக் குற்றம் உண்மையி லேயே இழைக்கப்பட்டிருக்கிறது, இது சம்பந்தமாக கைதியை சந்தே கிப்பதற்குப் போதிய ஆதாரங்கள் இருக்கின்றன என்று குற்றவியல் நடுவ ருக்குத் தோன்றினால் கைதியை சுற்றுலா நீதிமன்றத்தின் விசாரணைக்கு அனுப்புவார்; அதே சமயம் மேலே கூறிய ஒழுங்குமுறைச் சட்டம் பிரிவு 5-ன்படி, இது சம்பந்தமாக புகார் செய்தவர் அல்லது தகவல் கொடுத்தவர் மற்றும் சாட்சிகள் நீதிமன்றத்தில் ஆஜராவதற்கு வேண்டிய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வார்; இதன் பேரில், கொலைக்குற்றங்கள் சம்பந்தமாக ஒழுங்குமுறைச் சட்டம் IX, 1793 மற்றும் ஒழுங்குமுறைச் சட்டம் XVI, 1795ல் குறிப்பிட்டுள்ள முறையில் கைதி மீது வழக்கு விசாரணை நடைபெறும்.

பிரிட்டிஷார் மேற்கொண்ட இரண்டாவது சமூக சீர்திருத்தச் சட்டம் வங்காள ஒழுங்குமுறைச் சட்டம் VI,1802ல் இடம்பெற்றுள் ளது. சௌகாரிலும் இதர இடங்களிலும் குழந்தைகளை உயிர்ப் பலி யிடுவதைத் தடுப்பதற்கான சட்டம் இது. அந்தச் சட்டம் வருமாறு:

# ஒழுங்குமுறைச் சட்டம் VI

## கி.பி. 1802

சௌகாரிலும் இதர இடங்களிலும் குழந்தைகள் உயிர்ப் பலி கொடுக்கப்படுவதைத் தடுப்பதற்கான ஒழுங்குமுறைச் சட்டம் 1802 ஆகஸ்டு 20-ஆம் தேதி நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரலால் இயற்றப்பட்டது.

1. சௌகார்தீவிலும், பன்ஸ்பர்யா, சௌகாத் மற்றும் கங்கை சமவெளியிலுள்ள இதர இடங்களிலும் ஆற்றில் மூழ்கடித்தோ, சுறா மீன்களுக்கு இரையாகக்கொடுத்தோ குழந்தைகளை உயிர்ப்பலியிடும் மனிதத் தன்மையற்ற, மிகக் கொடிய, குரூரமான குற்றம் இழைக்கப்படுவதாக நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலுக்குப் புகார்கள் வந்துள்ளன. அதிலும் குறிப்பாக சௌகாரில் இத்தகைய உயிர்ப்பலிகள் குறிப்பிட்ட காலங்களில் நடைபெறுகின்றன; அதாவது நவம்பரிலும் ஜனவரியிலும் பௌர்ணமி நாளன்று நடைபெறுகின்றன. இத்தகைய சந்தர்ப்பங்களில் வயதுவந்தவர்கள்கூடப் பலியாகின்றனர். சௌகாரில் கடலில் எறியப்படும் குழந்தைகள் பொதுவாகக் காப்பற்றப்படுவதில்லை; மாறாக, இந்த உயிர்ப்பலி முழுஅளவுக்கு நிறைவேற்றப்படுகிறது; சில சந்தர்ப்பங்களில் இதுமிகவும் அட்டூழியமான முறையில் நடைபெறுகிறது. குருட்டு நம்பிக்கைதான் இந்தக் கொடிய பழக்கத்துக்கு ஆதார அடித்தளம். இத்தனைக்கும் இந்துச் சட்டம் இதனை ஆதரிக்கவில்லை; ஏனைய சமூக அமைப்புகளின் மிகப் பெரும்பாலான மக்களின் ஆதரவும் இதற்கு இல்லை; அதேபோல் எந்த இந்து அரசாங்கமும் சரி, முகமதிய அரசாங்கமும் சரி ஒருபோதும் இக்குரூர பழக்கத்துக்குப் பச்சைக்கொடி காட்டியதில்லை. எனவே, இத்தகைய காட்டுமிராண்டித்தனமான குற்றங்களைப் புரிபவர்கள் தண்டனைக்கு உரியவர்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இதுகாலம் காலமாகக் கடைபிடிக்கப்பட்டு வந்த ஒரு பழக்கம் என்று கூறி அது மன்னிக்கப்படவேண்டும் என்பது எவ்வகையிலும் ஏற்கத்தக்கதல்ல. ஆதலால் இப்படிப்பட்ட ஈவுஇரக்கமற்ற, மனிதத்தன்மையற்ற வழக்கத்தைக் கண்டிப்பானமுறையில் தடுத்து நிறுத்தும் பொருட்டு நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்ஜெனரல் பின்கண்ட ஒழுங்குமுறைச் சட்டத்தைப் பிறப்பித்துள்ளார்; அச்சட்டம் பிரகடனம் செய்யப்பட்ட நாளிலிருந்து வங்காளம், ஒரிசா, காசி ஆகிய மாகாணங்களில் அமலில் இருக்கும்.

11. எந்த ஒரு நபரும் அல்லது நபர்களும் எந்த ஒரு குழந்தையையோ அல்லது வயதுக்கு வராத நபரையோ உயிரைப் பறிக்கும் நோக்கத்தோடு திட்டமிட்டு அவனது அல்லது அவளது சம்மதமின்றி கடலிலோ, கங்கை ஆற்றிலோ, வேறு எந்த நதியிலோ, நீர்நிலையிலோ எறிந்து, அதன் விளைவாக அவன் அல்லது அவள் மூழ்கடிக்கப்பட்டாலோ, சுறா மீன்களால் அல்லது முதலைகளால் கொல்லப்பட்டாலோ அல்லது வேறு ஏதேனும் வகையில் அழிந்தாலோ, இதற்குக் காரணமான நபர் அல்லது நபர்கள் திட்டமிட்டுக் கொலை செய்த குற்றத்துக்கு ஆளாவார்கள்; அவர்கள்மீதுள்ள குற்றச்சாட்டு நிரூபிக்கப்பட்டால் மரண தண்டனை

விதிக்கப்படுவார்கள்; இத்தகைய கொடுஞ்செயலைப் புரிவதற்குத் துணை யாக, தூண்டுதலாக இருந்த நபர்கள் அனைவரும் கொலைக்கு உடந்தை யாக இருந்தவர்களாகக் கருதப்பட்டு அதற்கேற்ற தண்டனைக்குள்ளாவார் கள். இந்தப் பிரிவில் குறிப்பிடப்பட்டிருக்கும் குற்றங்களுக்கு நேரடி யானப் பொறுப்பாளிகள் மற்றும், அக்குற்றங்களுக்கு உடந்தையாக இருந் தவர்கள் ஆகியோர் மீது நடைபெற்ற விசாரணை விவரங்கள் நிஜாமத் அதாலத் நீதிமன்றத்திடம் சமர்ப்பிக்கப்படும்; இதன்பேரில் அந்த நீதி மன்றம் சட்டஅதிகாரிகளின் ஃபத்வா எதுவாக இருந்தபோதிலும் ஒழுங்கு முறைச் சட்டம் IX, 1793ன் LXX பிரிவுப்படி உரிய தண்டனையை விதிக்கும் (அல்லது ஒழுங்குமுறைச்சட்டம் IX, 1793ன் பிரிவு LXXIX பிரகாரம் கருணை காட்டுதற்குரியவர் என்று எந்த ஒரு கைதியும் நீதி மன்றத்துக்குத் தோன்றி னால் அதுபற்றி நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்- ஜெனரலுக்கு முறைப்படித் தெரிவிக்கும்.

III. முந்தைய பிரிவில் குறிப்பிட்டுள்ளபடி வயதுக்கு வராத ஒரு குழந்தையோ, நபரோ தண்ணீரில் வீசப்பட்டு சாவிலிருந்து மீட்கப்பட் டாலோ அல்லது வேறு ஏதேனும் வகையில் தப்பினாலோ அவன் அல்லது அவளது உயிருக்கு இவ்விதம் முன்னின்று அபாயம் விளைவித்தவர் களும், இத்தகைய செயலுக்கு உதவியாகவும் உடந்தையாகவும் இருந்த வர்களும் பெரிய தீயசெயலைப் புரிந்த குற்றத்துக்குள் ளாவார்கள், சட்ட அதிகாரிகளின் ஃபத்வாப்பிரகாரம் குற்றத்தின் தன்மையையும் அது புரியப்பட்ட சந்தர்ப்ப சூழ்நிலைமைகளையும் பொறுத்து சுற்றுலா நீதி மன்றம் தண்டனைகளை அறிவிக்கும்.

IV. குழந்தைகளை உயிர்ப்பலியிடும் இந்தக்கொடிய பழக்கம் இதுவரை கடைப்பிடிக்கப்பட்டு வந்த மாவட்டங்களில் அந்த வழக்கம் தொடர்ந்து நீடிப்பதைத் தடுப்பதில் விழிப்போடிருக்கும்படியும், இதுவரை எங்கு இத்தகைய உயிர்ப்பலிகள் நடைபெற்று வந்துள்ளனவோ அந்த இடங்களில், அந்தக் குறிப்பிட்ட காலங்களில் இந்த ஒழுங்குமுறைச் சட் டத்தின் விதிகளைப் பிரகடனப்படுத்தும்படியும் சம்பந்தப்பட்ட மாவட் டங்களின் குற்றவியல் நடுவர்கள் வலியுறுத்தப்படுகிறார்கள்.

மற்றொரு இரண்டாவது சமூக சீர்திருத்தச் சட்டம் சதி என்னும் உடன்கட்டை ஏறும் வழக்கம் சம்பந்தப்பட்டதாகும். இச் சட்டம் வங்காள ஒழுங்குமுறைச் சட்டம் XVII, 1829 எனப்படு கிறது. அச்சட்டம் வருமாறு:

## ஒழுங்குமுறைச் சட்டம் XVII கி.பி.1829

இந்துக்களின் விதவைகளை உயிரோடு எரிக்கும் அல்லது புதைக்கும் சதி என்னும் வழக்கம் சட்ட விரோதமானது, குற்றவியல் நீதிமன்றங்களால் தண்டிக்கப்படத்தக்கது என்று இந்த ஒழுங்குமுறைச் சட்டம் பிரகடனம் செய்கிறது. 1829 டிசம்பர் 4 ஆம் தேதி நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்ஜெனரல் பிறப்பித்த இந்த ஒழுங்குமுறைச் சட்டம் கூறுவதாவது:

## முகப்புரை

I. இந்துக்களின் விதவைகளை உயிரோடு எரிக்கும் அல்லது புதைக்கும் சதி என்னும் பழக்கம் மனித உணர்வுகளுக்கு முற்றிலும் எதிரானதும், வெறுப்பூட்டுவதும், அருவருப்பானதுமாகும்; இது இன்றியமையாத கடமை என்று இந்து சமயத்தில் எங்குமே வலியுறுத்தப்படவில்லை; மாறாக, விதவைகள் தூய்மையான, அமைதியான வாழ்க்கை வாழ வகை செய்யப்பட வேண்டும் என்றே முக்கியமாக அறிவுறுத்தப் படுகிறது; இந்தியாவெங்கணும் மிகப் பெரும்பாலான மக்கள் இந்த வழக்கத்தை ஆதரிக்கவில்லை, அனுஷ்டிக்கவும் இல்லை; விரிந்து பரந்த சில மாவட்டங்களில் இந்த வழக்கம் அறவே இல்லை; சில மாவட்டங்களில் இது அடிக்கடி நிகழ்கிறது; இங்கு நடைபெறும் அட்டூழியங்களுக்கு, அக்கிரமங்களுக்கு ஓர் அளவே இல்லை, வரையறையே இல்லை; இத்தகைய கொடூர நிகழ்ச்சிகள் இந்துக்களுக்கே பெரிதும் அதிர்ச்சியூட்டுவதாக இருக்கின்றன; அவர்களுடைய கண்ணோட்டத்தில் இவை சட்ட விரோதமானவையாகவும், அவக்கேடானவையாகவும் தோன்றுகின்றன. இத்தகைய தீய செயல்களைத் தவிர்ப்பதற்கும் தடுப்பதற்கும் இதுவரை மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை; இந்த வழக்கத்தை அறவே ஒழித்துக்கட்டினாலொழிய இந்தக் கேடுகளுக்கு முடிவு கட்டமுடியாது என்ற திட்டவட்டமான முடிவுக்கு நிர்வாக சபையுடன்கூடிய கவர்னர்ஜெனரல் வந்தார். எல்லாப்பிரிவு மக்களும் தங்களுடைய சமய பழக்கவழக்க மரபுகளைப் பின்பற்றுவது உறுதி செய்யப்பட வேண்டும், ஆனால் அவை நீதியின், நேர்மையின், மனிதகுலத்தின் தலையாய நெறிமுறைகளை மீறுவதாக இருத்தலாகாது; இதுவே இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்க முறையின் முதலாவதானதும் மிக முக்கியமானதுமான கோட்பாடுகளில் ஒன்றாக உள்ளது; இந்தக் கோட்பாட்டிலிருந்து விலகிச் செல்லக்கூடாது என்ற உறுதியோடு நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்ஜெனரல் பின்கண்ட விதிமுறைகளை வகுத்தளிப்பது உசிதமானது என்று கருதினார்; இவை சட்டமாக்கப்பட்டு, அவை பிரகடனம் செய்யப்பட்ட சமயத்திலிருந்து வில்லியம் கோட்டையின் ஆட்சிவட்டகைக்குட்பட்ட பிரதேசங்களில் நடைமுறைக்கு வரும்.

II. சதி வழக்கம் அதாவது இந்துக்களின் விதவைகளை உயிரோடு எரிக்கும் அல்லது புதைக்கும் வழக்கம் சட்டவிரோதமானதென்றும், குற்றவியல் நீதிமன்றங்களால் தண்டிக்கப்படத்தக்கது என்றும் இதன் மூலம் அறிவிக்கப்படுகிறது.

III. முதலாவதாக - மேலே கண்டபகுதியில் விவரிக்கப்பட்டுள்ளபடி ஏதேனும் உயிர்ப்பலி தரமுயற்சிநடைபெற்றால் அதுபற்றிய தகவலை மிக அருகிலுள்ள காவல்நிலையத்தின் அதிகாரிகளுக்கு உடனடியாகத் தெரிவிப்பதற்கு எல்லா ஜமீன்தார்களும், தாலுக்தார்களும், மால்குஜார்ரிகானாலும் லாக்கிராஜ்களானாலும் அனைத்து நில உடமையாளர்களும், எல்லா சார்புநிலை தாலுக்தார்களும், நைபுகளும், இதர ஸ்தல ஏஜண்டுகளும், எல்லா வருவாய்த்துறை, நிலவரி வசூல் செய்யும் அதிகாரிகளும், எல்லா முண்டுல்களும் அல்லது கிராமத் தலையாரிகளும் கடமைப்பட்டுள்ளனர் என்பது இதன்மூலம் அறிவிக்கப்படுகிறது; மேலே கண்ட தகவலைத் தருவதில் வேண்டுமென்றே அலட்சியம் காட்டும் அல்லது தாமதம் செய்யும் எந்த ஜமீன்தாரும் அல்லது மேலே குறிப்பிடப்

பட்டிருக்கும் எந்த நபர்களும் குற்றவியல் நடுவரால் அல்லது துணை குற்றவியல் நடுவரால் இருநூறு ரூபாய்க்கு மேற்படாதவாறு அபராதம் விதிக்கப்படுவார்கள், அபராதம் கட்டத்தவறினால் ஆறுமாதத்துக்கு மேற்படாத காலத்துக்கு சிறைதண்டனை அனுபவிப்பார்கள்.

## உத்தேச உயிர்ப்பலி குறித்த தகவல் கிடைத்ததும் காவல்துறை தரோக்கள் எவ்வாறு செயல்பட வேண்டும்

இரண்டாவது- இந்த ஒழுங்குமுறைச் சட்டத்தின்படி சட்ட விரோத மானது என்று அறிவிக்கப்பட்ட உயிர்ப்பலி நடைபெறக்கூடும் என்ற தகவல் கிடைத்ததுமே காவல்துறை தரோக்கா, ஒன்று அவரே ஸ்தலத் திற்கு விரைந்து செல்ல வேண்டும் அல்லது தம்முடைய மோஹரி ரிரையோ அல்லது ஜமேதாரரையோ இந்து மதத்தைச் சேர்ந்த ஒன்று அல்லது அதற்குமேற்பட்ட புர்குந்தெளஸ்சுகளுடன் அனுப்ப வேண்டும். உடன்கட்டை ஏறும் நிகழ்ச்சியை நடத்துவது சட்டவிரோதமானது என்பதையும், இதனைப் பிடிவாதமாக நடத்தினால் குற்றவியல் நீதிமன்றங் களால் தண்டனைக்குள்ளாக நேரும் என்பதையும் எடுத்துக்கூறி கலைந்து செல்லும்படி அங்கு கூடியுள்ளவர்களிடம் வலியுறுத்திச் சொல்வது காவல் துறை அதிகாரிகளின் கடமையாகும். இதனையும் மீறி உடன்கட்டை நிகழ்ச்சியை நடத்த அங்கு கூடியிருப்பவர்கள் முற்படுவார்களேயானால், சட்டரீதியாக தங்களுக்குள்ள அதிகாரங்கள் அனைத்தையும் பயன்படுத்தி இந்த உடன்கட்டை ஏறும் நிகழ்ச்சி நடைபெறாதபடித் தடுப்பதும், இதனை நடத்துவதைத் தூண்டி ஊக்குவிக்கும் பிரதான நபர்களைக் கைது செய்வதும் காவல்துறை அதிகாரிகளின் கடமையாகும்; இவ்வாறு அவர்களைக் கைது செய்யக் காவல்துறை அதிகாரிகளால் இயலாது போனால், அந்த நபர்களது பெயர்களையும் இருப்பிடங்களையும் கண் டறிந்து, உடனடியாக இது சம்பந்தப்பட்ட முழு விவரங்களையும் அவர்கள் குற்றவியல் நடுவருக்கோ அல்லது துணை குற்றவியல் நடுவருக்கோ தெரிவித்து, அவரது உத்திரவுகளை எதிர்நோக்க வேண்டும்.

## உடன்கட்டை ஏறும் நிகழ்ச்சி நடைபெற்ற பிறகே அது சம்பந்தப்பட்ட தகவல் கிடைக்கும்போது எவ்வாறு நடந்து கொள்வது

மூன்றாவதாக இந்த ஒழுங்குமுறைச் சட்டத்தின்படி சட்ட விரோத மானதென அறிவிக்கப்பட்ட உடன்கட்டை ஏறும் நிகழ்ச்சி பற்றிய தகவல் அது நிறைவேறுவதற்கு முன்னர் காவல்துறை அதிகாரிகளுக்குக் கிடைக்கவில்லை என்றாலோ அல்லது அவர்கள் ஸ்தலத்திற்குச் செல்லு முன்னரே அது நிறைவேற்றப்பட்டுவிட்டது என்றாலோ அப்போதும் கூட அவர்கள் அந்த நிகழ்ச்சி நடைபெற்ற சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பற்றி முழுவிசாரணை செய்வார்கள்; பின்னர் தங்களுக்கு மேலே உள்ள குற்றவியல் நடுவருக்கோ அல்லது துணை நடுவருக்கோ, இந்த விவரங்கள் அனைத்தையும் உடன்டியாகத் தெரிவித்து அவரது ஆணைகளை எதிர்பார்த்திருப்பார்கள்.

IV. முதலாவதாக: மேற்கண்ட பிரிவில் இடம்பெற்றுள்ள விதிமுறை களின்படி, காவல்துறை அதிகாரிகளிடமிருந்து அறிக்கைகள் கிடைத்ததும்

உடன்கட்டை ஏறும் நிகழ்ச்சி எங்கு நடைபெற்றதோ அந்தப் பகுதியைச் சேர்ந்த குற்றவியல் நடுவரோ அல்லது துணை குற்றவியல் நடுவரோ இந்த சம்பவம் நடைபெற்ற சந்தர்ப்ப சூழ்நிலைமைகள் பற்றி விசாரணை நடத்துவார், இதில் சம்பந்தப்பட்ட தரப்பினரை சுற்றுலா நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தி விசாரணைக்குட்படுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்வார்.

## ஓர் இந்து விதவையை பலி கொடுப்பதற்கு துணையாகவும் உடந்தையாகவும் இருந்த நபர்கள் கொலைக் குற்றவாளிகளாகக் கருதப்பட்டுத் தண்டனை பெறுவதற்கு உரியவர்களாவார்கள்.

இரண்டாவதாக - இந்த ஒழுங்குமுறைச் சட்டம் பிரகடனப்படுத்தப் பட்ட பிறகு ஓர் இந்து விதவையை - அவளே முன்வந்து இணங்கினாலும் இணங்காவிட்டாலும் - உயிருடன் எரித்தோ, புதைத்தோ உயிர்ப்பலி யிடுவதற்குதுணையாகவும் உடந்தையாகவும் இருந்த அனைவரும் கொலைக் குற்றம் செய்தவர்களாகக் கருதப்பட்டு, அபராதமோ, சிறைத் தண் டனையோ அல்லது இவை இரண்டுமோ விதிக்கப்படுவார்கள் என்று இதன் மூலம் அறிவிக்கப்படுகிறது; நடைபெற்ற சம்பவத்தின் இயல்பையும், சந்தர்ப்ப சூழ்நிலைமைகளையும், சட்டத்தை மீறியவர் செய்துள்ள குற்றத்தின் அளவையும் பொறுத்து சுற்றுலா நீதிமன்றம் இந்தத் தண் டனையை நிர்ணயிக்கும்; ஆனால் அதேசமயம் உடன்கட்டை ஏறிய பெண் தான் மரணமடைவதற்கு உதவும்படிக் கேட்டுக்கொண்டதற்கு இணங் கவே தாங்கள் உதவியதாக இவர்கள் நியாயப்படுத்துவதை நீதிமன்றம் ஏற்காது.

மூன்றாவதாக மேலே கூறிய குற்றத்திற்காக சுற்றுலா நீதிமன்றத்திற்கு விசாரணைக்காக அனுப்பப்பட்டவர்கள் பிணையத்தின்பேரில் விடுவிக்கப் படலாம் அல்லது அவ்வாறு பிணையத்தின்பேரில் அவர்களை விடுவிக்க மறுக்கலாம்; பிணையத்தின் பேரில் விடுதலை செய்வது சம்பந்தமாக நடப்பிலுள்ள பொதுவிதிகளைப் பொறுத்து குற்றவியல் நடுவரோ அல்லது துணைகுற்றவியல் நடுவரோ தமது உசிதம்போல் இது விஷயத்தில் நடந்துகொள்ளலாம்.

## சில சந்தர்ப்பங்களில் மரணதண்டனை விதிக்கப்படுவதிலிருந்து நிஜாமத் அதாலத் நீதிமன்றம் விலக்கப்படவில்லை.

V. மயக்கமூட்டப்பட்ட நிலையிலும், உணர்வு மழுங்கச் செய்யப் பட்ட நிலையிலும் தனது சுயவிருப்பத்தை நிறைவேற்ற முடியாதவளாக இருந்த ஓர் இந்து விதவையை உயிரோடு எரிப்பதில் அல்லது புதைப் பதில் உதவியாக, உடந்தையாக இருந்த, இது விஷயத்தில் வன்முறை யையும் நிர்ப்பந்தத்தையும் பிரயோகித்த நபர்களுக்கு நிஜாமத் அதாலத் மரணதண்டனை விதிக்கமுடியாதபடித் தடுக்கும் எதுவும் இந்த ஒழுங்கு முறைச் சட்டத்தில் இல்லை என்பதையும் இங்கு அறிவிப்பது அவசிய மாகிறது. இழைக்கப்பட்ட குற்றத்தின் ஒட்டுமொத்த இயல்பு கைதிக்கு எதிராக எந்த அளவுக்கு இருக்கிறது என்ற சந்தர்ப்ப சூழ்நிலைகளைக் கணக்கிலெடுத்துக் கொண்டு நீதிமன்றம் அவன் அல்லது அவள் சம்பந்த மாக உரிய கருணையைக் காட்டும்.

மூன்றாவது சமூக சீர்திருத்தச் சட்டம் சாதித் தகுதியின்மைகளை அகற்றும் XXI, 1850 சட்டமாகும். அச்சட்டம் வருமாறு:

## சாதித் தகுதியின்மைகளை அகற்றும் சட்டம் XXI, 1850

*வங்காளச் சட்டத் தொகுப்பின் ஒழுங்குமுறைச் சட்டம் VII, 1832 பிரிவு 9-இன் கோட்பாட்டை கிழக்கிந்தியக் கம்பெனி அரசாங்கத்தின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்கள் முழுவதற்கும் விஸ்தரித்தல்*

### முகப்புரை

''எந்த உரிமையியல் வழக்கிலும் அந்த வழக்கு சம்பந்தப்பட்ட தரப்பினர் வெவ்வேறு சமயங்களைச் சேர்ந்தவர்களாக இருக்கக் கூடும், ஒரு தரப்பினர் இந்து சமயத்தைச் சேர்ந்தவராகவும், இன்னொரு தரப்பினர் முகமதிய சமயத்தைச் சேர்ந்தவராகவும் இருக்கக்கூடும் அல்லது வழக்கில் சம்பந்தப்பட்ட ஒன்று அதற்கு மேற்பட்ட தரப்பினர் முகமதிய சமயத்தைப் பின்பற்றாதவர்களாகவோ அல்லது இந்துசமயத்தைப் பின்பற்றாதவர்களாகவோ இருக்கக்கூடும். இந்நிலைமையில் இத்தகைய தரப்பு அல்லது தரப்பினர்கள் தங்களுக்குரிய சொத்துரிமையை அடைவதைப் பறிக்கும் வகையில் இந்த சமயங்களின் சட்டங்கள் செயல்படுவதை அனுமதிக்கக் கூடாது என வங்காள சட்டத் தொகுப்பின் ஒழுங்குமுறைச் சட்டம் VII, 1832, பிரிவு 9 கூறுகிறது; இதனாலும், இந்தச் சட்டத்தின் கோட்பாட்டை கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசம் முழுவதிலும் விஸ்தரிப்பது பயனுள்ளதாக இருக்கும் என்பதாலும் பின்கண்டவாறு சட்டம் இயற்றப்படுகிறது:-

### மதம் மாறியதன் காரணமாகவோ, சாதிநீக்கம் செய்யப்பட்டதன் காரணமாகவோ ஒருவரது உரிமைகளைப் பறிக்கும் அல்லது பாதிப்புகளை ஏற்படுத்தும் சட்டம் அல்லது பழக்க மரபு செயல்படுத்தப்படுவதைத் தடுத்து நிறுத்தல்

1. எந்த ஒரு நபரும் தனது மதத்தைத் துறப்பதன் காரணமாகவோ, சமூகப் பகிஷ்காரம் செய்யப்படுவதன் காரணமாகவோ அல்லது சாதிநீக்கம் செய்யப்படுவதன் காரணமாகவோ அவருக்குள்ள பல்வேறு உரிமைகளை அல்லது சொத்துரிமைகளைப் பறிக்கும் அல்லது மரபுரிமை அடைவதைத் தடுக்கும் அல்லது இதரவகைகளில் ஊறுசெய்யும் தற்போது நடைமுறையிலுள்ள எந்தச் சட்டமும் அல்லது பழக்க மரபும்

கிழக்கிந்தியக் கம்பெனியின் நீதிமன்றங்களிலும், மன்னர் சாசனத்தின் மூலம் மேலே கூறிய பிரதேசங்களில் அமைக்கப் பட்டுள்ள நீதிமன்றங்களிலும் செல்லுபடியாகத்தக்கது அல்ல.''

நான்காவது சமூக சீர்திருத்தச் சட்டம் இந்து விதவைகளின் மறுமணச் சட்டம் XV, 1856 ஆகும். அந்தச்சட்டம் பின்வருமாறு கூறுகிறது:-

### இந்து விதவைகள் திருமணம் செய்துகொள்வதற்கு இடையூறாக உள்ள எல்லாச் சட்டத் தடைகளையும் அகற்றும் சட்டம்

#### முகப்புரை

கிழக்கிந்தியக் கம்பெனி அரசாங்கத்தின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்களில் சட்டப்படி அமைக்கப்பட்டுள்ள உரிமையியல் நீதிமன்றங்களில் தற்போது நடைமுறைப்படுத்தப்பட்டுவரும் சட் டத்தின் பிரகாரம் சிற்சில விதிவிலக்குகள் நீங்கலாக மற்றபடி இந்து விதவைகள் ஒருமுறை திருமணம் செய்துகொண்டு விட்டால் சட்டப்படி செல்லக்கூடிய இரண்டாவது திருமணம் செய்து கொள்வ தற்கு இயலாதவர்களாக இருப்பதாலும், இத்தகைய விதவைகளுக்கு இரண்டாவது திருமணத்தின் மூலம் பிறக்கும் குழந்தைகள் முறை கேடாகப் பிறந்தவர்களாகக் கருதப்படுவதாலும், அவர்கள் தங்க ளுக்குரிய சொத்துக்களை வாரிசுரிமையாக அடைய முடியாதவர்களாக இருப்பதாலும்; மற்றும்

இந்தச் சட்டத் தகுதியின்மைகள் தங்களது சமயக் கோட்பாடு களின் வியாக்கியானத்துக்கு இசைந்தவையாக இருந்தாலும், நீதி மன்றங்களில் செயல்படுத்தப்படும் சட்டம் இந்துக்கள் தங்கள் சொந்த மனச்சான்றால் உந்தப்பட்டு வேறுபட்டதொரு வழக் கத்தைக் கைக்கொள்வதைத் தடுக்கக் கூடாது என்று பல இந்துக்கள் கருதுவதாலும்; மற்றும்

இந்தச் சட்டத் தகுதியின்மைகளிலிருந்து, அதுபற்றி முறையீடு செய்யும், இந்துக்கள் அனைவரையும் விடுவிப்பது நியாயம் என்ப தாலும், இந்து விதவைகளின் திருமணத்துக்கு இடையூறாக உள்ள அனைத்துச் சட்டத் தடைகளையும் அகற்றுவது நல்லொழுக்கங் களை வளர்ப்பதற்கும், பொதுநலத்துக்கும் உகந்தது என்பதாலும் பின்கண்டவாறு சட்டம் இயற்றப்படுகிறது:-

## இந்து விதவைகளின் திருமணம் சட்டபூர்வமானதாக்கப்படுகிறது

*1. ஒரு பெண் ஏற்கெனவே இன்னொருவருக்குத் திருமணம் செய்யப்பட்டிருந்த நிலையில் அல்லது நிச்சயதார்த்தம் செய்யப்பட்டிருந்த நிலையில் இத்தகைய திருமணத்தின்போது அந்த நபர் இறந்துபோனால் அதன் காரணமாக இத்திருமணம் செல்லுபடியற்றதாகாது; இந்தத் திருமணத்தின் மூலம் பிறந்த குழந்தையும் முறைகேடாகப் பிறந்த குழந்தை ஆகாது; நடைமுறையிலுள்ள எந்த இந்து வழக்கமும் இந்துச் சட்டமும் எத்தகைய வியாக்கியானம் செய்த போதிலும் இத்திருமணம் செல்லுபடியாகும்.*

## மறுமணம் செய்து கொண்ட விதவை இறந்துபோன தனது கணவனின் சொத்துக்களுக்கு உரிமை கொண்டாட முடியாது.

*2. ஒரு விதவைப் பெண் காலஞ்சென்ற தனது கணவனது சொத்திலிருந்தும், கணவனுக்கு மரபுரிமையாகக் கிடைக்கும் சொத்திலிருந்தும், அதேபோல் அவள் பெயரில் உயில் மூலம் எழுதி வைக்கப்பட்ட சொத்திலிருந்தும் கிடைக்கும் பங்கை எவ்வகையிலும் பராதீனம் செய்ய முடியாது என்பது மட்டுமல்ல, அவள் மறுமணம் செய்து கொண்டால் இவற்றில் அவளுக்குள்ள எல்லா உரிமைகளும் ரத்தாகிவிடும்; காலஞ்சென்ற அவளது கணவனது அடுத்த சந்ததியாரே அவள் மரணத்திற்குப் பிறகு இவற்றை அனுபவிப்பார்கள்.*

ஐந்தாவது சமூக சீர்திருத்தம் ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வதற்கு வயது வரம்பை நிர்ணயித்துள்ளது. இது சம்பந்தமாக பிறப்பிக்கப்பட்ட சட்டம் XLV, 1860ன் (குற்ற விசாரணை முறைச் சட்டம்) பின்வருமாறு கூறுகிறது:

*''இங்கு குறிப்பிடப்பட்டிருக்கும் விதிவிலக்கு தவிர, பின்கண்ட ஐந்து சந்தர்ப்பங்களில் ஏதேனும் ஒன்றில் ஒரு பெண்ணுடன் ஒருவன் உடலுறவு கொண்டால் அவன் 'பலாத்காரம்' அல்லது 'கற்பழிப்பு' செய்த குற்றத்தைப் புரிந்ததாகக் கருதப்படுவான்:*

*முதலாவது: அவளுடைய விருப்பத்துக்கு மாறாக,*

*இரண்டாவது: அவளுடைய சம்மதம் இயலாமல்.*

*மூன்றாவது: அவளது சம்மதத்துடன், ஆனால் தான் அவளுடைய கணவன் அல்ல என்று அவனுக்குத் தெரிந்திருந்தும், சட்ட ரீதியாக தான் திருமணம் செய்து கொள்ளவிருப்பவன் இவன் என்று அவள் நம்புவதால் அளிக்கப்பட்ட சம்மதமே இது.*

*நான்காவது: (காலியாக விடப்பட்டுள்ளது - ஆசிரியர்)*

*ஐந்தாவது: அவள் பத்து வயதுக்கு உட்பட்டவளாக இருக்கும்போது அவளுடைய சம்மதத்துடனோ, சம்மதம் இல்லாமலேயோ.*

விளக்கம்: (காலியாக விடப்பட்டுள்ளது- ஆசிரியர்).

விதிவிலக்கு: பத்து வயதுக்குக் கீழே இல்லாத தன்னுடைய சொந்த மனைவியுடன் ஒருவன் உடலுறவு கொள்வது பலாத்காரம் அல்ல.

## தீண்டப்படாதவர்களின் நிலைமை என்ன?

சாதியும் தீண்டாமையும் இந்தியாவைப் பீடித்துள்ள இரண்டு மிகப் பெரிய கேடுகளாகும்; அவலங்களாகும். சாதிமுறை இந்து சமுதாயம் முழுவதையும் முடக்கி வைத்திருக்கிறது. தீண்டாமை ஏராளமான மக்களை அடக்கி ஒடுக்கி வைத்துள்ளது. எனினும் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்த இரண்டு கொடிய தீங்குகள் குறித்து முற்றிலும் அலட்சியமாக இருக்கிறது; கண்டும் காணாததுமாக இருக்கிறது. சாதி அல்லது தீண்டாமை சம்பந்தமாக ஏதேனும் சட்டம் இருக்கிறதா என்று எவரேனும் இந்திய சட்டத் தொகுப்பைத் துருவித் துருவி, அலசி அலசி ஆராயும்போது பெருத்த ஏமாற்றமே அடைவர். சாதியும் தீண்டாமையும் சமூகம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் என்பதில் ஐயமில்லை. மக்கள் சாதிவிட்டுச் சாதி கலப்புத் திருமணம் செய்து கொள்ளும்போது, ஒன்றுகூடி அமர்ந்து உண்ணும்போது அவை மாயமாய் மறைந்துபோகும். இன்னொருவருடன் சேர்ந்து உண வருந்தும்படிச் சட்டம் கட்டாயப்படுத்த முடியாது. அதேபோன்று, சாதி விட்டுச் சாதி திருமணம் செய்து கொள்ளும்படி சட்டம் யாரையும் நிர்ப்பந்திக்கவும் முடியாது என்பது உண்மையே. ஆனால் அதே சமயம் ஒருவர் தனது சாதிக்கு வெளியே திருமணம் செய்து கொள்வதை சாதி எதிர்ப்பதை சட்டம் தடுக்க முடியும் என்பதையும் மறந்து விடக் கூடாது. சாதி அமைப்பு முறை நீடித்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம் என்ன? ஒரு சாதியில் உள்ளவர்கள் சாதி விதிகளை, சாதிக் கட்டுப்பாட்டை மீறினால் அவர்களைச் சமூகப் பகிஷ்காரம் செய்து தண்டிப்பதற்கு சாதியால் முடியும் என்பதே இதற்குக் காரணம். இந்நிலைமையில், சமூகப் பகிஷ்காரம் செய்வது ஒரு குற்றம் என்று அறிவிக்கும் ஒரு சட்டத்தை இயற்றுவது முற்றிலும் சாத்தியமே. இது இப்படியென்றால் தீண்டாமையைப் பொறுத்த வரையில், அது விளைவிக்கும் தகுதியின்மைகள் வெறும் சமூகத் தன்மை கொண்டவை அல்ல. அவை அடிப்படையில் சிவில் உரிமைகள் சம்பந்தப்பட்டவை. பள்ளிக்கூடங்களில் சேர்க்க மறுப்பது, பொதுக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுப்பதைத் தடுப்பது, பொதுப் போக்குவரத்து வாகனங்களில் பயணம் செய்ய இயலாதிருப்பது, அரசுப் பணிகளில் சேர முடியாதிருப்பது போன்ற இவையாவும் சிவில் உரிமைகள் சம்பந்தமான தகுதியின்மைகள். தீண்டப்படாதவர்களது சிவில் உரிமைகளைப் பாதுகாப்பதற்காகவாவது பிரிட்டிஷ் அரசாங்கம்

சட்டம் இயற்றியிருக்க வேண்டும். இவ்வாறு செய்வது சாத்திய மானதும் கூட. சாதி தகுதியின்மைகள் ஒழிப்புச் சட்டம் போன்ற ஒன்றை இயற்றியிருந்தால்கூடப் போதுமானதாக இருந்திருக்கும். ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கமோ இந்த இரண்டு கொடிய தீமைகளும் நாட்டில் இல்லை என்பதுபோல் நடந்து கொண்டது. 1861 ஆம் ஆண்டுவாக்கிலேயே இந்தியாவில் சட்டமன்றங்கள் அமைக்கப் பட்டுவிட்ட போதிலும் கூட, ஒவ்வொரு சமூகப் பிரச்சினைகளையும் பற்றி அவை சட்டங்களை இயற்றிவந்த போதிலும்கூட, பொது மக்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைப் பற்றி விவாதித்து வந்த போதிலும் கூட இரண்டே இரண்டு சந்தர்ப்பங்களில் தவிர மற்றபடி தீண்டப்படாதவர்களைப் பற்றி எந்தப் பிரஸ்தாபமும் இல்லை; பேச்சுமூச்சு விடவில்லை. தீண்டப்படாதவர்கள் பற்றி முதல் தடவை யாகப் பிரஸ்தாபிக்கப்பட்டது 1916 ஆம் ஆண்டிலாகும்; அச்சமயம் சர் மானக்ஜி தாதாபாய் என்ற பார்சி கனவான் மத்திய சட்டமன்றத் தில் பின்கண்ட தீர்மானத்தை முன்மொழிந்தார்:

> ''தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் எனப்படுவோரின் தார்மிக, பொரு ளாயத, கல்வி நிலைமைகளை மேம்படுத்துவதற்கு அவசியமானால் அதிகாரிகளையும் அதிகார சார்பற்றவர்களையும் கொண்ட ஒரு சிறு குழு அமைத்து அதன் உதவியுடன் வழிமுறைகளை வகுக்கலாமென்றும், இதற்கு ஒரு பூர்வாங்க நடவடிக்கையாக, ஸ்தல நிலைமைகளை உரிய முறையில் கணக்கிலெடுத்துக் கொண்டு இது குறித்த திட்டங்களை வகுத்து அனுப்பும்படி ஸ்தல அரசாங்கங்களையும் நிர்வாகங்களையும் கேட்டுக் கொள்ளலாம் என்றும் இந்த மன்றம் நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர் - ஜெனரலுக்குப் பரிந்துரைக்கிறது.''

இந்தத் தீர்மானத்திற்கு அவையில் ஆதரவு காணப்படவில்லை. இத்தகைய ஒரு விஷயத்தை சட்டமன்றத்தில் கொண்டு வந்தமைக் காக அவையில் இருந்த இந்து உறுப்பினர்கள் சர் மானக்ஜி தாதாபாய் மீது சீற்றம் கொண்டனர்.

இது சம்பந்தமாக பண்டிட் மதன் மோகன் மாளவியா கூறியதாவது:

> ''ஐயா, இங்கு இந்த விஷயத்தைக் கூறுவது பண்பற்றதாக எனக்குத் தோன்றினாலும், அவையின் பரிசீலனைக்குச் சில சமயங்களில் கொண்டு வரப்படும் விஷயங்கள் குறித்து ஆட்சேபம் தெரிவிக்கும்படி இந்த அவை நடவடிக்கைகள் பற்றிய கண்ணிய உணர்வு என்னைத் தூண்டுகிறது...
>
> ''இந்தத் தீர்மானத்தின் குறிக்கோளுக்கு என் முழு மனதான ஆதரவு உண்டு என்பதை எடுத்த எடுப்பில் கூற விரும்புகிறேன்; ஆனால் என் னுடைய நண்பர் மதிப்பிற்குரிய திரு. தாதாபாய் இந்தத் தீர்மானத்தை

*முன்மொழிந்து பேசும்போது, நெறி பிறழ்ந்து இந்து சமுதாயத்துக்கு எதிராக சில கருத்துகளைத் தெரிவித்தது வருத்தமளிப்பதாக இருக்கிறது, இதனை அவர் தவிர்த்திருக்கலாம்.... இந்து சமுதாயத்தில் நிலவும் அனைத்தையும் ஆதரித்துப் பேசுவதற்காக இங்கு நான் வரவில்லை. எங்கள் சமுதாயத்தின் சில பிரிவினரிடையே பல தப்பெண்ணங்களும் குருட்டு நம்பிக்கைகளும் நிலவுகின்றன என்பதைத் துயரத்தோடு நான் அறிவேன். ஆனால் தப் பெண்ணங்களையும் மூடநம்பிக்கைகளையும் ஒழித்துக் கட்டுவதற்குச் சிரமப்படுவது இந்து சமுதாயம் மட்டுமே அல்ல என்பதை மறந்து விடக்கூடாது. எவரையும் அணுவளவும் அவமதிக்கும் நோக்கமின்றி, இறந்துபோன மனைவியின் சகோதரியைத் திருமணம் செய்துகொள்ளும் மசோதாவை இங்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிட விரும்புகிறேன்... இந்துக்களாகிய நாங்கள் எதிர்த்துப் போராட வேண்டிய சில மிக மோச மான தப்பெண்ணங்கள், மூடநம்பிக்கைகள் இருக்கவே செய்கின்றன. ஆனால் தங்களுக்கிடையே உள்ள சமூக-சமயத் தகுதியின்மைகளை எதிர்த்துப் போராடி அகற்றும்படி இங்குள்ள இந்துக்களுக்கோ அல்லது வெளியே உள்ள இந்துக்களுக்கோ உபதேசம் செய்வது இந்த அவையின் ஓர் உறுப்பினரது கடமை வரம்புக்கு உட்பட்டது என்று நான் கருதவில்லை. அரசாங்கம் முறையாக மேற்கொள்ளும் சட்ட விஷயங்களிலும் இதர நிர்வாக விஷயங்களிலும் கவனம் செலுத்துவதே இந்த அவையின் உறுப் பினர்களது கடமை என்று நினைக்கிறேன். ஏற்கெனவே சுட்டிக் காட்டியதுபோல், சமய விஷயங்களிலோ அல்லது சமய-சமூக விஷயங் களிலோ தலையிடுவதில்லை என்று வகுத்துக் கொண்ட விவேகமான, பரந்த கொள்கையை அரசாங்கம் கடைப்பிடித்துவரும் நிலையில், அதன் மீது குற்றச்சாட்டுகளைச் சுமத்துவதைத் தவிர்க்க வேண்டும்... இங்கு பொதுவாகக் கூறப்பட்ட கருத்துகளின் தகுதிகள் பற்றியோ நியாயம் பற்றியோ நீண்ட வாக்குவாதத்தில் இறங்க நான் விரும்பவில்லை... ஆனால் அதேசமயம் நாட்டின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடி வரை யுள்ள இந்து சமுதாயம் முழுவதுமே குற்றவாளி என்று இந்தத் தீர்மானத் தைக் கொண்டுவந்துள்ள மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் தெரிவித்த கருத்துகளை நான் வாய்பேசாது, மறுப்பு தெரிவிக்காது கேட்டுக் கொண் டிருந்தேன் என்ற அவப்பேறுக்கு உள்ளாக நான் தயாராக இல்லை.... இந்துக் களாகிய நாங்கள் எதிர்த்துப் போராடி வெற்றி கொள்ள வேண்டிய பல மூட நம்பிக்கைகளும் தப்பெண்ணங்களும் இருக்கின்றன என்பதை நான் உணர்ந்துள்ளேன்; ஆனால் இவற்றைப் பற்றியெல்லாம் எங்களுக்குக் கூறுவதற்குரிய இடம் இதுவல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.''*

*சர் சுரேந்திரநாத் பானர்ஜி போன்ற சமூக சீர்திருத்தவாதி கூட இந்தத் தீர்மானம் பற்றித் திருப்தியடையவில்லை. அவர் கூறிய தாவது:*

*''.... இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கும் மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் இந்து சமுதாயத்தைத் தாக்குவதில் ஓரளவு அளவு மீறிப் போயிருப்பதற்காக (இதனை அவர் வேண்டுமென்றே செய்திருப்பார் என்று நான் நினைக்கவில்லை) மிகவும் வருந்துகிறேன். உலகம் எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையான பாரம்பரியங்களை, நாகரிகத்தை*

நாங்கள் வரித்துக் கொண்டிருப்பவர்கள் என்பதை அவர் நினைவிற் கொள்ள வேண்டும். அந்த நாகரிகத்தில் குறைபாடுகள் உள்ளன என்பதில் ஐய மில்லை. ஆனால் உலகின் விடியலின்போது அந்த நாகரிகம்தான் சட்டம் ஒழுங்குக்கும் சமூக ஸ்திரத்தன்மைக்கும் உத்திரவாதமாக இருந்தது. கடந்த காலத்தில் அது லட்சோப லட்சம் மக்களுக்கு ஆறுதலளித்தது. நமது இப்போதைய சூழ்நிலைமைகளுக்கு ஏற்புடையதொரு தேசிய ஒழுங்கு முறையை உருவாக்க நாங்கள் முயற்சித்து வருகிறோம். ஆனால் அதே சமயம் காலம் காலமாக, வழிவழியாக வந்தவற்றை நாங்கள் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. எங்கள் முன்னோர்கள் அரும்பாடுபட்டுக் கட்டி உருவாக்கிய தகையார்ந்த கட்டுமானத்தை நாங்கள் போற்றி மதிக்கிறோம். அதில் உள்ள குறைபாடுகளை நாங்கள் அறிவோம். அவற்றைப் படிப் படியாகவும், உறுதியாக்வும் அகற்ற நாங்கள் ஆவலாக இருக்கிறோம்; ஆனால் எத்தகைய புரட்சி இயக்கத்தின் மூலமும் இதைச் செய்யும் உத் தேசம் ஏதும் எங்களுக்கு இல்லை; படிப்படியான, உறுதியான பரிணாம இயக்க நிகழ்வு மூலமே இதனைச் சாதிக்கத் தீர்மானித்துள்ளோம். என்னுடைய நண்பர் எங்கள்பால் சிறிது பரிவும் அனுதாபமும் காட்ட வேண்டும்; இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண நாங்கள் மேற் கொண்டுள்ள முயற்சிகளுக்கு அவர் எங்களுக்குப் பரந்த மனத்தோடு நேசக்கரம் நீட்ட வேண்டும். இது விஷயத்தில் அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் யோசனை தெரிவித்திருக்கிறார்.... இதுபோன்ற விஷயத்தில் அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்வதை நாங்கள் வரவேற்கிறோம்; ஆனால் என்ன இருந்தாலும் நிலைமையை நன்கு ஆய்ந்து பார்க்கும்போது இது ஒரு சமூகப் பிரச்சினை என்பது தெரியவரும்; பிரிட்டிஷ் அரசாங்கம் தனது தொன்றுதொட்ட மரபுகளுக்கு ஏற்ப சமூகப் பிரச்சினைகளில் தலையிடாமல் ஒதுங்கி நிற்கும் கொள்கையை மிகச் சரியாகக் கடைப்பிடித்து வருகிறது என்றே கருதுகிறேன்.

''தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையே கல்வியை வளர்ப்பதற்கும், அவர்கள் தொழில் துறையில் முன்னேறுவதற்கும் அரசாங்கம் எவ்வளவோ செய்ய முடியும். ஆனால் ஜீவாதாரமான பிரச்சினை, பிரச்சினைகளுக் கெல்லாம் பிரச்சினை சமூக மேம்பாடாகும்; இதில் அரசாங்கம் பரந்த உள்ளமுடைய ஒரு பார்வையாளராகத்தான் இருக்க முடியும். நமது முயற்சி களுக்கு அது ஒத்துணர்வு காட்ட முடியும்; ஆனால் அதில் முன்னின்று பங் கெடுத்துக் கொள்ள இயலாது...''

மதிப்பிற்குரிய திரு. தாதாபாய் தமது கருத்தை நிலைநாட்ட வேண்டியவராக இருந்தார். அவர் கூறியதாவது:

''ஐயா, நான் ஒரு விபரீதமான நிலையில், துரதிஷ்டம் பிடித்த நிலையில் இருக்கிறேன். இந்த அவையில் இரண்டு தரப்பினர்கள் இருக்கின்றனர்; இரு தரப்பினருமே இந்தச் சந்தர்ப்பத்தில் தங்களைத் தற்காத்துக் கொள்வதில் குறியாக இருக்கின்றனர். நான் இத்தீர்மானத்தைக் கொண்டு வருவதற்கான காரணத்தை, அத்தகைய காரணம் ஏதேனும் வேண்டுமென்றால், அதிகார சார்பற்ற என்னுடைய சகாக்களிடமிருந்து நான் பெற்ற அரைகுறையான, உற்சாகமற்ற ஆதரவிலிருந்தே தெரிந்து

கொள்ளலாம். ஐயா, இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வருவதில் எனக்கு மகிழ்ச்சி ஏதும் இல்லை; என்னால் இதனைத் தவிர்க்க முடிந்திருந்தால் அவ்வாறே மிகவும் மனநிறைவோடு, விருப்பார்வத்தோடு செய்திருப்பேன். சீர்திருத்தப்பட்ட இந்த அவைக்கு தற்போது ஆறு வயது என்பதையும், அதன் ஆயுட்காலம் இப்போது முடிவடையப் போகிறது என்பதையும் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிவார்கள். இந்த அவையின் ஆயுட் காலத்தின் பெரும்பகுதியின்போது-இந்த அவையில் நான் ஐந்தாண்டு களாக உறுப்பினராக இருந்து வருகிறேன் - மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர்களான சுரேந்திரநாத் பானர்ஜி, பண்டிட் மதன்மோகன் மாளவியா போன்ற, மக்களின் விடுதலையையும், மக்களின் உணர்வையும், மக்களின் முயற்சியையும், மக்களின் கலாசாரத்தையும் முன்னின்று ஆதரித்து நிற்கும் நற்பண்பாளர்கள் இது சம்பந்தமான தீர்மானத்தைக் கொண்டுவரும் சிரமத்தை மேற்கொள்வார்கள் என்று எதிர்பார்த்தேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் மேம்பாட்டுக்காக, அவர்களின் நல்வாழ்வுக்காக, அவர் களின் சுபிட்சத்திற்காக இவர்களில் எவரேனும் இத்தகைய தீர்மானத்தைக் கொண்டு வருவார்கள் என்று இத்தனைக் காலம் காத்திருந்தேன். ஆனால் சிற்சில சந்தர்ப்பங்களில் காங்கிரஸ் மகாசபை பந்தலில்கூட இந்த விஷயம் விவாவதிக்கப்பட்ட போதிலும் கூட, இவர்களில் எவரும் அதில் கவனம் செலுத்தாததைக் கண்டேன், இந்த அவையில்கூட இந்த விஷயம் எழுப்பப்படாததைக் கண்டேன்... ஓர் இந்துத் தொகுதியின் பிரதிநிதி யாக உள்ள பார்சியான நான் இந்த விஷயத்தை இந்த அவையின் விவா தத்திற்குக் கொண்டு வருவது எனது கடமை எனக் கருதினேன்.''

இந்த சச்சரவு அரசாங்கத்துக்குப் பெரும் நிம்மதியளித்தது இயல்பே. தாங்கள் கடமை தவறியதை மூடி மறைப்பதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் இந்து உறுப்பினர்களின் இந்த நிலையை நன்கு பயன் படுத்திக் கொண்டு, இந்தத் தீர்மானத்தை நிராகரித்து அரசாங்கத்தின் சார்பில் பேசும்போது சர் ரெஜினால்டு கிரட்டாக் பின்வருமாறு குறிப்பிட்டார்:

''ஐயா, மதிப்பிற்குரிய திரு. தாதாபாயின் தீர்மானத்தில் குறிப் பிடப்பட்டிருக்கும் குறிக்கோள்களில் எங்களுக்கு உடன்பாடு உண்டு. இந்த மக்களின் நிலைமையை மேம்படுத்துவதற்கு, உயர்த்துவதற்கு இதுவரை என்ன செய்யப்பட்டுள்ளது, என்ன செய்யப்பட்டு வருகிறது, இனி என்ன செய்யப்படவிருக்கிறது என்பதை எழுத்து மூலமாகத் தெரிவிக் கும்படி ஸ்தல அரசாங்கங்களைக் கோரும் அளவுக்குச் செல்ல நாங்கள் தயாராக இருக்கிறோம். ஆனால் இது சம்பந்தமாக விசேடக் குழுக்கள் அமைப்பதில் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. இந்தப் பிரச்சினைகள் எவ்வளவு பரந்தவை, சிக்கலானவை, குழுக்கள் மூலம் இப்பிரச்சினை களைக் கையாள்வது எவ்விதம் சாத்தியமற்றது என்பதை ஏற்கெனவே இந்த அவையில் எடுத்துரைத்திருக்கிறேன் இல்லையா? இந்தப் பிரச் சினைகள் அரசாங்கத்தின் மேல்மட்டத்திலிருந்து கீழ்மட்டம் வரை வியாபிக்கக்கூடிய முழு வீச்சு கொண்டவை. நான் இங்கு சொல்லக் கூடியதெல்லாம் இதுதான்: மதிப்பிற்குரிய திரு. தாதாபாய் தெரிவித்துள்ள

குறிக்கோள்களை நாங்கள் ஆதரிக்கிறோம். ஆனால் இந்தப் பிரச்சினைகளை ஸ்தல அரசாங்கங்களின் கவனத்துக்குக் கொண்டு வருவதையும், இது விஷயத்தில் இப்போது செய்து வருவதை விட அதிகமாக அவை ஏதேனும் செய்ய முடியுமா என்று கேட்பதையும் தவிர நாங்கள் அதிகமாக எதுவும் செய்ய இயலாது. எங்களால் இப்போது செய்ய முடியக்கூடியதெல்லாம் இதுதான் என்று உறுதிகூறி இந்தத் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும்படி மதிப்பிற்குரிய உறுப்பினரைக் கேட்டுக் கொள்கிறேன்.''

சட்டமன்ற நடவடிக்கைகளில் தீண்டப்படாதவர்கள் இரண்டாம் முறையாகப் பிரஸ்தாபிக்கப்பட்டது 1928 ஆம் ஆண்டிலாகும். அப்போது திரு. எம்.ஆர். ஜெயகர் பின்வரும் தீர்மானத்தை முன் மொழிந்தார்:

''தீண்டப்படாதவர்களுக்கும் மற்றும் இதர தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் கல்வி போதிக்க விசேட வசதிகள் செய்து தருமாறும், எல்லா அரசுப் பணித் துறைகளிலும் அதிலும் குறிப்பாக காவல் துறையில் அவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்க வழிவகை செய்யுமாறும் அனைத்து ஸ்தல அரசாங்கங்களுக்கும் கட்டளை பிறப்பிக்குமாறு நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்- ஜெனரலுக்கு சட்டப்பேரவை பரிந்துரைக்கிறது.''

இந்த விஷயத்தில் 1916ல் காட்டியதைவிட அதிக உற்சாகத்தை, ஆர்வத்தை இச்சமயம் இந்திய அரசாங்கம் காட்டவில்லை. இந்திய அரசாங்கத்தின் சார்பில் பேசிய திரு. ஜி.எஸ். பாஜ்பாய் பின்கண்டவாறு கூறினார்:

''ஸ்தல அரசாங்கங்கள் தமது பொறுப்பை உணர்ந்துள்ளன; தங்களால் முடிந்ததை அவை செய்து வருகின்றன. அவை தமது குறிக்கோளை எய்திவிட்டன என்று உரிமை கொண்டாடுவது என் பணியல்ல. எனினும் இந்தத் தாழ்த்தப்பட்ட மக்களின் நிலைமையை மேம்படுத்த வேண்டும் என்ற விழிப்புணர்வு, பொறுப்புணர்வு, ஆதங்கம், முயற்சி எங்களுக்கு இருக்கிறது என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இவ்வாறிருக்கும்போது இது சம்பந்தமாக உத்தரவிடுவதோ, கோரிக்கை முன்வைப்பதோ உசிதமல்ல. இந்த அவை விரும்பினால், இந்த முக்கிய தேசியப் பிரச்சினை குறித்து அவையின் கருத்துக்களை சம்பந்தப்பட்டவர்களுக்கு அரசாங்கம் தெரிவிக்க முடியும்.''

திரு. வாஜ்பாயின் இந்த உரை பலத்த கரவொலியுடன் வரவேற்கப்பட்டது என்று அவை நடவடிக்கைகள் பற்றிய அதிகாரப் பூர்வமான அறிக்கை கூறுகிறது.

இத்தகையதுதான் சமூக சீர்திருத்தத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் புரிந்துள்ள சாதனையாகும். எவ்வளவு பரிதாபகரமான, அவப்பேறான

சாதனை! எவ்வளவு சத்தற்ற சாரமற்ற சாதனை; அறுபதாண்டுக்கால சட்டமன்ற நடவடிக்கைகளில் ஆறு சமூக சீர்திருத்தங்கள்!! ஆரம்பம் முதலே சமூக சீர்திருத்தத்தின்பால் அதன் நோக்கு, போக்கு மிகவும் தயக்கமானதாக, நொண்டிச் சாக்கு கூறுவதாகவே இருந்து வந்திருக்கிறது. 1860 ஆம் ஆண்டு வரை பொறுப்பு வாய்ந்த அரசாங்கம் என்ற முகமூடியை அது அணிந்து வந்தது. 1860க்குப் பிறகு அந்த முகமூடியைக் கழற்றித் தூக்கியெறிந்து விட்டது. இதன்பிறகு இத்திசை வழியில் அது ஓர் அடிகூட முன்னெடுத்து வைக்கவில்லை; இது சம்பந்தப் பட்ட முயற்சிகளுக்கு அடியோடு ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. பாலிய மணத்தைத் தடை செய்யுமாறு 1881ல் ஒரு மாபெரும் கிளர்ச்சி தொடங்கிற்று. சமூக சீர்திருத்தத்தைப் பற்றி இனியும் அலட்டிக் கொண்டிருக்காமல், அசட்டுத் துணிச்சல் கொண்டு சமூக சீர்திருத்தத்தை அடியோடு எதிர்க்கும் தனது கொள்கையை கூச்ச நாச்சமின்றி வெளியிட்டது. அந்த ஆண்டில் ஓர் அரசாங்கத் தீர்மானத்தின் மூலம் பிரிட்டிஷ் அரசாங்கம் பின்கண்டவாறு பகிரங்கமாக அறிவித்தது:

> ''திரு. மலபாரியின் குறிப்புகளில் இடம்பெற்றிருந்த இத்தகைய விஷயங்களை இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கம் கையாளும்போது பொதுவாக சில குறிப்பிட்ட கோட்பாடுகளின் அடிப்படையிலேயே செயல்பட்டு வந்திருக்கிறது. உதாரணமாக, சாதாரண குற்றவியல் சட்டத்தை மீறக்கூடிய முறையில் ஒரு சாதி அல்லது வழக்கம் ஒரு நடைமுறையைச் செயல்படுத்த முற்படும்போது அரசாங்கம் சட்டத்தை அமல் படுத்தும். நீதிமுறைமைக்கோ அல்லது சமுதாயக் கொள்கைக்கோ முரணானதும், உரிமையியல் நீதிமன்றங்களின் மூலம் செயல்படுத்தப் படக் கூடியதுமான ஒரு விதியை சாதி அல்லது வழக்கம் வகுத்துத் தரும் போது அரசாங்கம் அதனை அமல்படுத்த மறுக்கும். ஆனால் பொதுவாக குடிமக்களின் கருத்துக்கு விட்டுவிடக்கூடியவையும், அமல் நடத்துவதற்கு உரிமையியல் அல்லது குற்றவியல் நீதிமன்றங்களின் உதவி தேவையில்லாதவையுமான விஷயங்கள் சம்பந்தமாக சாதி அல்லது வழக்கம் ஏதேனும் விதியை வகுத்துத் தரும்போது, அதில் அரசு தலையிடுவது உசிதமானதோ, விரும்பத்தக்கதோ அல்ல என்றே கருதப்படுகிறது.
>
> ''இத்தகைய பொதுக் கோட்பாடுகளை சில குறிப்பிட்ட விஷயங்களில் செயல்படுத்துவதில் கருத்து வேறுபாடுகள் எழுவதற்கு வாய்ப்பு உண்டு என்பதில் ஐயமில்லை; எனினும் தற்போது கவனத்திற்குக் கொண்டு வரப் பட்டிருப்பவை போன்ற சமூக அல்லது சமயப் பிரச்சினைகளில் அரசாங்கம் சட்டரீதியிலாகவோ, நிர்வாக ரீதியிலாகவோ தலையிடலாமா, தலையிடக் கூடாதா என்பதைத் தீர்மானிப்பதற்குப் பயனளிக்கக்கூடிய முறையில் கையாளக்கூடிய ஒரு விவேகமான சோதனை முறை இருக்கிறது. அந்த சோதனை முறை இதுதான்: 'அரசாங்கம் தனது சாதாரண அதிகாரத்தைக் கொண்டு தனது கட்டளைகளைச் செயல்படுத்த முடியுமா?' இது சாத்தியமில்லை என்றால், தனது வழக்கமான நடைமுறையிலிருந்து விலகிச் செல்லாமல் செயல்படுத்த முடியாத ஒரு விதிமுறையை வகுக்காமல் இருப்பதே விரும்பத்தக்கதாகும்.

"இந்த சோதனையை தற்போதைய விஷயத்தில் பிரயோகித்துப் பார்த்தோமானால், இதில் அரசு தலையிடுவது விரும்பத்தக்கதல்ல என்று நிர்வாகசபையுடன் கூடிய மேதகைய கவர்னர் - ஜெனரல் ஏன் கருதுகிறார் என்பதற்கான காரணங்கள் தெள்ளத் தெளிவாகப் புலனாகும். பல்வேறு இனங்களின் சமூக பழக்கவழக்கங்களைப் பாதிக்கும் வகையில் திரு. மலபாரி முன்மொழிந்துள்ள சீர்திருத்தங்கள் ஒருபுறம் ஆதரவையும் இன்னொருபுறம் பலத்த எதிர்ப்பையும் கிளர்த்திவிடும். எனவே, இதற்குரிய காலம் கனிவதற்கும், கல்வியைப் பரப்புவதன் மூலம் மக்களின் மனப்பாங்கும் தார்மிக நெறியும் படிப்படியாக வளர்வதற்கும் காத்திருப்பதே உகந்தது.

"சாதி முறை வகுத்துத் தந்திருப்பதிலிருந்து சில முக்கிய அம்சங்களில் மாறுபட்டதொரு ஒழுக்கத் தரத்தை இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கம் தனது சட்டங்கள் மூலம் நிர்ணயித்துத் தந்திருக்கிறது என்பது உண்மையே; பின்னால் குறிப்பிடப்பட்ட ஒழுக்கத் தரம் ஸ்தல பழக்க வழக்கங்கள், நடைமுறைகள், சிந்தனைப் போக்கு முதலியவற்றில் ஓரளவு சாதகமான பிரதிபலிப்பை ஏற்படுத்தியிருப்பதும் சாத்தியமே. ஆனால் சட்டங்கள் அறிவுறுத்தும் நோக்கங்கள் கொண்டவையாக இருந்தாலும், நற்பலன்களை விளைவிக்கும் விஷயத்தில் ஒருபுறம் சட்டத்துக்கும் இன்னொருபுறம் சாதி முறைக்கும் அல்லது வழக்கத்துக்கும் இடையேயான போட்டியில் முந்தையது வெற்றிபெற வேண்டுமானால் சட்டப் பேரவை தனது இயல்பான அதிகார எல்லைகளுக்குள் செயல்பட வேண்டும், அந்த எல்லைகளை மீறி, அது சமூக அபிப்பிராயத்துக்கு நேர் விரோதமாகச் செயல்படலாகாது."

இந்தத் தீர்மானத்தில் வகுத்துத் தரப்பட்ட கொள்கையே அன்று முதல் சமூக சீர்திருத்த விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கையாக இருந்து வருகிறது.

## V

தீண்டப்படாதவர்கள்பால் பரிவும் அக்கறையும் கவனமும் காட்டாமல் பிரிட்டிஷ் அரசாங்கம் அவர்களை அலட்சியப்படுத்தியது ஏன்? அவர்களை நற்றாற்றில் விட்டது ஏன்? புழுக்களிலும் இழிவாகப் புறக்கணித்தது ஏன்?

இத்தகைய குரூரமான அலட்சியத்துக்கு, பழிபாவமிக்கப் புறக்கணிப்புக்கு சர் ரெஜினால்டு கிரேட்டக் விளக்கம் தந்திருக்கிறார், சமாதானம் கூறியிருக்கிறார். 1916ல் பேரரசு சட்ட மேலவையில் சர் மானக்ஜி தாதாபாய் கொண்டு வந்த தீர்மானத்துக்கு இந்திய அரசாங்கத்தின் சார்பில் பதிலளித்துப் பேசும்போது, தீண்டப்படாதவர்கள் விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நிலையை விளக்கிப் பின்கண்டவாறு கூறினார்:

''அவர்களைப் (அதாவது தீண்டப்படாதவர்களை) பொறுத்தவரையில் உள்ள சிக்கல் அரசாங்கம் அவர்களைக் கண்டுகொள்ளவில்லை என்பதல்ல; மாறாக, பல நூற்றாண்டுக்கால பழக்க வழக்கங்களும், தப்பெண்ணங்களும் மூடநம்பிக்கைகளும் அகற்றப்பட்டாலொழிய அவர்களின் அயலார்களுடைய கரங்கள் அவர்களை அழுத்தவே செய்யும். இந்த மக்கள் பெரும்பாலும் கிராமங்களிலும் நகரங்களில் ஒதுக்குப்புறமான இடங்களிலும் வசிக்கிறார்கள் என்பதையும், அவர்களுடைய அயலார்கள் பெருந்தன்மை வாய்ந்த, பரந்த முற்போக்கு எண்ணங்களின் செல்வாக்கின் கீழ் இன்னும் வரவில்லை என்பதையும் நீங்கள் நினைவிற் கொள்ள வேண்டும். எனவேதான் இந்தப் பிரச்சினையை நிர்வாக கண்ணோட்டத்தை விட சமூக-சமயக் கண்ணோட்டத்துடன்தான் பார்க்க வேண்டும் என்று பல உறுப்பினர்கள் வலியுறுத்திப் பேசியிருக்கிறார்கள்.

''பள்ளிக்கூடங்கள் விஷயத்தில் பல சிரமங்கள் நிலவுவதை நானே நன்கறிவேன். பல இடங்களில் மகர் சிறுவர்கள் பள்ளிக்கூடங்களுக்குள் அனுமதிக்கப்படுவதில்லை; அவர்கள் தாழ்வாரத்தில் அல்லது ஒட்டுத் திண்ணைகளில்தான் அனுமதிக்கப்படுகிறார்கள்; ஆசிரியர் அவர்களை ஏனோதானோவென்றுதான் நடத்துகிறார்கள், அல்லது அவர்களின்பால் அறவே கவனம் செலுத்துவதில்லை. ஆனால் இத்தகைய சிக்கலுக்கு உடனடியாகத் தீர்வு கண்டுவிட முடியாது; படிப்படியாகத்தான் இப்பிரச்சினைக்குத் தீர்வுகாண வேண்டும். இதே பிரச்சினையை ஸ்தலத்திற்கே சென்று தீர்ப்பதற்குப் பலமுறை முயற்சி செய்திருக்கிறேன். சம்பந்தப்பட்டவர்களுடன் வாதிட்டு அவர்களை இணக்குவிக்க முயன்றிருக்கிறேன்; அவர்களுடன் பேசியிருக்கிறேன். உங்களைப் போலவே அவர்களும் வரி செலுத்துபவர்கள், எனவே அவர்களுடைய குழந்தைகளைப் பள்ளிக்கு வர அனுமதியுங்கள், இது உங்களுடைய சம்பிரதாயங்களுக்கு முரணானது என்றால் அவர்களுக்கும் சொந்த சம்பிரதாயங்கள் இருக்குமல்லவா, ஆகையால் அவர்களுடைய குழந்தைகளுக்குத் தனிப் பள்ளிக்கூடங்கள் அமைக்கவாவது உதவலாமல்லவா என்று அவர்களிடம் கூறினேன். அவர்களில் சில நல்லவர்கள் தாழ்த்தப்பட்டவர்களுக்காக தனிக் கிணறுகளும் பள்ளிக்கூடங்களும் அமைப்பதற்கு உதவ முன்வந்தார்கள்; இவ்வாறு அங்கு இந்தப் பிரச்சினைக்கு ஓரளவு தீர்வு காணப்பட்டது. ஆக, இது கால அவகாசம் தேவைப்படும் பிரச்சினை. அரசாங்கம் இது விஷயத்தில் வலுக்கட்டாயமாக எதுவும் செய்ய இயலாது. சில சமயங்களில் இது விஷயத்தில் அவர்கள் இந்தக் குறிக்கோளை நெருங்குவது உண்டு. உதாரணமாக ரயில் பயணத்தின்போதும், நீதிமன்றங்களில் மனுக்கள் சமர்ப்பிக்கப்படும்போதும் இது நடைபெறுகிறது. ஆனால் இந்த மக்கள் அவர்களுடைய அலுவலகங்களில் நல்விதமாக நடத்தப்படுவார்கள் என்று உறுதி கூற முடியாது. இந்த வகுப்புகளைச் சேர்ந்த சிலர் அரசுப் பணிகளில் சேருவதற்கு விருப்பமிருப்பினும் பல சந்தர்ப்பங்களில் அதற்கு அவர்கள் முயற்சி செய்வதில்லை; அவர்களுடன் பணியாற்றுபவர்கள் அவர்களை நல்லவிதமாக நடத்த மாட்டார்கள் என்பதே இதற்குக் காரணம். இந்த விஷயத்தில் தங்களால் எதுவும் செய்ய இயலாது என்று பம்பாய் அரசாங்கம் ஒளிவுமறைவின்றிக் கூறிவிட்டதாக இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்துள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர் வருணித்தார்; எங்கள் முன்னாலுள்ள சிக்கல்களை அது உள்ளது உள்ளபடி மிகத் துல்லியமாக விவரித்துள்ளது என்றே கருதுகிறேன். பரிதாபத்துக்குரிய, துரதிட்டம் பிடித்த இந்த மக்களுக்கு எல்லா வழிகளிலும் உதவ வேண்டுமென்றே அரசாங்கம் விரும்புகிறது;

ஆனால் 'இந்த சாதியினரின் எதிர்காலம் ஓரளவு அவர்களையும், ஏனைய முன்னேற்றமடைந்த சமுதாயத்தினரை ஓரளவும் பொறுத்துள்ளது; அந்த சமுதாயத்தினர் இவர்கள்பால் மனிதாபிமான மிக்க நேசக்கரம் நீட்டு கிறார்களா அல்லது இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டுத் தங்கள் முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்களா என்பதில்தான் இந்த அபாக்கிய மக்களின் உயர்வோ அல்லது தாழ்வோ அடங்கியுள்ளது.''

''ஆகவே, ஐயா, இதுதான் இந்தத் தாழ்த்தப்பட்ட மக்களின் விவகாரங் கள் குறித்த எதார்த்தமான நிலையும், அவர்கள் சம்பந்தமாக கடைப் பிடிக்கப்பட்டுவரும் விதிமுறையுமாகும் என்று கருதுகிறேன். ''

1928ல் மத்திய சட்டப்பேரவையில் திரு. ஜெயகர் கொண்டு வந்த தீர்மானம் விவாதிக்கப்பட்டபோது இதே போக்குதான் கடைப் பிடிக்கப்பட்டது. அச்சமயம் அரசாங்கத்தின் சார்பில் பேசும்போது பாஜ்பாய் பின்கண்டவாறு கூறினார்:

''.... தனிப் பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கையை அதிகரிப்பதன் மூலமோ அல்லது விசேட வசதிகள் செய்து தருவதன் மூலமோ (தீண்டப் படாதவர்களின்) இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு கண்டுவிட முடியாது.... தாழ்த்தப்பட்ட வகுப்பினர் எனப்படுவோர்பால் சமுதாயத்தின் எல்லாப் பிரிவினரும் பரந்த மனோபாவத்தைக் கடைப்பிடிக்குமாறு ஊக்குவிப் பதன் மூலமும், அவர்களுடைய உணர்வுகளை விரிந்த நோக்குடையவை யாக ஆக்குவதன் மூலமுமாகத்தான் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும்.''

இந்துக்களின் மனச்சான்றைத் தட்டியெழுப்பி இப்பிரச்சினைக் குத் தீர்வு காணுமாறு உபதேசம் செய்து, தங்கள் கடமையைத் தட்டிக் கழித்துவிட்டு, பிரிட்டிஷ் அரசாங்கம் தீண்டப்படாதவர்களைப் புறக்கணித்தது; தீண்டப்படாதவர்களின் கதிப்போக்கை மேம்படுத்து வதற்கு உதவ அரசாங்கம் என்ற முறையில் தாங்கள் செய்வதற்கு எதுவும் இல்லை என்று கைவிரித்து விட்டது. தங்களுடைய குடிமக்க ளான நிராதரவான, அடக்கி ஒடுக்கப்பட்ட, கொடுமைக்குட்படுத் தப்பட்ட தாழ்த்தப்பட்ட மக்கள் இவ்வாறு புறக்கணிக்கப்படுவதை, அலட்சியப்படுத்தப்படுவதை பிரிட்டிஷார் எவ்வாறு நியாயப்படுத்து கிறார்கள்? இதற்கான விடை தெள்ளத் தெளிவானது. தீண்டாமை என்னும் கோரக் கொடுமையை உருவாக்கியவர்கள் தாங்கள் அல்ல என்று கூறி அவர்கள் நழுவிவிட்டார்கள்; கைகழுவி விட்டார்கள். தீண்டாமை என்னும் குரூரத்திற்கு நாங்கள் முற்றுப்புள்ளி வைக்க வில்லை என்றால் அதற்காக எங்கள் மீது குற்றம் சுமத்த முடியாது, ஏனென்றால் இந்த அவக்கேடு, பொல்லாங்கு நாங்கள் தோற்றுவித்த தல்ல என்று அவர்கள் வாதிட்டனர். 1856ல் பம்பாய் அரசாங்கம் இதை நறுக்குத் தெறுக்காகத் தெள்ளத் தெளிவாகக் கூறிவிட்டது. 1856

ஜூனில் ஒரு மகர் சிறுவன் சார்பாக பம்பாய் அரசாங்கத்திடம் புகார் மனு ஒன்று தாக்கல் செய்யப்பட்டது; வழக்கமான பள்ளிக் கட்ட ணத்தைச் செலுத்தத் தான் தயாராக இருந்தபோதிலும் தார்வார் அரசுப் பள்ளியில் சேரத் தனக்கு அனுமதி மறுக்கப்பட்டதாக அந்த மனுவில் முறையீடு செய்யப்பட்டிருந்தது. இந்த மனுவைப் பரி சீலனைக்கு எடுத்துக் கொண்ட பம்பாய் அரசாங்கம் இது முக்கிய மான விஷயம் எனக் கருதியதால் 1856 ஜூலை 21 ஆம் தேதியிட்ட ஒரு தீர்மானத்தை இயற்றிற்று. அத்தீர்மானத்தின் முழு வாசகம் வருமாறு:

''1. கடிதப் போக்குவரத்தில் விவாதிக்கப்பட்ட விஷயம் மிகுந்த நடைமுறைச் சிக்கல் வாய்ந்த ஒன்றாகும்.

2. மகர் மனுதார் பக்கம் கோட்பாட்டளவில் நியாயம் இருக்கிறது என்பதில் ஐயமில்லை; தார்வாரில் தற்போதுள்ள கல்வி வசதிகளை இந்தச் சிறுவன் பயன்படுத்திக் கொள்வதைத் தடுக்கின்ற பழங்கால நெறிமுறை கள், பழக்கவழக்கங்கள் விரைவிலேயே கைவிடப்படும் என்று அரசாங்கம் நம்புகிறது.

3. ஆனால் ஒரு தனி நபருக்காகவோ அல்லது ஒரு சில தனி நபர் களுக்காகவோ பன்னெடுங்கால பழக்க வழக்க நெறிமுறைகளில் அதிரடி யாகத் தலையிடுவது கல்வி லட்சியத்துக்கு பெரும் தீங்கு விளைவிக் கும் என்பதை அரசாங்கம் கருத்திற் கொள்ள வேண்டியிருக்கிறது. மனு தாரருக்கு ஏற்பட்டுள்ள இந்தப் பாதிப்பு அரசாங்கத்தின் நடவடிக்கை யால் தோன்றியதல்ல. அவன் கேட்டுக் கொண்டுள்ளபடி அவன் பொருட்டு அரசாங்கம் தலையிட்டு திடுதிப்பென்று இதற்குப் பரிகாரம் காண இயலாது.''

இது ஓர் அரசாங்கம் தான் செய்ய வேண்டிய கடமைகள் பற்றி மேற்கொள்ளும் முயற்சியற்ற ஓர் எளிதான கண்ணோட்டமேயன்றி, பொறுப்பு வாய்ந்த கண்ணோட்டமாகாது. நிச்சயமாக இது ஒரு நாகரிக அரசாங்கம் மேற்கொள்ளக்கூடிய கண்ணோட்டமல்ல. முறையாக, நியாயமாக, நேர்மையாக ஆட்சி புரிவதற்கு அஞ்சும் ஓர் அரசாங் கத்தை அரசாங்கம் என்றே கூறமுடியாது; வரிகளை வசூலிக்கும் வெறும் ஒரு கூட்டுரிமைக் கழகம் என்றுதான் சொல்ல வேண்டும். வெறும் வரி வசூலிக்கும் எந்திரத்துக்கும் மேலானதாக இருக்க வேண்டும் என்றே பிரிட்டிஷ் அரசாங்கம் விரும்பும் என்பதில் ஐய மில்லை. அது தன்னை ஒரு நாகரிக அரசாங்கம் என்று சொல்லிக் கொள்கிறது. அப்படியானால் அநீதிகளையும் அக்கிரமங்களையும், தீங்குகளையும் முறைகேடுகளையும், பழிகேடுகளையும் அவலங் களையும் ஒழித்துக்கட்டுவதற்கு, தடுத்து நிறுத்துவதற்கு அது ஏன் நடவடிக்கை எடுத்துக் கொள்ளவில்லை? இவ்வாறு செய்வதற்கு

அதற்கு அதிகாரங்கள் இல்லை என்பதாலா, அல்லது அந்த அதிகாரங் களைப் பயன்படுத்த அது அஞ்சுகிறது என்பதாலா அல்லது இந்தியா வின் சமூக மற்றும் சமய அமைப்பில் எந்தக் கோளாறும் இல்லை என்று அது கருதுவதாலா?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதில் இதுதான்: இத்தகைய நடவடிக்கை எடுக்க பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு அதிகாரம் இருக் கிறது, அதுவும் நிறையவே இருக்கிறது. இந்த அதிகாரத்தை அது பயன்படுத்தாததற்கு ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் இந்து சமூக அமைப்பில் எத்தகைய தீங்கும் இல்லை என்று அது கருதியதும், பிறகு அந்த அமைப்பில் பல தீங்குகள் மலிந்திருப்பதைக் கண்ட போது, அச்ச உணர்வு அதை ஆட்கொண்டதுமே காரணம்.

கிறித்தவ சமயத்தைப் பரப்புவதற்கு அனுமதிப்பதன் மூலம் ஏற்படக்கூடிய விளைவுகள் பற்றி பிரிட்டிஷார் தங்களது ஆட்சியின் ஆரம்ப காலத்தில் பேரச்சமும் திகிலும் கொண்டிருந்தனர், இதனால் தங்களுக்கு அவப்பெயர் ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சி நடுங் கினர். ஆனால் அதேசமயம் இந்துக்களின் பாரம்பரிய பழக்க வழக் கங்கள், சம்பிரதாய நெறிமுறைகளின்பால் நன்மதிப்பு காட்டிய போது இத்தகைய அவப்பெயர் ஏற்படுவதைப் பற்றி அவர்கள் எவ்வித பீதியும் கொள்ளவில்லை. கல்கத்தாவைச் சேர்ந்த திரு. வார்டு என்ற கிறித்தவ சமயப் பரப்பாளர் 1802 ஆம் ஆண்டுக்கான தமது நாட்குறிப்புச் சுவடியில் பின்கண்டவாறு குறிப்பிட்டிருந்தார்:

> ''சென்றவாரம் அரசாங்கத் தூதுக்குழுவினர் காளி கட்டத்துக்கு ஊர்வலமாகச் சென்றனர்; இந்துக்களின் அந்த தேவதைக்கு கம்பெனி யின் சார்பில் காணிக்கை செலுத்தினர்; இந்த நாட்டில் ஆங்கிலேயர்கள் அண்மைக் காலத்தில் பெற்ற வெற்றிகளுக்காகவே இந்த நேர்த்திக் கடன். ஐயாயிரம் ரூபாய் காணிக்கையாக அளிக்கப்பட்டது. இந்தத் தெய்வச் சிலைக்கு ஆங்கிலேயர்கள் படையல் செய்யும் காட்சியை ஆயிரக்கணக் கான இந்துக்கள் கண்டுகளித்தனர். இந்தக் காட்சியைக் கண்டு நாங்கள் துயரமடைந்தோம்; இந்துக்களோ மகிழ்ச்சியில் திளைத்தனர்.''[1]

இதே போன்ற மற்றொரு உதாரணத்தை திரு. ராபர்ட் லிண்ட்சே கூறுகிறார்; வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் கிழக்கிந்தியக் கம்பெனி யில் படைத்துறை சாராத பணியில் இருந்தவர் இவர். சில்ஹெட்டில் புதிய ரெஸிடெண்ட் அலுவலகத்தில் தமது பதவியேற்பு நிகழ்ச்சி பற்றி அவர் பின்கண்டவாறு கூறுகிறார்:

---

1. செரம்பூர் கிறித்தவ சமயப் பரப்புக் குழுவின் வரலாற்றில் இது மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது, தொகுதி I, பக்கம் 157

''ஷா ஜுல்லால் என்னும் ஞானியின் சமாதிக்குச் சென்று புதிய ரெஸிடெண்ட் மரியாதை செலுத்துவது தொன்றுதொட்ட வழக்கம் என்று என்னிடம் கூறப்பட்டது. அச்சமயம் இந்தியாவின் எல்லாப் பகுதிகளி லிருந்தும் இஸ்லாமிய யாத்ரிகர்கள் அந்த சமாதி முன்னர் பெருந்திரளாகக் கூடியிருந்தனர். சமாதி முன் கூடியிருந்த மதவெறி கொண்ட கூட்டத்தினர் அபாயகரமானவர்கள் என்பதைப் பின்னால் தெரிந்து கொண்டேன். எனினும் சமய மூடப் பழக்கவழக்கங்களை எதிர்த்துப் போராடுவது எனது பணியல்ல. எனவே, எனக்கு முன்னால் இப்பதவி வகித்தவர்கள் செய்தது போலவே உரிய வினைமுறைகளுடன் சமாதிக்குப் புறப்பட்டேன்; நுழைவாயிலில் என் பாத அணிகளை விட்டுச் சென்றேன்; சமாதியில் என் காணிக்கையாக ஐந்து தங்க மோகராக்களை வைத்தேன். இவ்வாறு என்னை சுத்திகரித்துக் கொண்டு என் இருப்பிடத்துக்குச் சென்றேன்; அங்கு எனது குடிமக்களின் வரவேற்பை ஏற்றுக்கொண்டேன்.''

சுதேசி மக்களின் சமயச் சடங்குகளையும் சம்பிரதாயங்களை யும் பழக்கவழக்கங்களையும் பிரிட்டிஷ் அரசாங்கம் எந்த அளவுக்கு ஆதரித்து நின்றது என்பதை 1833ல் பிஷப் கோர்ரி மதராஸ் அரசாங் கத்துக்குச் சமர்ப்பித்த செய்திக் கோவையிலிருந்து தெரிந்து கொள்ள லாம். அதில் தெரிவிக்கப்பட்டிருந்த சம்பவங்கள் வருமாறு:

''முதலாவதாக, அரசாங்கத்தின் பொதுத்துறையையும் படைத்துறை யையும் சார்ந்த கிறித்துவ ஊழியர்கள் புற சமயத்தினர் மற்றும் முகமதி யர்களின் சமய விழாக்களில் இனி பங்கெடுத்துக் கொள்ள வேண்டும்; அவர்களை மதிக்கும் பொருட்டு இவ்வாறு செய்ய வேண்டும். இரண் டாவதாக, சில சந்தர்ப்பங்களில் இவர்கள் காணிக்கை செலுத்துவதோடு, விக்கிரகங்களையும் வழிபட வேண்டும். மூன்றாவதாக, கோவில்கள், தூபிகள் போன்றவை சம்பந்தப்பட்ட தூய்மையற்ற, இழிவான பணிகள் ஐரோப்பிய மேலாளரின் மேற்பார்வையிலும் கட்டுப்பாட்டின் கீழும் தற்போது நடைபெற்று வருகின்றன. ஆதலால் இந்தக் கோவில்கள் மற்றும் மசூதிகளின் வருவாய்களையும் மானியங்களையும் நிர்வகிக்கும், ஒழுங்கு படுத்தும் பொறுப்பு 1817 ஆம் வருட VII ஒழுங்குமுறைச் சட்டத்தின்படி அரசாங்கத்தின் கிறித்தவ அதிகாரிகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது; எனவே இந்தக் கிறித்துவ அலுவலர்களின் அதிகாரப்பூர்வமான ஒப்பு தலும் ஆணையுமின்றி எந்த முக்கிய உருவ வழிபாட்டு வைபவங்களும் நடத்த முடியாது, பல்வேறு தெய்வச் சிலைகளைப் பராமரிக்க முடியாது, கோவில்களின் தேவதாசிகளை நியமிக்கவோ நீக்கவோ முடியாது, இன்னும் சொல்லப்போனால் எந்தச் செலவுகளையும் செய்ய முடியாது. நான்காவ தாக, வார ஓய்வு நாளான சப்பாத் தினத்தில் கூட முகமதிய விழாக் களிலும் ஏனைய உருவ வழிபாடுகளிலும் மரியாதை செலுத்தும் பொருட்டு அரசாங்கத் துருப்புகளுடன் சேர்ந்து துப்பாக்கிகளை வெடித்து வணக்கம் செலுத்துமாறு பிரிட்டிஷ் அதிகாரிகள் நிர்ப்பந்திக்கப்பட்டனர்; இவ்வாறு கிறித்தவர்கள் மிகத் தூய்மையான தங்களது சொந்த சமய சம்பிரதாயங் களுக்கு எதிராக புனிதமற்ற, இழிவான மூடப் பழக்க வழக்கங்களில் ஈடுபடும்படி அடிக்கடி நிர்ப்பந்திக்கப்பட்டனர்.

இவை யாவும் எதைக் காட்டுகின்றன? ''இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் அரசாங்கம் நற்கதி அளிக்கும் விவிலிய நூல்களின் உண்மைகள், மறை மொழிகள் பரவுவதைத் தடுப்பதற்கு, ஒடுக்குவதற்கு முனைந்து ஈடுபட்ட துடன் நில்லாமல், இன்னும் ஒருபடி மேலே சென்று, மிகக் குரூரமான பேய் வழிபாட்டு முறைகளைப் பகிரங்கமாகவும் அதிகாரபூர்வமாகவும் தூண்டி ஊக்குவித்தது; இந்து மதத்தின் அருவருப்பூட்டும் அனைத்து அவலங்களையும் அரவணைத்துக் கொண்டு அவற்றுக்கு விசேட ஆக்கமும் ஊக்கமும் அளித்தது; இந்தப் பயங்கர, களியாட்டங்களைத் தலைமை தாங்கி நடத்துவதற்கு தனது சொந்த குருமார்களையே அனுப்பி வைத்தது; விக்கிரக வழிபாட்டுக் கோயில்களின் சொத்துகளை ஒரு தந்தைக்குரிய பாசத்துடன் நிர்வகித்தது; அக்கோயில்களின் புரோகிதர்களுக்கு மிகுந்த சலுகை அளித்தது; கோயில்களின் நடனமாதர்களைப் பேணிப் போற்றிற்று; இதுவன்றி, புறசமயத்தினரைப் பெரிதும் பெருமைப்படுத்தி, அவர்களை மகிழ்ச்சியில் திளைக்க வைப்பதற்கு என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் தட்டுத் தடங்கலின்றிச் செய்து வந்தது.''

இந்து, முகமதிய சமயச் சடங்குகளில் தன்னை நேரடியாக இணைத்துப் பிணைத்துக் கொள்வதை 1841 வரை அரசாங்கம் நிறுத்த வில்லை; அதுவும் கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் பெரும் கிளர்ச்சி செய்த பிறகே இது நின்றது.

''போர்ட் செயிண்ட் ஜார்ஜ் அரசாங்கத்தின் ராணுவச் செயலாளர் கையொப்பமுடன் பிரதம தளபதிக்கு 1841 ஜூலை 6 ஆம் தேதியிட்டு ஒரு சுற்றுக் கடிதம் அனுப்பப்பட்டது. இயக்குநர்கள் மன்றத்தின் ஆணையின் பேரில் இந்திய அரசாங்கத்தின் மூலம் அக்கடிதத்தில் பின்வருமாறு தெரிவிக்கப்பட்டிருந்தது: ''சுதேசி விழாக்களில் அல்லது சமயச் சடங்குகளில் துருப்புகள் அல்லது ராணுவ வாத்தியக் குழுக்கள் பங்கெடுத்துக் கொள்வதோ அல்லது மரியாதை நிமித்தம் துப்பாக்கி வேட்டுகள் முழங்குவதோ எதிர்காலத்தில் நிறுத்தப்பட வேண்டும், இந்து மற்றும் முகமதிய சமயங்களின் சடங்குகளுடன் அரசாங்கத்துக்கும் அதன் அதிகாரிகளுக்குமுள்ள அனைத்துத் தொடர்புகளையும் கூடிய மட்டும் துண்டித்துக் கொள்வதே இதன் நோக்கம். எனினும் சுதேச மன்னர்கள் இத்தகைய சடங்குகளில் கலந்து கொள்ளச் செல்லும்போதோ அல்லது திரும்பும்போதோ வழக்கமாக அளிக்கப்படும் மரியாதை தொடர்ந்து அளிக்கப்பட வேண்டும்; சுதேசி மக்களின் மனத்தில் பீதியை ஏற்படுத்தாத வகையிலோ அல்லது அவர்களது உணர்வுகளைப் புண்படுத்தாத முறையிலோ இந்த மாற்றத்தைக் கொண்டுவர வேண்டும்.'' இந்த ஆணைகள் பிரதம தளபதியால் படைப் பிரிவுத் தளபதிகளுக்கு அனுப்பப்பட்டன; அவர்கள் அதனைத் துணைப் படைப்பிரிவுகளின் தளபதிகளுக்கு அனுப்பி வைத்தனர்.''

சுதேசி மக்களின் சமயச் சடங்குகளில் ஆழமாக ஊறித் திளைத்துப் போய், அவற்றைப் பேணி வளர்ப்பதற்கும், ஊக்குவிப்பதற்கும் அரசு வளங்களையும் வசதிகளையும் ஊதாரித்தனமாக வீண் விரயம் செய்யும் ஓர் அரசாங்கத்திடமிருந்து எத்தகைய சீர்திருத்தத்தை எதிர்பார்க்க முடியும்?

சுதேசி மக்களின் சமய சடங்குகள், பழக்க வழக்கங்களின்பால் கொண்டிருந்த அனுதாபம் என்னும் நோயால் அது பீடிக்கப்பட்டிருந்தது, முடமாக்கப்பட்டிருந்தது. இவற்றின்பால் அது வைத்திருந்த அனுதாபத்தை நிறுத்திக் கொண்டபோது, அச்சம் அதனை பிடித்துக் கொண்டது. இந்த அச்சம் தோன்றுவதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன.

முதல் காரணம் இந்திய மக்களுக்கு அது அளித்த வாக்குறுதி சம்பந்தப்பட்டதாகும். முன்னர் சுதேசிகளின் அதிகாரத்தின் கீழ் இருந்த எந்தப் புதிய பிரதேசத்தையும் ஆளும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்போது பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு பிரகடனத்தை வெளியிடுவது வழக்கம்; அதாவது மக்கள் தத்தமது சமயங்களைச் சுதந்திரமாகப் பின்பற்ற அனுமதிக்கப்படுவார்கள் என்றும், அவர்களது சமய அமைப்புகளோ அல்லது அவர்களது பழக்க வழக்க மரபுகளோ எவ்வகையிலும் சீர்குலைக்கப்பட மாட்டா என்றும் அந்தப் பிரகடனத்தில் வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கும். இவ்வாறுதான் 1801ல் கர்நாடக மக்களுக்கு ஒரு பெருமிதமான பிரகடனம் வெளியிடப்பட்டது; அதில் பின்கண்டவாறு கூறப்பட்டிருந்தது:

> ''நடுநிலைமை, நீதி, பாதுகாப்பு, பந்தோபஸ்து ஆகிய கோட்பாடுகள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தனிச் சிறப்புடைய பண்புகளாக இருந்து வந்திருப்பதை கர்நாடக மக்கள் அனுபவ ரீதியாக கண்டுவந்துள்ள நிலைமையில், அவற்றைப் பற்றி இங்கு மீண்டும் விளக்க வேண்டிய அவசியமில்லை என்று நிர்வாக சபையுடன் கூடிய மாட்சிமை தங்கிய கவர்னர் ஜெனரல் நம்புகிறார்; இருப்பினும் தற்போதைய ஒப்பந்தத்தின் மூலம் கம்பெனிக்கு வழங்கப்பட்டுள்ள புனிதமான கடமைப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் பெருமகனார், கம்பெனியின் ஆட்சிக்கு மனநிறைவோடு கீழ்ப்படிந்து நடக்குமாறு கர்நாடக மக்களைக் கேட்டுக் கொள்கிறார்; பொதுவான மற்றும் வரையறுக்கப்பட்ட சட்டங்களின் பாதுகாப்பின்கீழ் அவர்கள் தங்களது நியாயமான, உறுதிப்படுத்தப்பட்ட சிவில் உரிமைகள் அனைத்தையும் அனுபவிக்கலாம் என்றும், தங்களது சமய பழக்க வழக்கங்களையும், தங்களது மூதாதையரின் வழக்காற்று மரபுகளையும் தங்கு தடையின்றிப் பின்பற்றலாம் என்றும் மிகுந்த நம்பிக்கையோடு உறுதியளிக்கிறார்.''

குடகு கைப்பற்றப்பட்டபோது, 1834 மே மாதம் குடகு மக்களுக்குப் பின்கண்ட பிரகடனம் வெளியிடப்பட்டது:

> ''குடகு பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பாதுகாப்பின் கீழ் கொண்டு வரப்பட வேண்டும் என்பது குடகு மக்களின் ஒருமித்த விருப்பமாக இருப்பதால், இதுவரை வீர ராஜுந்தர் உடையாரால் ஆளப்பட்டு வந்த பிரதேசம் கம்பெனிக்கு மாற்றப்பட வேண்டும் என்று மாட்சிமை தங்கிய கவர்னர்-

ஜெனரல் தீர்மானிக்கிறார். குடகு மக்கள் சுதேசி ஆட்சியின் கீழ் மீண்டும் கொண்டுவரப்பட மாட்டார்கள் என்று அவர்களுக்கு இதன் மூலம் உறுதி யளிக்கப்படுகிறது; அவர்களது சிவில் உரிமைகளும் சமய பழக்கவழக் கங்கள் மரபுகளும் மதிக்கப்படுமென்றும், அவர்களது பந்தோபஸ்தும், வசதிகளும், நல்வாழ்வும் மேம்பட பிரிட்டிஷ் அரசாங்கம் மிகுந்த அக்கறை எடுத்துக் கொள்ளுமென்றும் உறுதி அளிக்கப்படுகிறது.''

1849ல் பஞ்சாப் கைப்பற்றிக் கொள்ளப்பட்டபோது அதன் மக்களுக்குப் பின்கண்ட வாக்குறுதி அளிக்கப்பட்டது:

''முசல்மான்களாயினும், இந்துக்களாயினும் அல்லது சீக்கியர்களா யினும் அனைத்து மக்களும் தங்களது சொந்த சமயங்களை தங்கு தடை யின்றிப் பின்பற்ற பிரிட்டிஷ் அரசாங்கம் முழு சுதந்திரம் அளிக்கும்; ஆனால் தங்கள் மதங்கள் விதித்துத் தந்துள்ள அல்லது அனுமதித்துள்ள பழக்க வழக்கங்களைப் பின்பற்றுவதில் பிறர் எவரும் தலையிடுவதை அது அனுமதிக்காது.''

இவை போன்ற இன்னும் எத்தனை எத்தனையோ பிரகட னங்களை நாம் மேற்கோள் காட்ட முடியும். இவை வாக்குறுதி களாக மதிக்கப்பட்டன. இத்தகைய வாக்குறுதிகள் அளிக்கப்பட்டது பண்புள்ள செயலா என்பது ஒருபுறமிருக்க, இத்தகைய வாக்குறுதி கள் எப்போது அளிக்கப்பட்டனவோ அப்போது அவற்றைப் புறக் கணிப்பது நாகரிகமாகாது என்பது உணரப்பட்டது. இது பொதுவான கருத்தாக இருந்தது. ஆனால் இதற்குச் சொல்லுக்குச் சொல் அர்த்தம் கண்டவர்கள் சிலர் எப்போதும் இருக்கவே செய்தனர்; ''நீங்கள் இதனை புதிய ஆட்சியில் எத்தகைய தடையுமின்றி அனுபவித்தீர்கள்'' என்று இந்தியர்களிடம் கூறும் விதத்தில் இந்த வாக்குறுதிகளுக்குப் பொருள் காண விரும்பியவர்களுக்கும் ''இதிலிருந்து பிறழ்வது பச்சை நம்பிக்கைத் துரோகமாகும்'' என்று வாதிட்டவர்களுக்கும் இடையே எத்தகைய வேறுபாடும் காணாததே இவர்களது கண் ணோட்டமாக இருந்தது. இத்தகைய நம்பிக்கைத் துரோகம் பற்றிய அச்சம் ஒருபுறம்; பகிரங்கக் கலகம் வெடிக்கக்கூடும் என்ற அச்சம் இன்னொருபுறம். ஆயினும் இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தைப் பொறுத்தவரையில், கலகம் பற்றிய அச்சம் அதற்குப் புதிது ஒன்று மல்ல; அது ஒரு நடைமுறை அனுபவமாகவே அமைந்திருந்தது. 1801ல் ஒரு கலகம் நடைபெற்றது; அது வேலூர் கலகம் எனப் பெயர் பெற்றது. 1857ல் மற்றொரு கலகம் நடைபெற்றது; அது சிப்பாய்க் கலகம் என அழைக்கப்பட்டது. வேலூர் கலகம் ஒரு சிறு தீப்பொறி யாக இருந்தது. ஆனால் சிப்பாய்க் கலகமோ பெருநெருப்பாக மூண்டது. இவ்விரு சந்தர்ப்பங்களிலும், இந்துக்களின் சமயப் பழக்க வழக்கங்களில் தலையிட்டதே இக்கலகங்களுக்குக் காரணமாகக்

கூறப்பட்டது. இவ்விரு கலகங்களும் ஒரு படிப்பினையாக அமைந் தன; இந்தப் படிப்பினையிலிருந்து பாடம் கற்றுக் கொள்ளப் பிரிட் டிஷ் அரசாங்கம் தவறவில்லை. 1801 ஆம் வருட வேலூர் கலகம் சமூக மாற்றங்கள் விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்கும்படி பிரிட் டிஷ் அரசாங்கத்துக்குப் போதித்தது. 1857 ஆம் வருடச் சிப்பாய்க் கலகமோ எத்தகைய சமூக சீர்திருத்தத்துக்கும் கடுமையான எதிர்ப்பு தெரிவித்தது. ஆபத்தை உண்டுபண்ணும் எத்தகைய நடவடிக்கையும் எடுக்க பிரிட்டிஷ் அரசாங்கம் விரும்பவில்லை. அவர்களுடைய கண்ணோட்டத்தில் இது மிகப் பெரிய அபாயமாகத் தென்பட்டது. சிப்பாய்க் கலகம் அவர்களைப் பெரிதும் பீதியடைய வைத்தது; சமூக சீர்திருத்தங்கள் மேற்கொள்ள முற்பட்டால் அதன் விளைவாக நிச்சயம் இந்தியாவை இழக்க நேரிடும் என்பதை அவர்கள் உணர்ந் தனர்; இந்தியா தங்களிடமிருந்து கைநழுவி போய்விடக்கூடாது என்பதில் அவர்கள் குறியாக, ஆவலாக இருந்ததால் சமூக சீர்திருத்தத் திட்டம் எதையும் ஏறெடுத்துப் பார்க்கவும் அவர்கள் மறுத்து விட் டனர்.

சமூக சீர்திருத்தம் சம்பந்தமாக பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இந்தப் போக்கு முற்றிலும் புரிந்து கொள்ளக் கூடியதே. பேராசிரியர் டிசே[1] சுட்டிக்காட்டியிருப்பதுபோல், ஓர் அரசாங்கம் என்னதான் வல்லமை மிக்கதாக இருந்தாலும், அதன் அதிகாரம் பின்வரும் இரண்டு வரம்புகளுக்கு உட்பட்டதாகும்:

> ''அதிகாரத்தில் உள்ளவர்களின் இயல்பு, நோக்கங்கள், நலன்கள் முதலியவற்றிலிருந்து எழும் உள்வய வரம்பை இவ்வகையில் முதலாவ தாகக் குறிப்பிட வேண்டும். இஸ்லாமை சுல்தான் ஒழித்துக் கட்டவில்லை என்றால், ரோமன் கத்தோலிக்க சமயக் கோட்பாடுகளை போப்பாண்டவர் தடை செய்யவில்லை என்றால், பிராமணர்கள் சாதி அமைப்பைக் கண்டிக்கவில்லை என்றால், பிறவியிலேயே இருதயக் கோளாறால் பெரிதும் பாதிக்கப்பட்டு நீலநிறமாக மாறும் சிசுக்கள் பராமரிக்கப்படு வதை பிரிட்டிஷ் பாராளுமன்றம் சட்டவிரோதமாக்கவில்லை என்றால் இதற்கெல்லாம் காரணம் இவற்றை அவர்களால் ''செய்ய முடியாது'' என்பதல்ல, மாறாக இந்தக் காரியங்களை அவர்கள் ''செய்ய மாட்டார்கள்'' என்பதேயாகும். இதேபோன்றுதான், இந்தியாவிலுள்ள நிர்வாகம் முன் னேற்றத்திற்குப் பெரிதும் உகந்ததாக உள்ள சில காரியங்களைச் செய்ய வில்லை என்றால் அது ஏகாதிபத்திய நோக்கும் போக்கும் கொண்டதாக இருப்பதும், அதன் இயல்பும், நோக்கங்களும், நலன்களும் வேறுபட் டவையாக இருப்பதுமே இதற்குக் காரணம். இதனால் இந்திய சமுதாயத் தில் செயல்பட்டுவரும் ஜீவசக்திகளிடம் அது அனுதாபம் காட்ட முடிய வில்லை; அதன் தேவைகளில், துன்ப துயரங்களில், ஆசை அபிலாஷை களில், ஆர்வ விருப்பங்களில் அக்கறை கொள்ளவில்லை; அதன் நாட்டங் களும் விழைவுகளும் அதற்குப் பகையானவையாக இருந்தன; பிரிட்டிஷ்

---

1. அரசியல் சாசனச் சட்டம், 1915, பக்கங்கள் 74-82.

நிர்வாகம் இந்நாட்டு மக்களின் கல்வியை முன்னேற்றவில்லை; சுதேசி இயக்கத்தை ஆதரிக்கவில்லை; தேசிய வாடை வீசும் எதையும் அது விஷமென வெறுத்தொதுக்கிற்று; இவையாவும் அதன் உள்ளார்ந்த இயல்புக்கு முரணாக இருந்ததே இதற்குக் காரணம். ஆனால் அதேசமயம் ஒரு பொறுப்பற்ற அரசாங்கம் தான் செய்ய விரும்பும் இத்தகைய காரியங்களைச் சாதிப்பதற்குச் சக்தியற்றதாக, திராணியற்றதாக இருக்கிறது என்பதை மறந்துவிடக் கூடாது. ஏனென்றால் புறத்தே இருந்து எதிர்ப்பு தோன்றும் சாத்தியக்கூறு இருப்பதால் அதன் அதிகாரம் ஒரு வரையறைக் குட்பட்டதாக இருக்கிறது. அது செய்யக்கூடிய காரியங்கள் பல இருக்கின்றன; ஆனால் அவற்றைச் செய்வதற்கு அது துணிந்து முன்வராது; இதனால் தனது அதிகாரத்திற்கு எங்கே எதிர்ப்பு உருவாகிவிடுமோ என்ற அச்சமே இதற்குக் காரணம். ரோமானிய மக்களின் வழிபாட்டு முறையைக் குலைக்க சீசர் துணியவில்லை; காலனிகள் மீது எவ்வளவுதான் வரிச் சுமையைத் திணிக்க முடியும் என்றாலும் தற்கால ஒரு நாடாளுமன்றம் அதைச் செய்யத் திடங்கொள்வதில்லை. இதே காரணத்தால்தான் இந்திய அரசாங்கம் சாதிமுறையை ஒழித்துக் கட்டுவதற்கும், ஒருதார மணத்தைக் கட்டாயமாக்குவதற்கும், வாரிசு சட்டங்களை மாற்றுவதற்கும், கலப்புத் திருமணங்களைச் சட்டபூர்வமானவையாக ஆக்குவதற்கும், தேயிலைத் தோட்ட உரிமையாளர்கள் மீது வரி விதிப்பதற்கும் துணியவில்லை. முன்னேற்றம் காண வேண்டுமென்றால் இப்போதைய சமூக வாழ்க்கையின் விதிமுறைகளில் தலையிடுவது தவிர்க்க முடியாதது; அத்தகைய தலையீடு பெரும் எதிர்ப்பை கிளர்த்திவிடும் என்பதும் எதிர்பார்க்கக் கூடியதே. எனினும் இது எப்படியிருந்த போதிலும், மக்களிடமிருந்து தனிமைப்பட்டிராத, ஒரு மக்கள் அரசாங்கம் முன்னேற்றப் பாதையைத் துணிந்து மேற்கொள்ள முடியும்; ஏனென்றால் சட்டத்துக்கு இணங்கி நடத்தல் எங்கு முடிவடையும், எதிர்ப்பு எங்கு தொடங்கும் என்பதை நன்கு அறிந்து கொள்ளும் நிலையில் அது இருக்கும். ஆனால் இந்திய நிர்வாகம் மக்களுடையதல்லவாதலால், மக்களின் நாடித்துடிப்பை அது உணர முடியாது. இரத்தினச் சுருக்கமாகக் கூறினால், இந்தியாவில் ஆட்சிபீடத்தில் அமர்ந்திருந்த பொறுப்பற்ற நிர்வாகம் ஒருபுறம் தனது அதிகாரத்தைக் கட்டமைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயத்திலும், இன்னொருபுறம் மக்களின் வாழ்க்கையை வளமாக்க முடியாத நிலையிலும் இவ்விரு வரம்புகளுக்கிடையே சிக்கி அது முடமாகிப் போயிருந்தது. இதனால் செயல் திட்டத்தின் ஒரு பகுதியை அது நிறைவேற்றாது; இன்னொரு பகுதியை அதனால் மேற்கொள்ள முடியாது. பொருளாயத முன்னேற்றத்தில் ஓரளவு அபிவிருத்தி இருந்தது என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் அமைதியும் ஒழுங்கும் நல்கும் அனுகூலங்களால் மட்டுமே உலகில் எந்த மக்களும் நீண்டகாலம் மன நிறைவு அடைந்திருக்க முடியாது; ஏனென்றால் அவர்கள் வாய் பேசாத விலங்குகள் அல்ல. தங்கள் சாலைகளை மேம்படுத்தியுள்ளது, மிகுந்த விஞ்ஞானக் கோட்பாடுகளின் அடிப்படையில் கால்வாய்களைக் கட்டியுள்ளது, தாங்கள் ரயிலில் பயணம் செய்ய வசதி செய்து தந்துள்ளது, தங்கள் கடிதங்களை அஞ்சல் மூலம் அனுப்ப ஏற்பாடு செய்துள்ளது, தந்தி மூலம் தங்கள் தகவல்களை மின்னல் வேகத்தில் விரைந்தனுப்ப வழிவகை செய்துள்ளது, தங்கள் செலாவணி முறையை மேம்படுத்தியுள்ளது, தங்களுடைய நிறுத்தலளவைகளையும் முகத்தலளவைகளையும் ஒழுங்குபடுத்தியுள்ளது, நில இயல், வானூல், மருத்துவம் போன்றவை குறித்த தங்களது

கண்ணோட்டத்தைத் திருத்தியுள்ளது, தங்களுடைய உட்பூசல்களைத் தடுத்து நிறுத்தியுள்ளது என்பதற்காக எந்த ஓர் அதிகார வர்க்கத்தையும் மக்கள் என்றென்றும் ஆதரித்து நிற்பார்கள் என்று எண்ணுவது மடமை யிலும் மடமையாகும். எந்த மக்களும் அவர்கள் என்னதான் பொறுமை சாலிகளாக இருந்தாலும் ஒரு வெறும் திறமையான எந்திரம் என்பதை விட மேம்பட்டதோர் அரசாங்கம் வேண்டுமென்றே கட்டாயம் ஏதேனும் ஒரு சமயத்தில் கோருவார்கள்.''

அரசியல், பொருளாதார, சமூக சுதந்திரத்தை மக்கள் விரும்பி னார்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் இந்த சுதந்திரத்தை வழங்க மறுத்தது:

''இதன் விளைவாக, மக்களின் தார்மிக, சமூக வாழ்க்கையைப் பொறுத்தவரையில், மொகலாயர்களிடமிருந்து பிரிட்டிஷாருக்கு அதிகாரம் மாறியதானது ஆட்சிமுறை மாற்றமாக அல்லாமல் ஆட்சியாளர்களின் மாற்றமாகவே இருந்தது. பிரிட்டிஷார் ஓரளவு தாங்களே விரும்பியும், ஓரளவு கட்டாயத்தின் காரணமாகவும் தலையிடாக் கோட்பாட்டை மேற்கொண்டதன் விளைவாக சுதேசி மக்கள் கண்ட பலன் என்ன? சோர்வூட்டும், மறந்துபோன அவர்களது நீண்ட நெடிய வரலாற்றில் எந்த ஆட்சியின் கீழ் அவர்கள் மாடாக உழைத்து ஓடாகத் தேய்ந்து, வாழ்ந்து மடிந்தார்களோ அந்த ஆட்சியிலிருந்து அடிப்படையில் எவ்வகையிலும் மாறுபட்டிராத ஓர் ஆட்சியிருப்பதையே அவர்கள் கண்டார்கள். அரசியல் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, இந்த மாற்றம் ஒரு கொடுங் கோன்மைக்குப் பதில் இன்னொரு கொடுங்கோன்மை இடம்பெற்றதையே காட்டுகிறது. பிரிட்டிஷார் ஏற்கெனவே இருந்துவந்த ஏற்பாடுகளை அப்படியே ஏற்றுக்கொண்டனர்; அவற்றை எழுத்துக்கு எழுத்து, அட்சரம் பிசகாது அப்படியே பாதுகாத்து நடைமுறைப்படுத்தவும் செய்தனர்.[1] இது ஒரு சீனத் தையற்காரனின் கதையைத்தான் நினைவுப்படுத்துகிறது. அந்தக் கதை இதுதான்: யாரோ ஒருவன் அந்தத் தையற்காரனிடம் வந்து ஒரு சட்டை தைத்துக் கொடுக்கும்படிக் கூறினான். அந்தச் சட்டை எந்தப் பாணி யில் இருக்க வேண்டும் என்பதற்கு முன்மாதிரியாக ஒரு பழைய சட்டை யையும் அவனிடம் கொடுத்துவிட்டுச் சென்றான். அந்தச் சட்டை ஆங் காங்கு பல கிழிசல்களுடனும் ஒட்டுகள் போட்டும் இருந்தது. ஒரு சில தினங்களில் தையற்காரனும் சட்டையைத் தைத்து முடித்துவிட்டான். அதை வாங்கிச் செல்ல வந்தவன் சட்டையைப் பார்த்ததும் அதிர்ந்து போனான். ஏனென்றால் புதிய சட்டை பழைய சட்டையைப் போன்றே ஆங்காங்கு கிழிசல்களுடனும் ஒட்டுகளுடனும் அதன் அசல் நேர் பகர்ப் பாக இருந்தது.''[2]

இந்தத் தலையிடாக் கொள்கை புரிந்து கொள்ளக் கூடியதே என்றாலும், தீண்டப்படாதவர்களைப் பொறுத்தவரையில் அது தவறான கண்ணோட்டம் கொண்டதாகவும் கொடிய விளைவுகளைத் தோற்றுவிக்கக் கூடியதாகவும் இருந்தது. தீண்டப்படாதவனின் மனித

1. பர்மாவில் தலைவரி தொடர்ந்து நீடித்தது; பிரிட்டிஷார் பர்மாவைக் கைப்பற் றியபோது அந்த வரி அங்கு இருந்து வந்ததே இதற்குக் காரணம்.
2. டிமார்டு ஹாட்டன், அதிகாரவர்க்க அரசாங்கம்

உரிமைகளை இந்துக்கள் அங்கீகரிப்பதன் மூலமும், அவனை ஒரு மனிதனாக நடத்துவதன் மூலமுமே தீண்டப்படாதவர்களைக் கைதூக்கிவிட முடியும் என்று கூறுவது சரியாக இருக்கலாம். ஆனால் இங்கு விஷயம் இத்துடன் முடிந்துவிடவில்லை. ஒரு மனித ஜீவன் என்ற முறையில் அவனுக்குள்ள உரிமைகள் அங்கீகரிக்கப்படுவதை எவ்வாறு சாதிப்பது என்னும் கேள்வி இங்கு எழுகிறது. இந்தக் குறிக்கோளை எய்துவதற்கு இரண்டு வழிகள்தான் உள்ளன. அவனை மரியாதைக் குரியவனாக ஆக்குவது ஒரு வழி; அவனை அவமதிப்பவர்களை யும் அவனது உரிமைகளை மறுப்பவர்களையும் தண்டிப்பது மற்றொரு வழி. அவனுக்குக் கல்வி போதிப்பதும், உயர் அதிகார பீடங்களில் அவனை அமர்த்துவதும் முதல் வழியில் அடங்கும். தீண்டாமையை சட்டப்படி தண்டனைக்குரிய குற்றமாக ஆக்குவது இரண்டாவது வழி. இவற்றில் எதையும் மேற்கொள்ள பிரிட்டிஷ் அரசாங்கம் முன் வரவில்லை. பொதுநிலை அரசுப் பணிகளில் தீண்டப்படாதவர் களுக்கு எத்தகைய முன்னுரிமையும் அளிக்கவில்லை. இந்து சமுதா யத்தைச் சீர்திருத்துவதற்கும் அது முன்முயற்சி எடுத்துக் கொள்ள வில்லை. இதன் விளைவாக, தீண்டப்படாதவன் பிரிட்டிஷார் இந்த நாட்டுக்கு வருவதற்கு முன்னர் எப்படி இருந்தானோ அவ்வாறே தீண்டப்படாதவனாகவே இருந்தான். அவன் ஒரு குடிமகனாகக் கருதப்பட்டான்; ஆனால் குடிமகனுக்குரிய உரிமைகள் அவனுக்கு வழங்கப்படவில்லை. அவன் வரிகள் செலுத்தினான். அவற்றிலிருந்து பள்ளிக்கூடங்கள் பராமரிக்கப்பட்டன; ஆனால் அவனுடைய குழந் தைகள் இந்தப் பள்ளிக்கூடங்களில் படிப்பதற்கு அனுமதிக்கப்பட வில்லை. அவன் வரிகள் செலுத்தினான், அந்த வரிகளிலிருந்து கிணறு கள் வெட்டப்பட்டன; ஆனால் அவற்றிலிருந்து தண்ணீர் எடுக்க அவனுக்கு உரிமை இல்லை. அவன் வரிகள் செலுத்தினான், அந்த வரிகளிலிருந்து சாலைகள் போடப்பட்டன; ஆனால் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள அவனுக்கு உரிமை இல்லை. அரசைப் பரா மரிக்க அவன் வரிகள் செலுத்தினான்; ஆனால் அந்த அரசில் அதிகார பீடங்களில் அமர அவனுக்கு உரிமை இல்லை. அவன் நடைமுறை யில் ஓர் அடிமையாக இருந்தானேயொழிய குடிமகனாக இல்லை. தீண்டப்படாதவனுக்கு கல்வி வசதியும், குடிநீர் வழங்கீடும் மிக அத்தியாவசியமாகத் தேவைப்பட்டன. அவன் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள உயர் பதவிகளில் இருப்பது இன்றியமையாததாக இருந்தது. அவன் வாட்டியெடுக்கும் வறுமையில், வெறுமையில் உழன் றான்; நியாயமாக எல்லா வரிகளிலிருந்தும் அவனுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் எல்லாம் நேர்மாறாக இருந் தன. தீண்டப்படாதவன் கல்வி கற்பதற்கு வரி செலுத்த வேண்டி

யிருந்தது. தீண்டத்தக்கவனுக்கு குடிநீர் வழங்குவதற்கு தீண்டப்படாதவன் வரி செலுத்த வேண்டியிருந்தது. அதிகார பீடங்களில் ஆடம்பர ஆர்ப்பாட்டமாக அமர்ந்து இருக்கும் தீண்டத்தக்கவர்களுக்கு சம்பளம் தருவதற்கு தீண்டப்படாதவன் வரி கொட்டி அழ வேண்டியிருந்தது.

பிரிட்டிஷ் ஆட்சி தீண்டப்படாதவர்களுக்கு செய்துள்ள நன்மைகள் என்ன? கல்வித் துறையில் எதுவுமில்லை; அரசுப் பணித்துறையில் எதுவும் இல்லை; சமுதாய படிநிலையில் எதுவுமில்லை. ஒரு விஷயத்தில் அவர்கள் ஏதோ சற்று ஆதாயம் பெற்றனர்; அதாவது சட்டத்தின் முன் அவர்கள் சமமாகக் கருதப்பட்டனர். இதில் விசேடம் ஏதுமில்லை; ஏனென்றால் சட்டத்தின் முன் சமத்துவம் என்பது எல்லோருக்கும் உரியதுதான். இதில் தீண்டப்படாதவர்களுக்கு உருப்படியான பலன் ஏதும் கிட்டவில்லை; காரணம் பதவியில் இருப்பவர்கள் தங்கள் அதிகாரத்தை இழிச் செயலுக்குப் பயன்படுத்தி, இந்தக் கோட்பாட்டிலிருந்து தீண்டப்படாதவர்களுக்கு எத்தகைய நன்மையும் கிட்டாதபடி செய்துவிட்டனர். எனினும் சட்டத்தின் முன் எல்லோரும் சமம் என்னும் கோட்பாடு தீண்டப்படாதவர்களுக்கு ஒருவகையில் ஆதாயம் என்றுதான் சொல்ல வேண்டும்; ஏனென்றால் பிரிட்டிஷார் வருவதற்கு முன்னர் அவர்களைப் பொருத்தவரையில் இந்தக் கோட்பாடு ஒருபோதும் இருந்ததில்லை. மனுதர்மம் இந்த சமத்துவக் கோட்பாட்டை ஏற்கவில்லை. ஏற்றத்தாழ்வுதான், சமத்துவமின்மைதான் மனுதர்மத்தின் உயிர்நிலை,ஆதார சுருதி. அது வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும், அனைத்துச் சமூக உறவுகளிலும், சகல அரசுத் துறைகளிலும் படர்ந்து பரவி ஆழ வேரூன்றிப் போயிருந்தது. அது சூழ்நிலை முழுவதையுமே முற்றிலும் நச்சுப்படுத்தியிருந்தது; இந்த விஷச் சூழலில் சிக்கி, தீண்டப்படாதவர்கள் திக்குமுக்காடிக் கொண்டிருந்தனர். இத்தகைய பகைப்புலனில் சமத்துவக் கோட்பாடு ஒரு சக்திவாய்ந்த தொற்றுத் தடை மருந்தாக அமைந்திருந்தது. அது காற்றைச் சுத்தப்படுத்தி, தீண்டப்படாதவர்கள் சுதந்திரக் காற்றை சுவாசிக்க வகை செய்தது. தீண்டப்படாதவர்களுக்கு உண்மையிலேயே இது ஓர் ஆதாயம் என்பதில் ஐயமில்லை; அதுவும் கடந்த காலத்துடன் ஒப்பிட்டு நோக்கும்போது இது ஓர் அற்பமான ஆதாயமல்ல என்று துணிந்து கூறலாம்.



I. *இங்கிலாந்தின் அரசியல் சாசனம் குறித்த விரிவுரைகள்*

II. *மீயுயர் ஆணையுரிமையும் இந்திய சமஸ்தானங்களின் சுதந்திரக் கோரிக்கையும்*

*அரசினர் சட்டக் கல்லூரி சஞ்சிகையின் 1936 ஜனவரி 8 ஆம்* தேதிய இதழில் 'கல்லூரிக் குறிப்புகள்' என்ற பகுதியில் பின்கண்ட வாறு குறிப்பிடப்பட்டிருந்தது:

> *''எனினும் மிகவும் தகுதி வாய்ந்த டாக்டர் அம்பேத்கரிடம் திரு. ஃபைஜீ பொறுப்பை ஒப்படைத்தது குறித்து நாம் மனநிறைவடைகிறோம். அவர் புகழ்பெற்ற வழக்கறிஞர், தேர்ந்த பொருளியல் ஆராய்ச்சியாளர், அரசியல் சாசன சட்ட நிபுணர், இந்தியா முழுவதிலும் ஏனைய இடங்களிலும் பிரபலமானவர். அவரைப் பற்றி மேலும் எழுதுவது மிகையானதாகும். நமது கல்லூரி முதல்வரிடமிருந்து அதிகம் எதிர்பார்க்கும் நாம் அவரை இப்போது சங்கடத்துக்குள்ளாக்கக் கூடாது. பொறுத்திருந்து பார்க்கவே நாம் விரும்புகிறோம்.''*

# I

# இங்கிலாந்தின் அரசியல் சாசனம் குறித்த விரிவுரைகள்

## பொருளடக்கம்

# முகப்புரை

பம்பாய் அரசினர் சட்டக் கல்லூரி மாணவர்களுக்கு இங்கிலாந்தின் அரசியல் சாசனம் குறித்து 1934-35ல் நான் நிகழ்த்திய விரிவுரைகள் இவை. இந்த விரிவுரைகளைப் பிரசுரிக்கும்போது, இங்கிலாந்தின் அரசியல் சாசனத்தின் கோட்பாடுகளை விளக்கிக் கூறுவது ஓர் இந்தியனுக்கு மிதமிஞ்சிய துணிவுகரமான முயற்சி என்பதை நான் மறந்துவிடவில்லை. இந்திய அரசியல் சாசன சீர்திருத்தக் கூட்டுக் குழுவின் முன் ஆஜரான ஓர் இந்திய சாட்சியைக் குறுக்கு விசாரணை செய்யும்போது சர் ஆஸ்டின் சேம்பர்லேன் பின்கண்டவாறு குறிப்பிட்டார்: சாட்சி இந்திய நிலைமைகளை விவரித்துக் கூறுவதை மிகுந்த மரியாதையோடு, கவனமாக செவி மடுத்துக் கேட்கிறேன்; ஆனால் அவர் பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தை விளக்கிக் கூறும்போது, அது குறித்து எனது சொந்த அபிப்பிராயத்தை நான் கொள்வதற்கு அவர் என்னை அனுமதிக்க வேண்டும். (சாட்சியக் குறிப்புகள், தொகுதி 11 சி, க்யூ. 9812). இந்தக் கருத்தில் மிகப் பெருமளவுக்கு உண்மை இருக்கிறது என்பதில் ஐயமில்லை; எனவே, இங்கிலாந்தின் அரசியல் சாசனம் பற்றி எழுத விரும்பும் ஒவ்வொரு இந்தியரும் இப்பணியில் மிகுந்த நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். எனினும் இங்கிலாந்தின் அரசியல் சாசனத்தின் பெரும் பகுதி அயல்நாட்டினரால் விளக்கப்பட்டபோது அதனைப் பிரிட்டிஷார் மிகுந்த கண்ணியத்தோடு செவிமடுத்துக் கேட்டனர் என்பது மட்டுமன்றி, அவர்களது எழுத்துகள் கருத்து மாற்றத்தினை ஏற்படுத்தின என்ற உண்மையிலிருந்தும் இத்துறையில் ஈடுபட விரும்பும் ஒவ்வொரு இந்தியனும் ஆக்கமும் ஊக்கமும் பெற வேண்டும். சர் ஆஸ்டன் சேம்பர்லேன் தெரிவித்த கருத்துகள் எத்தகையவையாக இருப்பினும் அவை என்னுடைய வழியில் குறுக்கிட மாட்டா என்றே நினைக்கிறேன். இது சம்பந்தமாக என் சொந்த விளக்கம் எதையும் நான் தரவில்லை. பிரிட்டிஷாருக்கும் எந்த விளக்கத்தையும் நான் அளிக்கவில்லை. பிரிட்டிஷ் அரசியல் சாசனம் பற்றிய தைசேயின் ஆய்வுக் கட்டுரையை இந்திய மாணவர்கள் எளிதாகப் புரிந்து கொள்ளும் பணியையே நான் செய்கிறேன். இந்திய மாணவர்களின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, தைசேயின் ஆய்வுக்கட்டுரையில் இரண்டு குறைபாடுகள் காணப்படுகின்றன. முதலாவதாக, பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் சில பகுதிகள் அனைவருக்கும் பெரிதும் பரிச்சயமானவை என்ற ஊகத்தின் அடிப்படையில் அது அமைந்துள்ளது. உதாரணமாக, நாடாளுமன்றம் என்றால் என்ன, அது எவ்வாறு

அமைக்கப்படுகிறது, அது எவ்விதம் செயல்படுகிறது என்பது யாவரும் அறிந்த விஷயம் என்று அது கருதுகிறது. இந்தக் கருத்து அல்லது ஊகம் பிரிட்டிஷ் மாணவர்கள் விஷயத்தில் சரியானதாக இருக்கலாம். ஆனால் தைசேயின் ஆய்வை முதல் தடவையாகப் படிக்க வேண்டியுள்ள இந்திய மாணவர்களுக்கு இது பொருந்தாது. பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் இந்தப் பகுதியைப் பற்றிய முழு ஞானம் இல்லாத காரணத்தால், சட்ட ஆட்சியின் மேலாண்மை அல்லது அரசியல் சாசனத்தின் செயல்பாட்டில் நடைமுறை மரபுகளுக்குள்ள பங்கு போன்ற அடிப்படைக் கோட்பாடுகளின் முழுமையான முக்கியத்துவத்தைக் கிரகித்துக் கொள்ள இந்திய மாணவர்கள் தவறுகின்றனர், முற்றிலும் குழம்பித் தடுமாறுகின்றனர். இந்தக் கோட்பாடுகளின் செயல்பாடு சம்பந்தமான தைசேயின் விளக்கத்தை இந்திய மாணவர்கள் அறிவார்ந்த முறையில் புரிந்து கொள்ளும் பொருட்டு, தைசேயின் ஆய்வுக் கட்டுரையில் இடம்பெற்றிராத பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் கட்டுக்கோப்பை ஒவ்வொரு கட்டத்திலும் ஆசிரியர் அவர்களுக்கு எடுத்துரைக்க வேண்டிய கட்டாயத்துக்குள்ளாகிறார். இரண்டாவதாக, பிரிட்டிஷ் அரசியல் சாசனம் பற்றிய தைசேயின் கடைசி நூல் வெளியிடப்பட்ட பிறகு, சட்ட ஆட்சி சம்பந்தமாகவும், நடைமுறை மரபுகள் சம்பந்தமாகவும் பிரிட்டிஷ் அரசியல் சாசனம் பிரம்மாண்ட அளவுக்கு வளர்ந்து விட்டது. இந்த வளர்ச்சியின் தாக்கம் இரண்டு வெவ்வேறு வழிகளில் உணரப்பட்டிருக்கிறது. முதலாவதாக, தைசே அளித்துள்ள சில விளக்கங்களை, எடுத்துக்காட்டுகளை பொருத்தமற்றவையாக, ஒவ்வாதவையாக அது ஆக்கிவிட்டது. இரண்டாவதாக, அதிலும் குறிப்பாக குடியேற்ற நாடுகள் சம்பந்தமாக மன்னருக்கும் பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கும் உள்ள உறவுகளின் இயல்பை மாற்றிவிட்டது; தைசேயின் ஆய்வு நூலை மட்டுமே சார்ந்திருக்கும் ஓர் இந்திய மாணவன் பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் நவநவீன முன்னேற்றத்தை, அதன் ஜீவாதார அம்சத்தை கிரகித்துக் கொள்ள முடியாத அளவுக்கு இந்த இயல்பு மாற்றம் ஏற்பட்டுள்ளது. சில கூடுதல் விவரங்களையும், அமைப்பு வடிவத்தையும் தவிர்த்து மற்றபடி இந்த விரிவுரைகளில் புதிது ஒன்றுமில்லை. பிரிட்டிஷ் அரசியல் சாசனம் குறித்த தைசேயின் ஆய்வுக்கட்டுரையில் காணப்படும் குறைபாடுகளை அகற்றும் முறையிலும், இந்திய மாணவர்களின் தேவைகளை நிறைவேற்றும் வகையிலும் அதன் ஒரு திருத்திய வடிவமாகவே இந்த விரிவுரைகள் அமைந்துள்ளன எனலாம்.

★★★

# I

# இங்கிலாந்தின் அரசியல் சாசனத்துக்கு ஆதார அடிப்படையாக அமைந்துள்ள கோட்பாடுகள்

டைசேயின் கருத்துப்படி பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தை ஏனைய நாடுகளின் அரசியல் சாசனத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டும் மூன்று கோட்பாடுகள் அதில் இடம்பெற்றுள்ளன. அந்தக் கோட்பாடுகள் வருமாறு:

(1) நாடாளுமன்றத்துக்குள்ள சட்டரீதியான மேலாண்மை.

(2) சட்ட ஆட்சியின் மேம்பாடு.

(3) அரசியல் சாசனம் நடைமுறை மரபுகளைச் சார்ந்திருத்தல்.

இந்தக் கோட்பாடுகள் பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் தனிச் சிறப்புடைய அம்சங்களாக அமைந்துள்ளன என்று கூறப்படுவது குறித்து நியாயமாகவே இரண்டு கருத்துகளைத் தெரிவிக்கலாம். ஏனைய அரசியல் சாசனங்களில் இவை காணப்படவில்லை என்ற பொருளில் இவ்வாறு கூறக்கூடும். இது ஒன்று. ஆனால் இவற்றில் சில சிறப்பம்சங்கள் டைசே எழுதியபோது எந்த அளவுக்கு உண்மை யாக இருந்தனவோ அந்த அளவுக்கு உண்மையாக இருக்கவில்லை. நாடாளுமன்றத்திற்குரிய சட்டரீதியான மேலாண்மை 1930 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட வெஸ்ட்மினிஸ்டர் சட்டத்தால் ஓரளவு மாற்றப்பட்டதையும் கட்டுப்படுத்தப்பட்டதையும் இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். அடுத்து, இங்கு தெரிவிக்கப்பட வேண்டிய இரண்டாவது கருத்து இந்தச் சிறப்பம்சங்கள் அதிலும் குறிப்பாக சட்ட ஆட்சியின் மேம்பாடும், அரசியல் சாசனம் நடைமுறை மரபு களைச் சார்ந்திருப்பதும் பிரிட்டிஷ் அரசியல் சாசனத்துக்கு மட்டுமே உரித்தானவை அல்ல. நடைமுறை மரபுகள் என்பவை அனைத்து அரசியல் சாசனங்களின் ஓர் அம்சமாகும்; சட்ட ஆட்சியைப் பொறுத்த வரையில், எது எப்படியிருந்தாலும், ஓர் அம்சத்தில் அது அமெரிக்கா வில் நிலவுகிறது. எனினும் ஏனைய அரசியல் சாசனங்களில் இல்லாத அளவுக்கும், முறையிலும் கோட்பாடுகளைக் கொண்ட அரசியல் சாசனமாக அமைந்திருப்பது பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் ஓர்

சிறப்பு அம்சமாகும். இந்த அர்த்தத்தில் புரிந்து கொள்ளும்போது, பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தை ஏனைய அரசியல் சாசனங்களி லிருந்து வேறுபடுத்திக் காட்ட இவை உதவுகின்றன என்பதில் ஐய மில்லை.

# (1) நாடாளுமன்றத்திற்குள்ள சட்டரீதியான மேலாண்மை

பிரிட்டிஷ் அரசியல் சாசனம் குறித்து முதன் முதலில் கருத்துத் தெரிவித்த மிக முக்கியமான அயல்நாட்டு விமர்சகர்களில் ஹோாண்டஸ்கியு ஒருவர்; அவர் மேற்கொண்ட ஆராய்ச்சியின் விளைவாக, தாம் தமது கருத்தை வெளியிட்டபோது நடைமுறையிலிருந்த பிரெஞ்சு அரசியல் சாசனத்தில் இல்லாத ஓர் அம்சத்தை பிரிட்டிஷ் அரசியல் சாசனம் கொண்டிருக்கிறது என்ற முடிவுக்கு வந்தார். பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின்படி அரசின் மூன்று அங்கங்களான சட்ட மன்றமும், நிர்வாகத்துறையும், நீதித்துறையும் சுதந்திரமானவையாக, தமது இயைபிலும், பணிகளிலும் தனித்தனியானவைகளாக இருப்பதைக் கண்டார். ஒவ்வொன்றும் தமக்கே உரிய செயற்பாட்டுக் களங்களைக் கொண்டிருந்தன; ஒன்று மற்றொன்றின் அதிகார எல்லையில் தலையிட அனுமதிக்கப்படவில்லை. அவர் தமது கருத்துகளை வெளியிட்ட நாட்களில் தமது நாட்டு மக்களுக்கு இல்லாத சுதந்திரங்களை ஆங்கிலேயர்கள் அனுபவித்ததற்கு அவர்களது அரசியல் சாசனமே காரணம் என்றும் எண்ணினார். பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் இந்தக் கோட்பாடு மிகச் சிறந்தது என்றும், எந்த ஓர் அரசியலமைப்புக்கும் இது ஜீவாதாரமானது என்றும் கருதினார்; இதனை தங்களது அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளும்படி தமது நாட்டு மக்களுக்குப் பரிந்துரைக்கவும் செய்தார். ஹோாண்டஸ்கியூவின் இந்த அதிகாரப் பிரிவு சித்தாந்தம் இதன் பின்னர் ஒவ்வொரு புதிய அரசியல் சாசனத்துக்கும் அடிப்படையாக முன்வைக்கப்பட்டது. ஓர் அரசியல் ஆராய்ச்சியாளரின் தவறான முடிவுகளால் நாடுகளிடம் எவ்வாறு தவறான எண்ணம் தோற்றுவிக்கப்பட்டது என்பதற்கு இது ஒரு கண்கண்ட உதாரணமாகும்; ஏனென்றால் ஹோாண்டஸ்கியு பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தைத் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டார் என்பதில் ஐயமில்லை. பிரிட்டிஷ் அரசியல் சாசனம் அதிகாரப் பிரிவு கோட்பாட்டை நிச்சயமாக ஏற்றுக்கொள்ளவில்லை. மன்னர் சட்டமன்றத்தின் ஓர் அங்கம், நீதித்துறையின் தலைவர், நாட்டின் மிக உயர்ந்த நிர்வாக அதிகாரமுடையவர். மன்னரின் பெயரில் நாட்டின் நிர்வாகத்தை நடத்தும் அமைச்சர்கள் நாடாளுமன்ற உறுப்பினர்கள். எனவே, நிர்வாகத் துறையும் சட்டமன்றமும் எவ்வகையிலும் பிரிந்திருக்கவில்லை என்பது தெள்ளத் தெளிவு. லார்டு சான்ஸ்லர்தான் நீதித் துறையின் செயல்தலைவராவார். அதேசமயம் அவர் அமைச்சரவை உறுப்பினருமாவார். ஆதலால் நிர்வாகத் துறையும் நீதித்

துறையும் தனித் தனியாகப் பிரிந்திருக்கவில்லை என்பது கண்கூடு. அரசின் மூன்று அங்கங்களிடையே அதிகாரப் பிரிவினை ஏதும் இல்லை என்பதோடு, அவற்றின் அதிகாரம் அரசியல் சாசனத்தால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது என்ற கூற்றுக்கும் ஆதாரம் இல்லை; ஏனென்றால் அரசின் வெவ்வேறு அங்கங்களுக்குப் பணிகளை ஒதுக்கி, அவற்றின் அதிகாரங்களை வரையறைப்படுத்தும் அமெரிக்க அரசியல் சாதனம் போன்ற ஒன்றை பிரிட்டன் பெற்றிருக்கவில்லை. பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தில், சட்டப்படியான ஒரு மீவுயர் அதிகார அமைப்பு இருக்கிறது; அதுதான் நாடாளுமன்றம். நிர்வாகத் துறை, நீதித்துறையின் பணிகள் வரையறுக்கப்பட்டிருப்பதை வைத்து நாடாளுமன்றத்தின் பணிகளும் வரையறுக்கப்பட்டிருப்பதாக எண்ணி விடக்கூடாது. மாறாக, நாடாளுமன்றம் சில குறிப்பிட்ட பணிகளை சில குறிப்பிட்ட அமைப்புகள் குறிப்பிட்ட முறையில் செய்வதற்கு ஒதுக்கியுள்ளது என்றே இதற்குப் பொருள் கொள்ள வேண்டும். நீதித் துறைக்கும் நிர்வாகத் துறைக்கும் விதிக்கப்பட்டுள்ள வரம்புகள் அப்படியே தொடர்ந்து நீடிக்கும் என்று இதற்குப் பொருள் அல்ல. மாறாக இந்த வரம்புகள் நாடாளுமன்றத்துக்குள்ள அதிகாரத்தால் நிர்ணயிக்கப்படுவதால், அந்த வரம்புகளை விரிவு படுத்தவோ அல்லது குறைக்கவோ நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் உண்டு.

## நாடாளுமன்றத்துக்குள்ள சட்டரீதியான மேலாண்மையின் பொருள்

நாடாளுமன்றத்துக்குள்ள சட்டரீதியான மேலாண்மையை முற்றிலும் புரிந்து கொள்வதற்கு அதில் அடங்கியுள்ள இரண்டு அம்சங்களைக் கிரகித்துக் கொள்வது அவசியம். முதலாவதாக, எந்த ஒரு சட்டத்தையும் இயற்றவும் ரத்து செய்யவும் பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின்படி நாடாளுமன்றத்துக்கு உரிமை உண்டு. இரண்டாவதாக, நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தைப் புறக்கணிக்கும் அல்லது ரத்து செய்யும் உரிமை எந்த ஒரு தனி நபருக்கோ அல்லது குழுவுக்கோ இல்லை; இந்த உரிமையைப் பிரிட்டிஷ் சட்டம் அங்கீகரிக்கவில்லை. நாடாளுமன்றம் தெரிவிக்கும் கருத்துகளையும், இயற்றும் சட்டத்தையும் கண்டிப்பாக சட்டப்படியான அர்த்தத்தில் புரிந்து கொள்ள வேண்டும் என்று இங்கு நினைவுப்படுத்துவது அவசியமில்லை. ஏற்கெனவே விளக்கிக் கூறியதைப் போல் நாடாளுமன்றம் என்பது மன்னர், பிரபுக்கள் சபை, காமன்ஸ் சபை ஆகிய மூன்று தரப்பையுமே குறிக்கும்; ஒரு நாடாளுமன்ற சட்டத்தை இயற்றுவதற்கு இவை மூன்றுக்கும் கூட்டாக உள்ள அதிகாரத்தை

இவற்றில் எதுவும் தனிப்பட்ட முறையில் பிரயோகிக்க முடியாது. சட்டம் என்ற பதத்தை கண்டிப்பாக சட்ட அர்த்தத்திலேயே புரிந்து கொள்ள வேண்டும். சட்டமன்றங்களால் செயல்படுத்தக்கூடிய விதி முறைகளையே அது குறிக்கும். நாடாளுமன்றத்துக்குள்ள சட்ட ரீதியான மேலாண்மை என்னும் கண்ணோட்டத்தில் எது பொதிந் துள்ளது என்று விளக்கிக் கூறிய பிறகு நாடாளுமன்றத்துக்குள்ள இந்த சட்ட ரீதியான மேலாண்மைக்கு என்ன ஆதாரம் இருக்கிறது என்று அடுத்தபடியாக ஒரு கேள்வி எழலாம்.

இந்த சட்டரீதியான மேலாண்மை சித்தாந்தம் பிரிட்டிஷ் அரசியல் சாசனம் பற்றிக் கருத்துத் தெரிவித்துள்ள அனைத்து வழக் கறிஞர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. நாடாளுமன்றத்துக் குள்ள ஆணையுரிமையையும் சட்ட அதிகாரத்தையும் பற்றி சர் எட்வர்டு கோக் பேசும்போது, அதன் அதிகாரம் எல்லையற்றது, வரம்பற்றது, எந்தத் தனி நபர்களுக்காகவோ அல்லது காரணங் களுக்காகவோ அதனை ஒரு வரம்புக்குட்படுத்த முடியாது என்பதை ஒப்புக் கொண்டார்.

**(பக்கம் 36க்குப் பதில் 4 காணப்படுகிறது)***

புகழ்பெற்ற விமர்சகரான பிளாக்ஸ்டோன் பின்வருமாறு எழுதுகிறார்: ''சமயவியல், உலகியல், உரிமையியல், குற்றவியல், படைத்துறை, கடல் துறை முதலிய சாத்தியமான எல்லா விஷயங்கள் சம்பந்தமான சட்டங்களை இயற்றவும், உறுதி செய்யவும், விரிவு படுத்தவும், கட்டுப்படுத்தவும், ரத்து செய்யவும், தள்ளுபடி செய்யவும், புதுப்பிக்கவும், விளக்கம் அளிக்கவும் நாடாளுமன்றம் இறையாண் மையும் கட்டுப்படுத்தப்படாத அதிகாரமும் பெற்றுள்ளது. சாதாரண மான சட்டங்களின் அதிகார வரம்புக்கு அப்பாற்பட்ட எல்லாத் தீங்கு களும், கேடுகளும், குறைகளும், செயற்பாடுகளும், தீர்வுகளும், பரிகாரங்களும் இந்த அசாதாரணமான தீர்ப்பாயத்தின் அதிகார வரம்புக்குட்பட்டவையாகும். அரசு பீட வாரிசு உரிமையை அது ஒழுங்குபடுத்த முடியும். எட்டாம் ஹென்றி, மூன்றாம் வில்லியம் ஆட்சிக் காலத்தில் இவ்வாறுதான் நடைபெற்றது. நாட்டின் நிலை நாட்டப்பட்ட மதத்தையும் அது மாற்ற முடியும். எட்டாம் ஹென்றி ஆட்சிக் காலத்திலும் அவருடைய மூன்று புதல்வர்கள் ஆட்சிக் காலங்களிலும் பல சந்தர்ப்பங்களில் இவ்விதம் நடைபெற்றிருப்

★ மூலப்பிரதியில் உள்ளபடியே இங்கு தரப்பட்டுள்ளது; பக்கம் 36 காணப் படவில்லை.

பதை நாம் காண்கிறோம். ''உலகில் எந்த சக்தியும் செய்ய முடியா ததை நாடாளுமன்றம் செய்கிறது'' என்பதில் உண்மை இருக்கவே செய்கிறது.

இது விஷயத்தில் கோக்கும் பிளாக்ஸ்டோனும் தெரிவித்துள்ள கருத்துகளை டெலோம் என்னும் பிரெஞ்சு வழக்கறிஞர் ஏற்கிறார். அவர் கூறுகிறார்: ''ஒரு பெண்ணை ஆணாகவும், ஆணை பெண்ணாக வும் மாற்றுவதைத் தவிர வேறு எல்லாவற்றையும் நாடாளுமன்றம் செய்ய முடியும்.''

நாடாளுமன்றத்துக்கு சட்டரீதியாக மேலாண்மை இருப்பதை அனைத்து வழக்கறிஞர்களுமே ஏற்றுக் கொள்கின்றனர். பிரிட்டிஷ் நாடாளுமன்ற வரலாற்றிலிருந்து இதற்கு எத்தனை எத்தனையோ உதாரணங்களைக் கூறலாம். எனினும் பின்வருபவற்றை மட்டும் கூறினால் போதுமானது.

*(1) நாடாளுமன்ற இறையாண்மையும் இணைப்புச் சட்டங் களும்:* ஸ்காட்லாந்துடனும் அயர்லாந்துடனுமான இணைப்புச் சட்டங்கள் உடன்படிக்கைகளின் இயல்பை கொண்டிருந்ததோடு, இணைப்புக்கு அடிப்படையானவையாகவும் அத்தியாவசியமானவை யாகவும் அச்சமயம் கருதப்பட்ட சில விதியின் கூறுகளையும் கொண் டிருந்தன; மேலும் கிரேட் பிரிட்டனின் நாடாளுமன்றத்தால் ரத்து செய்ய முடியாதவையாகவும் எண்ணப்பட்டன. ஸ்காட்லாந்துப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஒவ்வொரு பேராசிரியரும் தமது சமயக் கோட்பாடுகளை அறிவித்து, அவற்றை நடைமுறையில் கடைப் பிடிக்க வேண்டும் என்று ஸ்காட்லாந்துடனான இணைப்புச் சட்டம் வலியுறுத்திற்று. ஸ்காட்லாந்துடனான இணைப்பு ஒப்பந்தத்தின் ஓர் அடிப்படையான நிபந்தனையாக இது கருதப்பட்டது. ஆனால் 1853 ஆம் வருட ஸ்காட்லாந்து பல்கலைக்கழக சட்டத்தில் இடம்பெற் றிருந்த இதே நிபந்தனை வாசகம் இவ்வாறு சமயக் கோட்பாடு களை அறிவிக்க வேண்டிய கட்டாயத்திலிருந்து பெரும்பாலான ஸ்காட்லாந்து பல்கலைக்கழகப் பேராசிரியர்களை விடுவித்தது. அயர்லாந்துடனான இணைப்புச் சட்டம் பின்கண்டவாறு வலியுறுத்து கிறது: ''தற்போது சட்டப்படி அமைக்கப்பட்டுள்ள இங்கிலாந்து மற்றும் அயர்லாந்தின் திருச்சபைகள் ஒரே புராட்டஸ்டெண்ட் திருச் சபையாக இணைக்கப்பட்டு, இங்கிலாந்து மற்றும் அயர்லாந்தின் ஐக்கிய திருச்சபை என அழைக்கப்படும்; மேற்கூறிய திருச்சபையின் சித்தாந்தம், வழிபாட்டு முறை, கட்டுப்பாடு, நிர்வாகம் முதலியவை இங்கிலாந்தின் திருச்சபைக்கு சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டுள்ள அதே

முறையில் என்றென்றும் முழு அளவுக்கு நிலைத்திருக்கும்; மேற் கண்ட ஐக்கிய திருச்சபை இங்கிலாந்து மற்றும் அயர்லாந்தின் சட்டப் படி நிறுவப்பட்ட திருச்சபையாக அமைந்து, அது இந்த இணைப்பின் அத்தியாவசியமான, அடிப்படையான அம்சமாகக் கருதப்படும்.'' இந்த விதிமுறையின் வாசகத்தை வைத்துப் பார்த்தால் நாடாளு மன்றத்துக்கு சட்டப்படியாக உள்ள மேலாண்மையைக் கட்டுப் படுத்தும் எண்ணம் இருந்திருக்கிறது என்பது தெரியவரும். ஆனால் 1869 ஆம் வருட ஐரிஷ் திருச்சபை சட்டத்தின் மூலம் நாடாளுமன்றம் அயர்லாந்து திருச்சபை வகையில் அரசாங்கத் தொடர்பினை இழக்கச் செய்ததோடு, இது சம்பந்தமக அதற்கு இந்த சட்டம் இயற் றும் அதிகாரத்தையும் ரத்து செய்தது; இந்த நடவடிக்கைக்கு எதிர்ப்பு ஏதும் இருக்கவில்லை.

## II

1707 ஆம் வருட ஏழு ஆண்டுக்காலச் சட்டத்தை நாடாளு மன்றத்துக்கு சட்டப்படியாக உள்ள மேலாண்மைக்கு மற்றோர் உதாரணமாகக் கூறலாம். 1694 ஆம் வருடச் சட்டத்தின்படி நாடாளு மன்றத்தின் ஆயுட்காலம் 3 ஆண்டுகளாக நிர்ணயிக்கப்பட்டிருந்தது. 1716 ஆம் ஆண்டில் ஒரு புதிய தேர்தல் நடைபெறுவதாக இருந்தது. ஆனால் அன்றைய அரசியல் சூழ்நிலைமைகளில் புதிய தேர்தலை நடத்துவது அமைச்சரவைக்கும் அரசவைக்கும் விநாசகரமானதாக இருக்கும் என்று மன்னரும் அமைச்சர்களும் கருதினர்; எனவே, நாடாளுமன்றத்தின் ஆயுட்காலத்தை 3 ஆண்டுகளிலிருந்து 7 ஆண்டு களாக விரிவுபடுத்தும் ஒரு சட்டத்தை இயற்றுவதற்கு நாடாளு மன்றத்தை அவர்கள் இணங்க வைத்தனர்; அவ்வாறே சட்டமும் இயற்றப்பட்டது. இதற்குக் கடும் எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. வாக்காளர்களின் பிரதிநிதிகள் என்ற முறையில் காமன்ஸ் சபை நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டது என்று எதிர்ப்பாளர்கள் குற்றம் சாட்டினர்; உயர்குடிப் பெருமகனார்களும் இந்த எதிர்ப்பில் சேர்ந்து கொண்டனர்; கடமையைச் செய்யத் தவறிய தங்களுடைய நாடாளு மன்ற உறுப்பினர்களுக்குச் சரியான பாடம் கற்பிப்பதற்கு மக்களுக் கிருந்த வாய்ப்பை இந்தச் சட்டம் பறித்து விட்டதாக அவர்கள் கருதி னர். இந்த சட்டத்துக்கு எதிராக எழுந்த அரசியல் எதிர்ப்பின் சூட்டில் சட்ட அம்சம் அறவே உதாசீனம் செய்யப்பட்டு விட்டது. இந்தச் சட்டம் முதல் கண்ணோட்டத்திலிருந்து தாக்கப்பட்டாலும் இரண்டா வது கண்ணோட்டத்திலிருந்து ஒருபோதும் தாக்கப்படவில்லை என் பதை இங்கு கவனத்திற் கொள்ள வேண்டும். உண்மையில், இந்த

ஏழாண்டுச் சட்டம் நாடாளுமன்றத்தின் சட்ட வரம்புக்குட்பட்டதாகவே எடுத்துக் கொள்ளப்பட்டது என்பதை இங்கு கூற வேண்டும்.

ஏழாண்டுச் சட்டத்தின் மற்றொரு அம்சத்தையும் இங்கு கருத்திற் கொள்வது அவசியம்; ஏனென்றால் நாடாளுமன்றத்துக் குள்ள சட்ட மேலாண்மையின் வீச்சைத் தெரிந்து கொள்ள அது உதவுகிறது. நாடாளுமன்றத்தின் ஆயுட்காலத்தை விஸ்தரிக்கும் ஒரு சட்டத்தை நாடாளுமன்றம் இயற்ற முடியும்; இத்தகைய சட்டத்தை எதிர்கால நாடாளுமன்றங்களைக் கருத்திற் கொண்டு இயற்றியிருந் தால் அநேகமாக எதிர்ப்பு எதுவும் எழுந்திருக்காது. ஆனால் ஏழாண்டுச் சட்டம் அப்படியல்ல; அது எதிர்கால நாடாளுமன்றங்களின் ஆயுட் காலத்தை நீடித்ததோடு, இந்த சட்டத்தை இயற்றிய அதே நாடாளு மன்றத்தின் ஆயுட்காலத்தையும் விஸ்தரித்தது. இது ஒரு வகையில் அரசியல் அதிகாரத்தை அபகரித்துக் கொள்ளும் செயல் என்பதில் ஐயமில்லை; எனினும் இந்த அபகரிப்பு சட்டரீதியான செயலாகவே கருதப்பட்டது. ஏழாண்டுச் சட்டத்தைப் போன்று நாடாளுமன்றத் துக்குள்ள சட்டரீதியான மேலாண்மையை நிலைநாட்டிய சம்பவங் களை மேற்கோள் காட்ட தொலைதூரக் கடந்த காலத்துக்குச் செல்ல வேண்டியதில்லை. இதேபோன்று நாடாளுமன்றம் தனது சட்டரீதி யான மேலாண்மையை நிலைநாட்டும் செயலில் கடந்த உலகப் போரின்போது ஈடுபட்டதைப் பார்க்கிறோம்; அப்போதைய நாடாளு மன்றம் 1914ல் தன்னைக் கலைத்துக் கொள்வதற்குப் பதிலாக தனது ஆயுட்காலத்தை தானே நீடித்துக் கொள்ளும் சட்டத்தை இயற்றியது அனைவருக்கும் தெரியும்.

சட்ட விலக்குரிமைச் செயல்கள் அடிக்கடி நிகழ்கின்றன; சட்ட ரீதியாக நாடாளுமன்றத்துக்குள்ள மேலாண்மையை இவை மிக முனைப்பாக நினைவூட்டுகின்றன. சட்ட விலக்குரிமைச் சட்டம் என்பது ஒரு நாடாளுமன்றச் சட்டம்; தனிப்பட்ட நபர்கள் மீது சட்டம் விதிக்கும் தண்டனைகளிலிருந்து அவர்களை விடுவிப்பதே அதன் நோக்கம். சட்டரீதியாக நாடாளுமன்றத்துக்குள்ள மேலாண் மையை மெய்ப்பிக்கும் மிகப் பெரிய சான்று என இதனைக் கூற லாம்; ஏனென்றால் சட்டப்படியிராதவற்றுக்கு சட்டத்தன்மையை இது அளிக்கிறது; அதாவது சட்டபூர்வமற்றதைச் சட்டபூர்வமாக்கு கிறது.

## தனியார் உரிமைகளில் தலையீடு

பெரும்பாலான சட்டமன்றங்கள் பொதுமக்களின் உரிமை களை ஒழுங்குபடுத்துவதில் தமது சட்ட அதிகாரங்களை ஈடுபடுத்து

கின்றன. தனியார் உரிமைகளும் குடும்ப உரிமைகளும் நாடாளு மன்றம் தலையிட முடியாத அளவுக்கு மிக முக்கியமானவை, பெரிதும் புனிதமானவை என்று கருதப்படுகிறது. ஆனால் தனக்குள்ள சட்ட அதிகாரத்தின்மீது விதிக்கப்படும் இந்தக் கட்டுப்பாடுகளை பிரிட் டிஷ் நாடாளுமன்றம் ஒருபோதும் ஏற்றுக்கொண்டதில்லை. கிளா ரன்ஸ் கோமகன் மற்றும் குளோசெஸ்டர் கோமகன் விஷயத்தில் அவர்கள் உயிரோடிருக்கும்போதே அவர்களுடைய புதல்விகளும் மனைவிமார்களும் அவர்களது சொத்துகளை மரபுரிமையாகப் பெற வேண்டும் என்ற ஒரு சட்டத்தை நாடாளுமன்றம் இயற்றிற்று. பங்கிங் காம் கோமகனைப் பொறுத்தவரையில் குழந்தையாக இருந்தாலும் எல்லா சட்ட விஷயங்களிலும் வயது வந்தவராகக் கருதப்பட வேண்டும் என அறிவிக்கும் சட்டம் ஒன்றை நாடாளுமன்றம் இயற்றிற்று. சர் ராபர்ட் பிளேபின்ஸ்டன் காலமாகிவிட்ட போதிலும் இராசத் துரோகக் குற்றம் இழைத்தவராக அவரது மரணத்திற்கு நீண்ட காலத்திற்குப் பிறகு நாடாளுமன்றம் ஒரு சட்டத்தைப் பிறப்பித்தது. சட்டப்படியான திருமணம் மூலம் பிறந்த ஒரு குழந்தையை முறை கேடாகப் பிறந்த குழந்தையாக நாடாளுமன்றம் சட்டம் இயற்றி அறிவித்ததை வின்செஸ்டர் கோமான் விஷயத்தில் காண்கிறோம். இதற்கு மாறாக நடைபெற்ற சம்பவமும் வரலாற்றில் காணப்படு கிறது. காதரைன் ஸ்வின்போர்டு லாங்கஸ்டர் கோமானான கவுன்டின் ஜானை சட்டபூர்வமாகத் திருமணம் செய்துகொள்வதற்கு முன்பே அவர்களுக்கு ஹென்றி, ஜான், தாமஸ் என்னும் புதல்வர்களும் ஜோன் எனும் புதல்வியும் பிறந்தனர். இவ்வாறு முறைகேடாகப் பிறந்த குழந்தைகளை மன்னர் நாடாளுமன்றத்தைக் கொண்டு ஒரு சட்டம் இயற்றச் செய்து, அவர்களை சட்டப்பூர்வமான குழந்தைகளாக அறிவிக்கச் செய்தார். ஒரு தனி நபரின் விவகாரங்களை நாடாளு மன்றம் சட்டபூர்வமாக ஒழுங்குபடுத்த முடியும் என்பது மட்டு மன்றி, பொதுவான சட்டங்களின் போக்கையும் மாற்ற முடியும் என்பதை இந்த உதாரணங்கள் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றன.

★ ★ ★

# II

## இயல் I

## நாடாளுமன்றம் என்றால் என்ன?

1. இந்நாட்களில் மிகப் பெரும்பாலான மக்கள் நாடாளு மன்றம் என்பதை காமன்ஸ் சபை என்றே கருதுகின்றனர். அவர்களது கண்ணோட்டத்தில் இதில் பிரபுக்கள் சபைக்கும், நிச்சயமாக மன்ன ருக்கும் இடம் கிடையாது. பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின் செயல் பாட்டில் காமன்ஸ் சபை மிகவும் ஆதிக்க அம்சமாகத் திகழ்வதே இத்தகைய கண்ணோட்டத்துக்குப் பிரதானமான காரணமாகும். ஆனால் இந்தக் கண்ணோட்டத்துக்கு என்னதான் நியாயம் கற்பித் தாலும் இது தவறான கண்ணோட்டம் என்பதில் ஐயமில்லை. சட்ட ரீதியாகக் கூறுமிடத்து நாடாளுமன்றம் மன்னர், பிரபுக்கள் சபை, காமன்ஸ் சபை ஆகிய மூன்று அங்கங்களைக் கொண்டது. சட்ட மியற்றும் அனைத்து அதிகாரமும் மன்னர், பிரபுக்கள் சபை, காமன்ஸ் சபை ஆகிய மூன்றுக்கும் கூட்டாக உரியது. அந்த அதிகாரம் நாடாளு மன்றத்துடன் கூடிய மன்னரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது; அதாவது நாடாளுமன்றத்தின் இரு சபைகளது இசைவுடன் மன்னர் செயல்படுகிறார் என்று இதற்குப் பொருள். சட்டரீதியாகக் கூறி னால், ஒவ்வொரு சட்டமும் நாட்டின் சட்டமாவதற்கு முன்னர் மன்னரின் சம்மதத்தைப் பெற வேண்டும். மன்னர் கூட்டினால்தான் நாடாளுமன்றத்தின் இரு சபைகளும் தமது நடவடிக்கைகளை மேற் கொள்ள முடியும்; நாடாளுமன்ற அமைப்பில் மன்னர் எவ்வளவு முக்கியமான அம்சம் என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இந்த இரு சபைகளும் தாமே தமது சொந்த முன்முயற்சியாலும் அதிகாரத்தாலும் கூட முடியாது. மன்னர் எவ்வளவு முக்கிய இடத்தை வகிக்கிறார் என்பதை இன்னொரு உண்மையிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம்: அதாவது நாடாளுமன்றத்தின் சபைகளைக் கூட்டுவது, ஒத்திவைப்பது மற்றும் கலைப்பது ஆகிய அதிகாரம் மன்னருக்கு இருப்பது மட்டுமன்றி, இந்த உரிமையை எந்த சமயத்திலும் தமது விருப்பம்போல் பயன்படுத்தலாம். அதேசமயம், இரு சபைகளின் சம்மதமில்லாமல் பிரிட்டனில் செல்லுபடியாகக் கூடிய எந்த சட் டத்தையும் தம் விருப்பம் போல் பிறப்பிக்கும் அதிகாரம் மன்னருக்கு இல்லை என்பதையும் இங்கு நினைவிற் கொள்ள வேண்டும். சட்டத் தொகுப்பில் வேறு விதமாகக் கூறப்பட்டிருந்தாலொழிய மன்னர் பிறப்பிக்கும் ஒவ்வொரு சட்டமும் காமன்ஸ் சபை, பிரபுக்கள் சபை ஆகிய இரு சபைகளதும் சம்மதத்தைப் பெற்றாக வேண்டும்.

2. எல்லாச் சட்ட அதிகாரங்களும் நாடாளுமன்றத்துடன் கூடிய மன்னரிடம் இருக்கின்றன, மன்னர், பிரபுக்கள் சபை, காமன்ஸ் சபை ஆகியவற்றின் ஒப்புதலின்றி எந்தச் சட்டமும் இயற்ற முடியாது என்று கூறுவது பின்கண்ட இரு நிபந்தனைகளுக்கு உட்பட்டதாகும்:

(1) *மன்னருக்குள்ள ரத்து அதிகாரம்:* எந்த ஒரு நடவடிக்கையும் சட்டமாவதற்கு முன்னர் மன்னரின் ஒப்புதலைப் பெறுவது சட்டப்படி அவசியம் என்றாலும், ஒப்புதல் அளிக்க மறுப்பதற்கு அவருக்குள்ள அதிகாரம் அதாவது ரத்து அதிகாரம் தவறாகப் பயன் படுத்தப்படக்கூடிய அளவுக்கு வரம்பற்றதாக உள்ளது. அன்னி ராணி காலத்திற்குப் பிறகு இந்த ரத்து அதிகாரம் பயன்படுத்தப்படவில்லை; அச்சமயம் அவர் 1707 ஆம் வருட ஸ்காட்லாந்து படைவீரர்கள் மசோதாவுக்கு ஒப்புதல் அளிக்க மறுத்துவிட்டார். மன்னர் இவ்வாறு ரத்து அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்துவது சட்டப்படியான தல்ல. சட்டப் பிரகாரம் அவரது ரத்து அதிகாரம் வரையறையின்றிப் பரந்த வீச்சுடையது. இது மரபுவழிப்பட்டது; இதன்படி இரண்டு சபைகளும் இணக்கம் தெரிவிக்கும்போது மன்னர் தனது ஒப்புதலை அளிக்க மறுக்கக் கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது. இந்த அதிகாரம் துஷ்பிரயோகம் செய்யப்படும்போது, இந்த மரபு மீட்க முடியாத படி குழிதோண்டிப் புதைக்கப்பட்டு விட்டதாகக் கருதக்கூடாது. உதாரணமாக, காமன்ஸ் சபையில் ஒரு மசோதா நிறைவேற்றப்பட்ட பிறகு அமைச்சரவை பதவி விலகுகிறது என்று வைத்துக் கொள் வோம். அப்போது புதிய அமைச்சரவை எதிர்த்தபோதிலும் இந்த மசோதா நிறைவேற்றப்பட வேண்டும் என்று பிரபுக்கள் சபை வலியுறுத்தக்கூடும். இத்தகைய சந்தர்ப்பத்தில், இந்த சட்டப் பிரச்சினையில் மன்னர் ஒப்புதல் அளிக்காமல் இருக்க முடியாது என்று அவசரப்பட்டு முடிவுக்கு வந்துவிடக் கூடாது.

(2) *பிரபுக்கள் சபைக்குள்ள ரத்து அதிகாரம்:* பிரபுக்கள் சபை ஒரு சமயம் சட்டம் இயற்றுவதில் ஒருங்கிணைக்கக்கூடிய, சமத்துவ அந்தஸ்துள்ள அமைப்பாக இருந்தது; எந்த ஒரு நடவடிக்கையும் நாடாளுமன்றத்தின் சட்டமாவதற்கு முன்னர் அதன் ஒப்புதலையும் அதேபோல் காமன்ஸ் சபையின் ஒப்புதலையும் பெறுவது அவசியமாக இருந்தது. சட்டத்தின் கண்ணோட்டத்தில் இதுதான் நிலைமையாக இருந்தாலும் நடைமுறையில் காமன்ஸ் சபை நிதி விஷயத்தில் பிரத்தியேக அதிகாரத்தையும், சட்டமியற்றும் இதர விஷயங்களில் பிரதான அதிகாரத்தையும் பெற்றிருந்தது.

1671ல் காமன்ஸ் சபை பின்கண்ட தீர்மானத்தை இயற்றிற்று: ''காமன்ஸ் சபை மன்னருக்கு அளிக்கும் உதவிகளையும், அது நிர்ண யிக்கும் வரி விகிதத்தையும் பிரபுக்கள் சபை மாற்றக்கூடாது.''

1676ல் கர்மன்ஸ் சபை பின்வரும் மற்றொரு தீர்மானத்தை நிறைவேற்றிற்று: ''வழங்கீடுகள், மானியங்கள் சம்பந்தப்பட்ட எல்லா மசோதாக்களும் காமன்ஸ் சபையின் பரிசீலனையிலிருந்துதான் தொடங்க வேண்டும்; இத்தகைய மசோதாக்களின் நோக்கங்கள், வரையறைகள், நிபந்தனைகள் முதலியவற்றை நிர்ணயிக்கும் முழு முதல் உரிமை காமன்ஸ் சபைக்கே உண்டு; இதில் பிரபுக்கள் சபை எத்தகைய மாற்றத்தையோ, திருத்தத்தையோ செய்ய முடியாது.''

நிதி சம்பந்தப்படாத சாதாரண சட்டங்களை இயற்றுவதைப் பொறுத்தவரையில், பிரபுக்கள் சபை காமன்ஸ் சபையின் கண் ணோட்டத்திலிருந்து மாறுபடலாம், ஆனால் இரண்டு சபைகளுக்கு மிடையே சர்ச்சை எழும்போது ஒரு கட்டத்தில் பிரபுக்கள் சபை இரு சபைகளின் கருத்துக்களுக்கு விட்டுக் கொடுக்கத்தான் வேண் டும், கோரிக்கைகளுக்கு இணங்கியாகத்தான் வேண்டும் - இதுதான் காமன்ஸ் சபையின் வாதம். பிரபுக்கள் சபை இந்தக் கண்ணோட்டங் களை வெளிப்படையாக ஒருபோதும் ஏற்றுக்கொள்ளாவிட்டா லும், நடைமுறையில் அவற்றை ஊர்ஜிதம் செய்தே வந்திருக்கிறது. இந்த நடைமுறை எழுதாத ஒரு வெறும் அரசியல் உடன்படிக்கை அல்லது சம்பிரதாயமே தவிர ஒரு சட்டமாகக் கருதப்படவில்லை. சட்டரீதியாக பிரபுக்கள் சபை ரத்து அதிகாரத்தைப் பெற்றுள்ளது; அதாவது நிதி சம்பந்தப்பட்ட அல்லது நிதி சம்பந்தப்படாத எந்த ஒரு சட்டத்துக்கும் அனுமதி மறுக்க அதற்கு உரிமை உண்டு. பொதுவாக இந்த அதிகாரத்தை அது பயன்படுத்துவதில்லை; இது தொடர்ந்து பின்பற்றப்பட்டு வரும் ஒரு நடைமுறை. எனினும் நிலைநாட்டப் பட்ட இந்த நடைமுறைக்கு முரணாக 1910ல் பிரபுக்கள் சபை திரு. லாயட் ஜியார்ஜ் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தில் கண்டிருந்த நிதி யோசனைகளை அங்கீகரிக்க மறுத்துவிட்டது. இதனால் காமன்ஸ் சபைக்கும் பிரபுக்கள் சபைக்கும் இடையே சச்சரவு எழுந்தது. 1911 ஆம் வருட நாடாளுமன்றச் சட்டத்தின் மூலம் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தைப் பொறுத்தவரையில் இது மிக முக்கியமான சட்டமாகும்; சில விஷயங்களில் ஜீவாதாரமான முறை யில் இது பிரபுக்கள் சபையின் ரத்து அதிகாரத்தைப் பாதித்தது.

1911 ஆம் வருட நாடாளுமன்றச் சட்டம் பொது மசோதாக் களுக்கு மட்டுமே பொருந்தும். தனியார் மசோதாக்களைப் பொறுத்த வரையில் பிரபுக்கள் சபையின் ரத்து அதிகாரம் அப்படியே நீடித்தது. இந்தச் சட்டம் பொது மசோதாக்களுக்குப் பொருந்துமாயினும் எல்லாப் பொது மசோதாக்களுக்கும் பொருந்தாது. நாடாளுமன்றத் தின் கால நீட்சி அல்லது ஆயுட்காலத்தைப் பாதிக்கக்கூடிய ஒரு பொது மசோதாவுக்கு இது பொருந்தாது. நாடாளுமன்றச் சட்டத்தின் படி இத்தகைய மசோதாக்கள் சம்பந்தமாக காமன்ஸ் சபை ரத்து அதிகாரத்தை தன் வசம் வைத்திருக்கிறது. இந்த அதிகாரம் பயன் படுத்தப்படக்கூடிய இப் பொது மசோதாக்களைப் பொறுத்தவரை, பிரபுக்கள் சபையின் ரத்து அதிகாரத்தின்போது இது ஏற்படுத்தும் விளைவு ஒரே மாதிரியானதல்ல. அது வேறுபடுகிறது. நாடாளு மன்றச் சட்டம் பொது மசோதாக்களை இரு பிரிவுகளாகப் பிரிக்கிறது: (1) பண மசோதாக்களாக உள்ள பொது மசோதாக்கள் (2) பண மசோதாக்கள் அல்லாத பொது மசோதாக்கள். குறிப்பிட்ட சில விஷயங்களைப் பற்றிய அல்லது அவற்றில் ஏதேனும் ஒன்றைப் பற்றிய ஷரத்துக்கள் மட்டுமே அடங்கியுள்ளன என்று காமன்ஸ் சபை சபா நாயகர் கருதும்பட்சத்தில் ஒரு பண மசோதா பொது மசோதாவாக வரையறுக்கப்படுகிறது; அத்தகைய குறிப்பிட்ட விஷயங்கள் வருமாறு: வரிகளை விதித்தல், தள்ளுபடி செய்தல், குறைத்தல், மாற்றுதல் அல்லது ஒழுங்குபடுத்துதல், கடன் வழங்குதல், ஒருங் கிணைந்த நிதியத்திலிருந்தோ அல்லது நாடாளுமன்றம் அனுமதிக் கும் மானியத்திலிருந்தோ நிதி உதவி பெறுவதற்கான கட்டணங் களை நிர்ணயித்தல், அத்தகைய கட்டணங்களை ரத்து செய்தல் அல்லது அவற்றில் மாற்றங்களை ஏற்படுத்தல், பொதுப் பணத்தி லிருந்து ஒதுக்கீடு செய்தல், பொதுப் பணத்தைப் பாதுகாத்தல், அதன் கணக்குகளைத் தணிக்கை செய்தல், எத்தகைய கடன் தொகையை யும் உயர்த்துதல், அதனைத் திருப்பிச் செலுத்துதல் மற்றும் இவை போன்ற இதர பல விஷயங்கள். காமன்ஸ் சபை ஒரு பண மசோதாவை நிறைவேற்றி, கூட்டத்தொடர் முடிவடைவதற்குக் குறைந்தபட்சம் ஒரு மாதத்திற்கு முன்னர் பிரபுக்கள் சபைக்கு அனுப்பி, அதனை திருத்தம் ஏதும் செய்யாமல் பிரபுக்கள் சபை நிறைவேற்றவில்லை என்றால், காமன்ஸ் சபை வேறுவிதமாக முடிவு செய்தாலொழிய, பிரபுக்கள் சபை மசோதாவுக்கு ஒப்புதல் தர மறுத்து விட்டாலும் கூட, அது மாட்சிமை தங்கிய மன்னர் பிரானிடம் சமர்ப்பிக்கப்பட்டு அவரது ஒப்புதலுடன் சட்டமாக்கப்படும் என்று இந்தச் சட்டம் கூறுகிறது.

இதர பொது மசோதாக்களைப் பொறுத்தவரையில், 1911 ஆம் ஆண்டு நாடாளுமன்றச் சட்டம் பின்வருமாறு கூறுகிறது: ஒரு பொது மசோதா மூன்று தொடர்ச்சியான கூட்டத் தொடர்களில் (அதே நாடாளுமன்றமாயினும் சரி, அல்லாவிட்டாலும் சரி) காமன்ஸ் சபையில் நிறைவேற்றப்பட்டு, கூட்டத் தொடர் முடிவதற்குக் குறைந்த பட்சம் ஒரு மாதத்திற்கு முன்னர் பிரபுக்கள் சபைக்கு அனுப்பப்பட வேண்டும்; இந்த மசோதா இந்தக் கூட்டத் தொடர்கள் ஒவ்வொன்றிலும் பிரபுக்கள் சபையால் நிராகரிக்கப்படும் பட்சத்தில், அவ்வாறு மூன்றாவது முறை பிரபுக்கள் சபையால் நிராகரிக்கப்படும்போது, காமன்ஸ் சபை வேறுவிதமாக முடிவு செய்தாலொழிய, அது மாட்சிமை தங்கிய மன்னர் பிரானிடம் சமர்ப்பிக்கப்பட்டு, அவரது ஒப்புதலுடன் நாடாளுமன்ற சட்டமாகும்; ஆனால் காமன்ஸ் சபையின் முதலாவது கூட்டத் தொடரில் இரண்டாவது வாசிப்புத் தேதிக்கும் காமன்ஸ் சபையின் மூன்றாவது கூட்டத்தொடரில் அது நிறைவேற்றப்பட்டதற்கும் இடையே குறைந்தபட்சம் இரண்டு ஆண்டுகள் கடந்திருந்தாலொழிய இந்த ஏற்பாடு நடைமுறைக்கு வராது.

இவைதாம் 1911 ஆம் வருட நாடாளுமன்றச் சட்டத்தின் பிரதான அம்சங்களாகும். ஒரு பண மசோதாவைப் போலன்றி பொது மசோதா சம்பந்தமான ரத்து அதிகாரத்தின் இயல்பை இந்தச் சட்டம் மாற்றி, அதனை தற்காலிக எதிர்த்தடுப்பு வாக்காக்கி விட்டது; இதனால், காமன்ஸ் சபை நிறைவேற்றும் ஒரு சட்டத்தை குறிப்பிட்ட காலத்திற்குத்தான் நிறுத்தி வைக்க முடியும். இவ்வாறு, நாடாளுமன்றத்தின் ஒத்தத் தகுதியுடைய உறுப்பினராக இருந்த பிரபுக்கள் சபைக்கு சட்டத்தைத் தடுத்து நிறுத்துவதற்கு இருந்த அதிகாரம் இந்தச் சட்டத்தின் மூலம் இப்போது அகற்றப்பட்டு விட்டது.

மரபொழுங்கு ரீதியாகவும், சட்டரீதியாகவும் மன்னர் மற்றும் பிரபுக்களின் அதிகாரம் சம்பந்தமான இந்த விதிமுறைகளுக்கு உட்பட்டு, நாடாளுமன்றம் என்பது மன்னரையும், பிரபுக்களையும் காமன்ஸையும் கொண்டது, அவர்களது ஒப்புதலின்றி ஒரு மசோதா சட்டமாக முடியாது என்ற கருத்து 1911 ஆம் வருடச் சட்டத்திற்கு இருந்தது போன்றே இப்போதும் இருந்து வருகிறது.

★★★

# III

## இயல் II

## மன்னர்

***(1) அரியாசனம் ஏறுவதற்கு மன்னருக்குள்ள உரிமை -*** *1688 ஆம் வருடத் தீர்மானத்திற்கு முன்னர் இரண்டாம் ஜேம்ஸ் நாட்டை விட்டு ஓடிவிட்டார்; அச்சமயம் அரியாசனத்திற்கு ஒரு மன்னன் எந்த அடிப்படையில் உரிமை கொண்டாட முடியும், மரபு வழி மூலமா அல்லது தேர்வின் மூலமா என்பது நிச்சயமற்றதாக இருந்தது. எனினும் இதன் பின்னர் அரியாசனத்தில் அமர்வதற்கான தகுதி நாடாளுமன்றம் சம்பந்தப்பட்ட தகுதியாகிவிட்டது. அதாவது அரியாசனம் ஏறுவதற்கான வாரிசு உரிமையை நாடாளுமன்றம் மாற்ற முடியும் என்று இதற்குப் பொருள். அரியணை ஏறும் உரிமை 1701 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட உடன்பாடு சட்டத்தின்படி வில்லியம் மற்றும் மேரிக்கும் அவர்களது சந்ததியாருக்கும் வழங்கப் பட்டது. ஆனால் இதற்கு இரண்டு நிபந்தனைகள் விதிக்கப்பட்டன: முதலாவதாக, இவர்களுக்குப் பின்னர் அரியாசனத்திற்கு வருபவர் ஆண் ஆயினும், பெண்ணாயினும் அவர்களது வழித்தோன்றலாக இருக்க வேண்டும்; இரண்டாவதாக அவர் ஒரு புராட்டெஸ்டெண்ட் கிறித்தவராக இருக்க வேண்டும்.*

***(2) மன்னரின் உரிமைகளும் கடமைகளும் -*** *மன்னரின் உரிமைகள் சட்டரீதியானவையாகவோ அல்லது தனிச் சிறப்புரிமை களாகவோ இருக்கும். சட்டரீதியான உரிமைகள் நாடாளுமன்றச் சட்டத்தின் மூலம் மன்னருக்கு வழங்கப்படுகின்றன. தனிச் சிறப் புரிமைகள் என்பவை மன்னருக்குள்ள வழக்கமான உரிமைகள் அல்லது பொதுச் சட்டப்படியான உரிமைகளாகும்; இவை அவர் அனுபவித்துவரும் உரிமைகள், சட்டத்தின் மூலம் அவரிடமிருந்து விலக்கிக் கொள்ளப்படாத உரிமைகள். சட்டரீதியாக மன்னருக் குள்ள உரிமைகளையும் கடமைகளையும் பற்றி எந்தப் பிரச்சினை யும் இல்லை; ஏனென்றால் எந்தச் சட்டத்திலிருந்து அவை பெறப் பட்டனவோ அந்தச் சட்டத்தைக் கொண்டு அவற்றுக்குத் துல்லிய மாக பொருள் வரையறை செய்யவும், உறுதிப்படுத்தவும் முடியும். ஆனால் மறுபுறம், தனிச் சிறப்புரிமைகளைப் பொறுத்தவரையில் எந்தச் சட்டத்தையும் கொண்டு அவை உறுதிப்படுத்தப்பட முடி*

யாதவை; ஏனென்றால் எந்தச் சட்டத்திலிருந்தும் பெறாததே தனிச் சிறப்புரிமையின் உள்ளியல்பாகும், சாராம்சமாகும். மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமைகள் வழிவழியாக, வழக்கமாக, மரபுரீதியாக வந்தவை; சட்டத்திற்கு அப்பாற்பட்டவை; எல்லா வழக்கமான உரிமைகளையும் போலவே அவை வலியுறுத்தப்படும்போது அவற்றின் இயல்பும் எல்லையும் நீதிமன்றத்தின் விசாரணைக்கு உட்படுத்தப்படும். மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமைகளை பின்கண்ட தலைப்புகளில் தக்க முறையில் விவாதிக்க முடியும்:

## (அ) சொந்த தனிச் சிறப்புரிமைகள்

**(1) மன்னர் எந்தத் தவறும் செய்ய முடியாது** - அனைத்து நடவடிக்கைகளும் மன்னர் பேரால் மேற்கொள்ளப்படுவதால், இந்தத் தனிச் சிறப்புரிமை காரணமாக, மன்னர் தமது எந்தச் செயல்களுக்கும் பொறுப்பாக மாட்டார். அவரது அரசுரிமை சார்ந்த செயற்பாடுகளுக்குப் பொறுப்பானவர்கள் அவருடைய அமைச்சர்களேயாவர். எனவே, மன்னரின் நிர்வாக நடவடிக்கைகளுக்காக அவர் மீது வழக்குத் தொடரோ அல்லது அவரைப் பொறுப்பாக்கவோ முடியாது. ஒரு பிரஜை ஒப்பந்த மீறலால் பாதிக்கப்படும்போது, அவர் மன்னர் மீது வழக்குத் தொடர முடியாது; இதேபோல் பொல்லாங்கு குற்றம் சம்பந்தமாகவும் அவர் மன்னர் மீது வழக்குத் தொடர முடியாது. ஆட்சியின் கடுமையைத் தணிப்பதற்கு ஒரு விசேட வழிவகை ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது; **சரியான நடைமுறை கோரும் விண்ணப்பம்** என இது அழைக்கப்படுகிறது. இதன்படி தீங்கிழைக்கப்பட்ட ஒரு பிரஜை நியாயம் கோரி மன்னருக்கு விண்ணப்பிக்கலாம்; அப்போது மன்னரின் சட்ட ஆலோசகரான அட்டர்னி-ஜெனரல் இது விஷயத்தில் நியாயம் வழங்கப்பட வேண்டும் என்று ஆணை பிறப்பித்தால்தான் இந்த விண்ணப்பம் நீதிமன்ற விசாரணைக்கு ஏற்றதாக ஆகும்; இதன்பேரில் வழக்குத் தொடர்வதற்கான ஒரு குற்றச்சாட்டாக இந்த விண்ணப்பத்தை ஏற்று நீதிமன்றங்கள் செயல்பட முடியும். அப்போதும் கூட இங்கு சில விதிமுறைகள் குறுக்கிடுகின்றன; அவை தனியார் தரப்புகளைக் கட்டுப்படுத்துமேயன்றி மன்னரைக் கட்டுப்படுத்த மாட்டா; உதாரணமாக மன்னர் எந்த ஓர் ஒப்பந்தத்தின் மூலமும் தனது எதிர்கால நிர்வாக நடவடிக்கைகளுக்கு இடைஞ்சல் விளைவிக்க முடியாது என்று ஒரு விதி இருக்கிறது. இதன் விளைவாக எந்த ஓர் அரசு ஊழியரையும் அவரது ஒப்பந்த காலம் எதுவாக இருந்தாலும் எந்த சமயத்திலும் பதவி நீக்கம் செய்ய முடியும்; இத்தகைய ஓர் ஒப்பந்தம் மன்னரின் எதிர்கால நிர்வாக நடவடிக்கைகளுக்கு இடையூறாக இருக்கக் கூடும் என்பதே

இதற்குக் காரணம். இதனால், முறைகேடாக வேலை நீக்கம் செய் தமைக்காக நட்டஈடு கோரி உரிமைகள் மனுவின் பேரில் கூட மன்ன ருக்கு எதிராக வழக்கு தொடுக்க முடியாது.

**(2) மன்னர் ஒருபோதும் மரிப்பதில்லை**- மன்னர் சாகாவரம் பெற்றவர் என்று கற்பித்துக் கூறப்படுகிறது. மணிமுடி தரித்த ஒரு குறிப்பிட்ட நபர் இறக்கலாம். ஆனால் மன்னர் உயிரோடுதான் இருக்கிறார். அரியணையிலுள்ள ஒரு மன்னர் இறந்த உடனேயே அவரது அரசர் பதவி எத்தகைய இடையாட்சிக் காலமோ, இடை நிறுத்தமோ இல்லாமல் அவரது வழித் தோன்றல்களுக்கு அளிக்கப் படுகிறது. இதுதான் சட்டம் - மன்னர் இறந்து விட்டார்; மன்னர் நீடுழி வாழ்க - என்ற மக்கள் கோஷம் இந்தச் சட்டத்திற்கு இசை வானதே ஆகும். ஒரு மன்னருக்கு மன்னரின் அதிகாரத்தை வழங்கு வதற்கு ஒரு முடிசூட்டு விழா நடைபெற வேண்டும் என்ற அவசிய மில்லை. ஒரு மன்னர் முடிசூட்டிக் கொள்ளாவிட்டாலும் மன்னராக செயல்பட முடியும். ஆனால் அவர் காலஞ்சென்ற மன்னரின் அடுத்த வாரிசாக இருக்க வேண்டும். குடிமக்களுக்கும் உலகுக்கும் மன்னர் யார் என்பதைப் பிரகடனப்படுத்துவதைத் தவிர மற்றபடி முடிசூட்டு விழாவுக்கு வேறு எந்த முக்கியத்துவமும் இல்லை.

***(3) கால இடையீடு வழக்கு தொடுப்பதற்கோ எதிர் வழக்காடுவதற்கோ மன்னருக்குள்ள உரிமையை பொதுவாகத் தடுக்காது*** - இதனையே வேறுவிதமாகச் சொன்னால், காலவரை யறைச் சட்டம் ஒரு தனி நபருக்குப் பொருந்துவதுபோல், மன்ன ருக்குப் பொருந்தாது. தனிநபர் காலவரையறைச் சட்டம் நிர்ணயித் துள்ள காலகெடுவுக்குள் வழக்கு தொடர வேண்டும் அல்லது எதிர் வழக்காட வேண்டும். மன்னர் இத்தகைய காலகெடுவிலிருந்து விதி விலக்கு அளிக்கப்பட்டுள்ளார். இந்தத் தனிச் சிறப்புரிமை வழக் காடும் உரிமையைப் பொறுத்தவரையில் இப்போது சட்டஉரிமை யுடையதாக்கப்பட்டுள்ளது. கால வரையறை அறுபது ஆண்டுகளாக இருந்தபோதிலும் காலவரையறைச் சட்டம் இதிலிருந்து மன்னருக்கு விதிவிலக்கு அளித்துள்ளது. வழக்குத் தொடுப்பதற்கு மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமை அப்படியே நீடிக்கிறது.

*(4) மன்னரது உரிமைக்கும் பிரஜைகளது உரிமைக்கும் இடையே மோதல் ஏற்படும்போது பிரஜையின் உரிமை மன்னரது உரிமைக்கு விட்டுக் கொடுக்க வேண்டும்.*

*(5) சட்டங்களில் திட்டவட்டமாகக் குறிப்பிடப்பட்டிருந்தா லொழிய மன்னர் அவற்றுக்குக் கட்டுப்பட்டிருக்கவில்லை.*

## (ii)

## அரசியல் ரீதியான தனிச் சிறப்புரிமைகள்

இந்த உரிமைகளை இப்போது இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்: உள்நாட்டு அரசாங்கம் சம்பந்தமான உரிமைகள், அயல் விவகாரங்கள் சம்பந்தமான உரிமைகள். உள்நாட்டு அரசாங்கம் சம்பந்தமாக மன்னருக்குள்ள அரசியல் ரீதியான தனிச் சிறப்புரிமைகளைப் பொறுத்தவரையில் அரசு நடவடிக்கைகளின் மூன்று பிரிவுகளான நிர்வாகத் துறை, நீதித்துறை, சட்டமன்றம் ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு அவற்றைப் பரிசீலிக்க வேண்டும். பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தின்படி அரசு நிர்வாகம் மன்னரிடம் உள்ளது. நிர்வாகத் துறையின் மீயுயர் தலைவராக இருப்பது அவருக்குள்ள தனிச் சிறப்புரிமையாகும். இதன் காரணமாக அமைச்சர்களையும் அரசின் இதர உயர் அதிகாரிகளையும் நியமிப்பதும் அவர்களைப் பதவி நீக்கம் செய்வதும் அவருக்குள்ள தனிச் சிறப்புரிமையாகும். ஆயுதப்படைகள், கப்பற்படை, விமானப்படை, பொது நிலை அரசுப் பணியாளர் துறை ஆகியவற்றுக்கும் அவர்தான் தலைவர். அரசுப் பணியாற்றுவதற்கு நியமிக்கப்படும் ஒவ்வொருவரும், அவர் எவ்வகையில் நியமிக்கப்பட்டாலும், சட்டப்படி மன்னரின் ஊழியரே ஆவார். நீதித்துறையில் மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமையை எடுத்துக் கொண்டால், அவரே நீதிமன்றத்தில் அமர்ந்து நீதி வழங்கிய காலம் ஒன்றிருந்தது; ஆனால் இந்தத் தனிச் சிறப்புரிமையை மன்னர் இப்போது இழந்து விட்டார். எந்த ஒரு நீதிமன்றத்தையும் தோற்றுவிக்கவும், தான் விரும்பும் எந்த விஷயத்தைப் பற்றியும் விசாரிக்கும்படிக் கூறவும் மன்னர் ஒருசமயம் அதிகாரம் பெற்றிருந்தார். முதலாம் சார்லஸ் மன்னர் உடனடி உயர் தீர்ப்பு மன்றத்தையும், உயர் ஆணைய நீதிமன்றத்தையும் உருவாக்கியதிலிருந்து நீதித்துறையில் மன்னருக்கு எவ்வளவு விரிந்து பரந்த தனிச் சிறப்புரிமை இருந்தது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் இந்தத் தனிச் சிறப்புரிமையையும் இப்போது மன்னர் இழந்து விட்டார். மன்னர் தமக்குள்ள தனிச் சிறப்புரிமை மூலம் அதாவது நாடாளுமன்றத்தின் ஒப்புதல் பெறாமல் நாட்டு மரபுச் சட்டத்தை நிர்வகிக்கும் நீதிமன்றத்தை மட்டுமே தற்போது அமைக்க முடியும். ஆனால் இந்தத் தனிச் சிறப்புரிமையைக் கூடப் பயன்படுத்துவது அவருக்கு இயலாத காரியமாக இருக்கிறது; ஏனென்றால் இதற்கு நிதி தேவைப்படுவதால், அதற்குச் சட்டம் இயற்ற வேண்டும்; இந்தச் சட்டத்தை இயற்ற அவருக்கு நாடாளுமன்றத்தின் ஒப்புதல் தேவை. ஆக, நீதித்துறையில் அவருக்குள்ள தனிச் சிறப்புரிமைகளில் நான்கு மட்டுமே தற்போது எஞ்சியிருக்கின்றன. (1) பிரிவி கவுன்சிலுக்கு

மேல்முறையீடு செய்ய அவர் அனுமதி வழங்க முடியும். (2) நீதிபதி களை அவர் நியமிக்க முடியும். (3) குற்றவாளியை மன்னிக்க முடியும். (4) சாட்சி சொல்ல மறுத்தோ அல்லது ஏதேனும் உடன்பாடு செய்து கொண்டோ குற்றவாளிக்கு எதிராக வழக்குத் தொடர்வதைச் சிதைக்க முடியும்.

இனி அடுத்து சட்டத் துறையில் மன்னருக்குள்ள தனிச் சிறப் புரிமைகள் விஷயத்துக்கு வருவோம்; அவை ஒரு சமயம் பரந்தகன்ற பரிமாணங்களைப் பெற்றிருந்தன. நாடாளுமன்றத்துக்குப் புறம்பே சுதந்திரமாகச் சட்டங்கள் இயற்றவும், குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் சட்டங்களை இடைநிறுத்தி வைக்கவும், பொதுவாக அவற்றை ரத்து செய்யவும் தமக்கு அதிகாரம் உண்டு என்று ஒரு காலத்தில் மன்னர் உரிமை கொண்டாடி வாந்தார். இந்த நிலை எல்லாம் இப்போது மாறிவிட்டது. நாடாளுமன்றம் இயற்றிய சட்டங்களை நிறுத்தி வைக்கவோ அல்லது ரத்துச் செய்யவோ மன்னருக்கு இருந்த உரிமை இப்போது முற்றிலும் பறிபோய்விட்டது. காலனிகள் சம்பந்த மாகத் தவிர சட்டம் இயற்றும் உரிமையும் காலாவதியாகி விட்டது. (1) நாடாளுமன்றத்தைக் கூட்டுவது, (2) நாடாளுமன்றக் கூட் டத்தைத் தள்ளிவைப்பது, (3) நாடாளுமன்றத்தைக் கலைப்பது ஆகியவைதான் இப்போது சட்டரீதியாக மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமைகளாகும்.

அயல் விவகாரங்களைப் பொறுத்தவரையில் மன்னருக்குள்ள இதர தனிச் சிறப்புரிமைகளைப் பற்றிப் பரிசீலிப்பதற்கு முன்னர் உள்நாட்டு நிர்வாகம் சம்பந்தமாக அவருக்குள்ள வேறு இரண்டு வகை தனிச் சிறப்புரிமைகளைப் பற்றி இப்போது பார்ப்போம். அவை திருச்சபை குறித்த தனிச் சிறப்புரிமைகளும், வருவாய் சம்பந் தப்பட்ட தனிச்சிறப்புரிமைகளுமாகும்.

**திருச்சபை குறித்த தனிச் சிறப்புரிமைகள்** - மன்னர்தான் சட்டப்படி அமைக்கப்பட்ட இங்கிலாந்து திருச்சபையின் உயர் தலைவராவார். திருச்சபையின் தலைவர் என்ற முறையில் அவர் பிரதமரின் பரிந்துரையின் பேரில், தலைமை மத குருவையும், சமய வட்டத் தலைவர்களையும், திருச்சபையில் ஏனைய உயர் பதவி யிலிருப்பவர்களையும் நியமிக்கிறார். மன்னர் தமக்குள்ள தனிச் சிறப்புரிமைகளைப் பயன்படுத்தி, திருச்சபையின் இரண்டு அவை களைக் கூட்டுகிறார், அவற்றின் கூட்டங்களைத் தள்ளி வைக்கிறார், அவற்றைக் கலைக்கவும் செய்கிறார். நீதிமன்றங்களின் தீர்ப்புகளை எதிர்த்து பிரிவி கவுன்சிலுக்கு திருச்சபை மேல் முறையீடு செய்ய ஒப்புதல் அளிக்கிறார்.

**வருவாய் சம்பந்தப்பட்ட தனிச் சிறப்புரிமைகள்:** பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வருவாய்கள் இருவகைப்பட்டவை: (1) சாதாரண வருவாய்கள்; (2) அசாதாரண வருவாய்கள். சாதாரண வருவாய்கள் தனிச் சிறப்புரிமை வருவாய்கள் எனப்படுகின்றன; அவை பின் கண்ட ஆதாரங்களிலிருந்து பெறப்படுகின்றன: (1) சமய வட்டத் தலைவரின் பொறுப்பிலுள்ள உலகியல் சொத்துக்கள், வருமானங் கள் அதாவது சமய வட்டத் தலைவரின் ஆட்சிக்குட்பட்ட கடல் வளத்திலிருந்து கிடைக்கும் ஆதாயங்களைப் பெறுவதற்கு மன்ன ருக்குள்ள உரிமை; இந்த ஆதாயங்கள் அவருடைய வாரிசுக்குத் தர்ம சொத்தாக இருந்தபோதிலும் இதைப் பெறுவதற்கு அவருக்கு உரிமை உண்டு. (2) திருச்சபையின் முதலாண்டு ஆதாயங்களையும், அதன் வருடாந்தர ஆதாயங்களில் பத்தில் ஒரு பங்கையும் பெறும் உரிமை. இவற்றில் முதலாண்டு ஆதாயங்கள் முன்னர் போப்பாண்ட வருக்கும் பின்னர் மன்னருக்கும் வழங்கப்பட்டு வந்தன. இதே போன்று, ஆண்டு ஆதாயங்களில் பத்தில் ஒரு பங்கு ஆரம்பத்தில் போப்பாண்டவருக்குச் செலுத்தப்பட்டு வந்தது; தற்போது ராணி அன்னியின் மூன்று குழந்தைகளைப் பாதுகாப்பவருக்குத் தரப்பட்டு வருகிறது. (3) மன்னரின் நிலங்களிலிருந்து கிட்டும் ஆதாயங்கள். (4) கடலால் ஒதுக்கப்பட்ட மீன்கள், புதையல்கள், கேட்பாரற்ற பொருள்கள், பறிமுதலான உடைமை அல்லது விருப்ப ஆவணமும் முதல் பெறாத மரபற்றவர் உடைமை முதலியவற்றின் மீதான உரிமை.

மன்னரின் சாதாரண வருவாய்களாக அமைந்த மேலே கண்டவை தனிச் சிறப்புரிமையாகப் பெறப்பட்டு 1715 வரை மன்ன ருக்கு வழங்கப்பட்டு வந்தன; பின்னர் அந்த ஆண்டில் உரிமையி யல் பட்டியல்கள் சட்டம் நிறைவேற்றப்பட்டபோது, மன்னருக் கும் நாடாளுமன்றத்துக்கும் இடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி மன்னர் தமது தனிச் சிறப்புரிமை வருவாய்களை அர சிடம் ஒப்படைத்தார்; அது முதல் அவை ஒருங்கிணைப்பு நிதியத் தில் சேர்க்கப்பட்டு வந்தன; இந்த உடன்பாட்டை நாடாளுமன்றம் கருத்திற்கொண்டு அரசக் குடும்பத்திற்கு அதன் பராமரிப்புக்காக ஒரு குறிப்பிட்ட தொகையை நிர்ணயித்து ஒருங்கிணைப்பு நிதியத்தி லிருந்து அது அளிக்கப்பட்டு வந்தது; இதுவே உரிமையியல் பட்டியல் எனப்படுகிறது. இந்த உரிமையியல் பட்டியல் ஒரு நிரந்தர ஏற் பாடல்ல, ஆளும் மன்னரும் நாடாளுமன்றமும் செய்து கொள்ளும் ஒரு தாற்காலிக உடன்பாடேயாகும்; இந்த உடன்பாடு அந்த மன்னரின் ஆயுட்காலம் வரை நடைமுறையில் இருந்து வருகிறது. ஒரு புதிய மன்னர் அரியணை ஏறியதும் ஒரு புதிய உடன்பாடு செய்து கொள்ளப்படுகிறது; அதுவும் அவரது ஆயுட்காலம் வரை நீடிக்கிறது.

உடன்பாடு எதுவும் செய்து கொள்ளவில்லை என்றால் சாதாரண வருவாய் சம்பந்தமாக மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமை மீண்டும் நடைமுறைக்கு வரும். உரிமையியல் பட்டியல் ஏற்பாடு இதனை எவ்வகையிலும் ரத்து செய்யாது. வருவாய் ஒதுக்கீட்டை மட்டுமே பாதிக்கும். அந்த வருவாயை முயன்று பெறுவதைப் பாதிக்காது.

## II. நாட்டின் அயல் உறவுகள் சம்பந்தமாக மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமைகள்

அயல்நாடுகளின் தூதுவர்களை வரவேற்பதற்கும் தமது தூது வர்களை அந்நாடுகளுக்கு அனுப்புவதற்கும் மன்னர் உரிமையும் அதிகாரமும் பெற்றிருக்கிறார். இது அவருடைய தனிச் சிறப்புரிமை யாகும். அரசரால் இவ்வாறு அங்கீகரிக்கப்பட்ட தூதுவர்கள் உரிமை யியல், குற்றவியல் நடவடிக்கைகளிலிருந்து தடைகாப்புப் பெறு வதால் அரசருக்குள்ள இந்த உரிமை முக்கியமானதாகும். இந்தத் தடைகாப்புகள் எவை என்பது பற்றிப் பிந்திய கட்டத்தில் விவாதிக் கப்படும். ஒரு நபரை மன்னர் தூதுவராக அங்கீகரிப்பதை இவை சார்ந்திருக்கின்றன என்பதையும், அவ்வாறு அங்கீகரிப்பது மன்ன ருக்குள்ள தனிச் சிறப்புரிமை என்பதையும் இங்கு குறிப்பிட்டால் போதுமானது.

மன்னர் உசிதமென நினைக்கும் சமயத்தில் போர்ப் பிரக டனம் செய்யவும், சமாதானம் செய்து கொள்ளவும் அவருக்கு உரிமை உண்டு. இதுவும் அவர் பெற்றிருக்கும் தனிச் சிறப்புரிமையாகும்.

எந்த அயல்நாட்டுடனும் ஒப்பந்தம் செய்து கொள்ள மன்னர் அதிகாரம் பெற்றிருக்கிறார். அந்த ஒப்பந்தம் ஓர் அரசியல் ஒப்பந்த மாகவோ அல்லது வாணிக ஒப்பந்தமாகவோ இருக்கலாம். இது அவரது விருப்பத்தைப் பொறுத்தது. ஓர் ஒப்பந்தம் செய்து கொள் வதில் மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமையைப் பொறுத்தவரை அதற்குள்ள ஒரே கட்டுப்பாடு சட்டம் அவருடைய பிரஜைகளுக்கு வழங்கியுள்ள உரிமைகளுக்கு அவர் எவ்வகையிலும் எத்தகைய பாதிப்பையும் ஏற்படுத்தக் கூடாது என்பதேயாகும்.

மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமைகள் விஷயமாக சில கேள்விகள் இங்கு எழுகின்றன; அவற்றைப் பற்றி இங்கு ஓரளவு பரி சீலனை செய்யாமல் விட்டுவிடுவது விரும்பத்தக்கதாக இருக்காது. முதல் கேள்வி இதுதான். மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமைக்கும் நாடாளுமன்றத்தின் அதிகாரத்திற்குமுள்ள துல்லியமான உறவு யாது?

இரண்டாவது கேள்வி மன்னர் தமது தனிச் சிறப்புரிமையை அல்லது இதர சட்டரீதியான உரிமைகளை அவர் அனுபவிக்க இயலாது போயின் என்ன நடைபெறும்?

முதல் கேள்வியைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும்போது, இதைச் செய்வது அல்லது அதைச் செய்வது மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமை என்று கூறும்போது அதற்குச் சரிநுட்பமான பொருள் என்ன என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்வது அவசியம். மன்னர் தனக்குள்ள தனிச் சிறப்புரிமையின் அடிப்படையில் ஒரு காரியத்தைச் செய்யும்போது அவர் நாடாளுமன்றத்தின் ஒப்புதலைப் பெறத் தேவையில்லை என்று கூறுவது எதைக் குறிக்கிறது? அவருக் குள்ள அதிகாரம் அவரது உள்ளார்ந்த இயல்பாக அமைந்துள்ளது, அது நாடாளுமன்றத்தின் அதிகாரத்திலிருந்து சுதந்திரமானது என்று கூறப்படுகிறது. ஆனால் மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமை அதி காரம் அவருள் உள்ளார்ந்து பொதிந்துள்ளது, அது நாடாளுமன்றத் தின் அதிகாரத்திலிருந்து சுதந்திரமானது என்பது உண்மையாக இருந்தாலும், இதன் காரணமாக அது நாடாளுமன்றத்தின் கட்டுப் பாட்டுக்கு அப்பாற்பட்டது என்று கருதிவிட முடியாது. மாறாக, மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமை அதிகாரம் நாடாளுமன்றத்தால் ஒழுங்குப்படுத்தப்படக் கூடியது, திருத்தம் செய்யப்படக் கூடியது, அல்லது அகற்றப்படக் கூடியது என்பதே உண்மை. எனவே, நாடாளு மன்றம் சட்ட ரீதியாக தலையிடாதவரை மன்னர் தனிச் சிறப்புரிமை அதிகாரத்தைப் பெற்றிருப்பார் என்பதே உண்மை நிலையாகும். மன்னரின் தனிச் சிறப்புரிமைக்குரிய விஷயமாக ஒரு சமயம் இருந்து வந்த ஒரு விஷயம் பின்னர் நாடாளுமன்றம் இயற்றிய ஒரு சட்டத்தின் மூலம் கட்டுப்பாட்டுக்குட்படுத்தப்பட்டால், அப்போது மன்னர் தமது தனிச் சிறப்புரிமை அதிகாரத்தைப் பயன்படுத்த முடியாது, மாறாக, இந்தத் தனிச் சிறப்புரிமை அதிகாரத்துக்குப் பதிலாகக் கொண்டு வரப்பட்ட சட்டத்தின்படி அவர் செயல்படுவது அவசியம். ஆக, முதல் கேள்வியைப் பொறுத்தவரையில், நாடாளுமன்றம் தலையிடாதவரை மன்னருக்குள்ள தனிச் சிறப்புரிமை அவரது சுதந்திரமான அதிகாரத்துக்கு ஓர் ஆதார அடிப்படையாக இருக்கும் என்பது தெள்ளத் தெளிவு.

மன்னர் தமது தனிச் சிறப்புரிமையையும் இதர சட்டப்படி யான உரிமைகளையும் பயன்படுத்த இயலாது போயின் என்ன நடை பெறும்? இந்தக் கேள்வி வீணான, பயனற்ற கேள்வி அல்ல; ஏனென் றால் அரச பதவியுடன் சில முக்கியமான பணிகள், கடமைகள் பின்னிப் பிணைந்துள்ளன, அவற்றை ஆற்ற மன்னரால் இயலாது

போகக்கூடும். இத்தகைய இயலாமை நான்கு சந்தர்ப்பங்களில் நேரிடக்கூடும் என்று ஊகிக்க முடியும். அவை வருமாறு: (1) மன்னர் தமது இராச்சியத்திலிருந்து எங்கேயேனும் சென்றிருக்கலாம். (2) மன்னர் வயது வராதவராக இருக்கலாம். (3) மன்னர் சித்த சுவாதீன மற்றவராக இருக்கலாம். (4) மன்னர் ஒழுக்க ரீதியில் தகுதியற்றவராக இருக்கலாம்.

இவற்றில், இராச்சியத்தில் மன்னர் இல்லாதது பெரும் சிக்கல் எதையும் ஏற்படுத்திவிடாது. நவநவீன தொலைத் தொடர்பு சாத னங்கள் தூரத்தைக் குறைத்து, துரிதமாக தகவல் அனுப்புவதைச் சாத்தியமாக்கி இருக்கின்றன. ஆதலால், மன்னர் தொலைதூரத்தில் இருந்தாலும் அரசர்க்குரிய தமது கடமைகளைத் தாமதமின்றித் துரிதமாக செய்ய முடியும். மன்னர் தமது அதிகாரங்களை யாரேனும் ஒருவருக்கு மாற்றிக் கொடுக்கும் வாய்ப்பும் உண்டு; மன்னர் நாட்டில் இல்லாதபோது அவர் சார்பில் அவரது பிரதிநிதி இந்த அதிகாரங் களை கொண்டு செலுத்த முடியும்.

மன்னர் வயதுக்கு வராதவர் என்ற பிரச்சினையும் சட்டரீதி யாக எத்தகைய சிக்கலையும் தோற்றுவிக்காது. மன்னர் ஒருபோதும் குழந்தை யல்ல, அவர் வயதுக்கு வராதவராக இருந்தாலும் தமது கடமைகளைச் செய்யும் தகுதி உடையவராகவே இருப்பார் என்று சட்டம் கருதுகிறது. ஆதலால் வயதுக்கு வராத மன்னர் தமது அனைத்து அதிகாரங்களையும் பயன்படுத்தவும், தமது எல்லாக் கடமைகளையும் சட்டரீதியாக நிறைவேற்றவும் முடியும். ஆனும் மன்னர் ஒரு குழந்தையை தமது வாரிசாக விட்டுவிட்டு இறக்கக் கூடும் என்று எதிர்பார்க்கப்படும்போது, நாடாளுமன்றம் ஒரு பகர ஆளுநரை நியமிக்கும் நடவடிக்கையை முன்னெச்சரிக்கையோடு மேற்கொள்கிறது. ஆனால் சட்டத்தின் எந்தத் தேவையையும் நிறை வேற்றும் வகையிலன்றி, விவேகமிக்க முறையில் இது செய்யப் படுகிறது.

புத்தி சுவாதீனமில்லாத பிரச்சினை மிகக் கடுமையான சிக்க லான பிரச்சினை. மன்னர் புத்தி சுவாதீனமில்லாதவராக இருந்தால் தமது அதிகாரங்களை வேறு எவருக்கும் மாற்றித்தர முடியாது. ஒரு பகர ஆளுநரை நியமிக்கும் எந்த ஒரு சட்டத்தையும் நாடாளு மன்றம் இயற்ற முடியாது; ஏனென்றால் மன்னர் புத்தி சுவாதீன மில்லாதவராக இருப்பதால் இது சம்பந்தமான மசோதாவுக்கு அவர் தமது ஒப்புதலைத் தர முடியாது. அரியணையில் இருந்தபோது இரண்டு பிரிட்டிஷ் மன்னர்கள் புத்திசுவாதீனமில்லாதவர்களாக

ஆகியிருக்கின்றனர்; இவர்களில் ஒருவர் ஆறாம் ஹென்றி (1454), மற்றவர் மூன்றாம் ஜார்ஜ் (1788). அச்சமயம் மேற்கொள்ளப்பட்ட நடைமுறை மிகவும் செப்பமற்ற ஒன்றாகும்; நாடாளுமன்றத்தின் அனைத்து மூன்று அங்கங்களின் ஒப்புதல் பெற வேண்டுமென்ற நாடாளுமன்ற சட்டத்துக்கு முற்றிலும் இசைந்த முறையில், கண்டிப் பான முறையில் இந்த நடைமுறை மேற்கொள்ளப்பட்டது என்று கருதலாம்.

தார்மிக ஒழுக்கமில்லாத மன்னர் அரியணையில் இருக்க லாமா என்பது மற்றொரு சிக்கலான பிரச்சினை. மன்னரை மக்கள் விரும்பவில்லை என்றால் அவர் பதவி விலக முடியுமா? அவர் பதவி விலகவில்லை என்றால் அவரை அரியாசனத்திலிருந்து தூக்கியெறிய முடியுமா? மன்னரின் புத்திசுவாதீன மின்மையையும், தார்மிக ஒழுக்க மின்மையையும் ஒழுங்குமுறைப்படுத்தும் எந்த சட்ட விதிகளும் இல்லை. பொறுப்பு வாய்ந்த ஆட்சி வளர்ச்சியடைந்திருப்பதன் காரணமாக மன்னரின் தார்மிக ஒழுக்கமின்மைப் பிரச்சினை பிரிட் டிஷ் அரசியல் சாசனத்தின்படி அநேகமாக எழாமல் இருக்கக் கூடும். ஆனால் புத்தி சுவாதீனமில்லாத மன்னரின் பிரச்சினை இருந்து வரவே செய்யும்.

## மன்னரின் மரணம் ஏற்படுத்தும் விளைவு

### I. நாடாளுமன்றத்தின் மீது

மன்னர் மரணமடைந்ததும் நாடாளுமன்றம் தானாகவே கலைந்துவிடுகிறது. நாடாளுமன்ற உறுப்பினர்கள் என்பவர்கள் மன்னரால் அழைக்கப்பட்ட அவருடைய மன்ற உறுப்பினர்கள் என்று கருதப்படுவதன் விளைவுதான் அரசியல் சாசனம் இவ்வாறு பொருள் கொள்ளப்பட்டதற்கும் அதன் சித்தாந்தத்திற்கும் காரணம். அழைப் பாணை என்னும் பிணைப்பு அதனை விடுத்த மன்னருக்கும் அதற் கிணங்கக் கூடும் மன்ற உறுப்பினர்களுக்குமிடையேயான தனிப் பட்ட பிணைப்பு என்று கருதப்பட்டு வந்ததால்தான் மன்னர் மரண மடைந்ததும் அந்தப் பிணைப்பு அறுந்துவிடுகிறது; மரணமடைந்த மன்னரால் அழைக்கப்பட்ட மன்ற உறுப்பினர்கள் இதன் காரண மாக புதிய மன்னரின் மன்ற உறுப்பினர்களாகக் கருதப்பட மாட் டார்கள்; இந்நிலைமையில் புதிய மன்ற உறுப்பினர்களை அழைக்க புதிய மன்னர் உரிமை பெற்றிருக்கிறார்; ஆனால் பழைய நாடாளு மன்றம் கலைக்கப்பட்டு, புதிய நாடாளுமன்றத்தைக் கூட்டுவதற்கு புதிய மன்னருக்கு வாய்ப்புக் கிட்டும் போதுதான் இது நடைபெறும்.

இந்த விதி முதலில் ......★.... 7-8 வில்லியம் III இயல் XVல் திருத்தப் பட்டது; மன்னரின் மரணத்துக்குப் பிறகு அவரது வாரிசால் நாடாளு மன்றம் விரைவில் கலைக்கப்படவில்லை என்றால், அப்போதைய நாடாளுமன்றம் ஆறு மாத காலத்திற்கு நீடிக்க இதன் மூலம் வழி வகை செய்யப்பட்டது. இதன் பின்னர் 1867 ஆம் ஆண்டில் (30,31, விக்டோரியா, இயல் நுநு 102) இந்த விதி முற்றிலும் ரத்து செய்யப் பட்டது; நாடாளுமன்றத்தின் ஆயுட்காலத்துக்கும் மன்னரின் மரணத் துக்கும் இடையே எத்தகைய சம்பந்தமும் இல்லாமல் செய்யப் பட்டது.

## II. அதிகாரிகளது பதவி காலத்தின் மீது

மன்னர் மரணமடைந்ததும் நாடாளுமன்றம் கலைக்கப்பட வேண்டியிருந்தது போன்றே மன்னரின் மரணத்தைத் தொடர்ந்து எல்லா நிர்வாக அதிகாரிகளும் தங்கள் பதவிகளிலிருந்து விலக வேண்டும் என்று பழைய விதிமுறை கூறிற்று. இங்கும் சட்டம் இந்த சித்தாந்தத்தைப் படிப்படியாக மாற்றியமைத்தது. 1707 ஆம் வருட மன்னர் மரபுரிமைச் சட்டம் மன்னரின் மரணத்திற்குப் பிறகு நிர்வாக அதிகாரிகளின் பதவிக் காலத்தை ஆறு மாதத்துக்கு நீட் டித்தது.

★★★

★ தட்டெழுத்துப் படியில் இடம் காலியாக விடப்பட்டுள்ளது.

# IV

## இயல் III

## பிரபுக்கள் சபை

பிரபுக்கள் சபை மூன்று வெவ்வேறு வகையான உயர்படிப் பெருமகனார்களைக் கொண்டது. 1. இங்கிலாந்து மற்றும் பிரிட்டிஷ் கூட்டரசின் மரபுரிமையான பெருமகனார்கள். 2. பிரதிநிதித்துவ அடிப்படையில் வந்த பெருமகனார்கள். 3. பதவியின் தகுதி காரண மாக பெருமகனார்களாக உயர்ந்தவர்கள்.

பிரபுக்கள் சபையின் அமைப்பைப் புரிந்து கொள்வதற்கு கேட்கப்படவேண்டிய, பதிலளிக்கப்பட வேண்டிய கேள்வி இதுதான்: பிரபுக்கள் சபையில் அமர்வதற்குப் பெருமகனார்களுக்குள்ள தகுதி என்ன?

### இங்கிலாந்து மற்றும் பிரிட்டிஷ் கூட்டரசின் பெருமகனார்கள்

நாடாளுமன்றக் கூட்டத்தில் வந்து கலந்து கொள்ளும்படி ஒவ்வொரு பெருமகனாருக்கும் மன்னர் தனித்தனியாக அழைப் பாணை விடுத்தார்; இதுவே இங்கிலாந்து மற்றும் பிரிட்டிஷ் கூட் டரசின் பெருமகனார்கள் இந்தத் தகுதியை அடைவதற்கு அடிப் படையாக அமைந்தது. பிரிட்டனின் உயர்படிப் பெருமகனார் என்னும் அந்தஸ்து மன்னரின் காப்புரிமைப் பட்டயத்தின்பேரில் தோற்று விக்கப்பட்டது. ஆதலால் இத்தகைய காப்புரிமைப் பட்டயத்தின் மூலம் உயர்படிப் பெருமகனார் அந்தஸ்தைப் பெற்றிருப்பவர்களைப் பொறுத்தவரையில் சிக்கல் ஏதும் இல்லை. மன்னர் உயர்படிப் பெரு மகனார் அந்தஸ்தை ஆயுட்காலத்துக்குத் தோற்றுவிக்க முடியுமா என்பதே இங்கு எழும் ஒரே கேள்வி. இது ஒரு சமயம் சர்ச்சைக்குரிய விஷயமாக இருந்தது. மன்னரால் ஆயுட்காலத்துக்கு உயர்படிப் பெருமகனார் அந்தஸ்து பெற்ற ஒருவர் பிரபுக்கள் சபையில் அமர் வதற்கு உரிமை பெற்றிருக்கிறாரா என்பதே அப்போதைய பிரச் சினை. 1856ல் நடைபெற்ற வெய்னஸ்டேல் உயர்படிப் பெருமகனார் அந்தஸ்து வழக்கில் இந்தப் பிரச்சினைக்கு முடிவாகத் தீர்வு காணப் பட்டது. இந்த வழக்கில் இரண்டு விஷயங்கள் தீர்மானிக்கப்பட்டன. 1. எந்த வகையான ஆயுட்கால அல்லது மரபுவழியான பெருமக னாரையும் தோற்றுவிக்க மன்னருக்கு உரிமை உண்டு, 2. ஆனால்

ஆயுட்கால - பெருமகனார் பிரபுக்கள் சபை உறுப்பினராக அமர முடியாது; மன்னரும் இத்தகைய பெருமகனாருக்கு அழைப்பாணையும் அனுப்ப முடியாது. இதற்குப் பின்வருமாறு காரணம் கூறப் பட்டது: மரபுவழி பெருமகனார் அந்தஸ்து சட்டத்தின் மூலம் அல்லா விட்டாலும் வழக்காறாக வருவது, இது பெருமகனார் அந்தஸ்தின் ஓர் உள்ளார்ந்த அம்சம்; பெருமகனார் அந்தஸ்தைத் தோற்றுவிக்க மன்னருக்கு உரிமை உண்டு, ஆனால் வழக்கத்தை ஒழித்துக்கட்ட அவருக்கு உரிமை இல்லை.

அடுத்து, காப்புரிமைப் பட்டயத் தின்மூலம் தோற்றுவிக்கப் படாத பெருமகனார் அந்தஸ்தைப் பெற்றிராத பெருமகனார்களுக்குள்ள உரிமை யாது? அவர்களது உரிமையும் மன்னரின் அழைப்பாணையை அடிப்படையாகக் கொண்டது.

இத்தகைய பெருமகனார்களுக்கு அழைப்பாணை விடுப்பது சம்பந்தமாக நீண்டகாலமாக இரண்டு கேள்விகள் எழுப்பப்பட்டு வந்தன. ஒவ்வொரு பெருமகனாரும் அழைப்பாணையை எதிர்ப் பார்ப்பதற்கு உரிமை உண்டா? எந்த ஒரு பெருமகனாருக்கும் அழைப் பாணை விடுப்பதற்கு அல்லது விடுக்காதிருப்பதற்கு மன்னருக்கு உரிமை இருக்கிறதா? பண்ணை உடைமையாளர்கள் என்றமுறை யில் பெருமகனார் அந்தஸ்தைப் பெற்றுள்ள பெருமகனார்கள்தான் அழைப்பாணை பெறுவதற்கு உரிமையுடையவர்கள், வேறு எந்தப் பெருமகனார்களும் அழைப்பாணை பெற உரிமையில்லாதவர்கள், இந்தப் பிரிவினருக்கு அப்பாற்பட்ட ஒரு பெருமகனாருக்கு அழைப் பாணை அனுப்ப மன்னருக்கும் உரிமை இல்லை - இவ்வாறு பெரு மகனார்கள் சார்பில் வாதிடப்பட்டது. மறுபுறம் மன்னர்சார்பில் பின் வருமாறு வாதிடப்பட்டது: அழைப்பாணை பெறுவது பண்ணை உரிமையாளர்களான பெருமகனார்களுக்கு மட்டுமே உரிய சிறப் புரிமை அல்ல; பெருமகனார்களுக்கு அழைப்பாணை விடுப்பதற்கு மன்னருக்குள்ள உரிமைக்கு எத்தகைய கட்டுப்பாடும் இருக்கமுடி யாது. நாளடைவில் இந்தச் சர்ச்சை தீர்க்கப்பட்டது; பெருமகனார் அந்தஸ்துக்கு காப்புரிமைப் பட்டயத்தைச் சான்றாகப் பெற்றிராத பெருமகனார்கள் அழைப்பாணை பெறும் உரிமை சம்பந்தமாக இரண்டு விதிமுறைகள் நிர்ணயிக்கப்பட்டன.

1. பண்ணைக்கு உரிமையாளராக இருப்பதைக் கொண்டு மன்னரிடமிருந்து அழைப்பாணை பெறும் உரிமையைக் கோர முடியாது.

2. ஏற்கனவே அழைப்பாணை பெற்று அதற்கிணங்க சபையில் இடம்பெற்ற ஒருவரது வழித்தோன்றலுக்குப் பிரபுக்கள் சபையில்

அமர்வதற்கு அழைப்பாணை விடுக்க மன்னர் கடமைப்பட்டுள்ளார். வேறுவிதமாகச் சொன்னால் முன்னர் அழைப்பாணை பெற்று பிரபுக்கள் சபையில் இடம்பெற்றிருந்த ஒருவரது வழித்தோன்றல் நீண்ட இடைவெளிக்குப்பிறகும் மரபுரிமையாக அதேபோன்ற அழைப்பாணையை மன்னரிடமிருந்து கோரமுடியும். எனவே, இங்கிலாந்தின் பெருமகனார் அந்தஸ்து மரபுரிமையாகக் கிட்டும் அந்தஸ்தாகும். ஆதலால் எல்லா மரபுவழி இங்கிலாந்துப் பெருமகனார்களும் மன்னரிடமிருந்து மரபுவழியாக அழைப்பாணை பெறவும், பிரபுக்கள் சபையின் உறுப்பினர்களாக இருப்பதற்கும் உரிமை பெற்றிருக்கிறார்கள். 3. இந்த உரிமை 1. மூத்தபிள்ளை 2. ஆண்வாரிசு ஆகிய இரண்டு விதிகளுக்கு உட்பட்டதாகும்.

## பிரதிநிதித்துவப் பெருமகனார்கள்

பிரதிநிதித்துவப் பெருமகனார்கள் இரண்டு வகைப்படுவர். ஸ்காத்லாந்து பிரதிநிதித்துவப் பெருமகனார்கள், அயர்லாந்துப் பிரதிநிதித்துவப் பெருமகனார்கள் ஆகியோர்களே அவர்கள். ஸ்காத்லாந்து பிரதிநிதித்துவப் பெருமகனார்களின் உரிமைத் தகுதி 1767 ஆம் ஆண்டில் இங்கிலாந்தும் ஸ்காத்லாந்தும் செய்துகொண்ட ஒப்பந்தத்தில் அங்கீகரிக்கப்பட்டது; இவை இரண்டும் இணைந்து ஒருபொதுவான மன்னரின் கீழ் ஒரு பொதுவான முடியரசு நாடாயிற்று; பிரிட்டிஷ் கூட்டரசு என இது பெயர்பெற்றது. இங்கிலாந்துடன் இணைவதற்கு முன்னர் நாடாளுமன்றத்தில் அமர்வதற்கான உரிமையுடன் ஸ்காத்லாந்து தனது சொந்தப் பெருமகனார் அந்தஸ்தைப் பெற்றிருந்தது. கிரேட் பிரிட்டனுடனான அயர்லாந்தின் இணைப்பு 1800ல் நிகழ்ந்தது. ஸ்காத் லாந்தைப் போன்றே அயர்லாந்தும் பழைய அயர்லாந்து நாடாளுமன்றத்தில் மரபுரீதியில் அமர்வதற்கான தனது சொந்தப் பெருமகனார் அந்தஸ்தைப் பெற்றிருந்தது. அயர்லாந்தும் ஸ்காத்லாந்தும் தத்தமது ஒப்பந்தங்களின் மூலம் இங்கிலாந்துடன் இணைந்ததன் பேரில், கிரேட்பிரிட்டன் மற்றும் அயர்லாந்தின் புதிய நாடாளுமன்றத்தில் பழைய ஸ்காத்லாந்து மற்றும் அயர்லாந்து பெருமகனார்களுக்கு எவ்வாறு பிரதிநிதித்துவம் அளிப்பது என்னும் பிரச்சினை எழுந்தது. இங்கிலாந்துப் பெருமகனார்கள் புதிய நாடாளுமன்றத்தில் அமர்வதற்கு தாங்கள் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு என்று வாதிட்டார்கள். இதேபோன்று ஸ்காத்லாந்து, அயர்லாந்து பெருமகனார்களும் தங்கள் பிரிவைச் சேர்ந்த ஒவ்வொரு உறுப்பினருக்கும் இத்தகைய உரிமை கொண்டாடினார்கள்.

இதன் பின்னர் ஏற்பட்ட உடன்பாட்டின்படி 1. இங்கிலாந்து பெருமகனார்கள் ஒவ்வொருவரும் புதிய நாடாளுமன்றத்தில் அமர

அனுமதிக்கப்பட்டார்கள். 2. ஸ்காத்லாந்து பெருமகனார்கள் தங்களில் பதினாறு பேர்களை(16) புதிய நாடாளுமன்றத்துக்குத் தங்கள் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்க அனுமதிக்கப்பட்டார்கள். 3. அயர்லாந்தின் பெருமகனார்கள் தங்களில் இருப்பத்தெட்டுப் பேர்களை (28) தேர்ந்தெடுக்க அனுமதிக்கப்பட்டார்கள். ஸ்காத்லாந்தின் பெருமகனார்கள் ஒரு நாடாளுமன்றத்தின் ஆயுட்காலத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். நாடாளுமன்றம் கலைக்கப்படும்போது, ஸ்காத்லாந்து பெருமகனார்களால் 16 ஸ்காத்லாந்துப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க ஒரு புதிய தேர்தல் நடைபெறுகிறது. ஆனால் அயர்லாந்தின் விஷயம் அப்படியல்ல; அயர்லாந்தின், பெருமகனார்கள் தங்கள் ஆயுட்காலத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்; நாடாளுமன்றம் கலைக்கப்படும்போது அயர்லாந்தின் பெருமகனார்களைத் தேர்ந்தெடுக்கப் புதிதாகத் தேர்தல் நடத்தப்படுவதில்லை. அயர்லாந்தின் பெருமகனார்களில் எவரேனும் இறந்துபோனாலோ அல்லது தகுதியின்மை காரணமாகவோ இடங்கள் காலியாகும் போதுதான் அந்த இடங்களுக்குப் புதிதாகத் தேர்தல் நடைபெறுகிறது.

இணைப்பு ஏற்பட்ட காலத்துக்கு முன்பிருந்தே நடைமுறையிலிருந்துவந்த இந்த மூன்று பண்டைய பிரதேசப் பெருமகனார் அந்தஸ்தைத் தவிர நான்காவதொரு பெருமகனார் அந்தஸ்தும் தோற்றுவிக்கப்பட்டது; பிரபுக்கள் சபையில் அமர்வதற்கு உரிமையுள்ள பிரிட்டிஷ் கூட்டரசு பெருமகனார்கள் என இவர்கள் அழைக்கப்பட்டனர். இத்தகைய பெருமகனார் அந்தஸ்தை ஸ்காத்லாந்தின் பெருமகனாருக்கோ அல்லது அயர்லாந்துப் பெருமகனாருக்குக்கூட மன்னர் வழங்க முடியும்; இத்தகைய சூழ்நிலைமையில், பெருமகனார் அந்தஸ்து மரபுவழிப்பட்டவராக இருந்தால், அந்தத் தகுதி பெற்றவர் அயர்லாந்துடனும் ஸ்காத்லாந்துடனுமான ஒப்பந்தங்கள் என்ன கூறிய போதிலும், பிரபுக்கள் சபையில் அமரமுடியும்.

## பதவியின் தகுதி காரணமாக பெருமகனார் ஆனவர்கள்

பதவியின் தகுதிகாரணமாக பிரபுக்கள் சபையில் இடம் பெறும் பெருமகனார்களை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. சமயத்துறைப் பிரபுக்கள், 2. சாதாரண மேல்முறையீட்டுத்துறை பிரபுக்கள், சட்டப்படி இருப்பத்தாறு திருச்சபை அதிகாரிகள் பிரபுக்கள் சபையில் இடம்பெற உரிமைபெற்றிருக்கிறார்கள். இவர்களில் கான்டர்பர்ரி, யார்க் தலைமைக் குருக்களும் (ஆர்ச்பிஷப்புகள்), லண்டன், துர்ஹாம், வின்செஸ்டர் சமய வட்டத்தலைவர்களும்(பிஷப்புகள்) பிரபுக்கள் சபையில் சமயத்துறைப் பிரபுக்களாக அமர உரிமை

பெற்றிருக்கிறார்கள். எஞ்சிய 21 சமயத்துறை பெருமகனார்களில் 21 மாவட்டத்திருச்சபை ஆட்சி முதல்வர்கள் (டயோசேசன் பிஷப் புகள்) நியமன மூப்பு அடிப்படையில் பிரபுக்கள் சபையில் இடம் பெறுவதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள். எனவே, 21 பிஷப்பு களில் யாரேனும் ஒருவர் இறந்தாலோ அல்லது பதவி விலகி னாலோ அவரது இடத்திற்கு அவரது வாரிசு வர இயலாது; மாறாக அடுத்த முதுநிலை டயோசேசன் பிஷப்தான் அந்த இடத்தை நிரப்ப முடியும்;

## பொதுமுறை மேல்முறையீட்டு நீதிபதிகளாக உள்ள பிரபுக்கள்

பிரபுக்கள் சபை ஒரு சட்டமன்றமாக இருப்பதோடு முறை மன்றமாகவும் அமைந்துள்ளது. இங்கிலாந்து, ஸ்காத்லாந்து, அயர் லாந்து ஆகியவற்றிலுள்ள மன்னரின் நீதிமன்றங்களிலிருந்து வரும் மேல் முறையீடுகளைப் பரிசீலித்து முடிவுசெய்யும் மீயுயர் மேல் முறையீடு நீதிமன்றம் என இதனைக் கூறலாம். இவ்வாறு நீதிமன்றப் பணி பிரபுக்கள் சபையின் பணியாக இருப்பதால், ஒருமுறை மன்றம் என்ற வகையில் இந்த சபையின் முன்கொண்டு வரப்படும் எந்த மேல்முறையீடு சம்பந்தமாகவும் அளிக்கப்படும் தீர்ப்புகளில் எந்த ஒரு நாடாளுமன்றப் பெருமகனாரும் பங்குகொள்வதைத் தடுப் பதற்கு எதுவும் இல்லை. ஆனால் பிரபுக்கள் சபை என்பது பெரும் பாலும் சட்டநுணுக்கங்களில் பரிச்சயம் இல்லாத, எத்தகைய சட்டப் பயிற்சியும் அனுபவமும் இல்லாத பெருமகனார்களைக் கொண்ட ஓர் அமைப்பு என்பதை மறந்துவிடக் கூடாது. இத்தகைய நிலை யில், இப்படிப்பட்ட ஓர் அமைப்பை மிக உயர்ந்த நீதிமன்றப் பணியைப் புரியும்படி அனுமதிப்பதில் நீதித்துறைக்கு மிகப் பெரிய அபாயம் பொதிந்திருந்தது. ஆனால் இதற்காக நீதிபரிபாலன அதி காரத்தைப் பிரபுக்கள் சபையிடமிருந்து அறவே அகற்றுவது என்பது சாத்தியமில்லை. எனவே, ஒரு சமரச ஏற்பாடாக 1876 ஆம் வருட மேல்முறையீடு அதிகாரச்சட்டம் இயற்றப்பட்டது. இதன்படி இறுதி மேல்முறையீடு என்ற அதன் அந்தஸ்து முன்போலவே பாதுகாக்கப் பட்டது; ஆனால் எந்த ஒரு மேல் முதறையீடும் விசாரணைக்கு வரும் போது, குறைந்தபட்சம் மூன்று மேல்முறையீட்டு நடுவர்கள் ஆஜராகி இருந்தாலொழிய அந்த மேல்முறையீட்டை விசாரித்துத் தீர்ப்பளிக்கக் கூடாது என்ற நிபந்தனை விதிக்கப்பட்டது. மேல் முறையீட்டு நடுவர்கள் பட்டியலில் 1. அப்போதைய மேலவைத் தலைவர் 2. உயர் நீதித்துறைப் பதவிகளில் இருந்து தற்போது பிரபுக்

கள் சபையில் உறுப்பினர்களாக இருப்பவர்கள் 3. மன்னரால் விசேட மாக நியமிக்கப்படும் மேல்முறையீட்டு நடுவர்கள்.

பிரபுக்கள் சபையில் விசேட முறையீட்டு நடுவர்களை நிய மிக்க மன்னருக்கு அதிகாரமளித்த 1876ஆம் வருட மேல்முறை யீட்டு அதிகாரச்சட்டம் இந்த நடுவர்கள் பெருமகனார்களாக சபை யில் அமரும் காலத்தை அவர்கள் மேல்முறையீட்டு நடுவர்களாகப் பணியாற்றுவது தொடர்வதைச் சார்ந்திருக்கும்படிச் செய்தது. எனினும் 1887ல் இது மாற்றப்பட்டு, விசேட மேல்முறையீட்டு நடுவர்கள் பணியாற்றும் காலத்தை அவர்களது ஆயுட்காலத்துக்கு நீட்டித்தது.

பிரபுக்கள் சபையின் இயைபைப் பற்றி இதுவரை கூறினோம்; அடுத்து, இது சம்பந்தமாக இங்கு எழும் சில கேள்விகளைப் பற்றி இப்போது பரிசீலிப்போம். முதல் கேள்வி பிரபுக்கள் சபையில் பெருமகனார்கள் அமர்வதற்கான தகுதி என்ன? பிரபுக்கள் சபை யில் பெருமகனார்கள் இடம்பெறுவதற்கான தகுதி காமன்ஸ் சபை உறுப்பினர்கள் ஒரு தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவதை அடிப்படையாகக் கொண்டதல்ல. மாறாக நாடாளுமன்றத்துக்கு வந்து கலந்து கொள்ளும்படி ஒவ்வொரு பெருமகனாருக்கும் தனித் தனியாக மன்னர் அனுப்பும் அழைப்பாணையை அடிப்படையாகக் கொண்டது இந்தத்தகுதி. இதை மன்னர் செய்யும் ஒருவித நியமனம் எனலாம். ஆனால் அதேசமயம் இவ்வாறு நியமிக்கும் அதிகாரம் கண்டிப்பான முறையில் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது; நாடாளு மன்றத்திற்கு நாடாளுமன்றம் நியமனங்கள் முறையை தமது உசிதம்போல், விருப்பம்போல் ரத்து செய்யும், மாற்றும் அதிகாரம் மன்னருக்கு அளிக்கப்படவில்லை.

பெருமகனார் நாடாளுமன்றத்தில் இடம்பெறும் தகுதி மன்னரது அழைப்பாணையை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், அழைப்பாணை விடுப்பதற்கு மன்னருக்குள்ள உரிமைக்குச் சில கட்டுப்பாடுகள் உள்ளன. ஓர் அந்நியப்பெருமகனாருக்கு அதாவது பிரிட்டிஷ் பிரஜை அல்லாத ஒரு பெருமகனாருக்கு நாடாளுமன்றத் தில் அமரும்படி அழைப்பாணை அனுப்ப முடியாது.

இரண்டாவது கேள்வி ஒரு பெருமகனார் தமக்குள்ள இந்தத் தகுதியை ஏற்பது மற்றும் நிராகரிப்பது சம்பந்தப்பட்டது. பெருமகனார் அந்தஸ்து என்பது மாற்றத்தக்க அந்தஸ்தல்ல; அதனைப் பிறருக்கு விற்கவோ பரிசாகக் கொடுக்கவோ முடியாது. மரபுரிமை விதிகளின் படி ஒருவர் மரபுரிமையாகத்தான் இதனைக் கோரமுடியும். இதே போல் ஒரு பெருமகனார் தமது இந்தத் தகுதியைத் துறக்கவோ,

பெருமகனாராக இல்லாதிருக்கவோ முடியாது. ஒருவர் பெருமக னாராகி விட்டால் வாழ்நாள் முழுதும் பெருமகனார்தான் என்ற கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டதே இந்தப் பெருமகனார் அந்தஸ்து.

மூன்றாவது கேள்வி பெருமகனார் அந்தஸ்துக்கும் பிரபுக் கள் சபைக்கும் இடையேயான வேறுபாடு குறித்தது. பிரிட்டிஷ் கூட் டரசின் பெருமகனார்கள் என்ற சொற்றொடரும் பிரபுக்கள் சபையும் சாதாரணமாக ஒரே பொருளில் பயன்படுத்தப்படுவதைப் பார்க்கி றோம். ஆனால் சட்ட ரீதியாகக் கூறுவதானால் இவை இரண்டுக்கும் இடையே வேறுபாடு உண்டு. ஒருவர் பிரிட்டிஷ் கூட்டரசின் பெரு மகனாராக இருக்கலாம்; ஆனால் அதற்காக அவர் பிரபுக்கள் சபை யின் உறுப்பினராக இருக்க வேண்டும் என்பதில்லை. ஆயுட்காலப் பெருமகனார் விஷயத்தை இதற்கு ஓர் உதாரணமாகக் கூறலாம். ஆயுட்காலப் பெருமகனார் பிரிட்டிஷ் கூட்டரசின் பெருமகனார் என்பதில் ஐயமில்லை; ஆனால் இதன் பொருட்டு அவர் பிரபுக்கள் சபையின் உறுப்பினராக இருக்கமுடியாது; ஏனென்றால் பதவி தகுதி தவிர்த்து மற்றபடி ஒரு பெருமகனார் பிரபுக்கள் சபையில் அமர்வதற்கான உரிமை பெறுவதற்கு அவர் மரபுவழி வந்த பெருமக னாராக இருக்க வேண்டும் என்று சட்டவிதி கூறுகிறது. எனினும் இதற்கு நேர்மாறாக, ஒருவர் மரபுவழிவந்த பெருமகனாக இல்லா விட்டாலும் பிரபுக்கள் சபை உறுப்பினராக இருக்க முடியும். சமயத் துறைப் பிரபுக்களையும், மன்னரால் விசேடமாக நியமிக்கப்பட்ட மேல்முறையீட்டு நடுவர்களான பிரபுக்களையும் இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். ஆர்ச்பிஷப்புகளும் பிஷப்புகளும் அவ்வாறே விசேட மேல்முறையீட்டு நடுவர்களும் பிரபுக்கள் சபையில் அமர் வதற்கு மன்னரிடமிருந்து அழைப்பாணைகள் பெற உரிமை பெற்றி ருக்கிறார்கள். முந்தியவர்கள் தாங்கள் பதவியில் இருக்கும் வரை யிலும் பிந்தியவர்கள் ஆயுட்காலம் வரையிலும் பிரபுக்கள் சபை உறுப்பினர்களாக இருப்பார்கள். எனினும் குடிமகனார் அந்தஸ்து என்பது மரபுவழி உரிமையைக் குறிக்கும் என்ற சட்டரீதியான பொருளில் நோக்கும்போது இவர்கள் குடிமகனார்கள் ஆக மாட் டார்கள்.

★★★

# V

# பிரபுக்கள் சபை மற்றும் காமன்ஸ் சபையின் அதிகாரங்களும் சிறப்புரிமைகளும்

நாடாளுமன்றத்தின் இரு சபைகளும் நாடாளுமன்றத்தின் அங்கங்கள் என்ற வகையில் கூட்டு முறையில் சில குறிப்பிட்ட சிறப் புரிமைகளைப் பெற்றிருக்கின்றன; தமக்குள்ள அதிகாரங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவும் இந்தச் சிறப்புரிமைகள் அவற் றுக்கு அவசியப்படுகின்றன. நாடாளுமன்றத்தின இரு சபைகளின் உறுப்பினர்கள் என்ற முறையில் கூட்டாகப் பெற்றுள்ள சிறப்புரிமை களைத் தவிர, அவர்கள் தனிப்பட்ட முறையில், அனுபவிக்கும் இதர பல உரிமைகளும் இருக்கின்றன; அவர்களது ஆளுமையைப் பாதுகாக்கும் மற்றும் அவர்களது சுதந்திரத்தையும் மதிப்பையும் நிலைநாட்டும் நோக்கம் கொண்டவை இந்த சிறப்புரிமைகள்.

## பகுதி I

### 1. நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகள்

**1. காமன்ஸ் சபையின் சிறப்புரிமைகள்** - சபைக்குள் அந்நியர்களை வரவிடாமல் தடுக்கும் மற்றும் விவாதங்களை இரக சியமாக நடத்தும் உரிமை காமன்ஸ் சபை கோரிப்பெற்ற சிறப் புரிமைகளில் ஒன்றாகும். இந்தச் சிறப்புரிமையைக் காமன்ஸ் சபை பெறவேண்டிய அவசியம் ஏற்பட்டதற்கு இரண்டு வெவ்வேறான சந்தர்ப்ப சூழ்நிலைமைகளே காரணம். ஒரு சந்தர்ப்ப சூழ்நிலைமை காமன்ஸ் சபை உறுப்பினர்களுக்கான இருக்கைகள் ஒழுங்கமைவு சம்பந்தப்பட்டது; இந்த ஏற்பாடு ஆரம்பத்தில் மிக மோசமான முறை யில் செய்யப்பட்டிருந்தது. இதனால் பல சந்தர்ப்பங்களில் வெளி யார்களும் நாடாளுமன்ற உறுப்பினர்களும் ஒன்று கலந்து அமர்ந் திருந்தனர். இதன் காரணமாக, வாக்கெடுப்புகளின்போது வெளி யார்களும் உறுப்பினர்களுடன் சேர்த்துக் கணக்கிடப்பட்டனர். இதனைத் தடுப்பதற்கே, வெளியார்களை உள்ளே அனுமதிக்காதிருக்கும் உரிமையை சபை கோரிப்பெற்றது. அடுத்து இரண்டாவது சந்தர்ப்ப

சூழ்நிலைமைக்கு வருவோம். காமன்ஸ் சபை உறுப்பினர்களை வேவு பார்ப்பதற்கு மன்னர் கையாண்ட முறையுடன் இது சம்பந்தப்பட்டது. சபையில் உறுப்பினர்கள் நிகழ்த்தும் உரைகளை வெளியிடும் வழக்கம் அந்நாட்களில் இல்லை. இதனால் யார் தன்னுடைய நண்பர்கள், யார் எதிரிகள் என்பதைத் தெரிந்துகொள்வதில் மன்னர் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் கரிசனமும் காட்டினார்; இதனால் பல வேவுகாரர் களை நியமித்தார்; சபையில் உறுப்பினர்கள் நிகழ்த்தும் சொற் பொழிவுகளை மன்னருக்குத் தெரிவிக்க வேண்டியது அவர்களது கடமை. இதனைத் தொடர்ந்து மன்னரிடமிருந்து உறுப்பினர் களுக்கு அச்சுறுத்தலும் மிரட்டல்களும் வந்தன; இதர வகைகளிலும் அவரது வெறுப்பும் சினமும் வெளிப்பட்டன. இத்தகைய செயல் உறுப்பினர் களின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தவதாக இருந்தது. இந்நிலைமையில், மன்னரது வேவு நடவடிக்கைகளிலிருந்து சபை தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கு வெளியார்களை சபைக்குள் அனுமதிக்காதிருக்கும் உரிமையைக் கோருவது ஒன்றே ஒரே வழியாக இருந்தது.

எனினும் இந்த உரிமையால் வெளியார்கள் சபைக்குள் நுழைய முடியவில்லை என்றோ, விவாதங்களை அவர்களால் உற்றுக் கேட்கமுடியவில்லை என்றோ கூறிவிட முடியாது. உண்மையைக் கூறுவதானால் அவர்கள் சபைக்குள் நுழையவே செய்தனர்; விவா தங்களை உன்னிப்பாகக் கேட்கவும் செய்தனர். அப்படியானால் இந்தச் சிறப்புரிமையின் பலன்தான் என்ன என்று கேட்கலாம். வெளியார்கள் சபைக்குள் இருக்கிறார்கள் என்பதை யாரேனும் ஓர் உறுப்பினர் கவனித்துவிட்டால், அவர்களை வெளியேறும்படி உத்தர விடச் சபாநாயகர் கடமைப்பட்டிருந்தார். இது தொல்லை அளிப்பதாக இருந்தது; ஏனென்றால் அயலார்கள் இருப்பதாக ஒரே ஒரு உறுப் பினர் ஆட்சேபித்தாலே அவர்களை வெளியேறும்படி உத்தரவிட சபாநாயகரை நிர்ப்பந்தித்தது. எனவே, 1875ல் சபையின் ஒரு தீர்மானத் தின் மூலம் இந்த விதி மாற்றப்பட்டது; இதன்படி, அயலார்கள் இருப்பதை ஏதேனும் ஓர் உறுப்பினர் கவனித்தாலோ அல்லது சட்டமுறைப்படியான மொழியில் கூறுவதானால் அவர் எழுந்து சபாநாயகரைப் பார்த்து ''ஐயா, அயலார்கள் இருப்பதைக் காண்கி றேன்'' என்று கூறினாலோ சபாநாயகர் உடனே விவாதம் நடத்தவோ அல்லது திருத்தங்கள் கொண்டுவரவோ அனுமதிக்காமல் அய லார்களை வெளியேற்றும் பிரச்சினையை எழுப்பி, சபையின்

உணர்வைப் புரிந்துகொண்டு அதற்கேற்ப செயல்படுவார். ஆக, இந்தத் தீர்மானம் அயலார்களை வெளியேற்றும் உரிமையை நிலைநாட்டிய அதேசமயம், தனியொரு நபரின் சொந்த விருப்பத் துக்கு வளைந்து கொடுக்காமல், சபையின் பெரும்பாலோரின் விருப் பத்துக்கேற்ப சபாநாயகர் செயல்படுவதற்கு இது வழிவகை செய்தது. எனினும் அதே வேளையில் உறுப்பினர் எவரும் தீர்மானம் கொண்டு வராமலேயே சபாநாயகர் தாமே முன்வந்து எந்த சமயத்திலும் அயலார்களை வெளியேற்றுவதற்கான அதிகாரத்தையும் இந்த விதி அவருக்கு வழங்கிற்று.

விவாதங்களை இரகசியமாக நடத்தும் உரிமையையும் அதேபோன்று அந்த விவாத விவரங்களும் சபை நடவடிக்கைகளும் பிரசுரிக்கப்படாமல் தடுக்கும் உரிமையையும் காமன்ஸ் சபை பெற் றிருந்தது. 1771ல் நடைபெற்ற ஒரு சம்பவம் இந்தச் சிறப்புரிமை எவ்வளவு அவசியம் என்பதை ஐயத்துக்கிடமின்றி நிரூபித்தது. லண்டனைச் சேர்ந்த ஓர் அச்சக உரிமையாளர் காமன்ஸ்சபை உறுப்பினர்களின் விவாதங்களை அவர்களின் அனுமதியின்றிப் பிரசுரித்துவிட்டார். இதனை தங்களது உரிமைகளை உதாசீனம் செய்து புறக்கணிக்கும் செயலாக காமன்ஸ் சபை உறுப்பினர்கள் கருதி னர். சபாநாயகரின் அனுமதியோடு அந்த அச்சக உரிமையாளரைக் கைதுசெய்வதற்கு ஒரு தூதரை அனுப்பினர். ஆனால் நிலைமை வேறுவிதமாக மாறிவிட்டது. காமன்ஸ் சபை அனுப்பிய தூதர் தன்னை தனது வீட்டிலேயே தாக்கி இம்சை செய்ததாக குற்றம் சாட்டி அச்சக உரிமையாளர் அவரை ஒரு காவலரிடம் ஒப்படைத்து விட்டார். இதன் பேரில் கிரிமினல் வழக்கு நடைபெற்றது. லண்டன் நகர மேயரும் அவருக்கு அடுத்த அந்தஸ்திலுள்ள இரண்டு ஆல்டர் மேன்களும் நீதிபதிகளாக அமர்ந்து வழக்கை விசாரித்தனர்; காமன்ஸ் சபை பிறப்பித்த பிடி ஆணையை நகர ஆட்சி உரிமை ஆவணம் காரண மாக நகர எல்லைக்குள் செயல்படுத்த முடியாது என்று கூறி, காமன்ஸ் சபையின் தூதுவரைக் குற்றவாளி எனத் தீர்மானித்தனர்; எனினும் அவரை ஜாமீனில் விடுதலை செய்தனர். இதன்பேரில், காமன்ஸ் சபை நீதிபதிகளாக இருந்து செயல்பட்ட மேயரையும், இரண்டு ஆல்டர்மேன்களையும், தூதுவரின் வாக்குமூலத்தைப் பதிவு செய்த எழுத்தரையும் வரவழைத்து விசாரித்தது. அப்போது தூதுவ ரின் வாக்குமூலம் பதிவு செய்யப்பட்ட பக்கம் கிழிக்கப்பட்டு, மோசடி

நடைபெற்றிருப்பது தெரிய வந்தது. பிடி ஆணை பிறப்பிக்க தனக்குள்ள அதிகாரத்தை எதிர்த்த குற்றத்திற்காக மேயரையும் ஆல்டர் மேன்களையும் லண்டன் உயர் நீதிமன்ற விசாரணைக்கு காமன்ஸ் சபை அனுப்பி வைத்தது. இதன் பின்னர், விவாதங்களை இரகசியமாக நடத்துவதற்கு காமன்ஸ் சபைக்குள்ள உரிமை பற்றி ஆட்சேபம் தெரிவிக்க எவரும் துணியவில்லை. ஆனால் காமன்ஸ் சபை விவாதங்கள் பற்றிய விவரங்களை இன்று சர்வசாதாரணமாகக் காண்கிறோம். இசைவிணக்கத்தின் அடிப்படையிலேயே தற்போது இவை பிரசுரிக்கப் பட்டு வருகின்றன; ஆனால் காமன்ஸ் சபை நினைத்தால் எந்தச் சமயத்திலும் அவற்றைத் தடைசெய்யலாம். கடந்த யுத்தத்தின்போது சில சந்தர்ப்பங்களில் இவ்வாறு நடைபெற்றது. அப்போது பல விஷயங்கள் சபையில் இரகசியமாக விவாதிக்கப்பட்டன; இவை பிரசுரிப்பதற்கு அனுமதிக்கப் படவில்லை.

காமன்ஸ் சபை கோரிப் பெற்றிருக்கும் மற்றொரு சிறப்புரிமை சபைக்குள்ள அதிகாரங்கள் பற்றிய விதிமுறைகளாகும். இந்த உரிமையின் கீழ் மூன்று முக்கிய விஷயங்கள் அடங்கும்.

*(1) காலியிடங்களை நிரப்புதல்:* ஒரு புதிய நாடாளுமன்றத்தை அமைப்பதற்குப் பொதுத்தேர்தலை நடத்தும் உரிமை மன்னனுக்குள்ள சிறப்புரிமையாகும். ஆனால் அதேசமயம் நாடாளுமன்றம் தொடர்ந்து செயல்பட்டுவரும்போது காலியாகும் இடத்தை நிரப்பும் உரிமை காமன்ஸ் சபைக்குத்தான் உண்டு. இதன்விளைவாக, ஓர் இடம் காலியாகும்போது அந்த இடத்தை நிரப்புவதற்கான உப தேர்தலை நடத்தும் ஆணையை சபாநாயகர் பிறப்பிக்கிறார்; ஆனால் அவர் இவ்வாறு செய்வது சபையின் உத்தரவுப்படியே தவிர மன்னரின் உத்தரவுப்படி அல்ல. நாடாளுமன்றக் கூட்டம் நடைபெறாதபோது இடம் காலியானால் இத்தகைய ஆணையை சில நிபந்தனைகளுக்கு உட்பட்டுப் பிறப்பிக்க சபாநாயகருக்கு அதிகாரம் அளிக்கப்படுகிறது.

இந்த உரிமையின் கீழ்வரும் இரண்டாவது விஷயம் சர்ச்சைக்குரிய தேர்தல்கள் பற்றி முடிவு எடுப்பது சம்பந்தப்பட்டதாகும். இந்த விஷயம் ஒருபுறம் மன்னருக்கும் மற்றொருபுறம் காமன்ஸ் சபைக்கும் இடையே நீண்டகாலம் வாதப்பிரதிவாதத்துக்குரிய ஒன்றாக இருந்து வந்தது. ஒவ்வொரு தரப்பும் மற்ற தரப்புக்கன்றி தனக்குத்

தான் அந்த உரிமை இருக்கிறது என்று வாதிட்டது. ஆரம்பத்தில் ஒரு தொகுதிக்குத் தேர்தல் நடத்துவதற்கு ஆணையிடும் அதிகாரம் நாடாளுமன்றத்திடம்தான் இருந்தது; ஒரு குறிப்பிட்ட தொகுதியில் காலியாகும் இடத்தை நிரப்புவதற்கு காமன்ஸ் சபைக்குள்ள உரிமை இதன்மூலம் அங்கீகரிக்கப்பட்டது. நான்காம் ஹென்றி ஆட்சிக் காலத்திலிருந்து, இந்த அதிகாரம் நீதித்துறை முதல்வர் மன்றத்துக்கு வழங்கப்பட்டது; இதன்மூலம் காலியாகும் இடத்தை நிரப்புவதற்கு மன்னருக்குள்ள உரிமை அங்கீகரிக்கப்பட்டது. ஆனால் 1604 வரை இந்த விஷயம் மாறிமாறிவரும் பெரும் இழுபறியாக இருந்தது. அந்த ஆண்டில் காமன்ஸ் சபை இந்த உரிமை தனக்குத்தான் உண்டு என்று பிடிவாதம் பிடித்தது. இதனைத் தொடர்ந்து காமன்ஸ் சபையினருக்கும் முதலாம் ஜேம்சுக்கும் இடையே ஒரு பெரும் சச்சரவு எழுந்தது. திவாலான அதாவது ஓட்டாண்டியான எவருமோ, சட்டப்பிரஷ்டம் செய்யப்பட்ட எவருமோ தேர்தலில் போட்டியிடுவதற்கு அனுமதிக்கக் கூடாது என்று ஒரு பிரகடனத்தை அப்போது முதலாம் ஜேம்ஸ் வெளியிட்டார். பக்ஸ் வட்டாரம் திரு.ஃகுட்வின் என்பவரைத் தேர்ந்தெடுத்தது. அவர் சட்டப்பிரஷ்டம் செய்யப்பட்டவர். மன்னர் அவரது தேர்தலை ரத்துசெய்து மறுதேர்தல் நடத்துவதற்கு உத்தரவிட்டார். இதன்படி திரு.போர்ட்டஸ்க்யூ என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் காமன்ஸ் சபையோ மன்னர் திரு.குட்வின் தேர்தலை ரத்து செய்தபோதிலும் அவரையே சபையின் உறுப்பினராக உரிய முறையில் தேர்ந்தெடுத்தது. மன்னரோ இந்த விஷயத்தில் முடிவு செய்யும் அதிகாரம் தமக்கே உண்டு என்று உரிமை கொண்டாடினார். இதனைத் தொடர்ந்து மன்னரும் பிரபுக்கள் சபையினரும் காமன்ஸ் சபையினரும் கலந்துகொண்ட ஒரு மாநாடு நடைபெற்றது. தோல்வியை ஒப்புக்கொண்டு, காமன்ஸ் சபைக்குள்ள உரிமையை அங்கீகரிக்கும்படி பிரபுக்கள் சபையினர் மன்னருக்கு ஆலோசனை கூறினர். சர்ச்சைக்குரிய தேர்தல்களைப் பற்றிய விசாரணையை நடத்துவது மக்கள் சபைக்கு ஒரு பெரிய தலைவலியாகி விட்டது; வேட்பாளர்களையும் மிகுந்த கவலைக்குள்ளாக்கிற்று; ஏனென்றால் இத்தகைய விசாரணைகள் யாவும் அரசியல் சூதாட்டமாகிவிட்டன. எனவே, தகராறுக்குரிய தேர்தல்கள் பற்றித் தீர்ப்புக்கூறும் பொறுப்பை 1868ல் காமன்ஸ் சபை சட்டரீதியாக நீதிமன்றத்துக்கு விட்டுவிட்டது.

காமன்ஸ் சபைக்குள்ள சிறப்புரிமைகளில் மூன்றாவது உரிமையைப் பற்றி இப்போது பார்ப்போம்; சபையில் அமர்வதற்குத் தகுதி

யில்லாத முறையில் நடந்து கொள்ளும் ஓர் உறுப்பினரை நீக்கு வதற்கு சபைக்குள்ள அதிகாரம் சம்பந்தப்பட்டது இந்த உரிமை. ஓர் உறுப்பினரை நீக்குவது தகுதியின்மை ஆகாது; அவ்வாறு நீக்கப் பட்ட ஓர் உறுப்பினர் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படலாம். அதே சமயம் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான உரிமையில் சபையில் அமர் வதற்கான உரிமை அடங்கியிருக்கவில்லை என்பது மறந்துவிடக் கூடாது. ஒருவரைத் தேர்ந்தெடுப்பது வாக்காளர்களின் தயவைப் பொறுத்தது. அதேபோல் அவரை சபையில் அமர அனுமதிக்கும் தயவைக் காட்டுவது காமன்ஸ் சபையின் அதிகார வரம்புக்குட் பட்டது. இதன் காரணமாக, உரியமுறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் சபையில் அமரமுடியாத நிலைமை பல சந்தர்ப்பங் களில் ஏற்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். வில்கஸ் என்பவரின் விஷயத்தை இதற்கு உதாரணமாகக் கூறலாம். மிட்டில்செக்ஸ் வட்டாரத்தால் வில்கஸ் தொடர்ந்து நான்கு முறைத் தேர்ந்தெடுக்கப் பட்டார்; அந்த நான்கு முறையும் சபையில் அமர அவருக்கு அனுமதி மறுக்கப்பட்டது. காமன்ஸ் சபைக்குள்ள அடுத்த முக்கியமான சிறப் புரிமை சபைக்குள் எழும் எந்த விஷயங்களையும், பிரச்சினை களையும், சிக்கல்களையும் பிறர் தலையீடின்றித் தானே சமாளித்துக் கொள்வதற்கு, தீர்மானித்துக்கொள்வதற்கு அதற்குள்ள பிரத்தியேக அதிகாரம் பற்றியது. இதன்படி, தனது நடவடிக்கைகளையும், நடை முறைகளையும், செயற்பாடுகளையும் நலன்களையும், தனது அலுவல் பாங்கையும், பாணியையும், வழிவகைகளையும் தானே ஒழுங்கு படுத்திக் கொள்ளும் பிரத்தியேக அதிகாரத்தை சபை பெற்றுள்ளது; சபைக்குள் நடைபெறும் எந்த விஷயத்திலும் எந்த நீதிமன்றமும் தலையிடமுடியாது. இந்தச் சிறப்புரிமையின், அதிகாரத்தின் இயல் பையும் வீச்சையும் **பிராட்லாஃப் எதிர் கோஸ்ஸட்** வழக்கிலிருந்து தெள்ளத் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம். இந்த வழக்கு விவ காரம் வருமாறு. திரு. பிரட்லாஃப் நார்த்தாம்டனிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட்ட உறுப்பினர். 1880 மே 3 ஆம் தேதி காமன்ஸ் சபைக்கு வந்தார்; தாம் ஒரு நாத்திகர் என்பதால் கடவுள் பெயரால் அல்லா மல் உறுதிமொழி எடுத்து பதவிப் பிரமாணம் செய்யப் போவ தாகக் கூறினார். ஆனால் காமன்ஸ் சபையின் ஒரு குழு இதனை ஆட்சேபித்தது; இவ்வாறு நீதிமன்றத்தில்தான் உறுதிமொழி எடுத்துக் கொள்ளலாமே தவிர நாடாளுமன்ற உறுப்பினர்கள் இவ்விதம் செய்ய முடியாது, கடவுள் பெயரால் பதவிப் பிரமாணம் செய்வது தான் அவர்களுக்குள்ள ஒரே வழி என்று காமன்ஸ் சபைக்குழு கூறிவிட்டது. இதன்பேரில் திரு.பிராட்லாஃப் கடவுள் பெயரால்

விசுவாசப் பிராமணம் எடுத்துக்கொள்ள சபாநாயகரின் மேஜை முன் வந்து நின்றார். ஆனால் சபை இதற்கு எதிர்ப்பு தெரிவித்தது; இது அவரது மனச்சான்றின் அடிப்படையில் இருக்காது என்றும், வெறும் சம்பிராதயமாகவே, நாடகமாகவே இருக்கும் என்றும் அது கூறிற்று. பின்னர், கடவுள் பெயரால் விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ள அனுமதிக்கலாமா என்பதை ஆராய மற்றொரு குழு அமைக்கப் பட்டது. இவ்வாறு செய்ய அனுமதிக்கக் கூடாது என்று இந்தக் குழுவும் கருத்துத் தெரிவித்தது; எனினும் உறுதிமொழி எடுத்துக்கொள்வது சட்டப்பூர்வமானதுதான் என்று ஒரு நீதிமன்றத்தில் நிரூபிக்கப்படு மானால் அப்போது அவ்வாறு உறுதிமொழி எடுத்துக்கொள்ள அவரை அனுமதிக்கலாம் என்றும் அது பரிந்துரைத்தது. இதனைத் தொடர்ந்து, திரு.பிராட்லாஃப் உறுதிமொழி எடுத்துக்கொள்வதை அனுமதிக்கும் ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டது; ஆனால் உறுதிமொழி எடுக்கவோ கடவுள் பெயரால் விசுவாசப் பிரமாணம் செய்யவோ அவருக்கு அனுமதி மறுக்கும் ஒரு திருத்தம் இத் தீர் மானத்துக்குக் கொண்டு வரப்பட்டது. எனினும் கடவுள் பெயரால் விசுவாசப் பிரமாணம் செய்யத் தமக்கு உரிமை உண்டு என்று பிராட்லாஃப் வலியுறுத்தினார். அங்கிருந்து போய்விடும்படி சபா நாயகர் அவருக்குக் கட்டளையிட்டார். ஆனால் அவ்வாறு செய்ய அவர் மறுத்துவிட்டார். இதன்பேரில் திரு.பிராட்லாஃபை அங் கிருந்து அகற்றும்படி சார்ஜெண்டிடம் கூறப்பட்டது. சார்ஜண்ட் திரு. கோஸ்ஸட்டுக்கும் திரு. பிராத்லாஃபுக்கும் இடையே கைகலப்பு ஏற்பட்டது. இந்த மோதலில் திரு. பிராத்லாஃப் பலத்த காயமடைந் தார். அவர் உறுதிமொழி எடுத்துக்கொள்வதை அனுமதிக்கும் ஒரு நிலையாணை பிறப்பிக்கப்பட்டது. அவ்வாறே திரு.பிராட்லாஃப் உறுதிமொழி எடுத்துக் கொண்டார். ஆனால் ஒரு நாடாளுமன்ற உறுப் பினர் உறுதிமொழி எடுத்துக் கொள்வதை அனுமதிக்க முடியாது என்று நீதிமன்றம் கூறிவிட்டது. இதனைத் தொடர்ந்து அவரது காமன்ஸ் சபை உறுப்பினர் பதவி ரத்து செய்யப்பட்டது. 1881ல் அவர் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போதும் இதே கதைதான் நடைபெற்றது. கடவுள் பெயரால் விசுவாசப் பிரமாணம் செய்ய அவர் சபாநாயகரின் மேஜை முன் வந்துநிற்கும் போதெல்லாம் அவ்வாறு செய்ய அவரை அனுமதிப்பதில்லை என்று சபை முடிவு செய்தது. ஒரு சந்தர்ப்பத்தில் சபாநாயகரின் கட்டளையின் பேரில் திரு.பிராட்லாஃப் சார்ஜெண்ட் கோஸ்ஸெட்டால் நாடாளுமன்றத் தின் வெளிப்புற வாசல்வரை கொண்டு செல்லப்பட்டு, பின்னர் அங்கிருந்து வெளியேற்றப்பட்டார். தாம் கடவுள் பெயரால் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்வதைத் தடுப்பதற்கு கோஸ்ஸெட் வன்முறையைப் பயன்படுத்தாதிருக்க தடை அதிகார ஆணை

பிறப்பிக்க வேண்டுமென்று உயர்நீதிமன்றப் பிரிவு ஒன்றில் திரு. பிராட்ஃலாப் வழக்குத் தொடர்ந்தார். இந்த வழக்கில் சார்ஜெண்ட் சார்பில் எதிர்வாதம் செய்ய காமன்ஸ்சபை வழக்கம்போல் ஏற்பாடு செய்தது. திரு. பிராட்லாஃபின் வாதத்தை ஏற்றுக்கொள்ள உயர்நீதி மன்றப் பிரிவு மறுத்துவிட்டது. காமன்ஸ் சபையின் ஆணையின் பேரிலேயே கோஸ்ஸெட் செயல்பட்டிருக்கிறார் என்றும், எனவே இத்தகைய விஷயத்தில் தலையிடுவதற்கு நீதிமன்றத்துக்கு அதிகார மில்லை என்றும் அது கைவிரித்து விட்டது.

அடுத்தபடியாக, தனது பெருமதிப்பையும் அதிகாரத்தையும் பாதுகாத்துக் கொள்ளும் சிறப்புரிமையைக் காமன்ஸ்சபை பெற்றிருப்பதை இங்கு குறிப்பிடவேண்டும்; எத்தகைய செயல்கள் தனது பெருமையை இழிவுபடுத்தக் கூடியவை, நிந்திக்கக் கூடியவை, அவமதிக்கக் கூடியவை என்று காமன்ஸ் சபை கருதுகிறது என்பதை இங்கு சாங்கோபாங்கமாக விவரித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. எனினும் இது சம்பந்தமான சில கோட்பாடுகளை மட்டும் இங்கு எடுத்துரைப்பது உசிதமாக இருக்கும்.

1. சபையின் நடவடிக்கைகளை முறைப்படுத்தும், ஒழுங்குபடுத்தும் எந்த ஆணைகளுக்கோ, விதிகளுக்கோ கீழ்ப்படிய மறுப்பது காமன்ஸ் சபையின் சிறப்புரிமையை மீறுவதாகும். காமன்ஸ் சபையின் தீர்மானத்துக்கு மாறாக விவாத விவரங்களை வெளியிடுதல், விவாதங்களை வேண்டுமென்றே திரித்துக்கூறல், சபைமுன் வைக்கப்படுவதற்கு முன்னதாகவே, பொதுக்குழுவில் தெரிவிக்கப்பட்ட சான்று ஆதாரங்களைப் பிரசுரித்தல் முதலியவற்றை இந்த விதி மீறலுக்கு உதாரணங்களாகக் கூறலாம்.

2. குறிப்பிட்ட ஆணைகளுக்குக் கீழ்ப்படிய மறுத்தல். ஒவ்வொரு கூட்டத் தொடரின் ஆரம்பத்திலும் கொண்டு வரப்பட வேண்டிய தீர்மானங்கள் பற்றி நம்மிடையே உடன்பாடு ஏற்படுகிறது; அத்தகைய உடன்பாடான தீர்மானங்கள் பின்வருமாறு கூறுவதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்: சபையிலோ அல்லது அதனையொட்டி வேறு எந்தக் குழுவிலோ சான்று ஆதாரங்கள் அளிக்கவரும் சாட்சிகளைக் குறுக்கிட்டுக் கலைப்பவர்களும், சாட்சியம் அளிக்க வருபவர்களை அச்சமூட்டிப் பின்னடையச் செய்பவர்களும், சபையின் எந்த ஒரு குழுவிலும் பொய்ச் சாட்சியம் அளிப்பவர்களும் குறிப்பிட்ட ஆணைகளுக்குக் கீழ்ப்படிய மறுப்பதன்காரணமாக உரிமை மீறல் குற்றத்தை இழைத்தவர்களாவார்கள்.

3. நாடாளுமன்றத்தின் நற்பெயருக்கும் நடவடிக்கைகளுக்கும் களங்கம் உண்டுபண்ணுவது, அல்லது சபையின் கௌரவத்துக்கு எதிராக அவதூறான எண்ணங்களைப் பரப்புவது ஆகியவை உரிமை மீறலாகக் கருதப்படும். பொதுமக்கள் மட்டும்தான் இந்தவிதியின்படி உரிமை மீறல் குற்றத்தை இழைத்தவர்களாகக் கருதப்படுவார்கள் என்று முடிவு செய்துவிடக்கூடாது. நாடாளுமன்ற உறுப்பினர்கள்கூட இந்த விதியை

*மீறும் குற்றத்தைச் செய்தால் தண்டனைக்குள்ளாவார்கள். திரு.ஹோப் ஹவுஸ் என்னும் நாடாளுமன்ற உறுப்பினர் அனாமதேயமாக தாம் வெளியிட்ட ஒரு துண்டுப்பிரசுரத்தில் நாடாளுமன்ற சீர்திருத்தங்களை சபை எதிர்த்ததை வன்மையாக சாடியிருந்தார். இந்தப் பிரசுரத்தை வெளியிட்டது தான்தான் என்பதை அவரே ஒப்புக்கொண்டதன் பேரில் உரிமைமீறல் குற்றத்தை அவர் இழைத்திருப்பதாக சபை தீர்ப்பளித்தது. 1838ல் இதேபோன்றதொரு சம்பவம் நிகழ்ந்தது; நாடாளுமன்ற உறுப் பினர்கள் தேர்தல் குழுக்களில் நீதிசார்ந்த தமது கடமைகளை ஆற்று வதில் முறைகேடாக நடந்துகொண்டதாக திரு.ஓகோமெத் என்ற நாடா ளுமன்ற உறுப்பினர் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசும்போது பொய்ப்பிரச் சாரம் செய்தர்ர்.*

*4. நாடாளுமன்ற உறுப்பினர்கள் என்ற முறையில் அவர்கள் தங்கள் கடமைகளை ஆற்றுவதில் தலையிடுவதும் உரிமை மீறலாகும்.*

காமன்ஸ் சபை உறுப்பினர் எவரையும் அவர் சபைக்குச் செல்லும்போதோ, வெளியே வரும்போதோ, அல்லது நாடாளுமன் றத்தில் அவர் நடந்துகொண்ட முறைக்காகவோ அவரைத் தாக்கு வதும், அவமதிப்பதும், அச்சுறுத்துவதும் சபையின் உரிமையை மீறுவ தாகும்; அதேபோன்று, சபையில் முடிவு செய்யப்படுவதற்குக் காத் திருக்கும் அல்லது எதிர்பார்க்கப்படும் எந்த ஒரு விஷயத்துக்கும் ஆதரவாகவோ அல்லது எதிராகவோ இருக்கும்படி உறுப்பினர் களைக் கட்டாயப்படுத்துவதற்கு முயற்சிப்பதும், அதேபோல் ஒரு குறிப்பிட்ட முறையில் வாக்களிக்கும்படிக் கூறி நாடாளுமன்ற உறுப் பினர்களுக்கு இலஞ்சம் கொடுப்பதும் சபையின் உரிமையை மீறும் செயல்களாகும்.

## பகுதி II

# தனிப்பட்ட உறுப்பினர்களுக்குள்ள சிறப்புரிமைகள்

**1. *கைதாகாமல் இருக்கும் உரிமை:*** கூட்டத்தொடர் நடை பெற்றுக் கொண்டிருக்கும் போதும், கூட்டத்தொடர் ஆரம்பமாவ தற்கு 40 நாட்களுக்கு முன்னரும் அது முடிவடைந்த 40 நாட்களுக் குப் பின்னரும் உறுப்பினர்கள் கைதுசெய்யப்படாமல் இருக்கும் உரிமையை இந்தச் சிறப்புரிமை அளிக்கிறது. ஆரம்பத்தில் இந்த உரிமையை நாடாளுமன்ற உறுப்பினர்கள் அனுபவித்து வந்ததோடு, அவர்களது பணியாட்கள் போன்றோர்க்கும் அது விஸ்தரிக்கப் பட்டது. தற்போது அது உறுப்பினர்களுக்கு மட்டுமே என்று வரை யறுக்கப்பட்டுள்ளது.

2. *பேச்சு சுதந்திரம்:* நாடாளுமன்ற விவாதங்களிலும் நடவடிக்கைகளிலும் உறுப்பினர்களுக்கு பரிபூரண பேச்சு சுதந்திரம் உண்டு, அவர்கள் தெரிவிக்கும் கருத்துகள் எவற்றையும் எந்த ஒரு நீதிமன்றத்திலும் நாடாளுமன்றத்திற்கு வெளியிலும் ஆட்சேபிக்கவோ அல்லது அவற்றின் மீது நடவடிக்கை எடுக்கவோ முடியாது என்று வில்லியம் மற்றும் மேரி எஸ்2 சி2 சட்டம் கூறுகிறது.

## பகுதி III

## உரிமை மீறல்களைத் தண்டிக்கும் முறைமைகள்

உரிமை மீறல் குற்றம் இழைத்தவர்களை சபை தண்டிப்பதற்கு ஐந்து வெவ்வேறு வழிமுறைகள் இருக்கின்றன. அத்தனைக் கடுமையாக இல்லாத உரிமை மீறல்களில், உரிமை மீறலுக்காகக் கைதுசெய்யப்பட்ட ஒருவரை அவர் மன்னிப்புக் கேட்கத் தயாராக இருந்தால், வெறுமனே எச்சரித்து சபை விடுதலை செய்யலாம்; அல்லது அவரைக் கண்டித்து விடுதலை செய்யலாம். உரிமை மீறல் கடுமையாக இருக்கும் பட்சத்தில் சபை அவரை சிறையில் அடைக்க முடியும் அல்லது அபராதம் விதிக்கமுடியும் அல்லது வெளியேற்ற முடியும். கடைசியாகக் குறிப்பிடப்பட்ட தண்டனை அதாவது சபையிலிருந்து வெளியேற்றும் தண்டனை உரிமை மீறல் குற்றம் புரிந்த நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு மட்டுமே பொருந்தும் என்பது தெள்ளத் தெளிவு.

## பகுதி IV

## பிரபுக்கள் சபையின் சிறப்புரிமைகள்

பிரபுக்கள் சபைக்குள்ள சிறப்புரிமைகள் காமன்ஸ் சபைக்குள்ள ஏறத்தாழ அதே உரிமைகள் போன்றவையே ஆகும். எனவே, அவற்றைப்பற்றி இங்கு விரிவாக விவாதிக்க வேண்டிய அவசியம் இல்லை. எனினும் பிரபுக்கள் சபையின் சிறப்புரிமைகளுக்கும் காமன்ஸ் சபையின் சிறப்புரிமைகளுக்குமுள்ள ஒரே ஒரு வேறுபாட்டை இங்கு குறிப்பிடுவது அவசியம்; அவற்றின் சிறப்புரிமைகளின் தோற்றுவாய் சம்பந்தப்பட்டதுதான் இந்த வேறுபாடு. காமன்ஸ் சபைக்குள்ள சிறப்புரிமைகள் மன்னர் அளிக்கும் பரிசாகும். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வொரு நாடாளுமன்றம் தொடங்கும்போதும் காமன்ஸ்சபை சார்பில் சபாநாயகர் இந்தச் சிறப்புரிமைகளை

மன்னரிடமிருந்து வேண்டிப் பெற வேண்டும். ஆனால் பிரபுக்கள் சபைக்குள்ள சிறப்புரிமைகளோ அதற்கே உரிய அதன் சொந்த உரிமைகளாகும். அவை மன்னரிடமிருந்து பெறப்படுவதில்லை.

## *பகுதி V

## சபையின் அதிகாரிகள்

பிரபுக்கள் சபையும் காமன்ஸ்சபையும் தமது அலுவல்களை நடத்துவதற்கும், தமக்குள்ள சிறப்புரிமைகளைச் செயல்படுத்துவதற்கும் சில குறிப்பிட்ட அதிகாரிகளைப் பெற்றுள்ளன. இவ்விரு சபைகளது அதிகாரிகளின் அந்தஸ்தையும் அவர்களது பணிகளையும் தனித்தனியாக விவரிப்பது உசிதம்; தெளிவு பெறுவதற்கு இது உதவும்.

## + பிரிவு VI

## காமன்ஸ் சபை

(1) சபாநாயகர் - பொதுத் தேர்தல் முடிந்ததும் காமன்ஸ் சபையின் முதல் கூட்டத்தில் சபாநாயகர் தற்போது தேர்ந்தெடுக்கப் படுகிறார்; ஒரு தீர்மானத்தின் மூலம் பதவியிலிருந்து விலக்கப் பட்டாலொழிய அவர் நாடாளுமன்றத்தின் ஆயுட்காலத்துக்குப் பதவி வகிக்கிறார். ஆரம்ப காலத்தில் சபாநாயகரைத் தெரிந்தெடுக்கும் உரிமை மன்னருக்குத்தான் இருந்தது. சபாநாயகரை யார் தேர்ந்தெடுப்பது என்னும் விஷயத்தில் 1679ல் இரண்டாம் சார்லசுக்கும் அப்போது புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட காமன்ஸ் சபைக்கும் இடையே சச்சரவு எழுந்தது. சர் எட்வர்டு செய் மௌரை இப்பதவிக்கு காமன்ஸ் சபை தேர்ந்தெடுத்தது. ஆனால் மன்னர் அவரை ஏற்க மறுத்துவிட்டார். அதற்குப் பதில் அவர் தமது சொந்த வேட்பாளரைப் பரிந்துரைத்தார்; காமன்ஸ் சபை அவரை ஏற்க மறுத்து விட்டது. இறுதியில் ஓர் சமரச உடன்பாடு ஏற்பட்டது; காமன்ஸ் சபை இன்னொருவரை சபாநாயகராகப் பரிந்துரைத்தது; மன்னர் இதற்கு ஆட்சேபம் தெரிவிக்கவில்லை. அதுமுதல் தனது சபாநாயகரைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு காமன்ஸ் சபைக்குள்ள உரிமையை மன்னர் தரப்பிலிருந்து ஆட்சேபிக்காமல் இருப்பது நடைமுறை மரபாகிவிட்டது.

---

★ மூலத்தில் காணப்படுவது பிரிவு VI - ஆசிரியர்

\+ தட்டச்சு மூலத்தில் பிரிவு எண் தரப்படவில்லை - ஆசிரியர்

## பகுதி VII

## சபாநாயகரின் பணிகள்

காமன்ஸ் சபையின் சபாநாயகர் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்ட மூன்று பொறுப்புகளில் பணியாற்றுகிறார். காமன்ஸ் சபையின் கருத்துகளைப் பிரதிபலிக்கும் அதன் பிரதிநிதி என்ற முறையில் அவர் பின்கண்ட கடமைகளை ஆற்றுகிறார்:-

1. காமன்ஸ் சபைக்குள்ள சிறப்புரிமைகளை அவர் நிலைநாட்டுகிறார், நன்றி தெரிவிக்கும் தீர்மானங்களை அறிவிக்கிறார்; சந்தர்ப்பத்திற்கேற்ப எச்சரிக்கிறார், கண்டனம் தெரிவிக்கிறார்.

2. உரிமை மீறலுக்காக ஒருவர் தண்டிக்கப்படும்போது அது சம்பந்தப்பட்ட ஆணையைப் பிறப்பிக்கிறார். இதேபோல், சபையால் தண்டிக்கப்பட்டவர்கள் மீது வழக்குத் தொடர்வதற்கான ஆணைகளையும் பிறப்பிக்கிறார்.

3. காமன்ஸ் சபையில் ஏற்படும் காலியிடங்களை நிரப்புவதற்கான ஆணைகளையும் சபாநாயகர் பிறப்பிக்கிறார். 1911 ஆம் வருட நாடாளுமன்றச்சட்டம் இந்தப் புதிய பணியை சபாநாயகருக்கு வழங்கிற்று; இதற்குமுன்னர் அவர் செய்திராத பணியாகும் இது. இந்தச் சட்டத்தின்படி நீதித்துறை அதிகாரியின் பணியையும் அவர் செய்கிறார்; இந்தப் பொறுப்பில் ஒரு குறிப்பிட்ட மசோதா பண மசோதாவா இல்லையா என்பதையும் அவர் அறிவிக்க வேண்டியிருக்கிறது.

சபை தனது அலுவல்களை நடத்துவதற்குக் கூடும்போதெல்லாம் சபாநாயகர் அதற்குத் தலைமை வகிக்கிறார். கூட்டத் தலைவர் என்ற முறையில் பின்கண்ட பணிகளை அவர் செய்ய வேண்டியுள்ளது:

1. விவாதங்களின்போது ஒழுங்கை நிலைநாட்டுதல்.

2. ஒழுங்குப் பிரச்சினைகள் எழுப்பப்படும்போது அவை சம்பந்தமாகத் தீர்மானித்தல்.

3. விவாதத்திலுள்ள பிரச்சினையை சபைக்கு எடுத்துரைத்தல்.

4. பிரச்சினை மீது சபையின் முடிவை அறிவித்தல்.

## பிரிவு VIII

## சபாநாயகரின்கீழ் பணியாற்றும் அதிகாரிகள்

காமன்ஸ் சபையின் சபாநாயகரின்கீழ் இரண்டு அதிகாரிகள் பணியாற்றுகின்றனர். ஒருவர் காமன்ஸ் சபையின் எழுத்தர் எனப்படுபவர், மற்றொருவர் ஆயுதந் தாங்கிய சார்ஜெண்ட், சபை நட

வடிக்கைகள் பற்றிய ஆவணங்களைப் பராமரிப்பது காமன்ஸ்சபை எழுத்தரின்பணி. நாடாளுமன்றத்தின் அன்றாட நடவடிக்கைகளின் குறிப்புகளையும் அவர் பராமரிக்கிறார். சபையில் கொண்டு வரப் பட்ட எல்லா விஷயங்களும் அவற்றின்மீது நடைபெற்ற விவாதங் களும் தேதிவாரியாக இவற்றில் இடம்பெறுகின்றன.

சார்ஜெண்ட் என்பவர் ஒருவகையான காவல்துறை அதிகாரி யாவார். சபையில் ஒழுங்கை நிலைநாட்டுதலும் மற்றும் உரிமை மீறல் போன்றவை சம்பந்தமாக சபையினதும் சபாநாயகரதும் ஆணை களை நிறைவேற்றுவதும் அவரது பணி.

## பிரபுக்கள் சபை

**சபாநாயகர்:** பிரபுக்கள் சபையின் சபாநாயகர் தேர்ந்தெடுக் கப்படுபவர் அல்ல; தனது சபாநாயகரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை பிரபுக்கள் சபைக்கு இல்லை. பிரபுக்கள் சபை வழக்காற்று அடிப்படையில் நியமிக்கப்படுகிறார். லார்ட் சான்ஸ்லர் சபையின் தலைவராகச் செயல்படுகிறார். அவர் இல்லாத சமயத்தில் லார்ட் கீப்பர் ஆப் தி கிரேட் சீல் அந்தப் பொறுப்பை வகிக்கிறார். இவர்கள் இல்லை என்றால் துணை சபாநாயகர்களில் ஒருவர் தலைமை ஏற்கிறார், இத்தகையவர்கள் பலர் மன்னரின் பொறுப்பாண்மைக் குழுவால் நியமிக்கப்படுகின்றனர். இவர்கள் அனைவருமே இல்லாத போது பிரபுக்கள் சபை ஒரு தற்காலிக சபாநாயகரைத் தேர்ந்தெடுக் கிறது. பிரபுக்கள் சபை சபாநாயகர் ஒரு பெருமகனாராக இருக்க வேண்டுமென்பதில்லை. சாமானியமானவர்களே இப்பொறுப்பை வகிக்கலாம். ஒரு சாமானியர் லார்ட் கீப்பர் ஆப் தி கிரேட் சீலாக இருந்தபோது இவ்வாறுதான் நடைபெற்றது. மேலும், ஒரு விசேஷம் என்னவென்றால், இந்த சபையின் தலைவர் அதில் ஓர் உறுப்பின ராக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. சபாநாயகர் அமரும் கம்பளித் துண்டு பிரபுக்கள் சபையின் எல்லைக்கோட்டுக்கு அப்பால் இருப்பதாகக் கருதப்படுகிறது; சபையின் உறுப்பினராக இல்லாத ஒரு நபரும் இந்தப் பொறுப்பை ஏற்கும்பொருட்டே இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

## பிரபுக்கள் சபை சபாநாயகரின் கடமைகள்

பிரபுக்கள் சபை சபாநாயகர் பதவி காமன்ஸ் சபை சபாநாய கரின் பதவியிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. ஒரு பொறுப்பு வாய்ந்த மன்றத்தின் தலைவர்கள் என்பதைத் தவிர அவர்களது

அதிகாரத்தையும் பணியையும் பொறுத்து அவர்களிடையே பொது வான அம்சம் ஏதுமில்லை; பிரபுக்கள் சபையின் சபாநாயகர் என்ற முறையில் லார்ட் சான்ஸ்லரின் கடமைகளை வரையறுத்துக்கூறும் 20 ஆம் எண் நிலையாணையிலிருந்து இதனைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். அந்த நிலையாணை கூறுவதாவது: ''சபையில் லார்ட் சான்ஸ்லர் பேசும்போது எப்போது எதையும் மூடி மறைக்காமல் பேசவேண்டும், மசோதா போன்ற சாதாரண விஷயங்களில் தவிர மற்றவற்றில் முதலில் பிரபுக்களின் ஒப்புதலைப் பெறாமல் சபையை ஒத்திவைக்கக்கூடாது அல்லது சபையின் சார்பில்தானே எதையும் செய்யக்கூடாது; மசோதாக்கள் விஷயத்தில்கூட ஒரு மசோதா வுக்குப் பதில் இன்னொரு மசோதாவை விரும்புவது போன்ற நட வடிக்கைகளில் அவர்கள் ஈடுபடக்கூடும்; பிரபுக்களிடையே ஏதேனும் கருத்து வேறுபாடு ஏற்படும்போது அதை அவர்களே தீர்த்துக் கொள்ள விட்டுவிடவேண்டும்; லார்ட் சான்ஸ்லர் எதையும் சொந்த முறையில் பேச வேண்டுமென்றால் பெருமகனார் என்ற முறை யில் அவருக்குரிய இடத்துக்குச் சென்று பேசவேண்டும்.'' லார்ட் சான்ஸ்லர் ஒரு பெருமகனாராக இருந்தால் அவருக்குரிய இடம் அரங்கின் இடதுபுறத்தில் இருக்கும் என்பது இங்கு குறிப்பிடத் தக்கது. மேலே கூறிய நிலையாணையிலிருந்து பிரபுக்கள் சபையின் சபாநாயகரது அதிகாரம் எந்த அளவுக்கு வரையறைக்குட்பட்டது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

1. ஒழுங்கை நிலைநாட்டும் விதிகளைச் செயல்படுத்து வதில் வேறு எந்தப் பெருமகனாருக்கும் இருப்பதை விட கூடுதல் அதிகாரம் ஏதும் பிரபுக்கள் சபையின் சபாநாயகருக்குக் கிடையாது.

2. காமன்ஸ் சபை சபாநாயகர் முடிவுசெய்வதுபோல் எந்த ஒழுங்குப் பிரச்சினையையும் அவர் முடிவு செய்ய முடியாது.

3. சபையின் நடவடிக்கைகளை நடத்திச் செல்லுவதில் பிரபுக் கள் சபை சபாநாயகருக்கு வரையறைக்குட்பட்ட அதிகாரமே இருப்பதன் காரணமாக சபையில் பேசுவதற்கு ஒரு பெருமகனாருக் குள்ள உரிமை காமன்ஸ்சபை சபாநாயகர்போல் அவரைச் சார்ந் திருக்கவில்லை, மாறாக சபையின் விருப்பத்தையே முற்றிலும் சார்ந் திருக்கிறது. இரண்டு பெருமகனார்கள் பேசுவதற்கு ஒரே சமயத் தில் எழும்போது, உடனே ஒருவர் மற்றவருக்கு விட்டுக் கொடுத்தா லொழிய, சபை அவர்களில் ஒருவரை பேசும் படிக் கேட்டுக்கொள் கிறது; ஒவ்வொருவரையும் ஒவ்வொரு தரப்பு ஆதரிக்குமானால் அப்போது வாக்கெடுப்புக்கு விடுவதைத் தவிர வேறு வழியில்லை.

காமன்ஸ் சபையில் செய்யப்படுவதுபோல் இந்தப் பிரச்சினை சபா நாயகரால் முடிவு செய்யப்படுவதில்லை.

அவருக்கு எவ்வளவு குறைந்த அதிகாரம் இருக்கிறது என்பதைப் பின்கண்டவற்றிலிருந்து தெரிந்து கொள்ளலாம். ஒரு பெருமகனார் ஒழுங்கற்ற முறையில் நடந்து கொள்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அப்போது எதிர்த் தரப்பைச் சேர்ந்த மற்றொரு பெருமகனார் முறையாக நடந்துகொள்ளும்படி அவரிடம் கூறுகிறார். இதனைத் தொடர்ந்து காரசாரமான வாதப்பிரதிவாதம் எழுகிறது. ஒவ்வொரு பேச்சாளரும் தமக்கு முந்திய பேச்சாளர் ஒழுங்கற்றமுறையில் பேசியதாகக் குற்றம் சாட்டுகிறார். இதனால் முறையான விவாதத்திற்குப் பதில் குழப்பமும், குற்றச்சாட்டும் எதிர்க் குற்றச்சாட்டுமாக அமளிதுமளிப்படுகிறது. இந்நிலைமையில் எவ்வகையிலும் தலையிடமுடியாமல் லார்ட் சான்ஸ்லர் வாய் பேசாது அமர்ந்திருக்கிறார்; ஏனென்றால் கேள்விகளை எல்லாம் ஒத்திவைத்துவிட்டு இதர சாதாரண சபை அலுவல்களை நடத்திச் செல்லும் அளவுக்குத்தான் அவருக்கு அதிகாரம் இருக்கிறது.

## ஏனைய அதிகாரிகள்

பிரபுக்கள் சபையின் சபாநாயகர் என்ற முறையில் லார்ட் சான்ஸ்லரின் வேறு மூன்று அதிகாரிகள் உள்ளனர்.

1. **நாடாளுமன்ற எழுத்தர்:** இவருடைய பணிகள் காமன்ஸ் சபை எழுத்தரின் பணிகளைப் போன்றவையே; அதாவது பிரபுக்கள் சபைக் கூட்ட நடவடிக்கைகளையும் சபையில் மேற்கொள்ளப்படும் முடிவுகளையும் அன்றாட நாடாளுமன்ற நடவடிக்கைக் குறிப்புகளில் பதிவு செய்வதே அவரது பிரதான பணி.

2. **பிரபுக்கள் சபையின் ஏவலர்:** காமன்ஸ் சபை சார்ஜெண்டின் பணிகளை ஒத்தவை இவருடைய பணிகள். சபையின் காவல் துறைப் பொறுப்பாளராக இவர் இருக்கிறார்.

3. **சார்ஜெண்ட்:** லார்ட் சான்ஸ்லரின் பணியாளர்.

★★★

# II

## தலைமை அதிகார உரிமையும் இந்திய சமஸ்தானங்களின் சுதந்திரக் கோரிக்கையும்

*ஆகஸ்டு 15 ஆம் தேதி இந்தியா ஒரு டொமினியனாகும்போது முழு தனி ஆட்சி உரிமை படைத்த சுதந்திர நாடுகளாகத் தம்மைப் பிரகடனம் செய்து கொள்ளப் போவதாக திருவாங்கூரும் ஹைதராபாதும் அறிவித்துள்ளன; இந்த உதாரணத்தைப் பின்பற்றும் நோக்கும் போக்கும் இதர சமஸ்தானங்களிடமும் காணப்படுவது ஒரு புதிய பிரச்சினையைத் தோற்றுவித்துள்ளது. இந்தப் பிரச்சினை மிக முக்கிய மானது, சிக்கலானது; இதனால் இப்பிரச்சினையை மிக ஆழமாக, நுணுக்கமாக ஆராய்வது அவசியமாகிறது. இப் பிரச்சினை இரண்டு அம்சங் களைத் தன்னுள் கொண்டுள்ளது; அவை வருமாறு: சமஸ் தானங்கள் தம்மை சுதந்திரமானவையாகப் பிரகடனம் செய்து கொள்ள முடியுமா? அவை தமது சுதந்திரத்தைப் பிரகடனம் செய்து கொள்ள வேண்டுமா?*

*இவற்றில் முதல் விஷயத்தை எடுத்துக் கொள்வோம். சமஸ் தானங்கள் தம்மை சுதந்திர நாடுகளாக அறிவித்துக் கொள்ளத் தமக்கு உரிமை உண்டு என்ற அவற்றின் கோரிக்கைக்கு ஆதார அடிப்படையாக அமைந்திருப்பது 1946 மே 12 ஆம் தேதி பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழு வெளியிட்ட அறிக்கையே ஆகும். அந்த அறிக்கை கூறுவது என்ன? எத்தகைய சந்தர்ப்பச் சூழ்நிலைமை யிலும் தலைமை அதிகார உரிமையை பிரிட்டிஷ் அரசாங்கம் ஓர் இந்திய அரசாங்கத்துக்கு மாற்றித் தர முடியாது, மாற்றித் தரவும் செய்யாது; மன்னர் பிரான் அரசுடன் தமக்கிருந்த உறவின் அடிப் படையில் அமைந்திருந்த உரிமைகள் இனியும் இல்லாத நிலைமை யில், தலைமை அரசிடம் சமஸ்தானங்கள் ஒப்படைத்திருந்த அனைத்து உரிமைகளும் அந்த சமஸ்தானங்களுக்கே திருப்பித் தந்துவிடப்படும் என்று அந்த அறிக்கையில் கூறப்பட்டிருந்தது. மன்னர் பிரான் அரசு தலைமை அதிகார உரிமையை ஓர் இந்திய அரசாங்கத் துக்கு மாற்றித் தர இயலாது என்ற பிரிட்டிஷ் தூதுக்குழுவின் அறிக்கை அரசியல் கொள்கையின் பாற்பட்டதன்று. அது சட்டத்தின் பாற் பட்டது. ஆனால் இங்கு எழும் கேள்வி என்னவென்றால், இந்தச் சட்டத்தை சமஸ்தானங்கள் விஷயத்தில் பயன்படுத்துவது சரி யானது தானா?*

பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழு தெரிவித்துள்ள இந்தக் கருத்து புதியது ஒன்றுமல்ல. மன்னர் பிரானின் அரசுக்கும் இந்திய சமஸ்தானங்களுக்கும் இடையேயான உறவு பற்றிப் பரிசீலிக்கும் பொருட்டு 1929 ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட பட்லர் குழு தெரிவித்த கருத்தின் மறுபதிப்பே தவிர இது வேறன்று.

பட்லர் குழுவிடம் சாட்சியம் அளித்த சமஸ்தான மன்னர்கள் பின்வரும் இரண்டு பிரேரணைகளை முன்வைத்தனர்:

> (i) மன்னர்கள் பிரிட்டிஷ் அரசுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களில் அடங்கியுள்ள நிபந்தனைகளையும் விதிமுறைகளையும் தலைமை அதிகார உரிமை கட்டுப்படுத்தலாமலேயன்றி அவற்றை மீறலாகாது.
>
> (ii) தலைமை அதிகார உரிமை குறிக்கும் மன்னர் பிரான் அரசுக்கும் சமஸ்தான மன்னர்களுக்கும் இடையேயான உறவுகள் தனிப்பட்ட தன்மை கொண்டவையாகும். எனவே, அவற்றை சமஸ்தான மன்னர்களின் ஒப்புதலின்றி ஓர் இந்திய அரசாங்கத்துக்கு மன்னர்பிரான் அரசாங்கம் மாற்ற முடியாது.

இந்த இரண்டு வாதங்களில் முதலாவது வாதத்தை பட்லர் குழு ஏற்க மறுத்து விட்டது. தலைமை அதிகார உரிமை என்பது மிக முக்கியமானது, ஒப்பந்தங்களில் கண்டுள்ள எந்த நிபந்தனைகளும், விதிமுறைகளும் அதனைக் கட்டுப்படுத்த முடியாது என்று அது பச்சையாக, பட்டவர்த்தனமாக, கொச்சையாகவே கூறிவிட்டது. இரண்டாவது வாதத்தைப் பொறுத்த வரையில், எதிர்பாராத விதமாக பட்லர் குழு அதனை ஏற்றுக் கொண்டது. இதற்குக் காரணம் என்ன? தலைமை அதிகார உரிமை குறித்த சமஸ்தான மன்னர்களின் வாதம் நிராகரிக்கப்பட்டதால் திகைத்துக் குழம்பிப் போய் விட்ட அவர்களைச் சமாதானப்படுத்துவதற்காக இவ்வாறு செய்யப்பட்டதா என்பது போன்ற ஊகங்களில் எல்லாம் ஈடுபடுவது இங்கு அவசியமற்றது. எனினும், இந்திய அரசாங்கத்தின் அரசியல் பிரிவுக்கும் சமஸ்தான மன்னர்களுக்கும் எல்லையற்ற திருப்தியை இது அளித்தது என்பது மட்டும் உண்மை.

தலைமை அதிகார உரிமையை ஓர் இந்திய அரசாங்கத்துக்கு மாற்ற முடியாது என்ற சித்தாந்தம் மிகவும் தீங்கு பயப்பது, இதில் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைக் குழப்பும் தன்மை கொண்டது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. அதுமட்டுமல்ல, இந்தச் சித்தாந்தம் அசாதாரணமானது. இதனால்தான் இங்கிலீஷ் சட்ட வரலாற்று ஆசிரியரான காலஞ்சென்ற பேராசிரியர் ஹோல்ட்ஸ்வொர்த் 1930

அக்டோபரில் காலாண்டு சட்ட சஞ்சிகையில் தமது முழு சாமர்த் தியத்தையும், சூழ்ச்சித் திறத்தையும் பயன்படுத்தி இந்த சித்தாந் தத்தை ஆதரித்து எழுதும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. துர திர்ஷ்டவசமாக, எந்த இந்திய அரசியல் சட்ட நிபுணரும் அவரது இந்தக் கருத்துக்களை மறுதலிக்க ஒருபோதும் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. இதன் விளைவாக, இதுவே இந்த விஷயத்தில் இறுதியானதும் முடிவானதுமாக அமைந்துவிட்டது. எனவே பிரிட் டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழு இவற்றைச் சட்டப்படிச் செல்லத் தக்கவையாக ஏற்றுக் கொண்டதிலும், பிரிட்டிஷ் இந்தியா எதிர் இந்திய சமஸ்தானங்கள் பிரச்சினைக்கு இதனடிப்படையில் தீர்வு காண முற்பட்டதிலும் வியப்பேதும் இல்லை. இந்தியாவின் சுதந் திரம் சம்பந்தமாக பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக் குழுவினருடன் பேச்சுவார்த்தைகள் நடத்திய காங்கிரஸ் காரியக் கமிட்டி தலைமை அதிகார உரிமை சம்பந்தமாக தூதுக்குழு முன்வைத்த பிரேரணையை எதிர்க்காதது பரிதாபத்திலும் பரிதாபகரமானதாகும். ஆனால் பிரிட் டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழு என்ன கூறிய போதிலும், தாங்கள் மேற்கொண்ட கருத்தே சரியானது என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி யினர் திடமாக நம்பியிருப்பார்களேயானால் இந்த விஷயத்தைப் புதிதாகப் பரிசீலனை செய்வதற்கு இந்தியர்களுக்குள்ள உரிமை யைச் இந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைகள் பறித்திருக்க முடியாது.

தலைமை அதிகார உரிமை சம்பந்தமாக பிரிட்டிஷ் அமைச் சரவைத் தூதுக்குழு மேற்கொண்டுள்ள நிலையைப் பற்றி இரத் தினச் சுருக்கமாக கூறுவது இங்கு உசிதமாக இருக்கும்:

> (1) தலைமை அதிகார உரிமை என்பது மன்னர் பிரானுக்குள்ள தனிச் சிறப்புரிமையின் மற்றொரு பெயரே தவிர வேறன்று. மன்னர் பிரானின் தனிச் சிறப்புரிமை என்ற முறையில் தலைமை அதிகார உரிமை மன்னர் பிரானின் சாதாரண சிறப்புரிமையிலிருந்து இரண்டு அம்சங்களில் வேறுபடுகிறது - (அ) மன்னர் பிரானின் சாதாரண தனிச் சிறப்புரிமை யானது மன்ற நிறைவேற்றச் சட்டத்தை ஆதார அடிப்படையாகக் கொள்ளாமல் நாட்டு மரபுச் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டுள் ளது; அதேசமயம் தலைமை அதிகார உரிமையிலிருந்து எழும் தனிச் சிறப்புரிமையின் அடிப்படை வழக்காற்றால் ஆதரிக்கப்படும் உடன் படிக்கைகளில் அடங்கியுள்ளது; (ஆ) மன்னர் பிரானின் மரபுச் சட்ட தனிச் சிறப்புரிமை மன்னரது ஆட்சிக்குட்பட்ட அனைத்துப் பிரஜைகளை யும் அவ்வாறே தற்காலிகமாக அங்கு வாழும் அந்நியர்களையும் கட்டுப் படுத்தும்; ஆனால் தலைமை அதிகார உரிமையிலிருந்து பெறப்படும் தனிச் சிறப்புரிமை இந்திய சமஸ்தானங்கள் விஷயத்தில்தான் செல்லுபடி யாகும். தலைமை அதிகார உரிமை என்பது மன்னர் பிரானது தனிச் சிறப்புரிமையின் மிக முக்கியமான ஒரு பகுதி என்பதில் ஐயமில்லை. எனினும் தலைமை அதிகார உரிமையானது மன்னரின் தனிச் சிறப்புரிமை என்று கூறுவது பெயரளவில்தான் என்பதை மறந்துவிடக் கூடாது.

(2) தலைமை அதிகார உரிமை மன்னரின் தனிச் சிறப்புரிமை என்று கூறப்பட்டாலும் அது அரசமைப்புச் சட்டம் என்பதன் ஒரு பகுதிக்கு உட்பட்டதேயாகும்.

(3) அரசமைப்புச் சட்டக் கோட்பாட்டின்படி நோக்கும்போது, மன்னருக்குத் தனிச் சிறப்புரிமை இருப்பினும் அவர் அதனைத் தமது உசிதம்போல் பயன்படுத்த முடியாது; அவருடைய அமைச்சர்களின் ஆலோசனைக் கிணங்கவே அதனை அவர் பயன்படுத்த முடியும். வேறு விதமாகச் சொன்னால் தம்முடைய அமைச்சர்களின் ஆலோசனைக்குப் புறம்பாக சுதந்திரமான முறையில் அதனை அவர் பயன்படுத்த முடியாது.

கடைசியாக நாம் குறிப்பிட்ட விஷயம் பற்றி மேலும் விளக்கம் அளிப்பது அவசியம். ஏனென்றால் எந்த அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் மன்னர் செயல்பட வேண்டும் என்று ஒரு கேள்வி எழலாம். சம்பந்தப்பட்ட ஆட்சிப் பகுதியினது அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் அவர் செயல்பட வேண்டும் என்பதே இதற்கான பதிலாகும். வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்னர் பிரிட்டிஷ் பேரரசு ஒரே ஆட்சிப் பகுதியாகவே இருந்தது. இதன் விளைவாக, மன்னர் தமது தனிச் சிறப்புரிமைகளைப் பயன்படுத்தும் விஷயத்தில், பிரிட்டிஷ் அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலேயே செயல்பட்டு வந்தார். வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் இயற்றப்பட்டு கனடா, ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா, அயர்லாந்து ஆகியவை தனி ஆட்சிப் பகுதிகளாப் பிரிக்கப்பட்ட பிறகு, சம்பந்தப்பட்ட ஆட்சிப் பகுதியானது அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலேயே மன்னர் தமது தனிச் சிறப்புரிமைகளைச் செயல்படுத்தி வரலானார். இவ்வாறுதான் நடைபெற முடியும். வேறுவிதமாக நடைபெற முடியாது. எனவே இந்தியா ஒரு தனி ஆட்சிப் பகுதியாகும்போது, இந்திய அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலேயே மன்னர் தமது தனிச் சிறப்புரிமைகளை அதாவது தமது தலைமை அதிகார உரிமையைப் பயன்படுத்த கட்டுப்பட்டுள்ளார் என்பது தெள்ளத் தெளிவு.

தலைமை அதிகார உரிமையை இந்திய அரசாங்கத்துக்கு மாற்ற முடியாது என்று வாதிடுபவர்கள் 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்திலிருந்து 1933 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின் 39 ஆவது பிரிவின் ஷரத்துக்கள் நீக்கப்பட்டதை தமது வாதத்துக்கு ஆதாரமாகக் கொள்கின்றனர்; இதன்படி இந்தியாவின் சிவில் மற்றும் ராணுவ அரசாங்கப் பொறுப்பு (பிரிட்டிஷ் இந்தியாவின் சிவில் மற்றும் ராணுவ அரசாங்கப் பொறுப்பல்ல) நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலிடமே இருக்கிறது. எனவே, தலைமை அதிகார உரிமை ஓர் இந்திய அரசாங்கத்துக்கு மாற்ற

முடியாது என்பது இதிலிருந்து தெள்ளத் தெளிவாகிறது என்று வாதிக்கப்படுகிறது. இது கடைந்தெடுத்த விதண்டாவாதமே தவிர வேறல்ல. இத்தகைய ஒரு ஷரத்து அல்லது வழிவகை ஏற்பாடு இந்திய அரசாங்கச் சட்டத்தில் இருக்கிறதா, இல்லையா என்பது இந்த விஷயத்துடன் எவ்வகையிலும் சம்பந்தப்படாதது; இது எதையும் மெய்ப்பிக்கவில்லை. இந்த ஷரத்து இந்திய அரசாங்க சட்டத்தில் இல்லாததை வைத்து, தலைமை அதிகார உரிமையைப் பயன் படுத்தும் விஷயத்தில் மன்னர் பிரான் அரசுக்கு எத்தகைய சந்தர்ப் பத்திலும் இந்தியா ஆலோசனை கூற உரிமை கொண்டாட முடியாது என்று பொருள் கொள்ளக் கூடாது. இந்திய அரசாங்கச் சட்டத்தில் இந்த விதிமுறை இடம் பெற்றிருந்ததானது 1833-1935 ஆம் ஆண்டு களில் இத்தகைய அதிகாரம் அதற்கு இருந்தது என்று அர்த்தமாகாது; ஏனென்றால் அந்த விதிமுறைப்படியே நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரலுக்கு சில நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருந்தன; இவற்றின் பிரகாரம் 1833-1935 ஆம் ஆண்டுகளில் கூட இந்தியா மந்திரி பிறப்பிக்கும் அனைத்து ஆணைகளுக்கும் நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரல் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும், தனிச் சிறப்புரிமையைப் பயன்படுத்தும் விஷயத்தில் மன்னர் பிரான் அரசுக்கு ஆலோசனை கூறும் இறுதி அதிகாரம் பிரிட்டிஷ் இந்தியா வைப் பொறுத்தவரையில், இந்தியா மந்திரிக்கே உண்டு.

1833க்கும் 1935க்கும் இடையே இந்தியாவை ஆளும் விஷ யத்தில் தலைமை அதிகார உரிமையைப் பயன்படுத்தும் பலதரப் பட்ட முறைகள் சம்பந்தமாக நாடாளுமன்றம் இயற்றிய பல்வேறு சட்டங்கள் தலைமை அதிகார உரிமையைச் செயற்படுத்தும் பிரச் சினையில் மன்னர் பிரான் அரசுக்கு ஆலோசனை கூறுவதற்கு இந்திய மக்களுக்கு இருந்த உரிமையை எவ்வகையிலும் பாதிக்கவில்லை, பாதிக்கவும் முடியாது. பேரரசின் அரசமைப்புச் சட்டப்படி ஒரு நாடு டொமினியன் ஆன பிறகுதான் மன்னர் பிரான் அரசுக்கு ஆலோ சனை கூறும் அதிகாரத்தைப் பெற்றிருக்கும்; எனினும் அது ஒரு டொமினியன் ஆவதற்கு முன்னர் மன்னர்பிரான் அரசுக்கு வேறுபட்ட முறையில் ஆலோசனை கூறப்படுவது அதன் இந்த உரிமைக்குத் தடையாக இருக்க முடியாது. 1935 ஆம் வருடச் சட்டத்தில் இந்தியா ஒரு பொறுப்பு வாய்ந்த அரசாங்கத்தைக் கொண்ட நாடாக இருக்க வில்லை. எனினும் அப்படியே ஒரு பொறுப்பு வாய்ந்த அரசாங் கத்தைக் கொண்ட நாடாக இந்தியா இருந்திருந்தால்கூட இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தமாக தனிச் சிறப்புரிமைகளைப் பயன் படுத்துவது சம்பந்தமாக மன்னர் பிரான் அரசுக்கு ஆலோசனை கூறும் உரிமையை அது கோர முடியாது. பொறுப்பு வாய்ந்த அரசாங்கத்தை

யும் டொமினியன் அந்தஸ்தையும் பிரிட்டிஷ் பேரரசின் அரசமைப்புச் சட்டம் வேறுபடுத்திக் காண்பதே இதற்குக் காரணம். பொறுப்பு வாய்ந்த அரசாங்கத்தைப் பொறுத்தவரையில், நாட்டின் உள் விவ காரங்கள் சம்பந்தப்பட்ட மட்டில்தான் மன்னர்பிரான் அரசுக்கு அமைச்சரவை ஆலோசனை கூறும் உரிமையைப் பெற்றுள்ளது; மன்னர்பிரான் அரசும் அதனை ஏற்கக் கடமைப்பட்டுள்ளது. அயல் நாட்டு விவகாரங்களைப் பொறுத்தவரையில், மன்னர்பிரானுக்கு ஆலோசனை கூறும் உரிமை பிரிட்டிஷ் அமைச்சரவைக்கு உண்டு. ஆனால் டொமினியனைப் பொறுத்தவரையில் உள்நாட்டு விவகாரங் கள் சம்பந்தப்பட்டவையாயினும் அயல் விவகாரங்கள் சம்பந்தப் பட்டவையாயினும் அது வழங்கும் ஆலோசனையை ஏற்க மன்னர் பிரான் அரசு கடமைப்பட்டுள்ளது. ஒரு டொமினியன் பிரிட்டிஷ் அமைச்சரவையின் தலையீடின்றி ஓர் அயல்நாட்டுடன் உடன்படிக்கை செய்து கொள்ள முடிவதற்கு இதுவே காரணம். தலைமை அதிகார உரிமையைப் பயன்படுத்தும் விஷயத்தில் மன்னர்பிரான் அரசுக்கு ஆலோசனை கூறுவதற்கு இந்திய அரசாங்கம் அனுமதிக்கப்படாது. இவ்வாறு ஆலோசனை கூறும் உரிமை அதற்கு மறுக்கப்படுவது எத்தகைய சட்டரீதியான தகுதியின்மை இருப்பதையும் குறிக்க வில்லை. மாறாக, இந்தியா டொமினியன் அந்தஸ்தைப் பெற்ற மறுகணமே தலைமை அதிகார உரிமை சம்பந்தமாக மன்னர்பிரான் அரசுக்கு ஆலோசனை கூறும் தகுதியை அது பெற்று விடுகிறது. மேலே கூறியவை பிரிட்டிஷ் பேரரசினது அரசமைப்பின் சுருக்கம் என்பதை யும், பேரரசின் ஒரு பகுதி டொமினியன் அந்தஸ்தைப் பெற்றதும் மன்னர்பிரான் அரசு தனது தனிச் சிறப்புரிமையைப் பயன்படுத் துவது சம்பந்தமாக அதற்கு ஆலோசனை கூறும் தகுதியை அது எவ்விதம் பெற்றுவிடுகிறது என்பதையும் இதிலிருந்து தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். இவ்வாறிருக்கும்போது, இந்தியா டொமினியன் அந்தஸ்தைப் பெற்றதும் இந்த உரிமையை அதற்கு ஏன் மறுக்க வேண்டும் என்பது புரியாத புதிராக இருக்கிறது. சம நோக்கோடு பார்க்கும்போது, மன்னர்பிரான் தனது தனிச் சிறப் புரிமையைப் பயன்படுத்தும் விஷயத்தில் ஆலோசனை கூறுவதற்கு கனடாவுக்கும், ஆஸ்திரேலியாவுக்கும், தென்னாப்பிரிக்காவுக்கும், அயர்லாந்துக்கும் உள்ள அதே உரிமையை இந்தியாவும் பெறுவது தான் முற்றிலும் நியாயம். இவ்வாறிருக்கும்போது, பேராசிரியர் ஹோல்ஸ்வொர்த் வேறுபட்டதொரு முடிவுடன் வருவதற்கு மேலே கூறிய அரசமைப்புச் சட்டத்திலுள்ள அடிப்படைக் கோட்பாடு களில் நிலவும் எத்தகைய வேறுபாடும் காரணமல்ல. உண்மையில், இந்த அடிப்படைக் கோட்பாடுகள் அனைத்தையும் அட்சரம் பிசகாது அப்படியே ஏற்றுக் கொள்ளவும் அவர் செய்கிறார். இவ்வாறிருக்கும்

போது அவர் மாறுபட்டதொரு முடிவுக்கு வருவதற்குக் காரணம் அவர் தமது வாதத்துக்கு முற்றிலும் வேறுபட்டதொரு பிரச்சினையை எடுத்துக் கொண்டிருப்பதேயாகும். மன்னர்பிரான் அரசு தலைமை அதிகார உரிமையை ஓர் இந்திய அரசாங்கத்துக்கு மாற்றிக் கொடுக்க முடியுமா, விட்டுக் கொடுக்க முடியுமா என்பதே அவர் எழுப்பி யுள்ள பிரச்சினை. ஆனால் இதுவல்ல உண்மையான பிரச்சினை; தலைமை அதிகார உரிமையைப் பயன்படுத்தும் விஷயத்தில் மன்னர் பிரான் அரசுக்கு ஆலோசனை கூறும் உரிமை இந்திய டொமினியனுக்கு இருக்க முடியுமா என்பதுதான் இங்குள்ள உண்மையான பிரச்சினை. வேறுவிதமாகச் சொன்னால், தலைமை அதிகார உரிமையை மாற்ற முடியுமா என்பதல்ல இங்கு நமது அக்கறைக்குரிய பிரச்சினை; மாறாக, தலைமை அதிகார உரிமையை எவ்வாறு பயன்படுத்துவது என்பதே இங்கு நமது கவனத்துக்குரிய பிரச்சினையாகும். பேராசிரியர் ஹோல்ட்ஸ்வொர்த் உண்மை யான பிரச்சினை என்ன என்பதை உணர்ந்திருந்தால், அவர் இவ்வாறு வேறுபட்டதொரு முடிவுக்கு வந்திருக்க மாட்டார் என்றே நம்பு கிறேன்.

தலைமை அதிகார உரிமையை ஓர் இந்திய அரசாங்கத்துக்கு மன்னர் பிரான் மாற்ற முடியாது என்ற பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழுவின் கூற்றின் ஒரு பகுதியை இதுவரை எடுத்துரைத்தேன். நாம் கருத்திற் கொள்ள வேண்டிய அவர்களது கூற்றின் மற்றொரு பகுதியும் உள்ளது; தலைமை அதிகார உரிமையை மன்னர் பிரான் ஓர் இந்திய அரசாங்கத்துக்கு மாற்ற மாட்டார் என்பதே அந்த இரண் டாவது கருத்தாகும்; அதாவது தூதுக்குழுவின் வாதப்படி தலைமை அதிகார உரிமையே மறைந்து இல்லாது போய்விடும். இது மிகுந்த அதிர்ச்சியும் திகைப்பும் ஊட்டக்கூடிய கூற்று மட்டுமல்ல. அரசிய லமைப்புச் சட்டத்தில் மிக உறுதியாக நிலைநாட்டப்பட்டுள்ள மற்றொரு கோட்பாட்டுக்கு முற்றிலும் முரணானதுமாகும். அந்தக் கோட்பாடு கூறுவது என்ன? மன்னர் தமது தனிச் சிறப்புரிமைகளை விட்டு விடவோ அல்லது துறக்கவோ முடியாது. தலைமை அதிகார உரிமையை மன்னர் பிரான் மாற்ற முடியாது என்றால், அதனைக் கைவிடவும் முடியாது. 1840ல் ராணி எதிர் அதுல்ஜி பைரம்ஜி வழக்கில் இந்தக் கோட்பாட்டை பிரிவிக் கவுன்சில் ஏற்றுக் கொண் டுள்ளது; 5 மூரின் பி.சி. பக்கம் 276ல் இது வெளியிடப்பட்டிருக் கிறது; மன்னர்பிரான் விதிவிலக்காகக் கூட தனது தனிச் சிறப்புரிமை யைக் கைவிட முடியாது (பக்கம் 294) என்று அதில் தெளிவுபடுத்தப் பட்டிருக்கிறது. எனவே, மன்னர்பிரான் தமது தலைமை அதிகார உரிமையைப் பயன்படுத்த மாட்டார் என்று பிரிட்டிஷ் அமைச்

சரவைத் தூதுக்குழு கூறியிருப்பது பிரிட்டிஷ் பேரரசு எந்த அர சமைப்புச் சட்டத்தால் ஆளப்பட்டு வருகிறதோ அந்தச் சட்டத்திற்கே முரணானது என்பது தெள்ளத் தெளிவு. மன்னர் பிரான் தொடர்ந்து தமது தலைமை அதிகார உரிமையைப் பயன்படுத்தி வர வேண்டும். எனினும் அதேசமயம் திட்டவட்டமான சட்ட அங்கீகாரத்துடன் மன்னர்பிரான் தமது தனிச் சிறப்புரிமையைத் துறக்க முடியும் என்று கூறக்கூடும். ஆனால் இங்கு ஒரு கேள்வி எழுகிறது: தலைமை அதிகார உரிமையைக் கைவிடுவதை அனுமதிக்கும் ஒரு சட்டத்தை பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இயற்றுவது சட்டப்படிச் செல்லுபடி யாகுமா, முறையாகுமா என்பதே அந்தக் கேள்வி. பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இத்தகைய ஒரு நடவடிக்கையை மேற்கொள்வது முறையானதோ சட்டரீதியானதோ அல்ல என்று வாதிட இந்தியர் களுக்கு உரிமை உண்டு என்பதில் ஐயமில்லை. இந்தியா ஒரு டொமினியன் ஆன பிறகு, தலைமை அதிகார உரிமையை ரத்து செய்யும் ஒரு சட்டத்தை இந்தியாவின் டொமினியன் நாடாளு மன்றம் நிறைவேற்ற முடியும், இதில் பிரிட்டிஷ் நாடாளுமன்றத் திற்கு எந்தச் சட்ட அதிகாரமும் இருக்க முடியாது என்று இந்தியர் கள் வாதிட முடியும். தவிரவும், தலைமை அதிகார உரிமையை ரத்து செய்யும் ஒரு சட்டத்தை பிரிட்டிஷ் நாடாளுமன்றம் நிறைவேற் றுவது முறையாக இருக்காது. இதற்கான காரணம் தெள்ளத் தெளி வானது. தலைமை அதிகார உரிமையை இறுதியாக நிலைநாட்டும் வல்லமை படைத்தவை போர்ப் படைகள்தான். இவை இந்தியப் போர்ப்படைகள்; பிரிட்டிஷ் இந்தியா இதனை நெடுகிலும் பரா மரித்து வந்துள்ளது. பிரிட்டிஷ் இந்தியாவால் பேணி வளர்க்கப்பட்டு மன்னர் பிரான் பிரதிநிதியான இந்தியாவின் வைசிராய் மற்றும் கவர்னர் ஜெனரல் மூலம் அவரிடம் ஒப்படைக்கப்பட்ட வலிவும் வல்லமையும் ஆற்றலுமிக்க இந்தப் போர்ப்படைகள் மட்டும் இல்லையென்றால் அவரால் தமது தலைமை அதிகார உரிமையை ஒருபோதும் பாதுகாத்து நிலைநாட்டியிருக்க முடியாது. இந்த அதி காரங்கள் இந்திய மக்களின் நலன்களுக்காக மன்னர்பிரான் அர சிடம் நம்பகமாக, பொறுப்பாண்மையோடு ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள்; இந்தப் பொறுப்பாண்மையைச் சிதைத்துச் சீர்குலைக் கக்கூடிய ஒரு சட்டத்தைப் பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இயற்றுவது இந்த நம்பிக்கையை உடைத்துத் தகர்த்துக் குழிதோண்டிப் புதைக் கும் ஓர் இழிசெயலாகவே இருக்கும். இந்தத் தலைமை அதிகார உரிமை இந்திய மன்னர்களுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் மூலம் பெறப்பட்ட ஓர் அனுகூலமாகும். எனவே, இந்தத் தலைமை அதிகார உரிமையை வரித்துக் கொள்வதற்கு சுதந்திர இந்தியாவுக்கு நியாயமாகவே பாத்தியதை உண்டு.

இங்கு ஒரு கேள்வி எழலாம்: இந்தியா சுதந்திரமடைந்த பிறகு என்ன நிகழும்? மன்னர்பிரான் அரசு மறைந்துவிடும்; மன்னர்பிரான் அரசுக்கு ஆலோசனை கூறும் பிரச்சினை எழாது. மன்னர்பிரான் அரசு பெற்றிருந்த தனிச் சிறப்புரிமைகளை பின்னுரிமைகளாகச் சுதந்திர இந்தியா கோர முடியுமா? இந்தக் கேள்விக்கான பதில் 'ஆம்' கோர முடியும் என்பதேயாகும். சுதந்திர இந்தியா ஒரு பின்வர லுறும் அரசாக இருக்கும். மேலே கண்ட கேள்விக்கான பதிலைப் பெறுவதற்கு பின்வரலுறும் அரசுகள் பற்றிய சர்வதேசச் சட்டத்தின் நெறிமுறைகளை நோக்க வேண்டும். பின்வரலுறும் ஓர் அரசு அதற்கு முன்பிருந்த அரசு பெற்றிருந்த சில உரிமைகளை அடைய முடியும் என்பதை ஒப்பன்ஹீம் ஒப்புக்கொள்கிறார். முன்பிருந்த ஓர் அரசு உடன்படிக்கை மூலமாக பெற்றிருந்த சொத்துகளையும் அனுகூலங் களையும் ஏனையவற்றையும் அதற்குப் பிறகு வரும் அரசும் பெற முடியும் என்று ஹாலின் சர்வதேசச் சட்டம் பகர்கிறது. இந்த அடிப் படையில் இந்தியா பின்வரலுறும் ஓர் அரசு என்ற முறையில் சில உரிமைகளைப் பின்னுரிமைகளாகப் பெற முடியும். இது சம்பந்த மாக ஹாலின் சர்வதேசச் சட்டத்திலிருந்து பின்வரும் பகுதியை இங்கு குறிப்பிடுவது உசிதமாக இருக்கும்:

> ''பழைய அரசு தொடர்ந்து நீடிக்கும் வரை தனக்குச் சொந்தமான அனைத்தையும் அவற்றில் எதையும் இழக்காமல் தொடர்ந்து பெற்றி ருக்கும்; உடன்படிக்கையின் மூலம் ஈட்டப்பெற்ற சொத்துகளையும் அனுகூலங்களையும் தன் பிரஜைகளோடு சேர்ந்து அது அனுபவித்து வரும்; இவை யாவுமே அதற்குச் சொந்தமாக இருந்துவரும். அவ்வா றின்றி, இழந்த பிரதேசம் சம்பந்தமான உரிமைகளும், ஒப்பந்தப்படி மாற்றித் தரப்பட்ட மற்றும் எல்லைகள் வரையறுக்கப்பட்ட பிரதேசங் கள் குறித்த உரிமைகளும் கடமைகளும் சொத்துகளும் ஸ்தலத் தன்மை யுடையவையாகி, அந்தந்த ஸ்தல அமைப்புகளுக்குரியவையாக புதிய அரசுக்கு மாற்றித் தரப்படும்.''

இதன் விளைவாக, இந்திய சமஸ்தானங்கள் தற்போது எவ்வாறு இருக்கின்றனவோ அவ்வாறே இந்தியா சுதந்திரமடைந்த பிறகும் அதே நிலைமையில்தான் இருக்கும். அவை கூடிய மட்டும் தன்னாட்சியுரிமை உடையவையாக இருக்கும்; ஆனால் இந்தியா ஒரு டொமினியனாக இருக்குமானால் மன்னர்பிரான் அரசின் மேலாதிக்கத்தின் கீழும், இந்தியா சுதந்திரமடைந்தால், அதனைத் தொடர்ந்து அமையும் அரசின் மேலாதிக்கத்தின் கீழும் அது இருந்து வரும். மேலாதிக்கம் நீடிக்கும்வரை அவை சுதந்திரமானவையாக இருக்க முடியாது. சமஸ்தானங்கள் தங்களைச் சுதந்திர நாடுகளாகப் பிரகடனம் செய்து கொள்ள முடியும். ஆனால் அவை ஒரு விஷ

யத்தை புரிந்து கொள்ள வேண்டும்: மேலாதிக்கம் நீடிக்குமானால் இந்தியா சுதந்திரமடைந்த பிறகும்கூட அது தொடரும், இந்தியா அவற்றின் சுதந்திரத்தை அங்கீகரிக்காது, வேறு எந்த அயல்நாடும் ஒரு சுதந்திர நாட்டு அந்தஸ்தை அவற்றுக்கு அளிக்காது. மேலாதிக்க உரிமையையும் இறைமையையும் இணைப்பதுதான் தலைமை அதிகார உரிமையிலிருந்து இந்திய சமஸ்தானங்கள் தம்மை விடுவித்துக் கொள்வதற்கான ஒரே வழியாகும். இந்திய ஒன்றியத்தில் இந்திய சமஸ்தானங்கள் அதன் அங்கப் பகுதிகளாகச் சேரும்போதுதான் இது நிகழ முடியும். இந்திய சமஸ்தானங்கள் சார்பில் பேசுபவர்கள் இதனை உணர்ந்திருக்க வேண்டும். ஆனால் இதனை அவர்கள் மறந்து விட்டதாகத் தோன்றுவதால், வட்டமேஜை மாநாட்டில் என்ன நிகழ்ந்தது என்பதை அவர்களுக்கு நினைவுப்படுத்துவது அவசியம். கூட்டரசில் சேருவதற்கு சமஸ்தானங்கள் ஆரம்பத்தில் தயாராக இல்லை. தலைமை அதிகார உரிமை இன்றியமையாதது என்ற சித்தாந்தத்தை பட்லர் குழு வலியுறுத்தியிருப்பது தெரிய வந்ததும் கூட்டரசில் சேருவதற்கு அவை ஒப்புக் கொண்டன. தலைமை அதிகார உரிமை சித்தாந்தத்தில் அடங்கியுள்ள அதிகாரங்கள் எந்த அளவுக்குக் கூட்டரசுக்கு மாற்றப்படுகின்றனவோ அந்த அளவுக்கு தலைமை அதிகார உரிமை மறைந்துவிடும் என்பதை உணர்ந்ததே இந்திய சமஸ்தானங்களின் போக்கில் ஏற்பட்ட இந்த மாற்றத்துக்குக் காரணமாகும். உண்மையில், இந்தப் பிரச்சினையை இந்திய சமஸ்தான மன்னர்கள் அப்போதைய இந்தியா மந்திரியிடம் எழுப்பினார்கள் என்பதும், பட்டியல் 1ல் இடம் பெற்றுள்ள விஷயங்களைச் சேர்க்காத வகையில் தலைமை அதிகார உரிமையின் வீச்சை மட்டுப்படுத்த வேண்டும் என்று அவரை வலியுறுத்தினார்கள் என்பதும் நம்மில் பெரும்பாலோர்க்குத் தெரியும். அப்போதைய இந்தியா மந்திரி இதற்கு இணங்காமல், அவர்களைச் சினந்து கொண்டு வாயடைக்கச் செய்தார். இவ்வாறு அன்றைய இந்தியா மந்திரியின் போக்கு ஒருபுறமிருக்க, தலைமை அதிகார உரிமையை ரத்து செய்வது கூட்டரசில் சேருவதில்தான் அடங்கியுள்ளது என்ற உண்மையை இந்திய சமஸ்தான மன்னர்கள் உணர்ந்து கொண்டனர். இது அன்று போலவே இன்றும் ஒப்புக்கொள்ளத்தக்கதாக உள்ளது. சுதந்திரம் என்ற மாயையின் பின்னால் ஓடாமல் இந்திய சமஸ்தானங்கள் இந்த வழியைப் பின்பற்றுவதுதான் விவேகமானதாக இருந்திருக்கும். ஆதலால், தலைமை அதிகார உரிமை மறைந்துவிடும் என்று பிரிட்டிஷ் அமைச்சரவைத் தூதுக்குழு தெரிவித்த விளக்கத்தை இந்திய மக்கள் நிராகரிக்க வேண்டும். தலைமை அதிகார உரிமை மறைய முடியாது, அந்தத் தலைமை அதிகார உரிமைக்குத் தாங்கள்தான் மரபு ரீதியில் உரியவர்கள், பிரிட்டிஷார் வெளியேறிய பிறகும்கூட இந்திய

ஒன்றியத்தில் சேர விரும்பாத இந்திய சமஸ்தானங்கள் விஷயத்தில் இந்தத் தலைமை அதிகார உரிமையை நாங்கள் தொடர்ந்து செயல் படுத்துவோம் என்று அவர்கள் வலியுறுத்த வேண்டும். அதேசமயம் அரசுரிமை படைத்த சுதந்திர நாடுகளாக ஐந்து வருடங்களுக்கு மேல் நீடிக்க முடியாது என்பதையும் இந்திய சமஸ்தானங்கள் உணர வேண்டும். சமஸ்தான மன்னர்கள் இந்திய ஒன்றியத்தில் இணைந்து, அரசியலமைப்புக்குட்பட்ட மன்னர்களாகச் செயல்படுவதே அவர் களது நலன்களுக்கு உகந்ததாகும். இந்திய ஒன்றியத்தில் இணைய வேண்டாம் என்று தனது மன்னருக்கு ஆலோசனை கூறும் எந்தத் திவானும் உண்மையில் தமது அரசருக்கு எதிராகச் செயல்படுபவரே யாவார். கூட்டரசில் சேருவதால் சம்பந்தப்பட்ட சமஸ்தானத்தில் பொறுப்பாட்சியை ஏற்படுத்த வேண்டியிருக்கும் என்பதில் எள்ளள வும் ஐயமில்லை; ஆனால் அதேசமயம் அரசகுல மரபுரிமைகளை மன்னர்களுக்கு ஒன்றியம் உத்தரவாதம் செய்யும் என்று அவர்கள் அதிகப்பட்சம் எதிர்பார்க்கலாம். தங்கள் சமஸ்தானங்கள் சுதந்திர நாடுகளின் அந்தஸ்தைப் பெற முடியும், அதற்கு **யுஎன்ஓவின்** (ஐக்கிய நாடுகள் நிறுவனத்தின்) அங்கீகாரத்தையும் ஆதரவையும் பெற இயலும் என்று மன்னர்கள் மனப்பால் குடிக்கிறார்கள்; இது கற்பனை உலகில் சஞ்சரிக்கும் செயலேயன்றி வேறல்ல. இந்திய சமஸ்தானங் கள் மீது தனக்கு மேலாதிக்க உரிமை உண்டு என்ற இந்தியாவின் கோரிக்கையை உதாசீனம் செய்து, அவற்றை **யுஎன்ஓ** அங்கீகரிப்பது சந்தேகமே. எனினும் இவ்வாறு நேர்ந்தால்கூட சம்பந்தப்பட்ட சமஸ்தானம் தனது பிரதேசத்திற்குள் முதலில் மக்கட் பிரதிநிதித் துவம் வாய்ந்த அரசாங்கத்தை அமைக்க வேண்டும் என்று வலி யுறுத்தாமல் வெளி ஆக்கிரமிப்பிலிருந்தோ அல்லது உள்நாட்டுக் கிளர்ச்சியிலிருந்தோ அதனைப் பாதுகாப்பதற்கு **யுஎன்ஓ** ஒருபோதும் உதவி அளிக்காது. கைப்புண்ணைப் பார்ப்பதற்கு எவ்வாறு கண்ணாடித் தேவையில்லையோ அவ்வாறே இவையெல்லாம் கண்கூடான, நிதர்சனமான உண்மைகள். பிழைக்கத் தெரிந்தவர்கள் இவற்றைத் தெரிந்து புரிந்து நல்வழியை நாடட்டும். இவற்றைப் புரிந்து கொள்ள மறுப்பவர்களுக்கு, சுயநலத்தால் அறிவு மழுங்கிப் போகிறவர்களுக்கு ஏற்படும் அதே கதி, பேரழிவு, கேடுகாலம் நேருவது திண்ணம்.



